சிவமயம்.

# முகவுரை.

உலகம், சஞ்சரிப்பனவும் நிலையாய் நிற்பனவுமாகிய சராசர ரூபங்களாய் நாலுவகைத்தோற்றத்து எழுவிதப்பிறப்பின் (அச) இலக்கம் யோநிபேதமாய் விரிந்து விளங்குகின்றது. இதனை, ஏகாத்மவாதிகள் பொய்யென்பர். இவ்வுலகம், முயற்கொம்புமுதலியன போல் இல்பொருளாய்ப்பொய்யாய் ஒழிவதன்று. முயலுக்குக் கொம்பு எக்காலத்துமில்லாததே, அதனைப்பொய்யென்பது பொருந்தும். பற்பல வகை வகையாய் விரிந்து உள்பொருளாய் நேரிற்காணப்படுகின்ற உலகத்தைப்பொய் என்பது பொருந்தாதென்க. ஆனால் உலகம் அநித்தியம் (பொய்) என்று நூல்கள் கூறுவதென்னை எனில்? அவ்வுலகம் நேரிற்காணப்படுகின்ற படியே என்றுமிராமல் சிலகாலமிருந்து பின் நேரிற்காணப்படாமல் ஒடுங்கி வருதலும், சீவர்கள் அவ்வுலகப்பற்றொழிந்துய்தற்கு ஏதுவாதலும் நோக்கியே பொய்யென்று கூறுவதென்க. இக்கருத்து நோக்காமலோ? நோக்கியும் உபவாசாதிவிரத நியமங்களுட்பட்டு உண்டி முதலிய சுருக்கி உடலைவருத்தி கஷ்டப்படாது இஷ்டப்படி வாழக்கருதியோ? ஆதியிற் சிலர், நூல்கள் உபசாரமாகக்கூறுதலை உண்மையென நம்பும்படி பிறர்க்கும் எடுத்துக் கூறிப் பாவம் புண்ணியம் பந்தம் மோக்ஷம் சுவர்க்கம் நரகமென்பன வாதி யெல்லாமும் பொய்யேயாதலால் பாவமென்றஞ்சி நமது சுக காரியங்களை விடவேண்டாம். புண்ணியமென்று விரும்பி உடலை வருத்தவேண்டாம். நம்மிஷ்டப்படி எதனையும் செய்யலாம். செய்வனவெல்லாம் பொய்யேயாதலால் அச்செயல்கள் அவ்வப்பயன்களைத்தருவதில்லை யென்று போதித்து வருவதுந் தவிர அவ்வாறே நூல்களும் எழுதிவைத்தனர். உடலைவளர்க்குஞ்

# முகவுரை

சுகம் ஒன்றையே நோக்கும் பின்னையோரும் அவ்வழியே பற்றி நியமங்கடந்து சுகித்து வாழ்கின்றனர். இதனைத் தன்பிதாவாகிய காசிபரிடம்உண்மை உபதேசம் பெற்ற சூரபத்மன் பாவபுண்ணியபந்தமோக்ஷ முதலிய எல்லாம் மெய்யேயெனநம்பிப் பாவத்துக்குப் பயந்து புண்ணியமே செய்ய விரும்பிநல்வழியினிற்றலால், சுக்கிராசாரியார் இவன் புத்தியை மாற்றித் தேவர்க்கிடர்செய்யும்படியான தீயவழியிற் செலுத்துதற்கு எல்லாம் பொய்யே நாம் பிரமமே என்று போதிப்பது தான் பொருத்தமென்று அவ்வாறு போதிப்ப, அவனும் அத்தீயவழியினின்று அத்தேவர்க்கிடர் செய்து அடியோடு கெட்டொழிந்த சரித்திரத்தாலுங் காணலாம். இது கந்த புராணத்துள்ளதே, இனி எல்லாம் பொய்யென்று இவ்வொரு மதத்தாரன்றி வேறெம்மதத்தரும் கூறுவதில்லை. மற்றெல்லா மதத்தர்களும் உலகம் மெய்யேயென்றுள்ளபடி கருதிப்பாவத்துக்குப் பயந்தொதுங்கிப் புண்ணியங்களையே விரும்பி அடிமைகளாய் நின்று அவரவர் மேற்கொண்ட ஆண்டவனாகிய கடவுள் வழிபாடுசெய்து வருதலாலும் மேற்கூறிய உண்மையாலும் உலகம் காரிய ரூபமாய் வெளிப்படும்போது தூலமாயும் காரணத்துள் ஒடுங்கியிருக்கும் போதுசூக்குமமாயும் என்றுமுள்ள மெய்ப்பொருளே என்பது தெளிவாம். இவ்வுலகம் அவன் அவள் அது என்னும் அவயவப்பகுப்பினதாய்க் காணப்படுதலால் ஒருகடவுளால் (படைத்தலும்) உண்டாக்குதலும் காத்தலும் முடிவில (சங்கரித்தலும்) ஒடுக்குதலுமுடையதாய் நிகழ்கின்றது. கடவுள்வேண்டாம் தானே உண்டாகுமென்பது முதலியன கூறுவர் சிலர். உலகம் அறிவில்லாத சடமாதலால் தானே உண்டாகாது அறிவில்லாதகுடம்தானேஉண்டாகாமல்அறிவுள்ள குயவனால் உண்டாதல் போல், அறிவுள்ள கடவுளாற்றான் உண்டாகவேண்டுமென்க. அதுசரி உண்டாக்கிற கடவுள் ஒருவர் காக்கிறவர் ஒருவர்ஒடுக்குகிறவர்ஒருவராக மூவரிருத்தலால் கடவுள் ஒருவனேஎன்பது பொருந்தாதென்பார்சிலர்.உண்டாக்குதல் உலக முழுமையுமே. காத்தலும் அப்படியே. அதுபோல்ஒடுக்குதலும் முழுதுமேயாதலால் அவ்வாறு ஒடுக்கும் கடவுள் எவரோ

# முகவுரை.

அவனிடத்தில் உலகமுழுதும் ஒடுங்கும் போது அதனுடன் படைத்த காத்த இருவரும் ஒடுங்கி விடுவர். அவர் ஒடுங்கிலரெனில் முழுதும் ஒடுக்குதலென்னும் சுருதிக்கு விரோதமாகலின் அது பொருந்தாதென்க. பின்பு தன்னையும் ஒடுக்கும்படி தனக்கு மேலொரு கடவுளின்றி எஞ்சி நிற்கின்ற முழுமுதற்கடவுள், முழுதுந்தன்னிடத் தொடுக்கிய சங்காரக்கடவுள் ஒருவனேயாம் ஒடுங்கிய உலகம் ஒடுங்கியிருக்குமிடத்தினின்றுதான் வெளிப்படும்; வேறுவழியில்லை. ஆதலால் ஒடுக்கியகடவுளே மீளவும் உண்டாக்குகின்றானென்பது நிராக்ஷேபமாம். ஆகவே காத்தலும் அவன் செயலே என்பது சொல்லாமேயமையும். ஒடுக்குதல்மீளப் படைத்தலாகிய இருதொழிலுஞ் செய்யுந் திறமையுள்ள ஒருவன் காக்குந்திறமை யில்லாதவனல்லன். அன்றியும் ஒடுக்குதலாகிய முழுவலிப்பெருந்தொழிலுடையானுக்குக் காத்தலாகிய கீழுள்ள சிறுதொழில் முடியாதென்பது எவ்வாற்றானும் பொருந்தாது. இதனால்சங்காரக் கடவுளொருவனே முத்தொழிலும் செய்கின்றானென்னுஞ் சுருதிப்பொருள் விளக்கமாம். ஆனால் படைக்குந்தலைவன் பிரமன் காக்குந்தலைவன் விஷ்ணு வென்பதென்னையோவெனில்? ஒடுக்கியகடவுள் மீளப்படைக்குங்கால் விஷ்ணு பிரமர்களைப்படைத்துப் படைத்தல் காத்தற்குரிய, தமது சத்திகளை அவர்பால்வைத்துத் தன்னாணைவழிநடக்கும் உத்தியோக த்தலைமை கொடுத்துள் நின்று நடத்தலால் அவ்விரு தொழிற்கும் அவ்விருவர் தலைவரென்று கூறுவதுபசாரமே. உண்மையன்று. ஒருவன் பெற்ற பிள்ளையை மற்றொருவன் அன்னாதிகள் கொடுத்துக் காப்பனேல் பெற்றவனுக்கு விரோதமில்லை. தன்மகன் பெற்ற பிள்ளையைத் தான் பாது காப்பதிலும் தனக்கு விரோதமில்லை. இம்முறை நோக்கியும் படைத்தல் காத்தலிரு தொழிலும் ஒன்றாக்கொண்டு ஒற்றுமையுடையனவே விரோதமின்றென்பது தெளியலாம். இவ்விரோதமின்மை உலகில் அற்ப அறிவினரிடத்துமுள்ளதே. இங்ஙனமாகவும் படைத்தல் காத்தல்களைச் செய்யுமிருவரும் புத்திரனும் பிதாவுமாயிருந்தும் இருபெருந் தொழில் வகிக்கப்பெற்ற மூதறிவின ராயிருந்தும் தமது போகூழின்புணர்ப்பினால் நானே பிரமம் நானே பிரமமென்று அகங்கரித்து மாறுபட்டு

# முகவுரை.

நெடுங்காலம் யுத்தஞ்செய்து நடுவில் தோன்றிய சிவசோதிகண்டும் முறுகி வளர்ந்த அகந்தையால் அளக்கத்துணிந்து பல்லூழியிடந்தும் பறந்துங் ஆற்றாதிளைத்து அகந்தைநீங்கிநாம்பிரமமென்றதொழிந்து நாம் எப்போதும் சிவன் அடிமைகளே என்பது தெளிந்து ஐந்தெழுத்தாற்றுதித்து திருவருள் பெற்றுய்ந்தார்கள்.

இதனாலுமிவர்கள், சங்காரக்கடவுளாணை வழிநிற்கும் உத்தியோகநிலையளவிற்பெற்ற உபசாரத்தலைவர்களே. முழுமுதற்றலைவரல்லரென்பதும் படைத்தல் காத்தலிரு தொழில்களும் அக்கடவுள் தொழில்களே என்பதும் செவ்வே தெளியர்ம். அவ்விருதொழில்கள் அவ்விருவருக்கே சொந்தமென்று கூறுவரேல் அவர்கள் சங்காரத்தொழில் அவ்விரு தொழில்களுக்கும் முழு விரோதமாதல் கண்டும் அக்கடவுளிடத்து மாறுபட்டு எதிர்த்து யுத்தஞ்செய்து வென்று நாங்கள் படைத்த காத்த உலகை அழிக்கா தொழிகவென்று தடுத்துக்கொள்ள மாட்டாமை முதலிய உண்மைகண்டு நன்கு தெளிவாராக.

இதுகாறுங் கூறிப்போந்தஉண்மைகளாற்சங்காரக்கடவுளாகிய சிவனே முழுமுதற்றலைவன் (பரமபதி) என்பதும் பிரம விஷ்ணுவாதிதேவர் முனிவர் முதலிய யாவரும் (பசுக்களே) அவனடிமைகளே என்பதுந்தெளிவாயது. இத்தெளிவே வேதவேதாந்தங்களின் நிச்சயப்பொருளென்பதைக், "கற்கசடறக்கற்பவை கற்றபின் நிற்கவதற்குத்தக" என்ற தெய்வசுருதி லக்ஷியர்களாயுள்ள பெரியார் பற்பல உண்மை நூல் முகமாக விளக்கி வைத்தார்கள். அவர்கள் ஆங்காங்கு விளக்கிய விரிவிற் சிறிதுசிறிதாக எடுத்து ஒருமுகமாக "வேதாந்தத்தெளிவு" எனப்பெயர் தந்து சுருதி ஸ்மிருதி புராணம் இதிகாசம்முதலிய பற்பலபிரமாணங்கள் காட்டி ஒரு நூலாகச் செய்தேன். அடியேன் அறியாச்சிறியேன் "விண்ணோர் தமக்குந் தெரிவருநின்மேன்மை யெங்கே யானெங்கே" என்றபடி எனக்கு இச்செயல் மிகத் தூரித்ததே. ஆயினும் அப்பெரியார்காட்டியதே கடைப்பிடித்து அவர் திருவடிகள் சிரமேற்கொண்டே இத்திருத்தொண்டு. சிவசமர்ப்பணமாகச்செய்தேன். இந்நூலில் என்அறியாமையாலுள்ள குற்றங்களைத்திரு

# முகவுரை.

த்தி அடியேனை நல்வழிப் புகுத்தியுய்விக்கும்படி பெரியார் திரு வடிகளைப்பணிந்து பிரார்த்திக்கின்றேன்.

குறிப்பு:— இந்நூல் என்போன்ற சிற்றறிவினரும் எளிதிற் படித்தறிந்துகொள்ளுதற்காகவே அர்த்தகாடின்யவசனங்களின்றி லெகுவசனங்களாக எழுதப்பெற்றுள்ளது.
ஆதலால் யாவரும் வாங்கிப்படித்தறிந்து பக்ஷபாதமின்றி நடுநிலை நின்று உண்மை தெளிந்து அந்நெறியில் விளங்கும் மெய்ந்நெறி யேபற்றி வாழும்படி திருவருளைப்பிரார்த்திக்கின்றேன்.

வேதாந்தத்தெளிவாகிய சித்தாந்தம், சிவசரியை கிரியாயோகம் ஞானம் என்னும் நான்குபாதங்களை விளக்கும். இவற்றுள் முன் மூன்றும் முற்பிறப்பில் முடித்து வந்து ஞானபாதநிலை நின்று சிவாநுபூதி பெற்றுய்வார்க்கு அவ்வனுபவம் ஒன்றையே ஆக்ஷேப சமாதானங்களுடன் விரித்து விளக்குவது சிவஞான போதமே யாதலால் அதனை இந்நூல் மணம் பெறும்படி இதன் முடிமேல் வைத்து ஒரு புஸ்தக மாக்கினன், அதற்குச்சிற்றுரை பேருரை முதலியன செய்து பெரியார் விளக்கியிருப்பினும் அவ்விளக்கம் அறிவிற்சிறந்தார்க்கன்றி என்போன்ற சிற்றறிவினர்க்கு அரிதா யிருத்தலால் அஞ்சி ஒதுங்காமல் விரும்பி நெருங்கி முறையாக எளிதாயறிந்து அப்பெரியார் அருள்மேற்கொண்டு அதன்பின்பு சிற்றுரை பேருரைகள் முறையே தெளிந்து சிவாநுபவம்பெற்று வாழுக வென்னும் கருத்தால் அப்பெரியார் திருவடிகளைவணங்கி நின்று சுருக்கமாக லெகுவசனங்களால் பூர்த்திசெய்து (சிவஞா னபோதார்த்த லெகுவசனம்) எனப்பேர்தந்து மேற்காட்டியபடி செய்தேன். அடியேன்கருதியவாறுநிகழும்வண்ணம் "கருத்தானைக் கருத்தறிந்து முடிப்பான் றன்னை கழலிற்பணிந்து வேண்டு கின்றேன்.

இங்ஙனம்,

 ராம. சொ.

சிவமயம்.

வேதாந்தத்தெளிவு

# விஷயங்களும், அங்கங்குள்ள பிரமாணங்களும்.

——(0)——

## க- வேதப்பகுதி. ... ... க


| விஷயம் | பிரமாணம். | பக்கம் |
|---|---|---|
| | ஆலாஸ்யமான்மியம். ... ... | க |
| வேதம் வெளிவருதற்குக் காரணம். ... ... | | உ |
| பரமசிவனது முழுமுதற்றலைமை. ... ... | | உ |
| | யசுர் வேதம். ... ... | ங |
| ஈசுரப்பேர் சிவனுக்கேயுரியது. ... ... | | ங |
| வேதம் சிவருய்தற்காக வந்ததென்னும்... அம்மட்டிலேயே திரிபதார்த்த நித்தியங்காண்டல் | | ங |
| வேதசிவாகமங்கள் சீவர்களுக்கு உறுதி பயத்தலின் இன்றியமையாதனவே. .... ... | | ச |
| வேதம்உலகர்க்கும்,சிவாகமம்சத்திநிபாதர்க்குமேஉரியன | | ரு |
| | பெரியபுராணம் ... .... | ரு |
| | சிவஞான சித்தியார் ... .... | ரு |
| | திருமந்திரம் ... ... | ரு |
| | ஆலாஸ்யமான்மியம் .... ... | ரு |
| | முண்டகோபநிஷதம் ... ... | சா |
| | திரிபுரதாபினியுபநிஷதம் ... ... | சா |
| | பஸ்மசாபாலோபநிஷதம் .... ... | சா |
| சிவனொருவனே விமலபசுபதி, மற்றியாவருஞ்சமல பசுக்களே | | சா |
| | கிருஷ்ணயசுர்வேதம் ... ... | சா |
| | யசுர்வேதம் ... ... | எ |
| | சுவேதாசுவதரோபநிஷதம் ... .... | எ |
| | யசுர்வேததைத்திரியஆரணியகம் .... ... | எ |

| | | | |
|---|---|---|---|
| கிருஷ்ணயசுர் வேதம் | ... | ... | எ |
| நிராலம்போபநிஷதம் | ... | ... | எ |
| ஆதித்தியபுராணம் | ... | ... | எ |
| சூதசங்கிதை | ... | ... | எ |
| கேநோபநிஷதம் | ... | ... | அ |
| சாபால்யுபநிஷதம் | ... | ... | கூ |
| நாதபிந்தூபநிஷதம் | ... | ... | கூ |
| சரபோபநிஷதம் | ... | ... | கூ |
| பாசுபதப் பிரமோபநிஷதம் | ... | ... | க0 |
| வேதம்சிவபரத்துவங்கூறுவதேஉண்மை, மற்றவைஉபசாரமே | | | க0 |
| வேதம் பிரணவமாய் நின்று சிவபரமே விளக்குதல் | | | க0 |
| இருக்கு, யசுர், சாமவேதங்கள் | ... | ... | கக |
| தைத்திரி யோப நிஷதம் | ... | ... | கக |
| பிரணவப்பொருள் சிவனே | ... | ... | கக |
| தைத்திரியோப நிஷதம் | ... | ... | கக |
| ந்ருசிம்மதாபிநியுபநிஷதம் | ... | ... | கக |
| சிவசத்திபரமானபிரணவம் இரண்டுள்ளன | | ... | க௨ |
| இலிங்கபுராணம் | ... | ... | க௨ |
| ஸ்ரீ பஞ்சாக்ஷரம் | ... | ... | க௩ |
| நமஸ்காரஞ்சிவசொத்து | ... | ... | க௩ |
| பரதசாஸ்திரம் | ... | ... | க௩ |
| திருவாசகம் | ... | ... | க௪ |
| ஸ்ரீ ஞானசம்பந்தசுருதி | ... | ... | க௪ |
| பிரணவப்பொருள்சிவபரமேயென்பதற்குப் பிரத்தியட்சப்பிரமாணம் | | | க௪ |
| பிரணவம்பிரமவிஷ்ணு வாதியர் மந்திரங்களின்முன்சேர்த்தற்குக்காரணம் | ... | ... | க௫ |
| நாராயணநாமம்சிவநாமமே | | | க௬ |
| மற்றைத்தேவர்பரத்துவங்கள் உபசாரமே | | ... | க௮ |
| பிரமவிஷ்ணுவாதியர் பிறப்பிறப்புள்ளவர்களே | | ... | க௮ |
| அதர்வசிகோபநிஷதம் | ... | ... | க௮ |
| ஸ்ரீ மணிவாசகசுருதி | ... | ... | ககூ |

ஸ்ரீவாகீசசுருதி ... ... ௧௯
குருநமசிவாயசுவாமிகள் ... ... ௧௯
ஷை ... ... ௨௦
பன்னிருதிருமுறைகளும் தமிழ்வேதங்களே .... ... ௨௦

உ-வேதாந்தத்தொகுதி ... ௨௧

உ-ல் க-வைஷ்ணவவேதாந்தம் .... ௨௧

விஷ்ணுசிவனிலும்மேலானவனென்பதை மகாதேவநாமத்தளவிலே மறுப்பது } ௨௨
சிவநிந்தையால் நாக்குங்கண்ணுமிழந்தது ... ௨௩
மகாதேவநாமஞ்சிவனுக்கேயுரியது ... ௨௪
அதர்வசிரோபநிஷதம் ... ... ௨௪
சுவேதாசுவதரோபநிஷதம் ... ... ௨௪
கிருஷ்ணயசுர்வேதகர்ப்போபநிஷதம்... .... ௨௫
ஸ்ரீவாகீசசுருதி .... ... ௨௫
விஷ்ணுசிவனைப்பூசித்துவரம்பெற்றது ... ... ௨௫
இருக்குவேதம் ... ... ௨௫
சரபோபநிஷதம் ... ... ௨௬
பாராசரபுராணம் ... ... ௨௬
விருத்தகிரிபுராணம் ... ... ௨௬
மகாபாரதம் துரோணபர்வம் ... ... ௨௬
பாரதம் தமிழ் ... .... ௨௭
இராமேச்சுரம்தேவாரம் ... .... ௨௭
திருவீழிமிழலைதேவாரம் ... ... ௨௮
திருவாசகம் ... ... ௨௮
திருமாணிகுழிதேவாரம் ... .... ௨௮
திருமாற்பேறு தேவாரம் ... ... ௨௯
திருவுசாத்தானம்தேவாரம் ... ... ௨௯
விஷ்ணுவிபூதிருத்திராக்ஷதாரணபஞ்சாக்ஷரபாராயணரே ௨௯
பாரதத்தைச்சார்ந்த அரிவம்சம்... ... ௨௯
பஸ்மஜாபாலோபநிஷதம் ... ... ௩௦
பிரமாண்டபுராணம் .... .... ௩௦

| | | | |
|---|---|---|---|
| இராமாயணம் | ... | ... | ௧௦ |
| அத்தியாத்ம ராமாயணம் | ... | ... | ௧௦ |
| சாண்டில் யோபநிஷதம் | ... | ... | ௧௦ |
| காந்தமகாபுராணம் | ... | ... | ௧௦ |
| சாதாதபஸ்மிருதி | ... | .... | ௧௧ |
| பஸ்பசாபாலோபநிஷதம் | ... | ... | ௧௧ |
| நம்மாழ்வார் | .... | ... | ௧௧ |
| பெரியாழ்வார் | ... | .... | ௧௧ |
| நம்மாழ்வார் | ... | ... | ௧௨ |
| விஷ்ணுபக்தர்களும் விபூதி தாரணர்களே | | .... | ௧௨ |
| நம்மாழ்வார் | ... | ... | ௧௨ |
| விஷ்ணு தன்னடியார் எப்போதும் விபூதி தாரணராயிருக்கும்படி சிவனைப்பிரார்த்தித்தல் | | | ௧௨ |
| பிருகஜ்சாபாலோபநிஷதம் | ... | ... | ௧௨ |
| ஷை | ... | ... | ௧௩ |
| கடம்பவனபுராணம் | ... | ... | ௧௩ |
| பாரதம் | ... | ... | ௧௩ |
| பிருகஜ்சாபாலோபநிஷதம் | .... | ... | ௧௫ |
| ஸ்ரீஞானசம்பந்தசுருதி | ... | .... | ௧௫ |
| சாதாதபஸ்மிருதி | ... | ... | ௧௬ |
| ஸ்ரீஞானசம்பந்த சுருதி | .... | .... | ௧௬ |
| பராசரஸ் மிருதி | ... | .... | ௧௬ |
| வைஷ்ணவர் பூசுமண் அசாஸ்திரிகமே | ... | ... | ௧௭ |
| பராசரஸ்மிருதி ஆசாரகாண்டம் | .... | ... | ௧௭ |
| வாசுதேவோபநிஷதம் | ... | ... | ௧௮ |
| பராசரபுராணம் | ... | ... | ௧௧ |
| கருடபுராணம் | ... | ... | ௧௯ |
| கூர்மபுராணம் | .... | ... | ௨௰ |
| பாத்மபுராணம் | ... | ... | ௨௧ |
| விஷ்ணுசிவதீக்ஷைபெற்றது | ... | .... | ௨௨ |
| மகாபாரதம் அனுசாசநபர்வம் | ... | .... | ௨௨ |

| | | | |
|---|---|---|---|
| ஆலாஸ்யமான்மியம் | ,, | ,, | எஎ |
| பாரதம்துரோணபர்வம் | ,, | ,, | எஎ |
| ஆலாஸ்யமான்மியம் | ,, | ,, | எஅ |
| கந்தபுராணம் | ,, | ,, | எகூ |
| ஸ்ரீவாக்கிசசுருதி | ,, | ,, | அ0 |
| சரபோபநிஷதம் | ,, | ,, | அக |
| ஷை | ,, | ,, | அஉ |
| திருக்குற்றாலப்புராணம் | ,, | ,, | அங |
| சிவரகசியம் | ,, | ,, | அரு |
| ஷை | ,, | ,, | அஅ |
| இலிங்கபுராணம் | ,, | ,, | அகூ |
| கந்தபுராணம் | ,, | ,, | கூ0 |
| காசிகாண்டம் | ,, | ,, | கூ0 |
| ஷை | ,, | ,, | கூக |
| இலிங்கபுராணம் | ,, | ,, | கூஉ |
| சிதலமான்மியம் | ,, | ,, | கூச |
| உல்—உ-மாயாவாதவேதாந்தம் | | ,, | கூஅ |
| சைவர்களைமாயாவாதிகளென்பதுபொருந்தாமை | | ,, | கூஅ |
| நாம்பிரமமென்பவர்களேமாயாவாதிகள் | ,, | ,, | கூகூ0 |
| திருக்குறள் | ,, | ,, | கூகூ |
| சுவேதாசுவேதரோபநிஷதம் | ,, | ,, | கூகூ |
| காரணம் மூன்று | ,, | ,, | க00 |
| மிருகேந்திராகமம் மாயாப்பிரகரணம் | | ,, | க00 |
| பௌஷ்கராகமம் பிந்துபடலம் | | ,, | க00 |
| கைவல்லியம் | ,, | ,, | க0க |
| உமாபதிசிவம்சங்கற்பநிராகரணம் | | ,, | க0க |
| மணிவாசக சுருதி | ,, | ,, | க0க |
| மாயாவாதிகள்கூறுஞ்சிலம்பியுவமைபொருந்தாமை | | ,, | க0க |
| பிரமம்நிமித்தகாரணமென்பதில்வரும் ஆச்சேபத்துக்குச்சமாதானம் | | ,, | க0உ |
| சிவஞானபோதம் | ,, | ,, | க0உ |
| பிரமந்தவிர்யாதுமில்லையென்பது யுக்திக்கும்பொருந்தாமை | ,, | ,, | க0ங |

| | | | |
|---|---|---|---|
| பிரமமென்னுஞ்சொல்பெரிது, பெரியதாக்குவது | | ,, | ௧௦௩ |
| வேதம் (அதர்வசிகை) | | ,, | ௧௦௩ |
| திராவிடசுருதி | ,, | ,, | ௧௦௩ |
| விவர்த்தங்கூறுவதுபொருந்தாமை | ,, | ,, | ௧௦௪ |
| அவர்களெடுத்துக்காட்டிய உவமைகளும்பொருந்தாமை | | | ௧௦௫ |
| ஒன்றேஎன்பது கடாகாசவுவமையானும் பொருந்தாமை | | | ௧௦௬ |
| சிவஞானபோதம் | ,, | ,, | ௧௦௭ |
| தாயுமானவர் | ,, | ,, | ௧௦௭ |
| சர்வஞானோத்தராகமம் | ,, | ,, | ௧௦௮ |
| மெய்கண்டசிவம் | ,, | ,, | ௧௧௰ |
| பிரமந்தவிரயாதுமில்லை யென்பது அநுபவத்துக்கும்பொருந்தாமை | ,, | ,, | ௧௧௧ |
| விவகாரம் பரமார்த்த மென்பதனுண்மை | ,, | ,, | ௧௧௨ |
| மெய்கண்ட சுருதி | ,, | ,, | ௧௧௩ |
| பகவத்கீதை | ,, | ,, | ௧௧௩ |
| பிரமமாகியபதிநித்தியம்போல் பசுபாசங்களும் நித்தியங்களே என்பதற்குச் சுருதிப்பிரமாணம் | | | ௧௧௩ |
| இருக்குவேதம் | ,, | ,, | ௧௧௩ |
| கைவல்லியம் | ,, | ,, | ௧௧௪ |
| முண்டகோபநிஷதம் | ,, | ,, | ௧௧௪ |
| திருமந்திரம் | ,, | ,, | ௧௧௪ |
| கைவல்லியம் | ,, | ,, | ௧௧௫ |
| பகவத்கீதை | ,, | ,, | ௧௧௭ |
| ஷை வடமொழி | ,, | ,, | ௧௧௭ |
| வாசிட்டம் | ,, | ,, | ௧௧௮ |
| பிரமகீதை | ,, | ,, | ௧௧௮ |
| வேதாந்தமகாவாக்கியங்கள் | ,, | ,, | ௧௧௯ |
| ஞானாமிர்தம் | ,, | ,, | ௧௧௯ |
| ஒன்றாயுலகனைத்துமானாரென்றதனுண்மை | ,, | ,, | ௧௧௯ |
| உண்மைவிளக்கம் | ,, | ,, | ௧௨௧ |
| மாயாவாதிகூறும் சுருதிவஞ்சனை | ,, | ,, | ௧௨௧ |
| சுருதிப்புரட்டு | | | ௧௨௨ |

| | | | |
|---|---|---|---|
| பகவத்கீதையின் முடிந்தகருத்து | ,, | ,, | ௧௨௪ |
| சித்தியார் பரபட்சம் | ,, | ,, | ௧௨௫ |
| வாசிட்டத்தின் முடிந்தகருத்து | ,, | ,, | ௧௨௫ |
| மகாராஜாதுறவு | ,, | ,, | ௧௨௫ |
| மாயாவாதிகள் பசுஞானிகளே | ,, | ,, | ௧௨௫ |
| சித்தியார் | ,, | ,, | ௧௨௬ |
| மாயாவாதிக்குள்ளதத்துவங்கள் இருபத்தைந்தே | | ,, | ௧௨௬ |
| சைவர்க்குரியதத்துவங்கள் முப்பத்தாறு | | ,, | ௪௨௭ |
| சுவேதாசுவதரம் | ,, | ,, | ௧௨௭ |
| பிருகத்சாபாலம் | ,, | ,, | ௧௨௭ |
| மாயாவாதிகள் பிரமவாதிகள் என்பது பொருந்தாமை | | | ௧௨௮ |
| திருமந்திரம் | ,, | ,, | ௧௨௮ |
| நாம்பிரமமென்பது பெத்தநிலை, சிவோகமென்பது முத்திநிலை | | | ௧௨௮ |
| ஆலாஸ்யமான்மியம் | ,, | ,, | ௧௨௮ |
| பண்டார மும்மணிக்கோவை | | ,, | ௧௨௯ |
| உமாபதிசிவசுருதி, தாயுமானசுருதி | | ,, | ௧௨௯ |
| உ ஷ்·௩-சைவவேதாந்தம்,, | | ,, | ௧௩௦ |
| சுருதிப்பிரமாணங்கள் | ,, | ,, | ௧௩௦ |
| கடவல்லியுபநிஷதம் | ,, | ,, | ௧௩௦ |
| சாந்தோக்கியோபநிஷதம் | ,, | ,, | ௧௩௦ |
| சுவேதாசுவதரோபநிஷதம் | ,, | ,, | ௧௨௦ |
| தைத்திரியோபநிஷதம் | ,, | ,, | ௧௩௧ |
| ஈசாவாசியோபநிஷதம். | ,, | ,, | ௧௩௧ |
| கேநோபநிஷதம் | ,, | ,, | ௧௩௨ |
| கடோபநிஷதம் | ,, | ,, | ௧௩௨ |
| பிரசிநோபநிஷதம் | ,, | ,, | ௧௩௨ |
| முண்டகோபநிஷதம் | ,, | ,, | ௧௩௨ |
| தைத்திரியோப நிஷதம் | ,, | ,, | ௧௩௨ |
| சைவோபநிஷதங்கள் | ,, | ,, | ௧௩௨ |
| அதர்வசிகை | ,, | ,, | ௧௩௩ |
| | ,, | ,, | ௧௩௩ |

ரு தெளிவு ... கரு௪
யசுர்வேதமண்டலப்பிராஹ்மணோபநிஷதம் ... கரு௪
தாயுமானவர் ... கரு௫
சுப்பிரபேதாகமம் ... ... கரு௫
மகுடாகமம் ... ... கரு௫
இரத்தினத்திரையபரீட்சை ... ... கரு௫
காந்தபுராணம் ... ... கரு௫
கந்தபுராணம் தமிழ் ... ... கரு௬
சிவப்பிரகாசம் ... ... கரு௬
அபேதம் ... ... கருஎ
பேதம் ... ... கருஅ
பேதாபேதம் ... ... கருகூ
ஸ்ரீஞானசம்பந்த திராவிடருக்தி ... கருகூ
குமரகுருபரசுவாமிகள் பண்டார மும்மணிக்கோவை ... க௬௦
திருஞானசம்பந்தர் தேவாரம்... ... க௬க
திருநாவுக்கரசு தேவாரம் ... ... க௬உ
சுந்தரமூர்த்தி தேவாரம் ... ... க௬உ
திருவாசகம் ... ... க௬உ
திருக்கோவையார் ... ... க௬ங
திருவிசைப்பா ... ... க௬ங
திருப்பல்லாண்டு ... ... க௬ங
பெரியபுராணம் ... ... க௬ங
கந்தபுராணம் ... ... க௬ங
திருவிளையாடற்புராணம் ... ... க௬௪



# வேதாந்தத்தெளிவின்

## பிழைதிருத்தம்.

—(❋)—

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 3 | 22 | நோக்காமல | நோக்காமல் |
| 15 | 8 | மரவது | மாவது |
| 15 | 16 | பிரவண | பிரணவ |
| 17 | 18 | இஙகே | இங்கே |
| 18 | 15 | வீஷ்ணு | விஷ்ணு |
| ஷை | 24 | ருக்தி | ருத்தி |
| 20 | 23 | சிணங்க | கிணங்க |
| 22 | 6 | லரதா | ராதா |
| 23 | | வேதப்மகுதி | வைஷ்ணவவேதாந் |
| 23 | 3 | கிவ | சிவ |
| 24 | 10 | மிததன | மித்தன |
| 24 | 10 | ரினததவர் | ரினத்தவர் |
| 30 | 1 | உ-ூ | அ-ூ |
| 34 | 14 | செயளுள் | செய்யுள் |
| 34 | 27 | வைஷண | வைஷ்ண |
| 37 | 29 | வெள | வௌ |
| 43 | 28 | விஅஷ்ணூவி | விஅஷ்ணுவி |
| 45 | 15 | கெய | செய |
| 45 | 22 | முவருக்கு | மூவருக்கு |
| 46 | 12 | யடைடக்கும் | யடைக்கும் |
| 46 | 29 | னராகிய | னருகிய |
| 47 | 29 | வகிக்துக் | வகித்துக் |
| 48 | 31 | ரரியா | ரறியா |
| 51 | 13 | பிசிகி | பிசிகீ |
| 56 | 11 | னொனறு | னொன்று |
| ஷை | 20 | பகீதரனை | பகீரதனை |
| 58 | 27 | விளக்கும | விளக்கும் |
| 60 | 6 | அஙக | அங்க |
| 61 | 1 | தருளு | தருளுக |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 64 | 23 | வைஷ் ... கிடமாம் | (வைஷ் .... கிடமாம்) |
| 68 | 22 | சிவநீலை | சிவநிலை |
| 81 | 30 | பதாம் | பாதம் |
| 84 | 22 | யாவப | யாவப் |
| ௸ | 23 | நீணட | நீண்ட |
| ௸ | 24 | குருகுங | குறுகுங் |
| 85 | 10 | கல்னெ | கல்லென |
| ௸ | 24 | ப்றபல | பற்பல |
| 86 | 31 | தோட் | தோட |
| 87 | 1 | வஜ | வக் |
| 88 | 3 | வத்துற்று | வந்துற்று |
| 90 | 15 | சூழ் | சூள் |
| 91 | ... | சாக | சூக |
| ௸ | 14 | வருள | வருள் |
| ௸ | 20 | மந்தணணை | மந்தணனை |
| ௸ | 21 | விஷ்னு | விஷ்ணு |
| ௸ | 24 | அச்நி | அக்நி |
| 92 | 27 | செயய | செய்ய |
| 93 | 26 | ருதிர் | ரெதிர் |
| 95 | 2 | மெஞ்ஞான | மெய்ஞ்ஞான |
| ௸ | 4 | புள்ஞும் | புள்ளும் |
| 96 | 23 | விஷ்னு | விஷ்ணு |
| 98 | | வேதாந்த | வேதாந்தத் |
| ௸ | 25 | அவர்சள் | அவர்கள் |
| 103 | 14 | பிரமந்தவிர | (பிரமந்தவிர |
| 106 | 18 | குபவனும் | குயவனும் |
| 107 | 6 | ஒளி | ஒளி |
| 112 | 6 | கருக்தின் | கருத்தின் |
| ௸ | 29 | ரிப்பானேன் | விரிப்பானேன் |
| 117 | 12 | ழும் | மும் |
| 121 | 27 | ஏவன் | எவன் |
| 135 | 20 | ணுண்மைபாற் | ணுண்மையாற் |

# சிவஞானபோதார்த்தலகுவசனத்தின்

## பிழை திருத்தம்

—(**)—

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 13 | 23 | சத்திபுடன் | சத்தியுடன் |
| 16 | I | பரிப | பரிபா |
| 16 | 9 | யூப | யூய |
| 19 | 1 | பாகாமமனும் | பாகாமனும் |
| 26 | 13 | வுரிமைமபுள்ள | வுரிமையுள்ள |
| 36 | 13 | அறிபு | அறியு |
| 58 | 8 | மூறைச் | முறைச் |
| 58 | 23 | சத்தியென்றும் | சத்தென்றும் |
| 64 | 16 | வேறன்றும் | வேறென்றும் |
| 67 | 9 | பாசாங்க | பாசங்க |
| 70 | 27 | அசத்தறி | அசத்திலதறி |
| 71 | 11 | தொன்று | தோன்று |
| 71 | 13 | யறிறனும் | யறிதனும் |
| 71 | 18 | இயற்கைறறி | இயற்கையறி |
| 71 | 28 | நேக்கி | நோக்கி |
| 73 | 13 | தென்றே | தென்ற |
| ௸ | 25 | காணலானது | கானலானது |
| ௸ | 28 | பெற்றாரந் | பெற்றாராய்ந் |
| ௸ | ௸ | வல்லார்ர்கு | வல்லார்க்கு |
| 74 | 25 | ஊயிர்கு | உயிர்க்கு |
| ௸ | 9 | யிய்லை | யில்லை |
| ௸ | 12 | பின | பின் |
| ௸ | 15 | யுண்டெண் | யுண்டென் |
| ௸ | 18 | ஒனறு | ஒன்று |
| 74 | 29 | விண்டும் | விரண்டும் |
| 75 | 2 | மெனப | மென்ப |
| ௸ | ௸ | மாதலால | மாதலால் |
| ௸ | 8 | விளக்கும | விளக்கும் |
| ௸ | 10 | இரண்டன | இரண்டன் |
| ௸ | 14 | அறியும் | அறிவும் |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 76 | 21 | வாயிழை | லாயிழை |
| 77 | 10 | அறியும | அறியும் |
| ஷை | 11 | ஞாலகளை | ஞால்களை |
| ஷை | 17 | அறியுடைய | அறிவுடைய |
| ஷை | 20 | தெளிந்தும் | றெளிந்தும் |
| ஷை | 22 | செவ்வினை | செய்வினை |
| 78 | 14 | மெஞ்ஞான | மெய்ஞ்ஞான |
| ஷை | 15 | மெஞ்ஞான | மெய்ஞ்ஞான |
| ஷை | 27 | ளடங்கிகி | ளடங்கி, |
| 79 | 12 | அப்பசு | அப்பசு |
| 81 | 1 | 8-ம் . சூ | 8-ம் சூ, சாதனவியல்பு |
| ஷை | 23 | மாய்க்கிவ | மாப்ச்சிவ |
| 84 | 19 | விளக்கமும் | விளக்கம் |
| 85 | 12 | சிவாஞ்ஞைகு | சிவாஞ்ஞை |
| 90 | 30 | மற்றுங் | மற்றுத் |
| 95 | 1 | முதலதி | இடண்டாமதி |
| 97 | 1 | முதலதி | மூன்றாமதி |
| ஷை | 6 | ... ... | மூன்றாம்மதிகரணம் |
| 97 | 16 | சொரூபபத் | சொரூபத் |
| 99 | 7 | தரையாங் | தரையேயாங் |
| 119 | 1 | முதலதிகரணம் | இரண்டாமதிகரணம் |
| 121 | ஷை | ஷை | ஷை |
| 123 | ஷை | ஷை | ஷை |
| 125 | ஷை | ஷை | ஷை |
| 121 | 8 | அமதி | அமைதி |
| ஷை | 31 | வந்துமு | வந்துமூ |
| 125 | 17 | ஒ | ஒரு |
| 126 | 5 | தி , ரு | திரு |
| 185 | 1 | முதலதிகரணம் | இரண்டாமதிகரணம் |
| 137 | ஷை | ஷை | ஷை |
| 135 | 32 | 26 | 36 |
| 139 | 20 | நோக்சி | நோக்கி |
| 144 | 8 | தராய்ப் | தாய்ப் |
| 152 | 18 | தேடி | தேடிப் |
| 155 | 16 | தமிலகா | தமிழுலகர் |
| ஷை | 17 | களுன் | களுடன் |

உ

கணபதிதுணை.

சிதம்பரம் ஸ்ரீ மீனாக்ஷிதமிழ்க்காலேஜ் பிரின்ஸிபாலாகிய
உத்தமதானபுரம் மஹாமஹோபாத்தியாய
தாக்ஷிணாத்யகலாநிதி

# பிரம்மஸ்ரீ வே. சாமிநாதையரவர்கள்

## இயற்றிய சிறப்புப்பாயிரம்.

---

நேரிசை யாசிரியப்பா.

மன்னுறு பெண்ணை மாநதிக் கரையதாய்ப்
பன்னுறு வெண்ணெய்ப் பதிசெய்மா தவமா
வந்தமெய் கண்ட மாதவ னருள்சிவ
ஞான போதநூற் கானநல் லுரையெனக்
கற்றுணர் மறிஞர்சொல் சிற்றுரைப் பொருளை
யாவரு மெளிதின் மேவர வுணரச்
செப்புவே தாந்தத் தெளிவெனும் பெயர்த்ததும்
மோனவாழ் வருள்சிவ ஞானபோ தார்த்த
லெகுவச னம்மெனு மெழிற்பெயர் படைத்ததும்
ஆமிரு நூல்களை யான்றுட் கன்பர்
யாமிரு கண்பெற் றேமென மதிப்ப
ஆராய்ந்தியற்றி யச்சிட்டு தவினன்
மற்றவன் யாரெனி னற்றமிழ் வளத்தாற்
சேண்டிகழ் பெருமைப் பாண்டிநன் னாட்டிற்
சீரைப் பெறுபுகழ்க் காரைக்குடியெனப்
பகர்பெய ரமைந்த நகர வாணரிற்
சீர்த்திசேர் கற்பக மூர்த்திகோ யிற்கினி
தாட்பே றுளதிருவேட் பூருடையான்
பராவுற் றிடுசிவ பத்திக் கிடனெனும்

இராம நாதப் பெயரோந்த வியற்றிய
மாதவப் பயனா வந்திடு செம்மல்
உற்றவர் கல்வி கற்றவர் துயரம்
அற்றவ ராச்செய் பெற்றி யுடையராய்
நல்லறம் பலசெய் நகர வைசியர்
திலகமா விளங்குஞ் சீலம துடையோன்
நூல்பல பயிற்றுஞ் சாலாதிகளில்
முன்னிய வாறு முகநா வலன்பால்
துன்னிய வொழுக்கவன் றொண்டவேள்பால்
நற்றமிழ் நூல்பல கற்றுண ரறிஞன்
கருணைக் கடலாங் கண்ணுதன் மீது.
பல நூல் செய்த நலமுறு வாக்கி
யெல்லைதீர் பெருமைத் தில்லை மூதூரில்
வண்டமிழ் வளர்மெய் கண்ட சித்தாந்த
வித்தியா சாலை விளங்க வொன் றாக்கி.
யுய்வளித் திலகுஞ் சைவ நூல்களைக்
கற்பவர் சிறிதுங் கவலை யிலாமற்
பயிலச் செய்த நயனுறு குரிசில்
அஞ்செழுத் தினைத்தன் னெஞ்சகத் தழுத்தி
நீற்றொடு கண்டிகை நிலவப் பூண்டு
தோற்றப் பொலிவுடைச் சுந்தரமுடையோன்
சிவனடி யவரைச் சிவனென மதிக்குந்
துங்கமார் சொக்க லிங்க மென்
றியற் பெயர் மருவி யிலகு சீரியனே.

முற்றிற்று.



உ

சிவமயம்

திருவாவடுதுறையாதீனம்

சுப்பிரமணிய வோதுவார்மூர்த்தி குமாரரும்.

மேற்படிஆதீனவித்வான்

சே, ரா, சுப்பிரமணியக்கவிராயரவர்கள்

மாணாக்கரில் ஒருவரும்

சிதம்பரம்,

ஸ்ரீ:மீனாட்சிதமிழ்க்காலேஜ் தமிழ்ப்பண்டிதருமாகிய

# பொன்னோதுவாரவர்களியற்றிய

# சிறப்புப்பாயிரம்.

---

நிலைமண்டில வாசிரியப்பா

பார்மலி புகழ்சேர் பாண்டிநன் னாட்டிடைக்
கார்மலி சோலைக் காரைக் குடியிற்
பொற்புறு வைசியர் குலத்திற் பொலிவுறு
கற்பக மூர்த்தி கதிர்மணிக் கோயிலைச்
சாருந் திருவேட் பூருடை யன்பரில்
வருராம நாத வைசிய குலமணி
அருந்தவத் தாலே யளித்திடு மைந்தன்
இலக்கிய நூல்களு மிலக்கண நூல்களும்
புலத்தினிற் றேர்ந்து பொருந்துறு புனிதன்
சைவசித் தாந்த சாத்திர சாரம்
நைவதில் லாது நாவினி னவில்வோன்
பன்னுபா மாலைகள் பரன்மீ தன்பாற்
சொன்னயம் பொருணயந் துலங்கிடச் செய்வோன்

கற்ற நெறிவழி கவின்பெற வொழுகி
நிற்ற றனக்கே யுரிய நீர்மையான்
சரியை யாதியின் முறையே சரித்துப்
பரிந்து ஞான பாதநிலை நிற்போன்
திருநீ றக்க மணிவடந் திகழு
முருவ மெவரு முவப்புற வுறுவோன்
பரம னடியரைக் காணிலப் பரமனைத்
திரமதி கொண்டு சிந்தித் திடுவோன்
உளங்கனிந் துருகிட வோங்குமா னந்தத்
துளும்புகண் ணீர்மெயிற் றுலங்கிட வாயி
னுக்குள றிடவுற நயந்துளத் தன்பாற்
பாக்களிற் றோத்திரம் பற்பல பகர்ந்து
பரவச மாகியே பரமன்பூ சனையைக்
கரமல ராற்செயுங் கவின்பெறு மேலோன்
சிவநிந் தனைசெயுந் தீயரைக் காணுறிற்
றவிர்ந்தொழு குதலிற் றனக்கிணை யில்லோன்
சிதம்பர நகரினிற் சைவசித் தாந்த
விதம்பெறு பணுவல் விளங்கிடத் தேர்ந்து
சாதுமெய் கண்டசித் தாந்த வித்தியா
சாலையோன் றாக்கிச் சமயநிலை நாட்டுவோன்
இணையறு சொக்க லிங்கனென் னுமை
மணையும் வணிகசி காமணி யானேன்
மறைமுடி வாழுப நிடதவாக்கிய
மறைபொரு ளுட்ப மதித்திடா துரைக்குஞ்
சமயர்வா யடங்கவே தாந்தத் தெளிவெனும்
அமிர்தினு மினியநூ லாக்கி யதன்மேல்
அவ்வே தாந்த நுட்ப மதனைச்
செவ்வன் விளக்குஞ் சிவஞான போதச்
சிற்றுரை யாருந் தெரிவரி தாகலிற்
றெற்றெனச் சிந்தையிற் றெரிந்துகொள் ளச்சிவ
ஞானபோ தார்த்த லகுவச னம்மெனு
ஞானநூ லொன்று நயந்தியற் றினனே.

முற்றிற்று.

கணபதி துணை.

# வேதாந்தத்தெளிவு

---

## காப்பு.

பொன்பணி யாதி யுவமையி னேகம்
புகன்மத வுவரியி*னாழ்ந்து
துன்பணி யாதி கைப்பொழி தொண்டத்
தொகைப்பொருள் விளக்கிநந் துய்மை
அன்பணி யாதி சைவர்வாய் வெளியிட்
டருளும்பொல் லாரடி யிணை
முன்பணி யாதிங் கெண்ணினு முளமே
முடித்துமே லாந்தரு முதமே.

## கடவுள் வணக்கம்.

தாரக முகன்செவ் வேல்கிழவ சிவன்பொற்
சடைக்கொன்றைத் தார்புனை தலைவன்
சீரரு ளாலவர் தியாகர்முன் னருள்செய்
திருத்தொண்டத் தொகையருட் செல்வர்
ஆரருட் கூத்த ருலகெலாந் தரப்பெற்
றவரர தத்தர்வெண் காடர்
நாரருள் புரிமெய் கண்டசந் தான
நற்றவர் பொற்பத நமப்பாம்.

## குருவணக்கம்

பந்த நரனென் றொதுக்காமல் வலிந்தீர்த் தருள்வன் றொண்டமனை
உந்து துவாத சாந்தஞ்சார்ந் தொருவா தமர்மெய் யப்பமணி
எந்த வுலகு நாவலப்பே ரெடுத்தேத் தியற்றா யின்பமணி
நந்த லகற்று மும்மணிக ளனின மலர்த்தா ணமந்துய்வீரம்

---

* ஆழ்ந்து என்னும் வினையெச்சம் திகைப்பு என்னும் வினைப் பெயர் கொண்டது. ஆழ்ந்து திகைத்தலை ஒழிக்கின்ற தொண்டத் தொகை என்க. துன்பு அணி ஆ எனப்பிரிக்குக.

கணபதி துணை.

# வேதாந்தத்தெளிவு.

---

இது, வேதம் அந்தம் தெளிவு என்றுபகுக்கப்படும். இவ்வேதம் யாது அந்தம்யாது தெளிவுயாது இம்மூன்றினுமுள்ள பொருள் நிச்சயமென்னென்று தெரிந்துகொள்ளவேண்டியது அவசியமாதலால், முதலில்வேதத்தைப்பற்றி விசாரிப்போம்.

(வேதப்பகுதி)

வேதம், இருக்கு யசுர் சாமம் அதர்வணம் சிவாகமம் என ஐந்து பகுதியாயுள்ளது. வேதம்என்னுஞ்சொல், அறிதற்கருவியென்னும் பொருட்டாய்நூற்பெயராயது. இதுகாரணப்பெயராயினும் இருக்கு, யசுர், சாமம், அதர்வணம்நான்கிற்கும்மிகுவழக்கம்பற்றிக் காரணஇடுகுறிப்பெயராயும், சிவாகமங்களுக்குக் காரணப்பெயராயும் வழங்கப்பெறும். இவ்வேதம்சதாசிவமூர்த்தியின்ஐம்முகங்களினின்றுவெளிவந்தது. வரும்போது அம்முகங்களுள்மேலாகியஈசானமுகத்தில் ஒருபகுதியாகிய ஆகமங்கள் (உஅ) பிரிவாகவும்அதன் கீழுள்ளதற்புருஷம்அகோரம்வாமதேவம்சத்தியோஜாதம்என்னும் நான்குமுகங்களினும்முறையேஇருக்குவேதம் (உக) யசுர்வேதம் (கoக) சாமவேதம் (கooo)அதர்வவேதம் (கூ)பிரிவாகவும் வந்தன. இதனை,

(ஆலாஸ்யமான்மியம்.)

ப்ரணவாத்³யாஸ்ஸமாஸஜ்ஞா: காரணாத்³யக்ஷராணி ச
ஶிவஜ்ஞாநநிதி⁴த்வாந்நிகா²லிகாதி³நிஹவேத³கா: ॥
ஶ்ரீஸதா³ஶிவநாத²ஸ்ய ஸம்ஹவக்த்ரேப்⁴ய உத்³க³தா:
வேதா³ஸ்ஸர்வே ஸஶாஸ்த்ராஶ்ச வித்⁴யேவ்யக்தவக்த்ரத: ॥
ஏகவிம்ஶதிஶாகா²ட்⁴யம் ருக்³வேத³ம் ஸர்வவித்³
யஜுர்வேத³ம் ஶதைகஶாக²ம் ஸஹஸ்ரம் ஸாமவேத³த: ॥

[illegible]
[illegible]

என்னுஞ்சுலோகங்களாற்காண்க. இவைவியாசபகவான் வாக்கு. இவ்வியாசர், சிவனையே நாயகனாகக்கொண்டு வியபிசரிக்காத சைவர்களும், விஷ்ணுவையேநாயகனாகக் கொண்டுவியபிசரிக்காதவைஷ்ணவர்களும், "ஒருவனைப்பற்றியோரகத்திரு" என்ற உண்மைக்கு விரோதமாய்ச் சிவ விஷ்ணுவாதிபலரையுமொத்ததலைவராகக்கொண்டுவியபிசரித்து, இன்னமதஸ்தரென்றுசொல்லமுடியாதவேறுசிலருமாகியஎல்லாராலும்வணங்கத்தக்கவராதலால், அவ்வியாசபகவான்வாக்காகியஇச்சுலோகங்கள் எவர்களாலுமறுக்கத்தக்கனவல்ல. (வேதம் வெளிவருதற்குக் காரணம்.)

இவ்வேதத்தைப்பரமசிவன்வெளியிட்டது அரிபிரமேந்திராதி சகலசீவர்களும் புண்ணிய பாவங்களிவையென்றுணர்ந்துபாவங்களைவிலக்கிப்புண்ணியங்களையேசெய்துஉய்தற்கேயாம்.

இது, அரசர்கள் தங்கீழ்க் குடிகள்செய்வனசெய்துதவிர்வன தவிர்த்துபிழைத்தற்காகவெளிப்படுத்துங்கட்டளைச்சட்டம் போலாமென்க. அவ்வரசரும் அவ்வேதவழிப்படுமனுஸ்மிருதிமுதலிய சட்டங்களைவெளியிட்டு அரனருள்வழியினின்றேகுடிகளைநடத்துகின்றார்கள். இதனை "அரசனுஞ்செய்வதீசனருள்வழி" என்னுஞ் சுருதி விளக்கும், (பரமசிவனது முழுமுதற்றலைமை.)

குடிகளை, இவை செய்க இவை செய்யாதொழிக என்றுகட்டளையிட்டுநடத்துவது அக்குடிகளுக்குத் தலைவனான அரசனுக்கேயுரித்தாதல்போலப் பிரமவிஷ்ணுவாதிதேவர்முனிவர்மற்றுஞ்சீவர்யாவர்க்குந்தலைவன் சிவன் ஒருவனே யாதலால் செய்வனதவிர்வன இன்னின்னவென்றுவிளக்குங்கட்டளையாகிய வேதம் சிவனாலேயே வெளியிடப்பெற்றது. இதனாலுமீசுரபரத்துவம் இனிதுவிளங்கும். அரிபிரமேந்திராதிதேவர்கள் சிவனருளாற்பெற்ற அவ்வப்புவனங்களுக்குமாத்திரமன்றிஎல்லாவற்றிற்குந்தலைவரல்லர். ஆதலாற்றான் வேதம் அவர்களால்வெளியிடப்பெறாமல்எவர்க்குமேலாய்முழுமுதற்றலைவனாகியசிவபெருமானாலேயேவெளியிடப்பெற்றது.

முழுமுதற்றலைவனீசுரனேயென்பதை,

# வேதப்பகுதி.

(யசுர்வேதம்.)

ஈசாநஸ்ஸர்வவித்யாநாமீச்வரஸ்ஸர்வபூதாநாம் ப்ரஹ்மாதிபதிர்ப்ரஹ்மணோதிபதிர்ப்ரஹ்மா சிவோமேஅஸ்து ஸதாசிவோம் ॥ என்று விளக்குகின்றது.

(ஈசுரப்பேர் சிவனுக்கே உரியது.)

ஈசுரன் என்னும் பெயர் அபீஷ்டங்களைக் கொடுத்து எல்லாவற்றையும் ஆளுபவனென்னும்பொருட்டாதலால் அப்பெயர் சிவனுக்கே தனிமொழியாய் விளங்குகின்றது. இதனை, உலகர் சிவன்கோயிலை மாத்திரம் ஈசுரன் கோயிலென்றும் மற்றையர் கோயில்களை அவரவர் பெயர்களை முன்வைத்துக் கூறுமுண்மையாலுந் தெளியலாம். ஈசுரப் பேர் பிறர்க்கு முநீசுரன் கோடீசுரன் என்பனபோல ஒவ்வோர் மொழிகளுடன் சேர்ந்து நின்றன்றி தனித்துவழங்கப்பெறாமை காண்க.

(வேதம் சீவருய்தற்காக வந்ததென்னும் அம்மட்டிலேயே திரிபதார்த்த நித்தியங்காண்டல்.)

பசுபதியாகிய சிவன் வேதத்தை வெளியிட்டது பசுக்களாகிய சீவர்பொருட்டன்றித் தன்பொருட்டன்று. சீவர்களைப் பொய்யென்பார்கொள்கைப்படி சீவர்கள் பொய்ப்பொருளானால் வேதத்தை ஈசுரன் வெளியிட்டது பயனற்ற காரியமென்றாகும். முற்றறிவனாகிய சிவன் செய்வதொன்றும் பயனற்றதாகாது. ஆதலால் பொய்யாகாமல் என்றுமுள்ள சீவர்களுக்காகவே வேதத்தை வெளியிட்டானென்பதே தெளிவாம். இத்தெளிவை உண்மைநூலுணர்ந்து காணாவிடினும் மேற்காட்டியபடியாவது நோக்காமல் சீவர் பொய்யென்றும் பிரமமொன்றேமெய் நாமே அப்பிரமமென்றும் மாயாவாதிகள் கூறுகின்றார்கள். சீவர் பொய்யானால் வேதம் யாருக்காக வந்தது? நாம் பிரமமானால் சிருஷ்டியாதிகளில் ஏதேனும் நம்மாற் செய்யமுடியுமா? நாம் பிரமமென்னும்போதே நாமென்றதொன்று பிரமமென்றதொன்றாயிரண்டு பொருள் விளங்குகின்றனவே? சீவரில்லையானால் வேதம் வேண்டாமே? எங்கும் விளங்குதலால் அது சீவர்க்கே வந்ததென்பதை ஒப்புக் கொள்ளவேண்டுமே? கொள்ளாவிட்டால் அதைப்பிரமம் தனக்காகச் செய்துகொண்டதாகுமே? ஆனால், பிரமம் அந்நூலையுணர்ந்துய்ய

வேண்டியமலசம்பந்தமுள்ளதென்றாகுமே?பிரமமோ அநாதிமல முத்தசுத்தசாட்குண்ணியபரமபதியாதலால் அதுமுழுமோசமாய்மீளா நரகவேதனைக்கேதுவாகுமேஎன்பதுமுதலியஉண்மைகளைஉற்று நோக்கியாவதுசிவபிரான், தனதடிமைகளாய்என்றுமுள்ளசீவருய்தற்கேவேதத்தைவெளியிட்டருளினரென்பதும், அதனையுணர்ந்து அவ்வழியினின்றாலன்றிஉய்யவிடாதுதடுத்துநிற்கும் மலமும் அநாதியேபந்தித்துள்ளதென்பதும் அவர்உள்ளபடிகண்டுமுப்பொருளுண்மை தெளிவாராக.

இதனை, மாதவச்சிவஞானமுனிவர், சிவஞானபோதம்வழாஞ்சூத்திரமூன்றாமதிகரணம்முதல்வெண்பாவினுரையின்மேல், ஆன்மாவுக்குஅறியுந்தன்மையுண்டாகலானன்றேவேதாகமமுதலிய நூல்களுளவாயினவெனவிளக்கிச் சங்கற்பநிராகரணம்நிமித்தகாரணபரிணாமவாத நிராகரணத்தில் "பலகலையுகினிவவுதலாலும்" என்ற அருட்டிருவாக்குமெடுத்துக் காட்டியதனாலுங்காண்க.

(வேதசிவாகமங்கள் சீவர்களுக்கு உறுதிபயத்தலின் இன்றியமையாதனவே.)

வேதம்சீவர்களைநியமிக்குங்கட்டளையானால் அந்நால்வகையின் மேலும்சிவாகமமென்றொரு பகுதி வருவானேனென்னில்? சீவர்கள்சாமாநியபக்குவர்விசேஷபக்குவர்என இருவகைப்படுவர். உலகர் எல்லாரும்ஒரேருசியைவிரும்பாமல்வாதபித்தசிலேட்டும நாடிகளுக்குத்தக்கபடிவேறுவேறுருசியைவிரும்புதல்போலச், சாமாநிய பக்குவர்அவரவர்வினைக்குத்தக்கபடிவேறுவேறு தேவர்களைப் பரமெனக்கொண்டு நிற்கின்றாராதலால், அவர்களை அம்முறையிற்பிறழாதுநியமித்தற்குப் பலதேவர்க்கும் பரத்துவங்கூறுகின்ற அந்நான்குவேதங்களும் அவ்வுலகர்க்குஇன்றியமையாதனவேயாம். இனி, அவ்வுலகருட்சிறந்தவராய்ச் சாத்துவிகமாதுரியருசியொன்றையே விரும்புவோர்போல, விசேஷபக்குவர், நல்வினைப்பயனால் உள்ளபடி சிவன்ஒருவனையேபரமெனக்கொண்டுநிற்கின்றவராதலால், அவர்களைநியமித்தற்குச்சிவன் ஒருவனேபரமெனக்கூறுஞ்சிவாகமங்களும் அவ்விசேஷபக்குவர்க்குஇன்றியமையாதனவேயாமென்க.

(வேதம் உலகர்க்கும் சிவாகமம் சத்திநிபாதர்க்குமேஉரியன.)

மேற்கூறியசாமாநியபக்குவர்அவ்வோருலகாதிபராகியபலதேவரைப்பரமெனக்கொள்பவராதலால் உலகரென்று கூறப்படுவர். விசேஷபக்குவர்உலகாதீதனாகியசிவனொருவனையே பரமெனக்கொண்டு திருவருள்பதியப்பெற்றுள்ளவராதலால் சத்திநிபாதரென்றுகூறப்பெறுவர். சத்தி— திருவருள்; நிபாதம்— பதிதல். ஆகவே வேதம் உலகர்க்காகவும் சிவாகமம் சத்திநிபாதர்க்காகவும் பரமேசுரனாற் கூறப்பெற்றன என்பது விளக்கமாகியது.

இதனை ஸ்ரீமந் நடராஜராஜவள்ளல், சேக்கிழார்பெருமான் திருவாக்கினின்று வெளியிட்டருளிய * பிரமவித்தையாகிய

(பெரியபுராணம்.)

உலகியல் வேத நூ லொழுக்க மென்பதும்
நிலவுமெய்ந் நெறிசிவ நெறிய தென்பதுங்
கலதிவா யமணர்காண் கிலார்க ளாயினும்
பலர்புகழ் தென்னவ னறியும் பான்மையால். என்றும்

(சிவஞானசித்தியார்.)

வேதநூல் சைவநூ லென்றிரண்டே நூல்கள் வேறுரைக்கு நூலிவற்றின் விரிந்த நூல்கள், ஆதிநூ லநாதியம லன்றருநூ லிரண்டும் ஆரணநூல் பொதுசைவ மருஞ்சிறப்பு நூலாம், நீதியினுலகர்க்குஞ் சத்திநிபா தர்க்கும் நிகழ்த்தியது நீண்மறையி னொழிபொருள்வே தாந்தத், தீதில்பொருள் கொண்டுரைக்குநூல் சைவம் பிறநூல் திகழ்பூர்வஞ் சிவாகமங்கள் சித்தாந்த மாகும். என்றும்

(திருமந்திரம்.)

வேதமொ டாகம மெய்யா மிறைவனூல்
ஓதும் பொதுவுஞ் சிறப்புமென் றுள்ளன என்றும்,

(ஆலாஸ்யமாஹாத்மியம்.)

பக்தி செய்தர னருட்பெறும் பத்தருக் கன்றி
முத்தி யெய்தரி தெனமறை மொழிவ்வப் பொதுநூற்

---

* பிரமம்—பெரியது. வித்தை—புராணம். பெரியது புராணம் பெரிய புராணமென்றாயது. பிரமவித்தை என்னும் வடமொழி தமிழில் பெரியபுராணமென வழங்குகின்றது.

# வேதாந்தத்தெளிவு.

"சத்தி யப்பொருட் டெளிவெலாஞ் சத்திநி பாதர்க்
குய்த்து ணர்த்திய தாகம மென்பர்மெய் யுணர்ந்தோர்"

என்றும் விளக்குதல் காண்க.

பலதேவர்க்கும்பரத்துவங் கூறிப்பலமதஸ்தர்க்கும்பொதுவாய் நிற்றலால்வேதம் பொதுநூலென்பதும், சிவன் ஒருவனுக்கேபரத்துவங்கூறிச்சத்திநிபாதர்க்குப்புணர்த்துவதாதலாலசிவாகமம் (தனது) சிறப்புநூலென்பதும் விளக்கமாம.

பொதுவாய் நிற்குஞ்சாமாநியத்தன்மைநோக்கிநான்குவேதங்களையும்வேதாங்கங்களையும் அபரவித்தையென்றும், சிறப்பாய்நிற்கும் விசேடத்தன்மைநோக்கிஇருபத்தெட்டுசிவாகமங்களைப்பரவித்தையென்றும் உபநிடதம விளக்குகின்றது.

(முண்டகோபநிஷதம்.)

த்வே வித்யே வேதிதவ்யே இதி ஹ ஸ்ம யத்ப்ரஹ்மவிதோ வதந்தி பரா சைவாபரா ச தத்ராபரா ருக்வேதோ யஜுர்வேதஸ்ஸாமவேதோऽதர்வவேதஶ்ஶிக்ஷா கல்போ வ்யாகரணம் நிருக்தம் சந்தோ ஜ்யோதிஷமிதி அத பரா யயா ததக்ஷரமதிகம்யதே.

இ—ள், இருக்கு யசுர் சாமம் அதர்வணமாகிய நான்குவேதங்களும், சிக்ஷை கற்பம வியாகரணம் நிருக்தம் சந்தஸ் சோதிஷமாகிய ஆறங்கங்களும் அபரவித்தையாம். அக்ஷரமாகிய (சிவம்) எதனாலே (தெளிவாய்) அறியப்படுகின்றதோ அந்தநூல் (சிவாகமம்) பரவித்தையாம் என்று கூறுதல் காண்க. இங்கே அக்ஷரமென்றது பரமசிவனையே. இதனை, (திரிபுராதாபியுபநிஷதம்) "வேதாஸ்ஸர்வே அக்ஷரம் விசந்தி" என்றும், (பஸ்மஜாபாலோபநிஷதம்) ஸர்வ அக்ஷரம் சிவம்" என்றும் விளக்குதலானுங்காண்க.

(சிவனொருவனேவிமலபசுபதி; மற்றியாவருஞ்சமலபசுக்களே.)

மேற்கூறியபடி அரிபிரமேந்திராதிதேவர்யாவரும்பசுக்களே; பசுபதி சிவனொருவனேயென்பதை, (கிருஷ்ணயசுர்வேதம் ௬-ம் காண்டம் ௨-ம் பிரபாடகம் ௩-ம் அநுவாகம் ௨-ம் மந்திரம்.)

" [illegible] " என்றும்,

(யசுர்வேதம்—ரு–௧-௪௩)

[illegible]

என்றும், (சுவேதாசுவதரோபநிஷதம். ௬—எ)

" [illegible]

[illegible] ॥

என்றும,

யசுர்வேதத்தைச்சார்ந்ததைத்திரீய ஆரணியகம் (௧௦-௨௨. ௪௦)

[illegible]

[illegible]

[illegible]

[illegible] என்றும்,

(கிருஷ்ணயசுர்வேதம்-ரு-எ-௨௬)

[illegible] ॥

அக்கினிவாயு ஆதித்தியர் (முதலானதேவர்கள்) பசுக்களேஎன்றும்

(நிராலம்போபநிஷதம்)

[illegible]

[illegible] ॥ பிரமவிஷ்ணுருத்திரேந்திராதி தேவர்யாவருஞ் சீவர்களே (பசுக்களே) என்றும்,

(ஆதித்தியபுராணம்.)

[illegible] ॥ பிரமவிஷ்ணுஇந்திராதிதேவர்யாவரும் பசுக்களே, இதுபிரசித்தமேஎன்றும்,

(சூதசங்கிதை)

காவு ளானயன் கண்ணன்முற் றேவர்கள்
யாவ ருந்தொண்ட ராயினு மும்மலம்
ஓவி மெய்யரு ளுண்மையிற் பற்றுபு
மேவு மின்னர் விசேட வடியரே.

# வேதாந்தத்தெளிவு.

இ-ள் இந்திரன் பிரமன் விஷ்ணு முதலியதேவர்யாவருஞ்சிவத்தொண்டராயினும் அவரெல்லாம்மும்மலபந்த சீவர்களே. மும்மலநீங்கித்திருவருளாற்சிவனைப்பற்றிச்சுத்தாத்துவித நித்தியானந்தமநுபவித்து வாழுமிவர்களே விசேடத்தொண்டர் என்றும் விளக்குகின்றன.

பசுபதிநாமம்சிவனுக்குஇயற்கையன்றெனவும், திரிபுரசங்காரஞ்செய்ய வேண்டிக்கொண்டதேவர்களைச்சிவன்நான்பசுக்களுக்குப்பதியாயிருக்கும்படிவரந்தரவேண்டுமென்றுகேட்டுக்கொள்ள அவர்கள் அவ்வரமளித்தபின்வந்தசெயற்கையாமெனவும்இதுயசுர்வேதத்துள்ளதெனவுங்கூறும் மூடவசனத்தைப்புத்திமான்கள்உற்றுநோக்கிப்பின்வருட்பிரமாணங்கள்கண்டுஉண்மைகூறுவாராக.

தேவர்கள், சிவனைப்பசுபதியாயிருக்கும்படிவரங்கொடுக்கும் வன்மையராஞல்! திரிபுரசங்காரஞ்செய்யும்படிசிவனிடத்துவேண்டிக்கொள்வானேன்? திரிபுரத்தவரால் அலைப்புண்டுவெல்லமுடியாமற்சிரமுற்றுதிரிந்துதிருக்கயிலைசென்று சிவசந்நிதியில் வீழ்ந்து ஆபத்துநீக்கியருளவேண்டுமென்றுவேண்டிக்கொண்டதேவர்கள்தாமா வரங்கொடுக்கும்வலியுடையார்? அவர்கட்கிரங்கி எந்தவீரரும்மனசினும்நினையாதமேருவாகியகல்லைவில்லாகவளைத்துச்சென்றும்அத்தேவர்துர்ப்புத்திநோக்கி ஒருகருவியும்வேண்டாது சிரித்தமட்டிலேயே பொன் வெள்ளி இரும்புகளால் அதிவிசாலமாயுள்ளமூன்றுகோட்டையுந்தகித்தருளியவீரதிவீரனாகியசிவன்றோ! அவர்களிடமாகவரம்பெறுகிறவன். அறிவிலாச்சிறுவரும்நகையாடற்குரிய இவ்வசட்டுவார்த்தை யறிஞர் சபையிலேறுமா? மூன்று கோட்டையும் பற்றியெரியும்போது அவற்றுள்ளே அத்தலைவர்மூவரும் அளவிலாவின்பவருட்கடலுள்மூழ்கியிருந்த அதுவே அச்சிவனுடைய லுப்தசக்தி அநந்தசக்தியாகிய குறைவிலாற்றலையும்பேரருட்பெருக்கத்தையும்பிரகாசப்படுத்துகின்றதன்றோ!

கேநோபநிஷதம், சிவனருளால் அசுரரைவென்றுவந்ததேவர் ஒவ்வொருவரும் அருளைமறந்து, நான் வென்றேன் வென்றேனென்று அகங்கரித்துநிற்கும்போது, சிவன் ஒருயக்ஷரூபியாய் வந்து

நின்று, இதைவென்றவரெவரோ அவரே அசுரரைவென்றவராவர் என்றொருதுரும்பைநிறுத்தினரென்றும் அக்கினிதேவன் தன்வலிமுழுதுஞ்செலுத்தியும் அதையெரிக்கமுடியாமல் விலகினனென்றும், வாயுதேவனும் அசைக்கமுடியாமல்விலகினனென்றும், இந்திராதிதேவர்யாவரும் ஆயுதாதிகளாற் சேதிக்கமுடியாமல் விலகினரென்றும், அப்போது யக்ஷமூர்த்தியையறியாது மயங்கினரென்றும் உமாதேவியார் அசரீரியாகச்சிவனருளால்வென்றதைமறந்து நான்நானென்றகங்கரித்தீராதலால் யக்ஷரூப சிவனையறியாது மயங்கினீரெனத் தெரிவித்தருளினரென்றும்விளக்குகின்றது. இதனால், சிவன்கையிலுள்ள ஒருதுரும்புக்காற்றாத தேவர்கள் அச்சிவனுக்குப்பசுபதியாகும்படி வரங்கொடுத்தார்களென்ற வசனஞ்சிறிதும் பொருந்தாதென்பது தெளிவாகின்றது. இதுவன்றியும்,

(சாபால்யுபநிஷதம்.)

ஸவஜ்ஞஸ்ஸ்வசுக்ருதஸ்ஸம்வ்ருத்தஸ்ஸர்வம்ஸம்ஸ்ப்ருஷ்பசுபதிஃ தத்திகாஸ்பசுபதிஃ என்றும் (நாதபிந்தூபநிஷதம்.) பசூநாம்பதிம்தயா ॥ என்றும் (சரபோபநிஷதம்.)

யோலீலயைவத்ரிபுரம்ததாஹகாலம்காலம் யோஸௌபசுபாஸ விமோசநாயவதோபசுபதிஃ தஸ்மைருத்ராயநமோநமஃ ॥

(இ-ள்) எவர்விளையாட்டினால், (லெகுவாக) திரிபுரகாமகாலதகனரோ? எவர்க்குளெல்லாத்தேவரும்பசுக்களோ? அதனால்எவர்பசுபதியோ? அந்தருத்திரருக்காகுக, இந்நமஸ்காரம்என்றும்

சிவபிரானுக்குஇயற்கையாயுள்ள பசுபதிநாமமகிமையைவிளக்குகின்றன.

ஆனால், வேதத்தில்திரிபுரசங்காரங்கூறுமிடத்துள்ள "வரம்வ்ரணை" என்றமந்திரம்சிவன்வரங்கேட்டதைவிளக்காதோவெனில் அதனுண்மைபின்வரும்விளக்கத்தாற்காண்க. நானெனப்படும்பசுத்துவத்தையும் எனதெனப்படும் உடல்பொருள்களையும் ஞானாசாரியர் வாங்கிக்கொள்ளுதல்போல, அத்தேவர்கள்பசுக்களாகிய தங்களுக்குப்பதியாகியசிவனைமறந்து தங்களையேபதியெனக்கருதி அகங்கரித்து நிற்றலால், சிவன் அவர்களிடத்துஇரக்கங்கொண்டுஉங்களைப்பதியெ

னக்கருதியதோஷத்தால் திரிபுரத்து அசுரர்க்கு ஆற்றாது மெலிந்தீர்கள், இனிநீங்கள்நினைத்துக்கொண்ட பதித்துவத்தைநம்மிடத்து அர்ப்பணஞ்செய்துவிடுங்கள்; பதித்துவமாகியசொத்தெப்பொழுதும் நம்முடையதேயாம் என்றுண்மை விளக்கியருளி, அத்தேவர் அகந்தையாற்கொண்டபதித்துவத்தைக்கிரகித்தாரென்பதே அம்மந்திர தாத்பரியமெனக. இதனை,

ஆண்டுள்ள "ஸஹஸ்ரைவபஶூநாமதிபதி:" (ஈசானபசுக்கருக்கதிபதி) என்றமந்திரமும்தேற்றேகாரத்தாற்செவ்வேவிளக்குகின்றது. மேலும் (பாசுபதப்பிரமோபநிஷதம்,) "ஸ ஏவ பஶுபதி:ஸ ஏவ பஶுபதி:" என்னுமந்திரங்கள் அதனையே அசையவிடாதுநிலைநிறுத்துகின்றன. விஷ்ணு முதலியதேவர்களுக்குவேதமுதலிய நூல்களில்பசுபதிஎன்னும்நாமங்கூறப்படவில்லை. ஆதலால், பசுபதிநாமம்சிவனுக்குச்செயற்கையால் வந்ததென்றுகூறும்மூடவசனம் முழுதும் ஒழிந்து அஃது இயற்கையேயென்பதுதெளிவாயது.

(வேதம்சிவபரத்துவங்கூறுவதேஉண்மை, மற்றவையுபசாரமே)

இனி, வேதம்பலதேவர்க்கும்பரத்துவங்கூறினும் அவர்களைக்கூறிய அளவுக்குமிகமேலாய்ச்சிவனையே ஸ்ரீருத்ரமுதலியபற்பலபகுதிகளாக விசேஷித்துக்கூறுதலாலும், சிவபரமான வாக்கியங்களையேமுதலிற்கூறிக்கொண்டுதொடங்குதலாலும், முடிவிலும்சிவமகிமையேபணியேமுடிவுறுதலாலும், மற்றத்தேவபரத்துவம் எல்லாம்உபசாரமேஎன்பதும், சிவபரத்துவமேஉண்மை என்பதுந்தெளிவாகும்

(வேதம்பிரணவமாய்நின்றுசிவபரமேவிளக்குதல்.)

வேதம்இருக்குயசுர்சாமம் அதர்வணமெனநான்காயினும் அதர்வணம் மந்திரமயமாய் ஆங்காங்குகிரவிசிற்றலால் மற்றைமூன்று வேதங்களை சாங்கமாகஅத்தியயனபூர்வமாகநிகழ்கின்றன. இதனைத்(திரையி)யென்னும் அவ்வேதங்களின்பேருமிளக்கும். அவ்வேதங்கள்சதாசிவமுகமாகப்பிரணவத்தினின்றும்வெளிவந்தபடியால் முதலிலும்நடுவிலும் முடிவிலும் அகர உகர மகரங்களையேகொண்டு பிரணவமென்றுசொல்லும்படி ஸஜாதிகத்துவஉரிமையுடன்விளங்குகின்றன.

இதனை, முதலாவது இருக்குவேதம் முதல்மண்டலமுதற்சூக்தம்முதல்மந்திரமுதலிலுள்ள "(அக்நிமீளே)" அக்கினிமீளே என்றமந்திரமுதலெழுத்தாகிய அகரமும், மத்தியயசுர்வேதத்தில், (யோநிஸ்ஸமுத்ரோபந்து:) யோநிஸ்ஸமுத்ரோபந்து: என்றமந்திரநடுவெழுத்தாகிய உகரமும், இறுதியசாமவேதமுடிவில் (ஸமாநம்வரம்) ஷமாணம்வரம்என்றமந்திரமுடிவெழுத்தாகிய மகரமும்விளக்குகின்றன. பிரணவமும்மூன்றெழுத்தாய்த்திரையினைநிற்றல்போல, அதினின்றும்வந்தவேதமும்மூன்றாய்த்திரையினை விளங்குகின்றன. இன்னும்இதனை (தைத்திரீயோபநிஷதம்.)

யஜுரேவ ஶிர: ருக்தக்ஷிண: பக்ஷ: ஸாமோத்தர: பக்ஷ:
ஆதேஶ ஆத்மா அதர்வாங்கிரஸ: புச்சம் ப்ரதிஷ்டா ॥

இ—ள்:- யசுர்வேதமேசிரசு இருக்குவேதம்வலப்பக்கத்து இறகு. சாமவேதம் இடப்பக்கத்து இறகு. அதர்வவேதம்வால். இத்தகையவேதங்களாகியபக்ஷிக்கு ஆத்மாபிரணவமென்று விளக்குதலானுங்காண்க. ஆதேசம்—பிரணவம்.

வேதங்களின் அந்தரங்கதாற்பரியம்பிரணவப்பொருளாகியசிவபரமேயென்பதைச்செவ்வேதெரிந்துகொள்ளுதற்காகவே, அவ்வேதங்கள்பிரணவமுதலெழுத்தாகிய அகர முதலாத்தொடங்கும்போதே நடுவில்உகரமும்முடிவில்மகரமுந்தொடரவைத்து முடிக்குங்கருத்துக்கொண்டே அவ்வாறுதொடங்கி முடிவுற்றிருக்கின்றன.

(பிரணவப்பொருள்சிவனே.)

பிரணவம்சிவனையேபொருளாகக்கொண்டுநிற்றலால் அது அவனுக்கேயுரியதென்பதை (தைத்திரீயோபநிஷதம்.)

ஓமிதி ப்ரஹ்ம ஸதாஶிவோம் என்றமந்திரம், ஓம்என்பதுபிரமம் சதாசிவன்பிரணவம்என்றும்,

(நிருசிம்மதாபினியுபநிஷதம்)

அகாரம் ப்ரஹ்மாணம் நாபௌ உகாரம் விஷ்ணும் ஹ்ருதயே
மகாரம் ருத்ரம் ப்ரூமத்யே ஓங்காரம் ஸர்வேஶ்வரம் த்வாதஶாந்தே ॥

அகாரப்பொருளாகியபிரமாவை நாபியிலும்உகாரப்பொருளாகியவிஷ்ணுவைஇருதயத்திலும் மகாரப்பொருளாகிய ருத்திரைப்

புருவநடுவிலும் இம்மூன்றுந்தானேயாய் ஓங்காரப்பொருளாயுள்ள சர்வேச்வரனைத்துவாதசாந்தத்திலும் தியானிக்குகவென்றுவிளக்குகின்றன, அதர்வசிகைமாண்டூக்கியமுதலிய உபநிடதங்களும் ஓங்காரப்பொருளாயுள்ள சர்வேச்வரன் துவாதசாந்தத்தில் தியானிக்கத்தக்கவனென்று கூறுகின்றன. சர்வேச்வரன் சிவனேயென்பதை(த்யேயஸ்ஸர்வேச்வரச்சம்புராகாசமத்யே(என்ற அதர்வசிகரவாக்கியங்களில்சம்புசப்தமும்விளக்கும்,

(சிவசத்திபரமானபிரணவம்இரண்டுள்ளன)

பிரணவமிரண்டுவிதமென்று பரமசிவன்உமாதேவியார்க்குவிளக்குகின்றார். (இலிங்கபுராணம் அ௫ அத்தியாயம்)

ஸவதீயஃவ்ரணவஃகஸமிநீயஃவ்ரணவஸ்யா
அகாரொகாரஉகாரொஉதீயெவ்ரணவெஸ்தாஃ ॥
உகாரஞ்சஉகாரஞ்சஅகாரஞ்சக்ரமெணது
ஸவதீயஂவ்ரணவஂவிஙிக்ரிதாதௗஂவ்ருதஉதஃ ॥

இ—ள், ஒருபிரணவம்உனக்குரியது. அப்படியேமற்றொன்றுநமக்குரியது. இவ்விரண்டில் அகாரஉகாரமகாரமுறையாயுள்ளது நம்முடையது,உனதுபிரணவம்(ஹ்ரிம்ஸிஎன்பதுஸிஹ்ரம்ம) எனஎழுத்துமாறிநிற்றல்போலஉகாரமகார அகாரமாகஎழுத்துமாறிஉமாஎனமூன்றுமாத்திரைப் புலுதமாய் நிற்பதென்றறிவாயென விளக்குகின்றது. இத்தகைய'உமா' என்னும்பிரணவம்ஸ்ரீருத்திரசங்கிதையின் மத்தியிலுள்ளஐந்தாவதுபிரச்நமத்தியிலுள்ள அநுவாகத்தில் 'நம: ஸோமாயச' என்றுதொடங்குகின்றமந்திரத்துள்விளக்கமே. இதனாலும் பிரவணப்பொருள் சிவபரமும் சிற்சத்திபரமுமேயென்பது தெளிவாகும்,

இப்பிரமாணபலமெல்லாமிருக்கவும் யாரேனும்மாற்சரியகுணத்தால் பிரணவப்பொருளைமற்றைத்தேவபரமாகக்கூறப்புகினும் அத்தேவர்களின்சத்திகளுக்கும்கூறமுடியாதென்க. அன்றியும்பிரணவம் அகாரம்உகாரம்மகாரம் விந்துநாதமாகிய பஞ்சாக்ஷரமாய்நிற்றலாலும் பிரணவப்பொருள் பஞ்சாக்ஷரப்பொருளாகிய சிவனேயென்பதுதெளியலாம்,பிரணவம்ஐந்தெழுத்துக்கள்சேர்ந்து ஓரெழுத்தென்னும்படிநிற்றலால்இதுசமஷ்டி 'பஞ்சாக்ஷரமெனப்படும். இத

னை வாதவூரர்புராணம் "ஐங்தெழுத்தோரெழுத்துருவாந்தன்மை கண்டு" என்றதிற்காண்க. (பஞ்சாக்ஷரம்.)

இனி, நகாராதிசிகாராதிபஞ்சாக்ஷரம்தனித்தனிபிரிந்துநிற்றலால்வியஷ்டிபஞ்சாக்ஷரமாம். இதுதூலசூக்குமகாரணாதிபலவகைப்படும். இப்பஞ்சாக்ஷரமேஎழுகோடிமந்திரங்களெவற்றினும்மேலாய்மந்திரராஜாவாய்விளங்குகின்றது. இதனை

வேத ஞாதியாம் விண்ணவர் குழாத்தினுள் விளங்கும்
பாதி வாண்மதி முடியுடைப் பரமனே போலப்
பேத மாரெழு கோடிமந் திரங்களிற் பெரிதாம்
போத வைந்தெழுத் தாகிய புனிதமந் திரமே.

எனபதிற்காண்க. (நமஸ்காரம்சிவசோத்து)

இருக்குயசுர்சாமம்என்னுமூன்றின்மத்தியிலுள்ளது யசுர்வேதம். இதுஎழுகாண்டமுள்ளது. இவ்வேழில்மத்தியிலுள்ளதுநாலாவதுகாண்டம். இம்மத்தியகாண்டம்எழுசங்கிதையுள்ளது, இந்தஎழின்மத்தியிலுள்ளது ஸ்ரீருத்திரசங்கிதை. இதுமுழுதும்நமோந்தசிவநாமங்களாய்நின்றுசிவனொருவனே நமஸ்காரமாகியசொத்துக்குரியவனென்பதைத்தெளிவிக்கின்றது.

அன்றியும்இன்னமதஸ்தருக்குரியதென்பதின்றிஎல்லார்க்கும்பொதுவாகநடனவிவரணமாத்திரங்கூறும்பரதசாஸ்திரமும், நடனஞ்செய்யும்போது பிரமவிஷ்ணுவாதிதேவர்களை அவரவர்க்குரியஆயுதவிளக்கஅபிநயங்களால்தெரிவிக்கும்படியும்சிவன்ஒருவனைமாத்திரஞ்சிரமேற்கைகள்கூப்பிவணங்கும்நமஸ்காரமுத்திரையாற்றெரிவிக்கும்படியுங்கூறிநமஸ்காரம் சிவனுக்கேயுரியதென்பதை விளக்குகின்றது. இதனை (பரதசாஸ்திரம்.)

வஜ்ரண்யாஸேந்த்ரயாமக்ரம் வஹ்நிதயாதமப்ரயெஷியழ
மரவிதயாகெமவமரேஷஹம்ஸிரவஸ்யாஞ்ஜலிஸேச்வரா ॥

என்றுவிளக்குதல்காண்க.

இதனாற்றான்மற்றைத்தேவர்களிலாவதுமனிதர்களிலாவது ஒருவர்ஒருவருக்குச்செய்யும்நமஸ்காரங்கள் அவரவரைச்சேராமற்சிவனிடமே அவரவராற்சேர்க்கப்படுகின்றன. இதுபற்றியே சிவனை

# வேதாந்தத்தெளிவு.

"நமசிவாய"என்றுவேதங்கூறியது. (திருவாசகம்.)

"செய்யானை வெண்ணீ றணிந்தானைச்* சேர்ந்தறியாக்
கையானை யெங்குஞ் செறிந்தானை" என்பதுங்காண்க.

ஸ்ரீருத்திரத்திலுள்ளமுந்நூற்றொருசிவநாமங்களின்மத்தியி லுள்ளநூற்றைம்பத்தோராவதுசிவநாமமே ஸ்ரீபஞ்சாக்ஷரம். இதிலுள்ள (சிவ)என்னும்இரண்டெழுத்தும்ஜீவரத்தினமாகும், இதுபஞ்சாக்ஷரத்துக்குஉயிரும், பஞ்சாக்ஷரம்ஸ்ரீருத்திரத்துக்குயிரும், ஸ்ரீருத்திரம்நடுக்காண்டத்துக்குயிரும், அக்காண்டம்யசுர்வேதத்துக்கு உயிரும், அவ்வேதம்இருக்குசாமம்இரண்டுக்கும் உயிருமாமென்க. இவ்வுயிருள்ளபடியாற்றான், மேற்கூறிய பஞ்சாக்ஷரமுதலிய ஐந்தவகையும்சீவிக்கின்றன. இதனை,

विद्यासु श्रुतिरुत्कृष्टा रुद्रैकादशिनी श्रुतौ
तत्र पञ्चाक्षरी तस्यां शिव इत्यक्षरद्वयम् ॥
[illegible]
[illegible]
[illegible]
[illegible] ॥

என்னும்வசனங்களாற்காண்க.

மூன்றுவேதமாயசரீரத்துக்குயசுர்வேதம்முகம். ஸ்ரீருத்திரங்கண். பஞ்சாக்ஷரம்கண்மணி. (சிவ)என்னுமிரண்டக்ஷரம்மணியிலுள்ளபாவையாகவிளங்குகின்றன. இதனை (ஸ்ரீவாகீசசுநதி) "கண்ணே கண்ணிற்கருமணியேமணியாடுபாவாய்காவாய்" என்பதனாலுங்காண்க.

இவ்வாறுவேதங்களுக்குயிராய்மெய்ப்பொருளாயுள்ளது ஸ்ரீபஞ்சாக்ஷரமென்பதை, (ஸ்ரீஞானசம்பந்தசுருதி)

"வேதநான்கினுமெய்ப்பொருளாவது
நாதநாமநமச்சிவாயவே" என்றுதெளிவிக்கின்றது.

(பிரணவப்பொருள்சிவபரமேயென்பதற்குப்பிரத்தியக்ஷப்பிரமாணம்)

பிரணவம்சிவனுக்கேயுரியதென்பது அவனதுகொன்றைமாலை

---

சேர்ந்தறியாக்கையான்—பிறரைஅஞ்சலித்தறியாததையான்.

யாலும்நேரேகாணலாம். இக்கொன்றைப்பூ, ஐந்து இதழ்களுடனோங்காரம்போலவளைந்தகப்பிகளும் ஒன்றுசேர்ந்திருத்தலால் ஐந்தெழுத்தாகிய பஞ்சாக்ஷரத்துக்குரியசிவனே பிரணவத்துக்கு முரியனென்பதைநேரேகாட்டுகின்றது.

இனிவிஷ்ணுவுக்குரியதுளசியாவது, பிரமனுக்குரியதாமரையாவது, மற்றெந்தமாலைகளாவது, பிரணவத்துடன் அவரவர்மந்திரங்களைக்காட்டுவனவல்லவென்பதும், பிரணவத்தைமாத்திரமாவது எழுத்துக்களைமாத்திரமாவது காட்டுவனவுமல்லவென்பதும் நேரேதெரியலாம். ஆகவேபிரணவம்சிவபரமேயென்பது திண்ணமேயாயது.

(பிரணவம்விஷ்ணுவாதியர்மந்திரங்களின்முன்
சேர்தற்குக்காரணம்.)

பிரணவம்சிவனுக்கேயுரியதானால் இது பிரமவிஷ்ணு முதலிய மற்றத்தேவமந்திரங்களிலும் முதலில்வைத்து வழங்குவதென்னெனில்? அம்மந்திரங்கள்பெருமையுறுதற்கேயாமென்க. இதனைப்பிரணவஞ்சேராவிடினும் ஐந்தென்னும் அளவிற்குறையாத ஸ்ரீபஞ்சாக்ஷராதிகள்போலாகாமல், பிரவணவஞ்சேராவிட்டால் ஏழென்றாகி அதுசேர்ந்தபின்பே அஷ்டாக்ஷரமென்பதுபூர்த்தியாகி அதனாற்பெருமைபெறுகின்றவிஷ்ணுமந்திராதிகளாலுங்காணலாம். இதனால்மற்றைமந்திரங்களின் முதலில் பிரணவஞ்சேர்தல் அம்மந்திரங்கள் பெருமையுறுதற்கேயென்பதும், அதுசேராமலே பூர்த்தியாயுள்ளபஞ்சாக்ஷரமுதலிற்சேர்வது அப்பஞ்சாக்ஷரப்பொருளாகிய சிவனுக்கே அப்பிரணவமுரியதென்பதைவிளக்குதற்கென்பதும், தெளிவாயது.

பிறப்பிறப்பில்லாதவனாகியசிவன்தான்கூறியவேதத்திலேபிறப்பிறப்புள்ள பிரமவிஷ்ணுக்கள் பெருமையுறுதற்காகவே பிறப்பில்லாதவனென்னும்பொருளைத்தருகின்ற அஜன் (அயன்) என்னும்பெயரும், இறப்பில்லாதவனென்னும்பொருளைத்தருகின்ற அச்சுதனென்னும்பெயரும்கொடுத்துவிளக்குதலாலும் மற்றமந்திரங்கள்பெருமையுறவே பிரணவம் முதலிற்சேர்க்கப்படுகின்றதென்றது நிச்சயமாம். மேலும்சிவபிரான்தனக்குரியநாராயணாதிநாமங்களை விஷ்ணு

முதலியோர்க்குக்கொடுத்து அவர்களுக்குப் பாத்துவமுங்கூறிப்பெருமைப்படுத்துதலைநோக்கியுஞ்செவ்வைதெளியலாம்.

(நாராயணநாமஞ்சிவநாமமே.)

நாராயணநாமஞ்சிவனுடையதேயென்பதைநாராயணீயென்னும்உமாதேவியினதுநாமமேவிளக்குகின்றது. ருத்திரபத்நிருத்திராணீ மகேச்வரபத்நிமகேச்வரி; பவபத்நிபவாநிஎன்பனவாதிபோல நாராயணபத்நிநாராயணீயென்றுவழங்குகின்றது. இதனை, "நாராயணீஸஹஸாராயநமசிவாய" என்றஅப்பயதீக்ஷிதவாக்கிறுற்காண்க. இ—ள்; நாராயணியுடன்கூடியசிவன்பொருட்டுநமஸ்காரம்என்பதாம் .சைவச்சார்பினரல்லாதசமணர் கூறியநிகண்டும், நாராயணீஉமாதேவியென்றேகூறுகின்றது. நாராயணநாமத்தின்பொருள், உயிர்த்தொகுதியை(கூட்டத்தை)ஒத்துநிற்பவனென்பதாம். எனவே, சிவன்சர்வவியாபகன்என்பதுதாற்பரியம்; இதில் நாரம்நாருடையதொகுதி. இங்கேநாரர்என்றதுஉயிர்களை. நாரம்என்னும்பகுதிச்சொல் அண்விகுதி முதலியசெய்கைபெற்றுநாராயணனென்றுஒருசொல்லாய்க்காரணப்பெயராய்விளங்குகின்றது.

இவ்விளக்கங்களால்நாராயணநாமம்சிவனுக்கேயுரிய காரணப்பெயராயிருக்க, வைஷ்ணவர்சிலர் நாராயணநாமம்விஷ்ணுவுக்கேயுரியதெனக்கொண்டு அதைக்காரணப்பெயராக்கி மகிமைகூறமுடியாமல்இடுகுறியாகக்கூறுகின்றார்கள்.

இடுகுறிப்பெயர்ஒருகாரணமுமின்றித்தொன்றுதொட்டுவழங்கிவருவது. காரணப்பெயர்காரணங்காட்டிநிற்பது. நாராயணநாமத்தைக்காரணப்பெயராக்கிவிஷ்ணுமகிமைகூறாமல்இடுகுறியாக்கிக்கூறுகின்றஇது, தனக்குமூக்குப்போனாலும் போகட்டும் எதிரிக்குச்சகுனத்தடையானால்நல்லதென்ற கதையாய்முடிகின்றது. எதனாலெனில்? நாராயணநாமம் விஷ்ணுவுடையதென்பவர்கள் அதைக்காரணப்பெயராக்குமிடத்திமுட்டுப்பாடுவருவது நோக்கி அம்மகிமைகூறுதல்போனாலும்போகட்டும்; அந்நாமஞ்சிவனுக்குரியதன்றென்று தடுக்கவேண்டியதேநமதுகடமையென்றெண்ணி அதனை இடுகுறிப்பெயரென்றுகூறுதலாமென்க.

முட்டுப்பாடியாதெனில்; நாராயணநாமத்தைக் காரணமாக்கினால் நாரம் அயநம் எனப்பிரித்து நீரை இடமாகக்கொண்டவனென்று காரணங்கூறவேண்டும். நாரம்-நீர். அயநம்-இடம். இவ்விருசொற்களும் நாராயநம் என்றுதான் சேரும், இதில் முன்மொழி ரகாரம் நோக்கிப் பின்மொழி நகரம் ணகரமாகி நாராயணனென்று ஆகலாமெனில், இடுகுறிப்பெயரானால் அப்படியாகலாம்; காரணப்பெயரினும் ஒரேசொல்லாயிருந்தாலும் ஆகலாம். நாரம் அயநம் என இரண்டுசொல்லாக்கிக் காரணங்கூறுமிடத்து நகரம் ணகரமாகமாட்டாதென்பதே யிலக்கணவிதியாதலால் நாராயணனென்னுஞ் சொல்லைக் காரணமாக்கி மகிமைகூற முட்டுப்பட்டு, அதுபோனாலும் போகட்டுமென்று இடுகுறிப்பெயராக்கி விஷ்ணுவுக்கேயுரியதென்று கூறுதலேணக. காரணமாக்கி மகிமைகூறவிடாமல் ணகரங் கஷ்டப்படுத்தல் நோக்கி, ணத்துவம்பாதிக்கின்றது என்றுங்கூறுகின்றார்கள்.

இத்தனைகஷ்டப்பட்டு இடுகுறிப்பெயராக்கொள்ளினும் அதுவும் ஆகுபெயராய்ச் சிவனையே உணர்த்தும். அஃதாவது கங்கைக்கண் இடைச்சேரி என்று ஒருவர்கூறினால், அவ்விடைச்சேரி அக்கங்கைநீரின்மேலிருப்பதாக ஒருவர் நினைப்பதுமில்லை கங்கைக்கரையிலிருப்பதாகவே யாவருந்தெரிவராதலால், இங்கே கங்கையென்ற சொல் நீரையுணர்த்தும்போது இடுகுறியாய், அதுவே ஆகுபெயராய் அதனாலடுக்கப்பட்ட கரையையுணர்த்துதல்போல, நாராயணனென்றசொல் அவர்கள் மனம்போல விஷ்ணுவையுணர்த்தும்போது இடுகுறிப்பெயராய் அதுவே ஆகுபெயராய் அவனாலடுக்கப்பட்ட சிவனையுணர்த்துமென்க.

இனி, மேற்கூறிய அச்சுதன் என்றசொற்பொருள் இறவாதவனென்பதாதலால் அப்பெயர், சுருதியாதிகளிற் பிறப்பிறப்புள்ளவனென்றுகூறும் விஷ்ணுவுக்குரியதன்றென்பதும், பிறப்பிறப்பில்லாதசிவனுக்கேயுரியதென்பதுந்தெளிவாம். நாராயணநாமம் சிவனுக்கேயுரியதென்பது பௌஷ்கராகமபாஷியத்திலும் சிவஞானபாஷியத்திலும், விரிவாய்விளக்கப்பெற்றுள்ளதே. இதுகாறுங்கூறியவாற்றால் அச்சுத நாராயணாதி சிவநாமங்கள் விஷ்ணுபெருமையுறுதற்காகச்சிவனாற்கொடுக்கப்பட்டவாறுபோல மேற்கூறியபிரணவமு

முதலியோர்க்குக்கொடுத்து அவர்களுக்குப் பரத்துவமுங்கூறிப்பெருமைப்படுத்துதலை நோக்கியுஞ்செவ்வே தெளியலாம்.

(நாராயணநாமஞ்சிவநாமமே.)

நாராயணநாமம்சிவனுடையதேயென்பதைநாராயணீயென்னும்உமாதேவியினதுநாமமேவிளக்குகின்றது. ருத்திரபத்நிருத்திராணீ மகேச்வரபத்நிமகேச்வரி; பவபத்நிபவாநிஎன்பனவாதிபோல நாராயணபத்நிநாராயணீயென்றுவழங்குகின்றது. இதனை, "நாராயணீஸஹஸாராயநமசிவாய" என்றஅப்பயதீக்ஷிதவாக்கினாற்காண்க. இ-ள்; நாராயணியுடன்கூடியசிவன்பொருட்டுநமஸ்காரம்என்பதாம். சைவச்சார்பினரல்லாதசமணர் கூறியநிகண்டும், நாராயணீஉமாதேவியென்றேகூறுகின்றது. நாராயணநாமத்தின்பொருள், உயிர்த்தொகுதியை(கூட்டத்தை)ஒத்துநிற்பவனென்பதாம். எனவே, சிவன்சர்வவியாபகன்என்பதுதாற்பரியம்; இதில் நாரம்நாருடையதொகுதி. இங்கேநாரர்என்றதுஉயிர்களை. நாரம்என்னும்பகுதிச்சொல்அண்விகுதி முதலியசெய்கைபெற்றுநாராயணனென்றுஒருசொல்லாய்க்காரணப்பெயராய்விளங்குகின்றது.

இவ்விளக்கங்களால்நாராயணநாமம்சிவனுக்கேயுரிய காரணப்பெயராயிருக்க, வைஷ்ணவர்சிலர் நாராயணநாமம்விஷ்ணுவுக்கேயுரியதெனக்கொண்டு அதைக்காரணப்பெயராக்கி மகிமைகூறமுடியாமல்இடுகுறியாகக்கூறுகின்றார்கள்.

இடுகுறிப்பெயர்ஒருகாரணமுமின்றித்தொன்றுதொட்டுவழங்கிவருவது, காரணப்பெயர்காரணங்காட்டிநிற்பது. நாராயணநாமத்தைக்காரணப்பெயராக்கிவிஷ்ணுமகிமைகூறாமல்இடுகுறியாக்கிக்கூறுகின்றஇது, தனக்குமூக்குப்போனாலும் போகட்டும் எதிரிக்குச்சகுனத்தடையானால்நல்லதென்ற கதையாய்முடிகின்றது. எதனாலென்றால்? நாராயணநாமம் விஷ்ணுவுடையதென்பவர்கள் அதைக்காரணப்பெயராக்குமிடத்திமுட்டுப்பாடுவருவது நோக்கி அம்மகிமைகூறுதல்போனாலும்போகட்டும்; அந்நாமஞ்சிவனுக்குரியதன்றென்று தடுக்கவேண்டியதேநமது கடமையென்றெண்ணி அதனை இடுகுறிப்பெயரென்றுகூறுதலாலென்க.

முட்டுப்பாடியாதெனில்; நாராயணநாமத்தைக் காரணமாக்கினால் நாரம் அயநம் எனப்பிரித்து நீரை இடமாகக்கொண்டவனென்று காரணங்கூறவேண்டும். நாரம்-நீர். அயநம்-இடம். இவ்விருசொற்களும் நாராயநம் என்றுதான் சேரும், இதில் முன்மொழி ரகரம் நோக்கிப் பின்மொழி நகரம் ணகரமாகி நாராயணனென்று ஆகலாமெனில், இடுகுறிப்பெயரானால் அப்படியாகலாம்; காரணப்பெயரினும் ஒரேசொல்லாயிருந்தாலும் ஆகலாம். நாரம் அயநம் என இரண்டுசொல்லாக்கிக் காரணங்கூறுமிடத்து நகரம் ணகரமாகமாட்டாதென்பதே இலக்கணவிதியாதலால் நாராயணனென்னுஞ்சொல்லைக் காரணமாக்கிமகிமைகூற முட்டுப்பட்டு, அதுபோனாலும் போகட்டுமென்று இடுகுறிப்பெயராக்கிவிஷ்ணுவுக்கேயுரியதென்றுகூறுதலென்க. காரணமாக்கிமகிமைகூறவிடாமல் ணகரங்கஷ்டப்படுத்தல்நோக்கி, ணத்துவம்பாதிக்கின்றதென்றுங்கூறுகின்றார்கள்.

இத்தனைகஷ்டப்பட்டு இடுகுறிப்பெயராக்கொள்ளினும் அதுவும் ஆகுபெயராய்ச்சிவனையே உணர்த்தும். அஃதாவது கங்கைக்கண் இடைச்சேரி என்று ஒருவர்கூறினால், அவ்விடைச்சேரி அக்கங்கைநீரின்மேலிருப்பதாக ஒருவர்நினைப்பதுமில்லை. அங ஙகக்கரையிலிருப்பதாகவே யாவருந்தெரிவராதலால், இங்கே கங்கையென்ற சொல்நீரையுணர்த்தும்போது இடுகுறியாய், அதுவே ஆகுபெயராய் அதனாலடுக்கப்பட்டகரையையுணர்த்துதல்போல, நாராயணனென்றசொல் அவர்கள் மனம்போல விஷ்ணுவையுணர்த்தும்போது இடுகுறிப்பெயராய் அதுவே ஆகுபெயராய் அவனாலடுக்கப்பட்ட சிவனையுணர்த்துமென்க.

இனி, மேற்கூறிய அச்சுதனென்றசொற்பொருள் இறவாதவனென்பதாதலால் அப்பெயர், சுருதியாதிகளிற்பிறப்பிறப்புள்ளவனென்றுகூறும் விஷ்ணுவுக்குரியதன்றென்பதும், பிறப்பிறப்பில்லாதசிவனுக்கேயுரியதென்பதுந்தெளிவாம். நாராயணநாமம் சிவனுக்கேயுரியதென்பது பௌஷ்கராகமபாஷியத்திலும் சிவஞானபாஷியத்திலும், விரிவாய்விளக்கப்பெற்றுள்ளதே. இதுகாறுங்கூறியவாற்றால் அச்சுத நாராயணாதி சிவநாமங்கள் விஷ்ணுபெருமையீறுதற்காகச்சிவனாற்கொடுக்கப்பட்டவாறுபோல மேற்கூறியபிரணவமு

ம்மற்றைமந்திரங்கள் பெருமையுறுதற்கே அவைகளின்முதலிற் சேர்க்கப்பட்டதென்றதுநிராக்ஷேபமேயென்க.

(மற்றைத்தேவபரத்துவங்கள்உபசாரமே)

இனிச், சிவபிரான் வேதத்தில்மற்றைத்தேவர்க்குப்பரத்துவங் கூறியது, அவர்களைத்தலைவராகமதித்து அவர்களுக்குக்கீழுள்ளார் அடங்கிநடத்தற்கேயாம். அது, மந்திரிமுதலியோரை அவர்க்குக்கீழுள்ளார் அரசனாகமதித்தடங்கி நடக்கும்படி அரசனே கட்டளை செய்தலாலும், அவர்களுமடங்கிநடத்தலாலுந்தெளிவாகும். ஆகவேமந்திரிமுதலியோர் அரசன் ஆஞ்ஞைப்படிநடக்கின்ற அவனடிமைகளேயாதல்போலச், சிவனாற்பரத்துவங்கூறப்பட்ட மற்றைத்தேவர்யாவருஞ்சிவனடிமைகளேயென்பதுந்தெளிவாயது. இது, மற்றைத்தேவர்கள் பிரகிருதிமாயாபுவனத்தலைவர்களாகச் சிவனால்நியமிக்கப்பட்டுநிற்றலாலும் சிவன் அதற்குமேலும் அசுத்தமாயைசுத்தமாயைகளையுங்கடந்துமாயாதீதனாய்நிற்றலாலும் விளக்கமே.

(பிரமவிஷ்ணுவாதியர்பிறப்பிறப்புள்ளவர்களே)

பிரமவிஷ்ணுவாதிதேவர்கள்பிறப்புள்ளவர்களென்பதை

(அதர்வசிகோபநிஷதம்.)

[illegible]
[illegible]
[illegible]

[illegible]
[illegible]

இ—ள். தியேயவஸ்துவானஈசானனைத்தியானிக்கவேண்டும். இந்தப்பிரபஞ்சமுழுதும் பிரமவிஷ்ணுருத்திரேந்திராதியரும்

---

“தியேயன்” என்னுஞ்சொற்பொருள் (சீவர்களாகிய அடிமைகளால்) தியானிக்கத்தக்கவன் என்பதாம். இத்தியேயசப்தம் வேதங்களிற்பற்பலஇடங்களில்சிவபிரானொருவனுக்கேகூறப்பெற்றனவன்றிப் பிறர்க்குக் கூறப்படவில்லை. இனித் “தியாதா” என்னுஞ்சொற்பொருள் (தனக்குமேலொருகடவுளைத்) தியானிக்கின்றவனாகிய (அடியவன்) என்பதாம். இதனை, “நாராயண:பரோத்யாதா” என்பதுமுதலியவற்றாற்காண்க.

பிறக்கின்றனர். சர்வேந்திரியங்களும்பஞ்சபூதங்களுட[illegible]பிறக்கின்றன. ஆதலால் இவர்கள் காரணரல்லர். சமஸ்தகாரணங்களுக்குங்காரணமும்© தாதாவும், தியாதாவும் சர்வைசுவரியசம்பந்நரும், சர்வேசுவரருமாகியசம்புவானவர் ஆகாசமத்தியிலே தியானிக்கத்தக்கவரென்றுவிளக்குகின்றது. இதனை "முழுமுதலேயைம்புலனுக்குமூவர்க்குமென்றனக்கும்" என்ற ஸ்ரீ மணிவாசகசுருதியாலுங்காண்க. பிறப்புள்ளபோதே தாம் இறப்புமுண்டாதலால்பிரமவிஷ்ணுமுதலியோர் பிறப்புள்ளவரென்றுமேற்கூறியசுருதியாலேயே இறப்புமுள்ளவரென்பதுதெளிவாகும்.

(ஆயினும், அச்சுருதிசாரமாகிய ஸ்ரீமணிவாசகசுருதி)

"எண்ணிலி யிந்திர ரெத்தனையோ பிரமர்களு
மண்மிசை மால்பலர் மாண்டனர்" என்றும்;

(ஸ்ரீவாகீசசுருதி)

நூறு கோடி பிரமர்க ளொங்கினர், ஆறுகோடி நாராயண ரங்ஙனே
ஏறு கங்கை மணலெண்ணி லிந்திரர், ஈறிலாதவ னீசனொருவனே

என்றும்விளக்குகின்றன.

(குருநமசிவாயசுவாமிகள்.)

கோடி விதி மாளிற் குலாவுகம லக்கண்ணன்
ஒடி வடவா லுறங்குமே—நாடுங்கால்
அக்கண்ணர் கோடி யழியி லருணகிரி
நக்கனருள் சற்றே நகும்.

என்று அதனையேதெளிவித்தருளினர். அன்றியும்விஷ்ணு, ராம, கிருஷ்ணாதிபற்பலரூபியாகமாதாவின் கெர்ப்பத்துள்ளிருந்து பிறந்தாரென்று அம்மகிமைகூறவந்த ராமாயண பாகவதாதிகளுமுள்ளபடிகூறுகின்றன. இதனை, "மன்னுபுகழ்க்கௌசலைதன் மணிவயிறு வாய்த்தவனே" என்றுகுலசேகராழ்வார்கூறுதலாலுங்காண்க. இங்ஙனங்கூறியதனாற்சிவனொருவனே பிறப்பிறப்பில்லாதவன்மற்றை

---

© தாதா—மேற்கூறியகாரணங்களைப்படைக்குங்கர்த்தா. தியாதா தியானிப்பவன். இங்கேதியானித்தல், இன்னது இன்னபடியாகுகவெனச்சங்கற்பித்தல்.

த்தேவர்மூவரும் பிறப்பிறப்புள்ளவர்களேயென்பதுதெளிவாயது இத்தெளிவுபற்றியே,

(குருநமசிவாயசுவாமிகள்.)

எல்லார் பிறப்பு மிறப்புமியற் பாவலர்தஞ்
சொல்லாற் றெளிந்தோநஞ் சோணசை—நில்லிற்
பிறந்தகதை யுங்கேளேம் பேருலகில் வாழ்ந்தா
டிறந்தகதை யுங்கேட்டி லேம்.

என்றுஒரேமுடிவாகத்தொகுத்துவிளக்கியருளினர்.

மேற்கூறியவைகளையும் அங்கங்கேயுள்ளபிரமாணங்களையுமூற் றுநோக்குப்விமற்சரபுக்திமான்கள், பக்ஷபாதமின்றிமூன்றுவேதங்களாலுந்தெளித்தெடுத்த உண்மைப்பரம்பொருள் சிவமொருவனேயென்பதும், மற்றைத்தேவபரத்துவங்களெல்லாம்உபசாரமேயென்பதும், அப்பரத்துவங்கூறியதும் சிவபிரான்அத்தேவர்கள் பெருமையுற்றுவாழ்கவெனக் கொண்டகருணையேயாமென்பதும் உள்ளபடிகூறுவரர்கள்.

* (பன்னிருதிருமுறைகளுந்தமிழ்வேதங்களே)

இரையினென்னும்வேதங்கள், பிரமனிஷ்ணுவாதியர்க்கும்பரத் துவங்கூறிமுடிந்த தாற்பரியம் சிவபரமேயாய்விளங்குதற்கிணங்க முதலிலும்நடுவிலும்அகாரஉகாரங்களும் முடிவில்மகாரமுமாகப்பிரிந் துநின்றுஅம்மூன்றின்தொகுதியாகிய பிரணவமேயாகிநிற்றல்போ லத், தேவாரம்முதலிய பன்னிரண்டுதிருமுறைகளும்அவ்வேதங்க ளைவடித்தெடுத்தசாரமாய்ச் சிவமொருவனேபரம்பொருளென்ப தைவிளக்குதற்கிணங்க, அகாரஉகாரமகாரங்களாய்ப்பிரிந்திலலாம ல், முதலாவதுதிருமுறைமுதலிலே, "தோடுடைய" என்றதன்

—

* பன்னிருதிருமுறைகளாவன—க, உ. ௩ ஸ்ரீ ஞானசம்பந்தர்தேவாரம். ௪. ௫. ௬. ஸ்ரீவாகீசதேவாரம். ௭. ஸ்ரீ சுந்தரமூர்த்திதேவாரம். ௮. திருவாசகம் திருக்கோவையார். ௯. திருவிசைப்பா திருப்பல்லாண்டு ௧௦. திருமூலர்திருமந்திரம். ௧௧. திருமுகப்பாசுரமுதலியபிரபந்தங்கள். (௧௨)பெரியபுராணம்.

முதலில் ஓகாரமும், பன்னிரண்டாவது திருமுறைமுடிவில் "நின்றதெங்குநிலவியுலகெலாம்" என்றதன் முடிவில் மகாரமுஞ்சேர்ந்து ஓங்காரமாய்விளங்குதல்காண்க.

இப்பன்னிருதிருமுறைகளும் ஆரியவேதசாரமாகியசிரியதமிழ்வேதங்களாதலால் அவ்வாரியவேதங்களினுமுக்கியப் பிரமாணநூல்களையென்பது திண்ணமாகும்.

இத்திருமுறைகளும் ஓகாரமும்மகாரமுமாய்ப்பிரிந்துநிற்கின்றனவென்றேவெனின்? இப்பன்னிரண்டும், வேதங்கள்இடையே வேறுபொருள்களைப் பற்றிநிற்றல்போலாகாமல், சிவமாகியஓரேபொருளையேதம்முள்வைத்துக்கொண்டு ஒன்றுக்கொன்று விரோதமின்றிஒற்றுமையாய்விளங்குதலால் அப்பிரணவத்தினுட்பொருள் சிவனேஎன்பதனுண்மைதோன்றஓகாரமும்மகாரமும்முதலினும்முடிவினும்பாதுகாப்பாய்நிற்றலேயன்றிவேறில்லை. அவ்வோகாரமும் வேதங்களிற்போல அகரஉகரங்களாகப்பிரியாதுசேர்ந்துநிற்றலும் அதனைவிளக்கும்.

(வேதாந்தத்தோகுதி)

இனி, அந்தமென்னுஞ்சொற்பொருள், முடிவுஎன்பதாம். அச்சொல்வேதத்தைஅடுத்துநிற்றலால்வேதத்தின் முடிவென்றாகும் வேதமுடிவுதான், வேதாந்தம்வேதசிரசுஉபநிஷதம்எனவழங்கப்படுகின்றது. வேதம்நான்காய்ப்பலதேவபரத்துவங்கூறிப்பலதிறப்படுதலால் அம்முடிவும் (வேதாந்தமும்) அந்தந்தச்சார்வுபற்றிப் பலவாய்விளங்குகின்றன. இதனைநோக்காதசிலர், வேதாந்தம்ஒன்றேயென்றும் வேதாந்திகள்ஒரேவகையினரென்றும் கூறுகின்றனர். மேற்கூறியவகைகளைநோக்குவார்க்குவேதாந்தம்பலவென்பதும், அவ்வச்சார்புபற்றியவேதாந்திகளும் பலவகையரென்பதும் தெளிவாகும். அவற்றுளீண்டுக்கூறுவன, வைஷ்ணவவேதாந்தம், மாயாவாதவேதாந்தம், சைவவேதாந்தம்என்னும்மூன்றுமேயாம். இம்மூன்றுசார்பினரும்வேதாந்திகளென்றேவழங்கப்பெறுவர்.

(வைஷ்ணவவேதாந்தம்)

இம்மூவகைவேதாந்திகளுள்ளே, வைஷ்ணவவேதாந்திகள், எல்லாத்தேவரினும்மேலானகாரணப்பொருள், விஷ்ணுவேயெனவ

ழிபடுபவர்கள். பலரைநாயகராக்கொண்டுவியபிசரியாமல், ஒரேநாயகனைப்பற்றிநிற்பதுஉத்தமகுணமே.

யாதொரு தெய்வங் கொண்டீ ரத்தெய்வ மாகி யாங்கே
மாதொரு பாக ஞர்தாம் வருவர்மற் றத்தெய் வங்கள்
வேதனைப் படுமி றக்கும் பிறக்குமேல் வினையுஞ்செய்யு
பாதலா லிவையி லாதா னறிந்தருள் செய்வ னன்றே.

என்பதுஎமதுசித்தாந்தசுருதியாதலால், ஒரேநாயகனைப்பற்றிநின்றுவியபிசரிக்காதஎம்மதஸ்தரும்நமக்குச்சம்மதத்தரே. ஒவ்வொருமதஸ்தரும்அவரவர்நிலையினின்று, அவ்வத்தேவமகிமைகளைஅந்தந்தமட்டிற்கூறியமையாமல் மேலுள்ளதேவர்களைத்தாழ்த்திக்கூறின் அதுசுருதிசம்மதமன்றென்க.

இனி, வைஷ்ணவர்கள், நமக்குமேலொருகடவுள் (ஆண்டவன்) உண்டு. நாம்அவனடிமைகளேயெனவழிபடுஞ்சத்காரியநிலைசுருதிசம்மதமே. அவர்கள்,விஷ்ணுமற்றைத்தேவரின்மேலானவன் என்பதுபோலச்சிவனினும் மேலானவனென்பதுசுருதிசம்மதமன்று. இதனைச்சற்பிரமாணங்கள்காட்டிநாட்டுவாம்.

(விஷ்ணுசிவனினுமேலானவனென்பதைமகாதேவநாமத்தளவிலேயேமறுப்பது.)

எத்தேவரினும்மேலானவன்விஷ்ணுவென்றுகூறுபவர்கள் அஃதுஉண்மையானால் அவ்விஷ்ணுவை மகாதேவனென்று எங்கேனுந்துதிக்கின்றார்களா? அல்லதுஅவர்கள் ஆப்தரெனக்கொண்டஆழ்வார்முதலியோராவது விஷ்ணுவை மகாதேவனென்று எங்கேனுங்கூறியதுண்டா? மகாதேவன்எவனோ அவனேஎவரினுமேலானவனென்பதுசிறுவர்க்கும்விளக்கமாமே. இவைஎல்லாமுற்றுநோக்கும்ஆகூழின்மையால் இச்சமயம்நோக்கிஅந்நாமமும்விஷ்ணுவுக்குரியதென்பரேல் அதுவீணேவாசாமாத்திரமாயொழியாமல்தங்களில்யாருக்காவது அப்பெயரிட்டுமஹாதேவஐயங்காரென்றுவழங்கிச்சுருதிபெலம் யுக்தி பெலமில்லையானாலும் அனுபவபெலமொன்றாவதுகாட்டலாமே. அவர்கள்மகாதேவநாமம்சிவநாமமேயென்பதுள்ளபடிதெரிந்தமையாலன்றோ அதனை மறந்துங்கூறாமல் ஒதுக்கிவிடுகின்றார்கள்.

மயானவாசிஎன்றுஇழிவுகூறிச்சிவநாமங்களைவாயாற்கூறுவது ம்பாதகமென்றெண்ணிச் சிவநாமங்களுள்ஒன்றாகியமகாதேவநாமத்தையும்ஒதுக்கிவிட்டகுறையன்றோ, விஷ்ணுசிவனிலும்மேலானவனென்றுகூறும்வாய்ச்சொல்லையும் சிறிதுநேரமேனும்நிலைபெறாதவின்றிஒழியும்படி ஒதுக்கிவிட்டது.

(சிவநிந்தையால்நாக்குங்கண்ணுமிழந்தது.)

சிலவைஷ்ணவர், சிவஎன்றுவாயாலுங்கூறுதபிடிவாதத்தால்திருக்கோஷ்டியூரிலுள்ளசிவாலயத்துக்குரியசிவதீர்த்தமாகியசிவகங்கை என்பதையும் வேறிடங்களிலுள்ள அப்பெயரையுங்குறுணிக்குண்டென்கின்றனர். சிவம்—குறுணி. கங்கை—குண்டுஎன்றுதார்அர்த்தம் பண்ணிக்கொண்டனர். சிவம்என்பதைக்குறுணிஎன்றுஇழிவுகூறும்போதே, அவர்கள், விஷ்ணுபாதகங்கையைத்தான் சிவன்தரித்தானென்றுநினைத்துக்கொண்டு அதனைமிகமேலானதென்றுபுகழ்பவராதலால், அக்கங்கைக்குங்குண்டென்றுகூறியஇழிவுநேர்ந்தது. தமதுகொள்கைக்குஇழிவுவருதலையும்நோக்காமற் சிவநிந்தையில்உறைத்துநிற்பது அவர்கள்வழக்கமே. இக்கொடுமையால்முன், கூரத்தாழ்வாரும்பெரியநம்பியும்நாக்கறுபட்டுக் கண்ணுமிழந்தகதைசிவாதிக்கரத்திலுவெளியிலுள்ளதே. ஈண்டுச்சுருக்கிக்காட்டுவாம்.

கங்கைகொண்டசோழபுரத்தில்திருநீற்றுச் சோழமகாராஜசபையிலே ஸ்ரீவாகீசபாதசேகரசிவாசாரியசுவாமிகள்சிவமகிமைகளை அநேகசுருதிப்பிரமாணங்காட்டிவிளக்கி "சிவாத்பரதரம்நாஸ்தி" என்றுகூறினார். இ—ள், சிவனுக்குமேலானகடவுளில்லைஎன்பதாம். அப்போதுகூரத்தாழ்வார், அதுசம்மதமில்லையானால், சிவனுக்குமேலானவன்விஷ்ணுவென்றுபிரமாணங்காட்டவேண்டியதேமுறையாயிருக்க, அதற்குச்சுருதிஇடங்கொடாமையால் அம்முறைகடந்து (துரோணமஸ்திததப்பரம்) என்றார், இ—ள். அதற்கு (குறுணிக்கு)மேற் பதக்குஇருக்கின்றதுஎன்பதாம். உடனேராஜா (சிவம்)என்னுஞ்சொல்லுக்குக்குறுணியென்றுதார்அர்த்தம்பண்ணிய தோஷத்தால், அக்கூரத்தாழ்வார்நாக்கையும்அவருடன்சார்ந்தபெரியநம்பிநாக்கையும் அறுப்பித்து அவ்விருவர்கண்களுக்கும் அபாவஞ்செய்

துவிட்டார். அவ்வேதனைப் பொறுக்க முடியாமல் அப்பெரியநம்பி மரண மடைந்தனர். இதனை அவர்கள் குருபரம்பரையுங் கூறும். சோழர் பின் பு இராமானுஜரையும் பிடித்து வரும்படி ஏவலாளரை விடுத்தனர். அதனை, ராமானுஜர் தெரிந்து காவிவஸ்திரத்தைக் களைந்து விட்டு வெள்ளை வஸ்திரந்தரித்துக் கொண்டு மறைந்து ஓடினார். இதனை, உடையவர் வெள்ளை சாத்திக்கொண்ட திருநாளென்று அவ்வைஷ்ணவர்கள் கொண்டாடி வருதலானும் நன்கு தெரியலாம்.* அவ்வாறு ஓடி மறைந்த ராமாநுஜர், அத்திருநீற்றுச் சோழரிடத்துள்ள விரோகத்தால் அவர் காலத்துக்குப்பின் வெளிவந்து திருநீறு தரித்தலை மாற்றி மண் பூசலை நியமித்தனராதலால், அதற்குமுன் எல்லாரும் அவருள் அடங்கிய தவர் யாவரும் வைதிக சைவ மான விபூதிதாரணர்களாகவே யிருந்தார்களென்பதே தெளிவாம். இவ்வுண்மை திருவாய்மொழி முதலியவைகளானும் நிச்சயமாம். அவை பின் காட்டப்பெறும்.

(மகாதேவநாமஞ் சிவனுக்கே யுரியது.)

எத்தேவரினும் மேலானவனெவனோ அவனே மகாதேவனென்பது நிராக்ஷேபம். அம்மகாதேவநாமம் சிவனுக்கே யுரியதென்பதை.

(அதர்வசிரோபநிஷதம்.)

[illegible]

இ—ள், பின்பு எதனால் மகாதேவரெனப்படுகின்றார். எல்லா இயல்புகளையும் நீக்கி, மகத்தாகிய பரமாத்மஞான போக ஐச்வரியத்தின் பொருட்டுப் பூஜிக்கப்படுகின்றனர். அதனால் மகாதேவரெனப்படுகின்றாரென்றும்.

(சுவேதாசுவதரோபநிஷதம்)

[illegible]

* இது, கிறிஸ்தவர்கள், ஏசுகிறிஸ்துநாதர் சிலுவையில் அறையுண்ட திருநாளென்று கொண்டாடுதல் போலுமென்க.

இ—ள், ஈசுரர்களின்மேலான பரமேசுரரும் தேவர்களின் மேலானமகாதேவரும் பதிகளின்மேலான பரமபதியும் புவநேசரும் துதிக்கத்தக்கவருமாகிய மகாதேவரை அறிகின்றோம் என்றும், (கிருஷ்ணயசுர்வேதகர்ப்போபநிஷதம்.)

"யதி³யோந்யா: ப்ரச்யுதோ(அ)ஹம் ப்ரபத்³யே ப⁴வம் ஈஶ்வரம்
ஹரம் பஶுபதிம் ருத்³ரம் மஹாதே³வம் ஜக³த்³கு³ரும்॥"

இ—ள், யோநியை (கர்ப்பத்தை) விட்டு வெளிவருவேனாகில் பரமேசுவரரும் பர்க்கரும் பசுபதியும் உருத்திரரும் ஜகத்குருவுமானமஹாதேவரைச் சரணமடைவேன்என்றுந்தெளிவிக்கின்றது. (ஸ்ரீவாகீசசுருதி.)

வாது செய்து மயங்கு மனத்தராய்
ஏது சொல்லுவீ ராகிலு மேழைகாள்
யாதொர் தேவ ரெனப்படு வார்க்கெலாம்
மாதே வன்னலாற் றேவர்மற் றில்லையே.

என்று மகாதேவநாமஞ்சிவனுக்கேயுரியதென்பதைத்தெளிய விளக்கி வலியுறுத்துகின்றது.

(விஷ்ணு சிவனைப் பூசித்து வரம்பெற்றது)

பூஜகர் பூஜ்ஜியரிருவரிற் பூஜகர்பூஜிக்கின்ற அடியவரென்பதும், பூஜ்ஜியர் அப்பூசனையையேற்றுக்கொண்டருளுகின்ற ஆண்டவரென்பதும் யாவருந்தெரிந்தனவே. தேவர்யாவராலும் பூஜிக்கப்பெறுகின்றவன் சிவனொருவனேயென்றும், அத்தேவரெல்லாரும் அவனைப் பூஜிக்கின்றபூஜகர்களேயென்றும் வேதங்கூறுகின்றது. இதனை (இருக்குவேதம் ரு-ங-ங மந்திரம்.)

தவஶ்ரியே மருதோ மர்ஜயந்த ருத்³ர யத்தே ஜநிம சாரு சித்ரம்॥

இ—ள், தேவர்கள் அவ்வப்புவனவாழ்வாகிய செல்வத்தையடையும்பொருட்டு உமது விசித்திரரூபமாகிய மகாலிங்கத்தை அபிஷேகாதிபூசைசெய்து (பெற்றனர்.) என்றும்,

# வேதாந்தத்தெளிவு

(சரபோபநிஷதம்.)

" யத்³வாமபாதா³ர்ச்சிதவிஷ்ணுநேத்ர: தஸ்மை ப்ரீதஶ்சக்ரம் த³தௌ³ ஸ்வஹஸ்த: தஸ்மை ருத்³ராய நமோஸ்து ॥ "

இ—ள், எனது இந்தநமஸ்காரம், விஷ்ணுநேத்திரபத்மத்தினால் அர்ச்சிக்கப்பட்டபாதத்தையுடையவன் எவனோ? அப்படி அர்ச்சித்தவிஷ்ணுவுக்குச் சக்கரங்கொடுத்தவன் எவனோ? அந்த ருத்திரனுக்கு ஆகட்டும் என்றும்,

(பராசரபுராணம்.)

ஶுத்³த⁴ம் ஶிலாமயம் சைவ விஷ்ணுர் லிங்க³ம் ஸம்பூஜ்ய
ஆப ஶாஶ்வதம் பத³ம் ப⁴க்த்யா ॥

இ—ள், விஷ்ணுவானவர் சுத்தமும் சிலாமயமும் மனோக்ஞவிசித்திரமுமாகிய சிவலிங்கத்தைப்பக்தியுடன் பூசித்துப் பரமபதத்தைப்பெற்றார் என்றும்,

(விருத்தகிரிபுராணம்.)

ஶுத்³த⁴ம் ஸ்ப²டிகலிங்க³ம் மனோஜ்ஞம் ஸம்பூஜ்ய ஆப ஹரி: ஸ்வகம் ॥ ஸம்பூஜ்ய ப⁴க்த்யா விஷ்ணுஶ்ச லிங்க³ம் ப்ரதா²னம் பத³ம் ஶ்ரேஷ்ட²மவாப்ய ॥

இ—ள், விஷ்ணுவானவர் பக்தியுடன் ஆதியில் மனோக்ஞமாய்ச்சிலாமயமாயுள்ள சிவலிங்கத்தையன்றோ பூசித்து மிகவும் கிடைத்தற்கரிதாய் ஆதியாய்த்தலைமையாய்ச் சிரேஷ்டமாயுள்ள தமக்குரியபரமபதத்தைப் பெற்றாரென்றும்,

(மகாபாரதம்துரோணபர்வம்) உ0உ. கூச.

ஸ ஏஷ ருத்³ரப⁴க்தஶ்ச கேஶவோ ருத்³ரஸம்ப⁴வ:
ஸர்வேஶம் லிங்க³ம் ஜ்ஞாத்வா லிங்க³மர்ச்சயதி ப்ரபு⁴: ॥

இ—ள், ருத்திரரிடத்துஉதித்தவரும் சிவபக்தருமாகிய அந்தக்கேசவர்(விஷ்ணு)சர்வலோகத்துக்கும் காரணம் சிவலிங்கமென்றறிந்து எப்பொழுதும் பிரபுவாகிய சிவலிங்கப்பெருமானைப் பூசிக்கின்றனரென்றும்,

தேவதேவஸ்த்வசிந்த்யாத்மா ஆத்மயோநிர்மஹேச்வர: ।
ஸர்வரூபம் ஸ்வயம் ஜ்ஞாத்வா லிங்கே ஸம்பூஜயதீதம் ஹரி: ॥

இ—ள், தேவதேவராய்ச்சிந்தனைக்கெட்டாத ஆத்மபாவராய் உயர்வுடையராய்ப் பிரபுவாயுள்ள சிவனைச்சர்வரூபியெனத்தெரிந்து விஷ்ணு சிவலிங்கத்திற்பூசிக்கின்றனரென்றும் விளக்குதல் காண்க.

(பாரதம்.)

"ஆதலா னெனக்கான் மாவே யாமுருத் திரனை முன்னர்க்,
காதலா லருச்சிக் கின்றேன் யான்."

என்றுகண்ணன் என்உயிர்க்குயிரேயாகிய ருத்திரனை நான்பூஜிக்கின்றேனென்று கூறுதலானுந்தெளிவாம்." ஆனால் அப்பாரதத்தில்'அளவில்பேரொளிப் பகவனுமுருத்திரற்கச்சுதனான்மாவாம்.' என்றதில் ருத்திரனுக்கு அச்சுதன் ஆன்மாவாம் என்றதென்னையோவெனின்? இங்கே ஆன்மாஎன்றதை ஆகுபெயராக்கிஉடம்பெனக்கொண்டு ருத்திரனுக்கு விஷ்ணு சரீரமாயிருக்கின்றானென்பதே பொருளாமென்க. அப்படியன்று முன் ஆன்மா என்றதை ஆகுபெயராக்கிப்பின்கூறியதை உள்ளபடிகொண்டுருத்திரனுக்கு விஷ்ணு ஆன்மாவென்றேகொள்வோம் எனில்? எனக்குஉடம்பாகிய ருத்திரனைநான்காதலாற்பூஜிக்கின்றேனென்றுகூறுதல்பொருந்தாமையானும் எனக்கான்மாவேஎன்னும்தேற்றேகாரத்தானும் பின் கூறியதில் அளவில் பேரொளிப் பகவனுமுருத்திரன் என்று அடுக்கிச் சிறப்பித்தமையானும்,அந்நூலாசிரியர் மேலும் பற்பலவாகச்சிவமகிமையேவிளக்குதலானும் மேற்கூறியதே முன்பின் விரோதியாத உண்மைப் பொருளாமென்க.

இவ்வாறு விஷ்ணு சிவலிங்கபூசனையாலேயே மேன்மையடைந்தாரென்று கூறுமுண்மையை அவர் பூஜித்த சிவஸ்தலங்கள் இன்றும் யாவருங்காணவிளங்குகின்றன. அம்மகிமைகள் அத்தலபுராணங்களில் விரிவாயுள்ளன. சுருக்கி விளக்குந்தேவாரங்களானுந்தெளியலாம்.

(இராமேச்சரம்.)

இது, இராமர் இராவணனைக் கொன்ற பிரமஹத்தி நீங்குதற்குச் சிவலிங்கபூசனைசெய்த சிவஸ்தலம். திருஞானசம்பந்தர்.

# வேதாந்தத்தெளிவு

தேவியை வவ்விய தென்னிலங் கைத்தச மாமுகன்
பூவிய லும்முடி பொன்றுவித் தபழி போயற
வேவிய லுஞ்சிலை யண்ணல்செய் தவிரா மேச்சர
மேவிய சிந்தையி னார்கடம் மேல்வினை வீடுமே.
அணையலை சூழ்கட லன்றடைத் தவழி செய்தவன்
பணையிலங் கும்முடி பத்திறுத் தபழி போக்கிய
வினையிலி யென்றுமி ருந்தகோ யிலிரா மேச்சரந்
துணையிலி தூமலர்ப் பாதமேத் தத்துயர் நீங்குமே.

(திருவீழிமிழலை)

இது, விஷ்ணு காத்தற்றொழிலிடையூறின்றி நடத்தற்காகச் சக்கராயுதம்பெறும்பொருட்டு நாடோறும் ஆயிரந்தாமரைப்பூக் கொண்டு பூசித்த சிவஸ்தலம். திருஞானசம்பந்தர்.

மாலா யிரங்கொண்டு மலர்க்கண் ணிடவாழி
யேலா ரவலயத்தோ டீந்தா னுறைகோயில்
சேலா கியபொய்கைச் செழுநீர்க் கமலங்கண்
மேலா லெரிகாட்டும் வீழிம் மிழலையே.

திருநாவுக்கரசர்

* நீற்றினை நிறையப் பூசி நித்தலா யிரம்பூக் கொண்டு
வேற்றுமையொருநாளொன்று குறையக்கண்ணிறையவிட்ட
வாற்றலுக் காழி நல்கி யவன்கொணர்ந் திழிச்சுங் கோயில்
வீற்றிருந் தளிப்பர் வீழி மிழலையுள் விகிர்த னாரே.

திருவாசகம்.

பங்கய மாயிரம் பூவினிலோர் பூக்குறையத்
தங்க ணிடந்தரன் சேவடிமேற் சாத்தலுமே
சங்கர னெம்பிரான் சக்கரமாற் கருளியவா
றெங்கும் பரவிநாந் தோணோக்க மாடாமோ "

(திருமாணிகுழி)

இது, விஷ்ணு வாமனவதாரத்திற் பிரமசாரியாய்ப் பூசித்த சிவஸ்தலம், (மாணி——பிரமசாரி) திருஞானசம்பந்தர்.

---

* இதனால் விஷ்ணுவின் விபூதிதாரணமும் விளங்குகின்றது.

நித்தநிய மத்தொழில ளுகிநெடு மால்குறள ளுகிமிகவுஞ்
சித்த மொரு க்கி வழி பாடுசெய நின்றசிவ லோகனிட மாங்
கொத்தலர்ம லர்ப்பொழிலி னீடுகுலமஞ்ஞைநட மாடலதுகண்
டொத்தவரி வண்டுகளு லாவியிசை பாடுதவி மாணிகுழியே

(திருமாற்பேறு.) திருஞானசம்பந்தர்

இது திருமால் பூசித்துப் பேறுபெற்ற சிவஸ்தலம்..

சால மாமலர் கொண்டு சரணென்று
மேலை யார்கள் விரும்புவர்
மாலி னார்வழி பாடுசெய் மாற்பேற்று
நீல மார்கண்ட னின்னையே.

(திருவுசாத்தானம்)

இது, இராமர் இராவணனைவென்று சீதாதேவியைமீட்டுவரு தற்குபாயங்கேட்டு உசாவி மந்திரோபதேசம் பெற்றுப் பூசித்த சிவஸ்தலம். இதனால் இத்தலம் திருவுசாத்தானமென்றும் இங்கு வீற்றிருந்தருளும் சிவபெருமான் திருநாமம் மந்திரேசரென்றும் வழங்கப்பெறுகின்றன. திருஞானசம்பந்தர்.

நீரிடைத் துயின்றவன் றம்பிநீள் சாம்புவான்
போருடைச் சுக்கிரீ வன்னனு மான்றொழக்
காருடை நஞ்சுண்டு காத்தருள் செய்தவெஞ்
சீருடைச் சேடர்வாழ் திருவுசாத் தானமே. ”

இன்னும் விஷ்ணு பூசித்த தலங்கள் பற்பலவுள்ளன.

(விஷ்ணு விபூதிருத்திராக்ஷதாரணபஞ்சாக்ஷரபராயணரே)

விஷ்ணு சிவாகமவிதிப்படி விபூதி ருத்திராக்ஷதாரணராய் ஸ்ரீபஞ்சாக்ஷரபராயணராயே பூசித்து வந்தாரென்பது சிவபுராணாதிகளின் விளக்கமே. இவ்வுண்மையை

(பாரதத்தைச்சார்ந்த அரிவம்சம்)

[illegible]

[illegible]

இ—ள், ஜ்வலிக்கின்ற திரிபுண்டரத்தையுடையரும் விபூதியி னாலே வெளுத்தவரும், மௌனமுடையரும், ஜடையுடையரும் மரவுரியுடையருமாகிய விஷ்ணு இடையறாமல் மனசிலேசந்திரசூடராகிய சிவபிரானைச் சிந்தித்துப் பஞ்சாக்ஷரஞ்செபித்தாரென் றும் (பஸ்மசபாலோபநிஷதம்)

[illegible]

என்றும், (பிரமாண்டபுராணம்.)

[illegible]

[illegible]

என்றும் விளக்குகின்றன. விஷ்ணுவின் அம்சர்களாகிய ராமர் தத்தாத்ரேயர் வியாசர் முதலியோரும்விபூதிதாரணர்களே. இதனை

(இராமாயணம்)

[illegible]

[illegible] என்றும்

(அத்யாத்மராமாயணம்)

[illegible]

[illegible] என்றும்

(சாண்டில்யோபநிஷதம்)

[illegible]

[illegible] [என்றும்]

[illegible]

(காந்தமஹாபுராணம்)

[illegible]

[illegible]

னை றும விளக்குகின்றன. (சாதாதபஸ்மிருதி)

த்ரிபுண்ட்ரவிநாமயஸ்ய த்ரிபுண்ட்ரவிநாஜபம்
த்ரிபுண்ட்ரவிநா யத்கர்ம ராக்ஷஸம் பரிகீர்த்திதம் ।

இ—ள், (பஸ்ம) திரிபுண்டரதாரணமின்றிச்செய்யும் சந்தியா வந்தனம் ஜபம் சிராத்தங்களின் பலனை ராக்ஷதர்கள் அபகரிப்பார் களென்றும்;

" ஸத்யம்சௌசம் ஜபோ ஹோமஸ் தீர்த்தம் தேவாதிபூஜநம்
தஸ்ய வ்யர்த்த மிதம் ஸர்வம் யஸ் த்ரிபுண்ட்ரம் ந தாரயேத் "

இ—ள், எவன் (பஸ்ம) திரிபுண்டரந்தரிக்கவில்லையோ அவனு டைய சத்தியம் ஆசாரம் தவம் ஓமம் (புண்ணிய) தீர்த்தஸ்நானம் தேவாதிபூசனைகளெல்லாமும் பலனற்றனவாய்முடியும் என்றும் விளக்குகின்றஇவ்வசனங்களை விபூதிதரிக்காமல் சிராத்தாதிபிதுர் காரியஞ்செய்கின்ற சிலபிராமணர்கள் உற்றுநோக்கி இனியாவது பலனையிழந்துபோகாமல் சிராத்தாதிகளில் விபூதியுத்தூளன திரிபுண்டரதாரணஞ்செய்துகொண்டு அவ்வப்பலன்களைப்பெற்று வாழ்வாராக. (பஸ்மசாபாலோபநிஷதம்.)

யதிஸ்ஸர்வாச்ரமீ ஸக்ருத் பஸ்மதாரணம் க்ருத்வா ப்ரணவஞ்ஜபித்வா பாபான் முக்தோ பவதி ॥

இ—ள், (உலகப்பொருள்முழுதும் வெறுத்துவிட்ட) சந்நி யாசியும் ஒருகாலம்பஸ்மதாரணஞ்செய்யத்தவறுவனேல் உபவா சியாய் (கஉ௲)பிரணவம் செபித்தால் அப்பாவத்தினீங்கிச் சுத்த னைவன் என்று கூறுகின்றது.

இனி வைஷ்ணவர் தமிழ்வேதமென்று சிரமேற்கொண்ட திருவாய்மொழிகளில் (நம்மாழ்வார்)

" கரியமேனிமிசைவெளியநீறுசிறிதேயிடும்
பெரியகோலத்தடங்கண்ணன் " என்றும்

பெரியாழ்வார் " காப்பிடவாராய் காப்பிடவாராய் " என்று றும் விளக்குதலாலும் இவ்வாறு மேலும் வரும் பலவாக்கியங் களாலும் விஷ்ணு விபூதிதாரணரே என்பதுதெளியக்காணலாம்

(நம்மாழ்வார்.)

“ உடையார்ந்தவாடையன்கண்டிகையனுடைநாணினன்

நடையாவுடைத்திருநாரணன். ” என்று விஷ்ணுவுக்கு ருத்திராக்ஷதாரணமுண்டென்பதை விளக்குகின்றார். கண்டிகை யென்பது ருத்திராக்ஷத்தின் பெயராய் விளங்குதலால் வைஷ்ணவர் விபரீதார்த்தங்கூறின் அது பொருந்தாதென்க.

(விஷ்ணு பக்தர்களும் விபூதிதாரணர்களே;)

(நம்மாழ்வார்.)

தணியும் பொழுதில்லை நீரணங் காடுதி ரன்னைமீர்
பிணியு மொழிகின்ற தில்லை பெருகு மிதுவல்லான்
மணியி லணிநிற மாய னமரணி நீறுகொண்டு
வணிய முயலின்மற் றில்லைகண் டீரிவ் வணங்குக்கே

ஏறிய பித்தினோ டெல்லா வுலகுங்கண் ணன்படைப் பேயென்
நீறுசெவ் வேயிடக் காணினெடு மாலடியா ரென்றோடும் [னும்
நாறுதுழாய்மலர் காணினா ரணன்கண்ணி யீதென்னுந்
தேறியுந் தேறாது மாயோன் றிறத்தினளே யித்திருவே.

என்று விளக்குகின்றார். (விஷ்ணு தன்னடியார்கள் எப்போதும் விபூதிதாரணர்களாயிருக்கும்படி சிவனைப் பிரார்த்தித்தல்.)

(பிருகத்சாபாலோபநிடதம்)

“ நமஸ்தேஸ்து நமஸ்தேஸ்து ஶம்போ ஶரணம் கத:
பக்திரஸ்து மம பாதயோ: ஸர்வதா
பஸ்மதாரணஸம்பந்நா: ஸந்து பக்தா மம ஸதா ”

இ-ள், சம்புவே உமக்கு நமஸ்காரம் உமக்கு நமஸ்காரம் நான் உம்மை சரணமடைந்தேன் உமது பாதபத்மங்களிரண்டினும் எனக்கு எப்போதும் பக்தியிருக்கட்டும். எனது பக்தர்கள் எப்போதும் பஸ்மதாரணசம்பந்நர்களாயிருக்கக்கடவர் என்பதாம்.

மேற்காட்டிய திருவாய்மொழிகளில் நீறு என்பதைச் சில வைஷ்ணவர்கள் சூரணம் கருப்பூரப்பொடி என்றும் காப்பு என்

பதைத் திருமண்காப்பு என்றுங்கூறுகின்றனர். ஆழ்வார்கள்திருவாய்மொழிபாடியகாலத்தில் திருமண் மஞ்சட்பொடிமுதலியன ஏற்படவில்லையென்பது உடையவர் சூர்ணவிளக்கமுதலியவற்றில் காணப்பட்டதே. ஆதலால் அவ்வாறு கூறுதல் பொருந்தாது. அன்றியும் அக்கினியால் நீற்றப்படுவதுஎதுவோ அதுவே நீறு என்றாகும். ஈண்டுக் கூறிய நீறு உலர்ந்த கோமயத்தை நீற்றியதே. அன்றியும் மலத்தை நீற்றுதலாலும் நீறு என்னும் பேர் பெற்றதன்றி அவர்கள் கூறும் விபரீதார்த்தம் பொருந்தாது. இதனை,

(பிருகத்சாபாலோபநிஷதம்.)

ஐஶ்வர்யகாரணாத்பூதி: ।
பஸ்ம ஸர்வாகபக்ஷணாத்பாஸநாத்பஸிதம் । க்ஷாரணாதாபதாம்
க்ஷாரம் । பூதப்ரேதபிஶாசப்ரஹ்மராக்ஷஸாபஸ்மாரபவபீ
திப்யோऽபிரக்ஷணாத்ரக்ஷேதி ॥

இ—ள், ஐச்வரியந்தருதலால் விபூதி. ஸர்வபாபங்களையுந் தகித்தலால் பஸ்மம் (நீறு) ஒளியைத்தருதலால் பஸிதம். ஆபத்துநீக்குதலால் க்ஷாரம். பூதப்பிரேதபிசாசாதி ஜனன(மரணாதி பயம்)நீக்கிக்காத்தலால் ரக்ஷை என்பதனாலும்

(கடம்பவனபுராணம்.)

தொகுத்த வாழ்க்கையாற் பூதியுஞ் சோதிமேற்றரலாற்
பகுத்த நூல்புகல் பசிதமும் படுமலம் பிணிமா
சுகுத்த லாலுயர் காரமுங் காத்தலாற் காப்பு
மிகுத்த தீதுநீற் றிடுதலா னீறும்பேர் விளம்பும். என்பதனாலும் காண்க.

கடினப்பொருள்களைத் தூளாக்கினால் அது சூரணமென்றாகும்; கருப்பூரத்தைப் பொடியாக்கினால் அது கருப்பூரப்பொடியென்றாகுமென்பதுலகறிந்ததே. அன்றியும் 'புகழ்திருநீறேபற்பம்பொடியொடு விபூதிகாப்பாம்." என்று நிகண்டும் விளக்குகின்றது.

(பாரதம்.)

" பொங்கரா வெயின்மணிப்பூணும் பேணுநீற்
றங்கரா கமுமுவந் தணியு மேனியாய் "

என்று கிருஷ்ணர் சிவனைத்துதிக்குமிடத்து நீறு விபூதியெ ன்றே விளக்குகின்றார். ( காப்பிடவாராய் ) என்றதன்பொருள் அசோதை பாலகிருஷ்ணனுக்குப் பேய்பூதாதிகளாற்பயமுண்டா காதபடி அந்நேரத்தில் காப்பாகிய விபூதியணிதற்கு அழைத்தா ளென்பதாம். இதனை 'உடனே நந்தகோபரும் அக்குழந்தையை யெடுத்துவந்து அதன்சிரசில் கோமயசூரணத்தைக் காப்பாகவை த்து' என்று விஷ்ணுபுராணம்(ரு) அம்சம்(ரு) அத்தியாயந்தெ ளிவிக்கின்றது. கோமயசூரணம் விபூதியென்பது ஷை புராணம் (கூ0எ) பக்கத்தில் விளக்கமே. காப்பு என்னுந்தமிழ்மொழி வட மொழியில் ரக்ஷையென்று விபூதிக்குப்பெயராய்வழங்கப்படுகின் றது. நாலாயிரப்பிரபந்தவியாக்கியானமாக (௬௯) (௬௯) (௧௨௯) (௨௪௯) (௩௬௯) என்று விரித்துரைத்தஜீயர்களாகிய வைஷ்ண வர்கள்யாவரும் " நீறுசெவ்வேயிடக்காணில் " என்பதுமுதலிய செயயுள்களில்வரும் நீறுஎன்றசொல்லுக்கு விபூதியென்றேவிளக் கினர். கருப்பூரப்பொடி மண்முதலியனவாக விபரீதங்கூறிலர். அன்றியும் இவ்விபூதிமதுபானம் பிரமகத்தியாதிபாதகங்களையெல் லாம் நீக்குவதென்றும் விசேஷித்துக்கூறி அதற்கு உதாரணமாக "மத்யம் பீத்வா" என்றஸ்மிருதிவசனமும் எடுத்துக்காட்டினர். இவ்வாறு தங்கள் முன்னோர்கூறும் உண்மையையாவது உற்று நோக்காமல், இக்காலத்து வைஷ்ணவர்கள் மாற்சரியகுணத்தால் மண்கருப்பூரப்பொடி என்று பொருள்கூறும் அபத்தத்தைப்பற் றி மேலும் விரிப்பானேன்.

வைஷ்ணவர்கள் மேற்கொண்டுள்ள(உடையவர்சூரணவிளக் கம்) என்றபுத்தகத்தில் (உ௬) வது பக்கத்தில், இற்றைக்கு அஎ0 வருஷங்களுக்குமுன் கலி சக0அ-க்குமேல் திருவவதரித்தருளிய ஸ்ரீபாஷியகாரர் (இராமாநுசர்) காலத்திற்குமுன்பு இப்போது ள்ள வைஷணவர்கள் பஸ்மாதிதாரணராய் * க்ஷுத்திரதேவாந்த

---

* க்ஷுத்திரதேவதை—அற்பத்தெய்வம். அத்தெய்வங்கள்; காடன் மாடன் காட்டேரிமுதலியன. இங்கே அவர்கள் சிவனை யே க்ஷுத்திரதேவதையென்று கருதி அப்படியெழுதினார்கள். ஷைசவர்களாகிய எம்மவர்களில் மிகக் கடுங்குணத்தராயினும் விஷ் ணுமூர்த்தியை க்ஷுத்ரதேவதையென்று கூறார்கள். புத்திமான் கள் இவ்வைஷ்ணவர்களுடைய பெருங்கொடுமைதெரிந்தொது க்குவார்கள்.

ரபரராய் மந்த்ராந்தரபரராயிருந்தார்கள். பின் நூதனமாக வெளியிட்டு அவைகளைத் திக்குவிஜயஞ்செய்து தாபித்தார்கிடாய்'' என்றெழுதப்பட்டுள்ளது. சகவருஷம் ௲கஉ சென்ற வெகுதானிய ஷூத்திலே திருநாராயணபுரத்திலே, இராமானுஜர் மண்பூசலை வெளிப்படுத்தியதாக அவரது வைபவத்திலும் வெளியாகின்றது. ஆதலால் மண்ணானது பிற்காலத்தில்வந்த நூதனமேயென்பது தெளிவாயது. இம்மண்பூசல்ஒருநூலினுமில்லாமையால் இதற்கொருநூலாதாரம்வேண்டுமெனக்கருதி உடையவர் சூரணவிளக்கமென்றொருநூலைப் புதிதாகக் கட்டிக்கொண்டனர். அந்நூல் உடையவர்என்றசொல்லை முன்கொண்டதனாலேயே நூதனமாக அவர் செய்தகட்டுக்கதையென்பது வெட்டவெளியாம்.

(பிருகத்சாபாலோபநிஷதம்.)

ஸ்ரீ மௌதமவிவாஹகாலெதாமேஷூ ரு ஊ உு ஊு ாஸலெ ஷெவாஃ காமோ தூுாாகஹலமத் தஓ ாநஷ்ஜ்ஞாநாஃ ॥

என்று தொடங்கிச்செல்லும் வசனங்களால், கௌதமர் விவாககாலத்தில் அகலிகையின்பேரழகைக்கண்டமாத்திரத்தில் சகலதேவரும் அதிமோகிதராய்த் தா துநஷ்டமான பாவத்திற்குத் துர்வாசமுனிவர்கூறியபடி திருநீறணிந்து பிராயச்சித்தம்செய்து கொண்டார்கள் என்று விளக்குதலாலும், விஷ்ணுமுதலியசமஸ்ததேவர்களும் விபூதிதாரணர்களேயென்பது தெளிவாம். இதனை

(ஸ்ரீ ஞானசம்பந்தசுருதி)

"வானவர்மேலதுநீறு'' "மேலுறைதேவர்கடங்கண்மெய்யது வெண்பொடிநீறு'' என்று விளக்குதலாலுங்காண்க.

யி ஹஸ ூாஹிக ஃஷாஊஂயி ாமெபமிவாஊயூ ॥

யிமநீஶாவ ூநஂஜநயிஷியூாஶெமிவாஶுயாடீ ॥

இ—ள், விபூதியணியாதநெற்றியைச்சுடு; சிவாலயமில்லாத கிராமத்தைக்கொளுத்து; சிவபூசைசெய்யாதவனது ஜன்மத்தில் (தேகத்தில்) [illegible]

சம்பந்தமி[illegible]

(சாதாதபஸ்மிருதி)

[illegible]

[illegible]

[illegible]

இ—ள், மதுபானம் குருபத்தினிகமநம் பொன்திருட்டு பிரமஹத்திசெய்தவனாயினும் விபூதிதாரணமுதலிய செய்வானேல் சகலபாவத்தினின்றும் விடுபடுகின்றான் என்றும் விபூதிமகிமையே விளக்குகின்றது. இதனை (ஸ்ரீஞானசம்பந்தசுருதி.)

'வெந்துயர்தீர்ப்பதுநீறு' 'வருத்தந்தணிப்பதுநீறு' 'பாவமறுப்பதுநீறு' என்று விளக்குகின்றது.

(பராசரஸ்மிருதி.)

[illegible]

[illegible]

[illegible]

[illegible]

இ—ள், எந்தமனிதனுக்கு விபூதிதிரிபுண்டரஉத்தூளநாதிகளில் துவேஷமுண்டாகிறதோ அவனுடைய உற்பத்தியில் (சாங்கரியம்)கலப்புண்டென்பது பண்டிதனால் ஊகிக்கப்படுமென்றும் மகாபாதகர்களுக்குத்தான் வேதசித்தமாகிய மகேசுரனிடத்திலும் திரிபுண்டரம்உத்தூளனமுதலியவைகளிடத்திலும் துவேஷமுண்டாகிறது என்றும் விளக்குகின்றது. ஆகவே, விபூதியில் துவேஷமுள்ளவன் குலஸ்திரியினிடத்துப்பிறந்தவனல்லனென்பதே தெளிவாம். இத்தனை பிரமாணமெல்லாமிருக்கவும் இக்காலத்துவைஷ்ணவர்கள் விபூதியைவிலக்கி மண்ணைப்பூசி இடையே வர்ணமும் வைத்துச் சித்திரிக்கின்றார்கள். இச்சித்திரத்திலும் பஞ்சள்வர்ணத்தார் குங்குமவர்ணத்தாரென்றிருவகையருமவடகலையார் தென்கலையாரென்றிருவகையருமாகப்பிரிந்து ஒருவகையார்கொள்கையை மற்றொருவகையார் பொய்யென்றுகூறி அதனால் இருவகையார்கொள்கைகளும் பொய்யேஎன்பது விள

ங்க இவ்வாறு ஒருவர்க்கொருவர் விரோதிகளாய் ஒருநிலைப்படா மல் அவரவர்கொள்கையே பெரிதென்றுறைத்துநிற்கின்றாராத லால், இம்மண் இன்னபடிதான் தரிக்கவேண்டுமென்று ஒருநூலி லும் விதிகூறாதஅபத்தமேயென்பது தெளிவாகின்றது. விதியிருந் தால் விரோதமின்றியெல்லாரும் அவ்விதிப்படிதரித்துக்கொள் வார்கள். மண்ணே நூலில்இல்லாதபோது தரிக்கும்விதி எங்கே காணப்படும். இம்மண்ணையும் இவர்களிற்பெண்பாலார் ஒருவ ருந்தரிப்பதில்லை. விபூதியோ எம்மவர்களில் ஆடவர்பெண்கள்எல் லாரும் கையினுற்றரித்துக்கொள்ளும் பொருத்தமாயமைந்தது. அம்மண்ணோ கண்ணுடிதூரிகை (கோல்) முதலியகருவிகள்கொ ண்டுதரிக்கப்படுகின்றது. அதுவும் தினமும் ஒருமுறையன்றி வெயர்வையாதிகளால் அழிந்தபோதெல்லாம் தரிக்கிறவழக்கமி ல்லை. விபூதி பலமுறைதரிக்கும்விதிபெற்றுநிறையப்பூசும்பொரு த்தமுள்ளது. இவைஒன்றும்நோக்காமல் மண்பூசலுடையார்அம் மட்டிலொழியாது, விபூதியை) இழிந்தோராலும் மனத்திலும் நினைக்கப்படாதநிந்தனைசெய்கின்றார்கள். அது(பஸ்மோத்தூளன மும் வேசிகளுடைய மர்மஸ்தானங்களில் ரோமோல்லுஞ்சனார் த்தமாகமறைந்துகொண்டது) என்பதுமுதலியவாம். இவ்வாறு கூறி ஒருபிரமாணமுமின்றி எழுதி வெளியிடுமிப்பாதகர்கள் கொடுமையை விரிப்பானேன்.

(வைஷ்ணவர்பூசும் மண் அசாஸ்திரிகமே)

இம்மண் வேதவேதாந்தங்களிலாவது புராணஇதிகாசங்களி லாவது நெற்றியிற்றரிக்கும்படி கூறப்படவில்லை. பிராம்ணர் வெ ள்ளைமண்ணும் அரசர் செம்மண்ணும் 'வைசியர் மஞ்சள்நிறமண் ணும் சூத்திரர் கறுப்புமண்ணுங்கொண்டு சௌசஞ்செய்யும்படி விதியிருத்தலால் அவ்விதிப்படி அதற்கேயுரியதாம். இதனை

(பராசரஸ்மிருதிஆசாரகாண்டம்.)

முதலாவதுஅத்தியாயம் சௌசப்பிரகரணம்

விப்ரஸ்ய ஶுக்லா ம்ருத்ஸ்யாத் ரக்தா க்ஷத்ரியஸ்ய து
வைஶ்யஸ்ய பீதா ஶூத்ரஸ்ய க்ருஷ்ணா ம்ருச்சௌசகர்மணி ॥

என்று செவ்வே விளக்குகின்றது. இப்படியே வைத்யநாத தீக்ஷிதீயம் ஆன்னிககாண்டம்சௌசவிதியிலும்கூறப்படுகின்றது. இங்ஙனமாகவும், இம்மண்ணை நெற்றியிற்றரிப்பது இராமானுசர் செய்தசூழ்ச்சியே. ஆதலால் இம்மண் விஷ்ணுவுக்குரியதன்று; அவருக்குரியது மேற்கூறியபிரமாணங்களின்படி விபூதியேயாம். விபூதியே சகலசாஸ்திரசம்மதமாம். இதற்கென்றேவெளிவந்த ஜாபாலம் பஸ்மஜாபாலம் பிருகஜ்ஜாபாலமுதலிய உபநிடதங்கள் முழுதும் இவ்விபூதியையே விளக்குகின்றன. மேலும் சுருதி புராண இதிகாசாதிகளும் விளக்குகின்றன. இவ்வுண்மை மேற்காட்டிய பற்பலபிரமாணங்களாற் செவ்வே தெளியலாம்.

ஆனால் ஊர்த்துவபுண்டரம் வாசுதேவோபநிஷத்திற்கூறப்படவில்லையோவெனில்? அதில் இம்மண்ணையாவது மஞ்சள்முதலியவர்ணங்களையாவது கூறவில்லை; கோபிசந்தனம் பூசி அதன்மேல் விபூதியுந்தரிக்கவேண்டுமென்று வாசுதேவர் நாரதருக்குக் கூறினதாக அவ்வுபநிஷதமாத்திரந்தான் கூறுகின்றது. இதனை

(வாசுதேவோபநிஷதம்:)

ஊ-திராத்ராமிஹோத்ரஸமுநாத்ஹஸ்ரவுஷிதபிடிஂ விஷ்ணுலிணிவேஷிஷி ஜ்ஂனெத்ரெவைஷவதாயத்ராவணவெநா ஷ-ஸிஉ-நஂகூயுராக ॥

இ—ள், மேற்கூறியகோபிசந்தனம் தரிப்பவர்கள் விஷ்ணுகாயத்திரிபிரணவமந்திரங்களினால் யாகாக்கினியிலெடுத்தவிபூதியை அக்கோபிசந்தனத்தின்மேல் தரிக்கக்கடவர் என்பதனாற் காண்க. அக்கோபிசந்தனத்தின்மேல் விபூதியை உத்தூளனமாகவும் திரிபுண்டரமாகவுந்தரிக்கலாம்; விபூதியின்மேல் கோபிசந்தனம் தரிக்கப்படாது.

[illegible] ॥

என்பதனாற்காண்க, இச்சந்தனம் கோபிகாஸ்திரிகளைக்கிருஷ்ணன் தழுவிப்போகித்தபோது அவர்களுடைய முலைகளிலுள்ளது அவன்மேனியிலொட்டியிருந்து பின்கழுவப்பட்டதே. அப்பெண்களிடத்துள்ள இச்சைமிகுதியால் அக்கிருஷ்ணன் அதனை அச்சமயம் சிறப்பித்துக்கூறினனன்றி அதனை யாவரும் தரிக்கவேண்டுமென்று விதியாகக்கூறினனல்லன். ஆசைவசத்தாற் கூறினதேனன்பதை அவ்வுபநிஷதந்தவிரவேறெந்தஉபநிஷதங்களுங்கூறாமையானும் அக்கிருஷ்ணன் சிவபூஜாதிகாலமெல்லாம் விபூதிருத்திராக்ஷதாரணமேயன்றி அச்சந்தனம் தரியாமையானும் செவ்வே தெளியலாம்.

(பராசரபுராணம்.)

[illegible] ॥

இ—ள், தனியே ஊர்த்துவபுண்டரம் வேதத்திற்கூறப்படவில்லை; (ஆகையால்) குறுக்கே (பஸ்ம) த்ரிபுண்டரம் அணியவேண்டும் என்றும்,

(கருடபுராணம்.)

[illegible] ॥

இ—ள், விபூதிதாரணமே செய்யத்தக்கது, மண்முதலியதாரணஞ்செய்யத்தகாதது என்றும் விளக்குகின்றது.

இம்மண் ராமாநுசர்நியமித்த (அா) வருஷங்களுக்குமுன்னுமுள்ளதானல் விஷ்ணுபுராணதிகளில் எங்கேனுங்கூறி அதனதுக்கும்விதியும்விளக்கலாம் அஃதில்லையானலும் விஷ்ணுபக்தகவிருத்திரங்களிலோரிடத்திலாவது இன்னார்மண்ணிட்டுக்கொண்டேறித்

தாரென்றுகூறலாம். அல்லது, அவர்கட்கு முக்கியமான திருவாய்மொழியிலாவது கூறியிருக்கலாம். அம்மண்ணும் அவர்கள்நெற்றியில் மேல்நோக்கியமூன்றுகுறிதவிர மற்றிடங்கள் சூநியமாகின்றன. "நீறில்லாநெற்றிபாழ்" என்றருளினர். ஔவையார் விபூதியோ முழுதும்நிறைந்திருக்கின்றது. அதனால் யாவர்க்கும் கடவுளமைத்தநெற்றி விபூதிதாரணத்துக்கேஉரியதாயமைக்கப்பட்டதன்றி மண்பூசுதற்கமைக்கப்படவில்லையென்பது செவ்வே விளக்கமாகின்றது- இதனை,

(கூர்மபுராணம்.)

[illegible]
[illegible]
[illegible] ॥

இ—ள், பிரமன் சிருட்டிதொடங்கும்போதே விபூதிமகிமையை எடுத்துக்கூறி அதனை அணிந்துய்தற்காகவே சர்வசனங்களின் நெற்றிகளையுங்குறுக்குஆகிர்தியாகப்படைத்தான். மேல்நோக்காகவேனும் வட்டமாகவேனும் படைத்திலன். அது நேரே தெரிந்தும் சிலமூர்க்கர்கள் அவ்விபூதிதிரிபுண்டரமணியாமல் தீவினைவசப்பட்டுழல்கின்றார்கள் என்பதுணற்காண்க.

இவ்விபூதியையே இவ்வைஷ்ணவர்மகமதியர் முதலிய மற்றெல்லாரும் மந்திராதிகளில் அவசியமாயுபயோகித்து வருவது பிரசித்தமே. விபூதிஇன்றிச்செய்யும் எச்செயலும் பலனற்றனவாமென்பது மேற்கூறிய சுருதிமிருதிசம்மதமாதலால் அவ்வைணவாதியர் தமது மந்திராதிகள் பலனற்றனவாய்ப் பொருட்பேறுமிழக்கவருமென்று கருதியே விபூதிகொண்டே செய்துவருகின்றார்கள். அவ்வாறு இம்மைப்பலன் நேரேதெரிந்தும் விபூதிதரியாமைபோகூழின்புணர்ப்பேயன்க. இதனாலேயே இவ்விபூதி

உடற்பிணியுந்நீக்கும் அருமருந்தென்பது தெளிவாகின்றது. திருக்கண்ணபுரத்திலே, உற்சவகாலத்திலே, ஒருதினத்திலே விபூதி ருத்திராக்ஷங்களணிந்து கொண்டாடும்வழக்கமுள்ளது. கிறிஸ்தவர்களும் மாசிமாதந்தோறும்வருகின்ற (Ash Wednesday) சாம்பலடிப்பெருநாளென்று கொண்டாடி விபூதிதரித்துவருகின்றார்கள். இதுவரை விபூதி யாவர்க்கும் இன்றியமையாச்சிறப்பினதென்பது தடஸ்தமாக்கூறினோம். இதன் சொரூபமகிமை அதிவிஸ்தாரமாதலால் ஈண்டைக்கு இம்மட்டிலேயே போதியதென்று அமைந்தாம்.

சிலவைஷ்ணவர் விபூதிமகிமை பலபிரமாணங்களால் நிச்சயமாதலால் அதனைமறுக்கமுடியாமல் மலமறைக்குஞ்சாம்பல் என்றிழித்துக்கூறுகின்றனர். அவர்கள்நினைப்பு இழிவிலேநிற்பினும் அச்சொல்மலத்துவத்தைநீக்கிச் சிவத்துவத்தைச்செய்வது விபூதியென்னுமுண்மைவிளக்குதலை அவரறிந்திலர். அம்மட்டோ அடுப்புச்சாம்பல் கிடக்குமிடத்திலும் மலசலவிசர்க்கஞ்செய்யப்படாதென்றுகூறும் விதிவாக்கியங்களையும் அறிந்திலர். அவ்வாக்கியங்களே அவர்நினைப்பளவான அவ்விழிவையுநீக்கி உண்மைவிளக்கும். இதனை, (பாத்மபுராணம்.)

ஸூர்யாப்ஜாக்நீந்துகோவ்ருஷப்ராஹ்மணாந் ப்ரதி
தேவாலயஸமீபே து கோஷ்டே பஸ்மநி
க்ஷேத்ரே து வ்ருக்ஷச்சாயாயாம் நத்யாம் தடாகஸம்ஸ்து ச ॥
சைத்யவ்ருக்ஷஸமீபே து தேவாநாம் வாஸபூமிஷு
ஸமுத்ரஸ்ய க்ருஹஸ்யாந்தே மூத்ரோச்சாரம் ந சாசரேத் ॥

இ—ள், சூரியன், ஜலம், அக்கி, சந்திரன், பசு, ரிஷபம், பிராமணர்களுக்கெதிரிலும், தேவாலயசமீபத்திலும், தொழுக்களிலும், சாம்பலிலும், வயலிலும், மரநிழலிலும், நதியிலும், தடாகாதிகளிலும், தெய்வங்கள்வசிக்கும் விருக்ஷசமீபத்திலும், சமுத்திரக்கரையிலும், கிருகமத்தியிலும், அதனருகிலும் அறிவுள்ளவன் மலசலவிசர்க்கம் செய்யமாட்டான் என்பதனாற்காண்க.

(விஷ்ணுமூர்த்தி சிவதீக்ஷைபெற்றது.)

சிவபூஜைசெய்வோர் சிவதீக்ஷைபெற்றே செய்யவேண்டுமெ ன்றவிதிப்படி விஷ்ணு சிவதீக்ஷைபெற்றே சிவபூசைசெய்துவந்த னர். இதனை, (மகாபாரதம் அநுசாசநபருவம்(கச)அத்தியாயம்.)

[illegible] ॥

இ—ள், அட்டமிதினத்திலே (உபமன்யுபகவானாகிய)பிரா மணரால் (சிவாகம) விதிப்படி நான் (சிவ) தீக்ஷைசெய்யப்பெற் றேன் என்று வைசம்பாயனர், தருமர் பீஷ்மர்களுக்குக் கிருஷ் ணர் கூறினதாகவிளக்குதலாலும்,

(இலிங்கபுராணம் பூர்வபாகம் (௱அ) அத்தியாயம்.)

[illegible]

[illegible] ॥

[illegible]

[illegible]

[illegible]

[illegible]

[illegible] ॥

இ—ள், முனிவர்களே தௌமியர்தமையனாகிய அந்தஉபமந் நியுமுனிவரைக் கிருஷ்ணர் வெகுமானத்துடன்நமஸ்கரித்து மூன் றுதரம்வலம்செய்தார். அம்முனிவரதுபார்வையினாலே கிருஷ்ண ருடைய ஆணவமலமும் காயஜம் (மாயாமலமும்) கர்மஜம் (கர்ம மலமு)மாகியபாசமுழுதும் நஷ்டமாயின. அக்கிருஷ்ணருக்கு "அக்கினிரிதிபஸ்ம, வாயுரிதிபஸ்ம" என்பனவாதிமந்திரங்களால் விதிப்படி மகாப்பிரதாபமுள்ள உபமந்நியுமுனிவர் பஸ்மோத் தூளனஞ்செய்வித்துப் பிரியமனசுடன் பாசுபததீக்ஷை (சிவதீ க்ஷை) செய்தார் என்று கூறுதலானும், (வாயுசங்கிதை.)

[illegible]

[illegible] ॥

இ—ள், கிருஷ்ணர் (உபமந்நியுமுனிவரைநோக்கி) பகவானே சிவபிரானால் உமாதேவியாருக்கு உபதேசிக்கப்பெற்ற திவ்ய பாசுபதஞானத்தையும் விபூதிமகிமையையும் தெரியவிரும்புகின்றேன் என்று பிரார்த்தித்ததற்கு அம்முனிவர் அவற்றைவிளக்கியதும்சிவதீக்ஷைசெய்ததும் வாயுசங்கிதை உத்தரபாகத்தில் விரிவாய்க்கூறுதலாலும், (கூர்மபுராணம் (உரு) அத்தியாயம்.)

[illegible]

[illegible] ॥

இ—ள், இந்தப்பிரகாரம் உபமந்நியுமுனிவர் சிவமகிமைகளைக் கூறியருளிக் குற்றமில்லாத கர்மத்தையுடைய கிருஷ்ணர் பொருட்டுப் பாசுபதவிரதம் பாசுபதயோகம் பாசுபதஞானத்தைக்கொடுத்தனர் என்று கூறுதலாலும் செவ்வேதெளியலாம்.

(பாரதம் துரோணபர்வம் (உ0உ) அத்தியாயம்.)

[illegible]

[illegible]

[illegible]

[illegible]

[illegible] ॥

இ—ள், அறுபத்தாறாயிரம்வருஷம் வாயுஜலபக்ஷணஞ்செய்து உடம்பை வருத்திவந்ததபசினால் விஷ்ணு எப்போது சிவத்துவம்பெற்றாரோ? அப்போது விசுவேசுரரும் விசுவகாரணரும் விசுவமாகியஜகத்துக்குப் பதியுமாகிய சர்வதேவேசுவரரைத் தரிசிக்கப்பெற்றாரென்று கூறுகின்றது.

இதனாலும் சிவனொருவனே சர்வதேவர்க்குமேலானவன் அவனெல்லாராலும் பூஜிக்கத்தக்கவனென்பதும் விஷ்ணுமுதலியயாவரும் சிவபூஜகர்களே என்பதும் அப்பூஜாபலனால் அவரவர் பதவிகளில்வாழ்கின்றனரென்பதும் தெளிவாகின்றன.

(விஷ்ணுவினியற்கைக்குணம் தாமசமே.)

இனி, வைஷ்ணவர் மேற்கூறியபிரமாணங்களை மறுக்கமுடி-

பாமல் விஷ்ணுசாத்துவிககுணத்தனுதலால் தாமசகுணருத்திரன் முதலிய எல்லார்க்கும் மேலானவன் என்று கூறின் அதனுண்மை விளக்குவாம்.

விஷ்ணு சாத்விககுணன். ருத்திரன் தாமசகுணன் என்பது சொல்லளவில் வாஸ்தவமே. அவ்விருகுணங்களும் காத்தல் அழித்தலாகிய தொழில்களுக்காக மேற்கொண்டதன்றி இயற்கையவல்ல. இயற்கைக்குணங்கள் விஷ்ணுவுக்குத்தாமசமும் ருத்திரனுக்குச் சாத்துவிகமுமேயாம். இதனை,

(சூதசங்கிதை சிவமாங்மியகண்டம் (அ) ம் அத்தியாயம்.)

ரஜோகுணேந ஸம்யுக்தோ ப்ரஹ்மாதிஷ்டாய தத்குணம்
ஸ்ருஷ்டிகர்த்தாபவத் ஸர்வஜகத: த்விஜோத்தமா:
குணேந தமஸா யுக்தோ விஷ்ணு: ஸத்வகுணம் ஸ்வயம்
அதிஷ்டாய ஸ்திதே: ஸர்வஜகத: காரக: ஸ்ம்ருத:
ததா ஸத்வகுணேநைவ யுக்தோ ருத்ரோ விப்ராஸ் தமோகுணம்
அதிஷ்டாய ஸம்ஹர்த்தா ஜகதஸ்த்வாதிந: ||

இ—ள், ராஜதகுணத்தினல்மூடப்பட்ட (ராஜதமே இயற்கையாயுள்ள) பிரமர் அக்குணத்தையே அதிஷ்டித்து (மேற்கொண்டு) சர்வஜகத்துக்கும் சிருஷ்டிகர்த்தாவாயினர். தாமசகுணத்தினல் மூடப்பட்ட (தாமசமேஇயற்கையாயுள்ள) விஷ்ணு சத்துவகுணத்தையதிஷ்டித்து (மேற்கொண்டு) சர்வஜெகத்துக்கும் ஸ்திதிகர்த்தாவாயினர். சத்துவகுணத்தினல்மூடுண்ட(சாத்துவிககுணமேயியற்கையாயுள்ள) ருத்திரர் தாமசகுணத்தையதிஷ்டித்து (மேற்கெண்டு) சர்வஜகத்துக்கும் சங்காரகாரணராயினர் என்றும், தெடிதமிழ், "வதிதருமுத் தொழிற்குங்கா ரணனருளாற் பிரமன் வயங்குமிரா சதகுணசு பாவனே யாகி

அக்குணசா தனஞ்செய்து கொண்டுபடைத் திடுவ ஞழியான் ; றமகுணசு பாவனேயாகி, மிக்கநற்சத் துவகுணசா தனஞ்செய்து கொண்டு வியனிலங்காத்திடுவனுயர் மேன்மையுருத் திரன்

றான், முக்கியசத்துவகுணசு பாவனேயாகி முடித்திடுவன் றமோ குணசா தனஞ்செய்துகொண்டு, தொக்குறுமிம்முக்குணமே தங்களா யெடுத்துச் சொலுமூவர் மூர்த்திபேதங்களுமனேகம். என்றும்,

அகஞ்சத் துவம்புறத்தாந் தாமதமுக் கண்ணற்
சகந்தா மதம்புறத்தாஞ் சாந்தம்—புகலரிக்கென்
றுத்தரரா மாயணமே யோதுதலால் வேறுமோ
ருத்தரமின் னும்வேண்டுமோ. என்றும்

விளக்குதலாற் காண்க.

ஏதேனும் ஓர் அதிகாரத்தலைவர்கள், சாத்துவிககுணசீலரா னாலும் தங்கீழுள்ளாரிடம் அக்கிரமங்காணின் அதற்குரியதண்டனை செய்யவேண்டியதவசியம். அது கோபமில்லையேல் நிகழாது. அச்சமயம்புறத்துநிகழ்ந்தகோபநோக்கி அவர்களையெப்போதுங் கோபமகத்துள்ளவர்களென்று ஒருவருங்கூறார். அதுபோல, ருத்திரர்சங்காரங் கோபமின்றிநிகழாது. கோபம் தாமசகுணச்செயலே அச்சமயங்கொண்ட கோபநோக்கி அவரையெப்போதும் தாமசகுணத்தரென்று புத்திமான்கள் கூறார்கள். அவ்வுருத்திரர் நெற்றிக்கண்ணிற்றோன்றும் அக்கினிப்பொறிதான் எல்லாவற்றையும் அந்தநிமிஷமே அழிப்பது. ஆதலால் அவர்க்கு எப்போதும் இயற்கைக்குணம் சாத்துவிகமே. இதனை அவருடைய வெண்ணிறமுதலியன விளக்கும். இந்த ருத்திரருங் குணருத்திரரேயன்றிப் பிரமவிஷ்ணுருத்திரர் மூவருக்குமேலுள்ள துரியருத்திராகிய குணாதீதசிவனல்லர்- குணருத்திரர்வேறு குணாதீதருத்திரர்வேறு என்றுணராமல் முக்குணங்கடந்ததுரியசிவனையுந் தாமசகுணத்தனென்று அவர்கள் அறிவிழந்து கூறுவது அறிஞர்சபையில்நிலைபெறாத அபத்தமேயாம். அது மெய்யானால் அச்சிவனுக்குக் கரியநிறம் காமக்குரோதமுதலியதாமசகுணச்செயல்களிருக்கவேண்டுமே. அவைகள் ஒன்றுமில்லையென்பதை பொன்மேனியன் (இரணியபாகு) களங்கமற்றபடிகம்போன்றநிறமுள்ளவன் (சுத்தஸ்படிகசங்காசன்) எல்லாருக்குங் கர்மவிகாரஞ்செய்யுமன்மதனையெரித்தவன் (காமாரி) முதலியசிவநாமங்களும் விளக்கும் (பொய்கை

நீவசியுடையவளல்லை, (ஆதலால்) காலாந்தரத்தில் (பின்னொரு காலத்தில்) உன்னுடன் எனக்குக் கலவியுண்டாகுகஎன்பதாம்.

(கந்தபுராணம்.)

முன்பனை துருவை யெல்லா முகனுறு விழியான் மாந்தித்
தன்புறு மான்மீக் கொள்ளத் தாண்ணென வரியுஞ் சோர்ந்து
மன்புடை யருளால் வந்தான் மற்றவன் றனக்கு மாலோன்
என்பதோர் பெயரு மஞ்ஞான் றெய்திய போது மன்றே.

இ—ள், சர்வசக்திமானாகிய சிவனது மாயாதீதபிக்ஷாடன ரூபத்தினழகுமுழுதையும் (மோகினியாகிய) விஷ்ணுமுகக்கண்ணால் இடைவிடாதுபார்த்துத் தன்பமிக்ககாமமயக்கமிகுதலால் அவ்வசப்பட்டு நடுக்குற்றுவிரைந்து என்னைத்தழுவியருளுகவெ ன்றுவேண்டச் சிவபிரான் நமது ரூபம் மாயாதீதம் உனதுரூபம் மாயையென்பதுமுதலியனதெரிவித்து உன்வடிவுக்கிணங்கவந்து தழுவி உன்ஆசைதீர்ப்போமென்றருள அவ்வருளால் மயக்கந்தெளிந்து சிவன்பக்கத்தில்வந்தனன். அவ்விஷ்ணுவுக்கு (மயக்கமுடையான் என்னும் பொருளைத்தருகின்ற) மாலோனென்னும்பெயரும் (மற்றுங்கேசவாதிநாமங்கள் அவ்வக்காலத்துவந்தமைபோல) அக்காலத்துவந்ததுபோலும் என்பதாம். உண்மைதெரிதற்கும் நிகழவேண்டியகாரியத்திற்பிரவேசித்தற்குமுரிய அகக்கண்கொண்டுபார்க்கப்பெறுமையினால் "முகனுறுவிழியான்மாந்தி என்று கூறினர். (சுவேதாசுவதரம்.)

விஶ்வாதிகோ ருத்ரோ மஹர்ஷி:. என்றசுருதியும். சிவன்ஏனைத்தேவர்கள்போல எக்காலத்தும எவ்விதத்துங்காமமயக்கமில்லாதவனென்பதை விளக்குகின்றது- தெக்ஷிணாமூர்த்திநிலையுந்தெளிவிக்கும். இங்கேஉள்ளபடி ருத்திரர்ஆணைகவும் விஷ்ணுபெண்ணைகவுஞ்சென்றதே ருத்திரமேன்மையைவிளக்கும். இவ்விருவருக்கும்புத்திரராகிய அரிகரகுமாரனென்னும் சாஸ்தாவும் சிவசின்னங்களையேதாங்கி விளங்குகின்றார்.

இவ்விஷ்ணு சிவனுடைய பரிக்கிரகசக்திகளுள் ஒன்றாகிய புருஷசக்தியேயென்பது சிவசாஸ்திரவிளக்கம். சக்தியைக்குறித்துச்சக்தன்மேலானவனென்பதை யாவரறியாதார்; "பெண்டிரு

ந்தலைமைபெறுவரோ" என்றார் பெரியார். நாயகனையின்றி மக வைப்பெறுவதில்லையாதலால் விஷ்ணுவாகியநாயகி ஐந்துமுகசிவ நாயகனைச்சேர்ந்தே பொன்னிறமும் ஐந்துமுகமுமுள்ள பிரமா வைப்பெற்றாளென்பதை, (திருமங்கையாழ்வார்)

" பிறைதங்குசடையானை வலத்தேவைத்துப் பிரமனைத்தன் னுந்தியிலே தோற்றுவித்துக் ' கறைதங்குவேற்றடக்கட்டிருவை மார்பிற்கலந்தவன் " சக்தியாகிய விஷ்ணு சக்தனாகிய சிவநாய கனை வலப்பக்கத்திற் கலந்துகொண்டே பிரமனாகிய புத்திரனைப் பெற்று இலக்குமியை மார்பிற்கலந்தவனென்று விளக்குகின்றார். இதனில், ' வலத்தேவைத்து ' என்றசொல் 'தோற்றுவித்து' என் றசொல்லையே தொடர்ந்து முன்னிருத்தலாலும் "திருவைக்கலந் தவன்" என்றசொல் பின்னிருத்தலாலும் தோற்றுவித்தற்குக் காரணம் மேற்காட்டியசிவனேயென்பது தெளிவாம். இச்செய்யு ளுக்கு இதுவே பொருளென்பதைப் பின்வருஞ்சரித்திரமும் விளக்கும்.

முன்னொருகற்பமுடிவில் எழுந்த பிரளயவெள்ளத்துட் பிர மாதிதேவர்களும் உலகமும் ஒடுங்கியபோது அவ்வெள்ளத்திற் சிவாஞ்ஞையினால் எழுந்த ஆலிலையிலே விஷ்ணு தானும் ஒடு ங்காது பிழைத்துநிற்றல்நோக்கி அகந்தைகொண்டு நித்திரைசெ ய்ய அவனிடமாகப் பிரமனைத்தோற்றி முன்போற்படைப்பிக்க க்கருதிய சிவபிரான் அவ்வெள்ளம் தனது திருவடிப் பரட்டி னளவாதற்குரிய பெருவடிவங்கொண்டு விஷ்ணுமுன்பு தோன் றித்தன்னை அகந்தைவசத்தால் அறியாதுமயங்கிய விஷ்ணுவின் நெற்றியில் விபூதிசாத்தி மயக்கநீக்கியருள, உடனே விஷ்ணு அஞ் சியெழுந்து துதிக்கச் சிவபிரான் நீ நமது மாயாசக்தியாதலால் மோகினியாய்வருக என்றாஞ்ஞாபித்தனர். விஷ்ணு அவ்வாறுசிவ னைத்தழுவ அப்போது சிவனதுவீரியம் மற்றையர்க்குப்போலக் கீழ்ச்செல்லும் அதோரேதசுவாகாமல் பொன்னிறத்ததாய் மேற் செல்லும் ஊர்த்துவரேதசுவாதலால் மேற்சென்று விஷ்ணுவின் நாபியில்தங்க அதிற்றோன்றிய பொற்கமலத்தின்மேற் பிரமன் [illegible]

னவனைத்தோன்றினன் என்பது சைவபுராணம் பத்துளொன்ருகிய சிவபுராணவிளக்கமே இதனை' (கடம்பவனபுராணம்.)

"முன்னமொரு பிரளயத்து நான்முகனு திபரொடுங்க முராரியாண்மேற், றன்னகந்தை மிகுந்திருப்ப வவனுதலிற் சங்கரன்வெண்ணீறுசாத்த, மன்னகந்தை நீங்கியவண் மோகினியாய் மருவியுந்தி வனசத்தீன்று, பின்னொருநான் முகனையும்பே றறிவும் பெற்ருன் பிறிதில்சிவன் பொருளென்றெண்ணி" என்றும்,

(கந்தபுராணம் உபதேசகாண்டம் விபூதிமான்மியம்.)

முன்னை மாநிலம் பிரளயத் தொடுங்குற முளரி
மன்னுநான்முக னுதிய ரிறந்தனர் மடிய
அன்ன வெம்பிர ளயத்துமே லலர்ந்ததோ ராலிற்
றன்ன ருந்திறத் திரு நெடுமால்விழி துயில.

ஆல மாமரத் தாங்கவன் றுயிறலு மவன்பான்
மூல மீறிலா முழுமுதல் முக்கண னடைந்தான்
வேலை வெள்ளவெம் பிரளயம் புறவடி விரவ
நீல மேனிகண் டுவப்புற வொருதனி நின்ருன்.

மாய னவ்வழி முதல்வனை நோக்கியே மதியான்
நீயெ வன்கொலென் றறிவயர்ந் துரைத்தலு நிமலன்
ஆய மாயையி னடைந்தன னிவனென வருளித்
தூய நீறளித் தவ னுள மாயையைத் துடைத்தான்.

தன்னு ளத்துறு மாயைபோ யுணர்ந்தன னறனவா
தென்னை யாளுடை நாயக னிங்கெழுந் தருள
முன்னை யான்புரி மாதவமுளதெனு மொழியாப்
பன்னு நான்மறைச் சுருதிசொற் றவனடி பணிந்தான்.

ஈங்கெ ழுந்தருள் காரண மென்கொலென் றியம்ப. ...
காரி யைப்பயக் கின்றநாட் காலமோர்ந் தறிந்தெம்
பாரி சத்தியா யெதிர்ந்தனை யின்னுமப் பனிப்பூ
வேரி வார்குழற் சத்தியா குதியென விளம்ப.

அனைய னவ்வுரு வெடுத்தலுமரனவட் புணர
வினையி னெய்திய பொற்றுளி விந்துவா னகுதித்து

கனைந றுந்துழாய் நாயகி நாபியந் தலத்து
வனையு நெட்டிதழ்க் கமலமொன் றலர்ந்தது மன்றே.
முளைத்த தாமரைப் பீடிகை முழுமுதற் பிரமன்,
கிளைத்த வைந்துமா முகத்தொடு தோன்றினன்."

வெள்ளொ ளித்திருநீற் றிறு லாவிலே மேலோன்
கள்ளமாயை போய்க் கண்ணுதற் காண்குறப் பெற்றான்
பிள்ளை யாமென மலரயற் பயந்தனன் பெரியோ
ருள்ள மோர்வது திருவெண்ணீ றல்லதொன் றுளதோ.

என்றும் கூறுதலால் நன்குதெளியலாம். இதனாலும் விபூதிமகி மையும் விஷ்ணு சிவனது மாயாசக்தியே யென்பதும் அவர் விபூதிதாரணரேயென்பதும் விளக்கமாம்.

(லிங்கபுராணம் பூர்வகாண்டம் (௨௦)வது அத்தியாயம்)

மலைமகள்கொழுநன்பீசிபீசமற்றியான்யோநிதன்பீசம்
உலகெலாமுன்னந்தோற்றுவிப்பதற்கென்யோநியில்வைத்தனன்.

இது சிவன் ஊர்த்துவரேதசாகியபீசமுடையவன் (பிரமனாகிய)நீ அவனதுபீசம் (விஷ்ணுவாகிய)நான் யோனி. உலகெலாம் உண்டாக்கும்பொருட்டு அவனதுபீசத்தை யெனதுநாபிக்கமல யோனியில் வைத்தனன்; என்று மேற்காட்டியஉண்மையை நிறுத்துகின்றது. இதனை (யசுர்வேதருத்திரஇருதயோபநிஷதம்.)

ருத்ரஸ்ஸ்வயம் தத்பீஜம் பீஜயோநிர் ஜநார்த்தந:
கார்யம் விஷ்ணு: க்ரியா ப்ரஹ்மா காரணம் து மஹேச்வர: ॥

என்னும் வசனம் தெளிவிக்கின்றது. அன்றியும் விஷ்ணு பள்ளிகொண்டதலமெல்லாம் பெண்கள்சயனிக்கும்விதிப்படியே வலக்கைகீழாகச்சயனித்திருத்தலை நேரேகண்டும் அவ்விஷ்ணு சிவனது சத்தியென்பது தெளியலாம். (திருமழிசையாழ்வார்) இயற்பா.

"மாதாயமாலவனைமாதவனை" யென்றதில் 'மாது' என்னுஞ் சொல் விஷ்ணு பெண்ணென்பதைவிளக்குகின்றது. இனி வலக்கைகீழ்வைத்துறங்குவதைப் பிள்ளைப்பெருமாளையங்கார்,

" திருவரங்கரிணையிலாவொருபுயங்கவணையிலே

திகழ்வலக்கைகீழதாமுகிழ்மலர்க்கண்வளர்வதோர் ,கருணை' என்று விளக்கினர். விஷ்ணுபள்ளிகொண்டதலங்களில் தலைப்பக்கத்திலுள்ளசிவலிங்கங்களை மறைத்துவிடுகின்றனர். மறைத்துமென்னை? அவ்விஷ்ணு அச்சிவலிங்கார்ச்சனைக்காக ஆதியில்வைத்துள்ள வில்வவிருக்ஷம் பலமுறைவெட்டப்பட்டும் தழைத்துவருவது பிரத்தியக்ஷமே. தத்புருஷாயவித்மஹே, மஹாதேவாய, தீமஹீ தந்நோருத்ர:ப்ரசோதயாத். என்னுஞ் சிவகாயத்திரியிலுள்ள புருஷசப்தம் விஷ்ணுகாயத்திரியில் இன்மையும் புருஷன் சிவனே விஷ்ணு அவனதுசத்தியேயென்பதை விளக்கும்.

(விஷ்ணுவின்காமமோகாதிதாமசகுணவிளக்கம்.)

இனி விஷ்ணுவுக்கு மேற்காட்டியதாமசகுணமே இயற்கையென்பதை அவரதுமேனிநிறம் அநவரதசயனம் நித்திரை காமக்குரோதசோகமோகவஞ்சவேஷாதிகளாலும்காணலாம். கரியநிறம் சயனம் நித்திரைகள் நிராக்ஷேபமே. காமமுதலியன பின்வருஞ்சரித்திரத்தாற்றெளிக. விஷ்ணு காத்தற்றொழிற்காகச் செயற்கையாய்க்கொண்ட சாத்துவிககுணமுழுதும் மறந்து இயற்கையாகிய தாமசகுணவசப்பட்டுநின்றமையாலன்றோ! சலந்தராசுரன் பெருவலியுற்றுத் தேவரெல்லாரையுந்துரத்தி அரசாளுதலையும் தாம் அவனோடு (உ௰௲)வருஷ யுத்தம்செய்தும் வெல்லமுடியாமல் அவனைப்புகழ்ந்து தப்பிப்பிழைத்துவந்ததையும் தெரிந்தும், அவன் பத்தினி கற்பிற்சிறந்தஉத்தமிபிருந்தாதேவியை விரும்பி முறுகிவளர்ந்தகாமமும், அவள்கலவி விரைந்துகிட்டாமையால் அச்சலந்தரனை எந்தஉபாயத்தாலாவது கொன்றொழிக்கவேண்டுமென்றெழுந்த குரோதமும், தங்கருத்துமுடியாமையால் ஓயாத சோகமும், " கிட்டாதாயின்வெட்டெனமற " என்றநீதியையும் நோக்காமல் அதனையே மறவாதுநினைத்துமயங்குமோகமும்,அவன் சிவனுலிறந்தது தெரிந்தநிமிஷமே பிருந்தை உத்தமியாதலால் சலந்தரன்போலச்சென்றாலன்றி இணங்காளென்று அவன்போற்சென்ற வஞ்சவேஷமும், சென்றுகலந்தபோது பிருந்தை அவ்வஞ்சந்தெரிந்து அக்கினியிலிறந்தபின்னரும் அச்சாம்பரிற்புரண்டு

உமாதேவியருளால் அச்சாம்பரில்முளைத்த துளசியைப்பிருந்தை யென்றுநினைத்தேடியெப்போதுந்தரித்துவருதலுமுதலிய தாமசகுணச்செயல்களுடையாரென்பது வியாசவாக்காகிய காந்தபுராண முதலியவற்றுள்ளதே. (சூடிக்கொடுத்தநாச்சியார்.)

"பொருத்தமுடையநம்பியைப்புறம்போலுள்ளுங்கரியானை" என்ற வாக்கும்,

நெடுந்துயில்வஞ் சஞ்சோம்பு நீதிவழுப் பேருண்
கடுங்கோபம் பொய்மறதி காமம்—உடம்பு
கரியநிறங் கள்ளங் கலந்திருத்த லாலே
அரிதா மதகுணத்த னும்." என்றவாக்குமதனையேவிளக்கும்.

(விஷ்ணுபாதகங்கையை ருத்திரன்தரித்தானென்று வைஷ்ணவர்கூறுமாறுபாட்டைவிலக்கும்உண்மைவிளக்கம்.)

இனி, வைஷ்ணவர்கள், விஷ்ணுவினுடைய பாதசம்பந்தத்தாற் சுத்தமானகங்கையைத்தரிக்கப்பெற்றதனால் மயானவாசத்தால் அசுத்தனாய் அசிவனாயுள்ளருத்திரன் சுத்தனாய்ச் சிவனென்றபேரும்பெற்றான்ஆதலால் அவனினும்மேலானவன் விஷ்ணுவேயென்கின்றார்கள்; அதனுண்மையையும் விசாரித்தொழிப்பாம். ருத்திரன் மயானவாசியென்றது உண்மையே. மயானம் எதுஎன்பதையுற்றுநோக்காது அசுத்தனென்றுகூறியது கிணறு தன்வாயாற்கெட்டதுபோலாயது. இதனைப்பின்வருவனவற்றாற்காண்க. பிரமன்செய்யும்சிருஷ்டியானது பிரகிருதிமாயாபுவனவாசிகளாகிய சீவர்களுக்கு அவரவர்வினைவசப்படி சரீராதிகளை அம்மாயையினின்று தோற்றுவித்தலாகும். விஷ்ணுசெய்யும் திதியானது அப்பிரகிருதிபுவனவாசிகளாகிய சீவர்கள் அவரவர்வினைப்போகங்களையனுபவிக்கும்வழி யிடையூறுநீக்கிநிறுத்தலாகும். அவ்விருதொழிலும் சிலவற்றைப் படைத்தல் காத்தலென்பதின்றி அப்பிரகிருதியிலடங்கிய எல்லாவற்றையும் படைத்தல் காத்தலென்பது தெளிவாம். ருத்திரன்செய்யுஞ்சங்காரமானது சமஸ்தஜீவர்களையும் அவ்வச்சரீராதிகளினீக்கிப் புத்திதத்துவமாதாரமாகமாயையிலொடுங்கி இளைப்பாறியிருக்கச்செய்தலாம். ஆகவே சங்காரமும் சிருஷ்டிதிதிகள்போல எல்லாவற்றையும் ஒடுக்குதலென்ப

தாந்தெளிவே. எல்லாவற்றையும் ஒடுக்கும்போது பிரமவிஷ்ணுக்களும் ஒடுங்கினவர்களே. அப்போது ருத்திரன் நெற்றிக்கண்ணக்கினியாற் சர்வாண்டங்களையுந் தகித்தருளுவன். இதனை, "இலயித்த, தத்திதியி லென்னி லழியா தவையழிவ, தத்திதியு மாதியுமாமங்கு" என்ற மெய்கண்டசுருதி செவ்வே விளக்குகின்றது.

இவ்வாறு எல்லாமுந்தகனமான இடமே மயானமாதலால் வைகுண்டாதிஎல்லாஇடங்களுமயானமேயென்பது தெளிவாம். அவ்விடத்தில் ருத்திரன் ஒருவனேவசித்தலால் மயானவாசியென்று கூறப்பெறுகின்றான். எல்லாரும் ஒடுங்கத் தான்மாத்திரம் மிஞ்சித் தன்னை ஒடுக்கவல்லாரொருவரின்றிநிற்கின்ற பரமகர்த்தா சிவன் ஒருவனேயென்பதைச் சாஸ்திரமுகமாக அறியமாட்டாரும் அறிந்துய்தற்காகவே எல்லாமுந் தகனமாயொடுங்கிய போது ஒடுங்காமல் மிஞ்சிநின்றபஸ்மத்தை (திருநீற்றைப்) பூசிக்கொண்டும் விளக்குகின்றான். அக்கினி எப்பொருளையுந்தகித்துச் சுத்தமாக்குதலால் அதற்குச் சுசியென்றொரு பெயர் விளங்குகின்றது. இந்தஅக்கினியே சுத்தமாக்குமானால் ருத்திரன் கண்ணில் வந்த அதிபரிசுத்தமான அக்கினியாற்றகனமாகிய இடம் சுத்தபூமியாவதன்றி அசுத்தபூமியென்றெதுக்கமுடியுமா? பிரமவிஷ்ணுவாதிசமஸ்தசீவசரீரங்களுந்தகனமாதற்கிடமானதுபற்றி மயானமென்றுகூறினும் அது மேற்காட்டியபடி சுத்தபூமியேயாதலால் அப்பூமியில் ஒருவனாய்வசிக்கும் ருத்திரனும் சுத்தனென்பதே நிச்சயமாமென்க.

இவ்வுண்மைநோக்காமல் ருத்திரன் மயானவாசத்தால் அசுத்தனென்றுகூறியதனால் அம்மயானம் விஷ்ணுமுதலியர் இறந்த இடமேஎன்றுண்மை வெளியிடநேர்ந்தது. இதற்கு அவர்களே காரணராதலால் இன்று தன்வாயாற்கெட்டதுபோலென்றுமே லுவமிக்கப்பட்டார்கள். (முத்தொழில்களின் தாரதம்மியம்.)

உலகம் என்றும் ஒரேபடித்தாயிராமல் தோன்றிநின்று ஒடுங்குந்தன்மையது. கடவுள் என்றும் ஒரேபடித்தாயுள்ளபொருள் கடவுளையடையவேண்டியவர்கள் உலகில் அநித்தியபுத்திபண்ணி "அற்றதுபற்றெனிலுற்றதுவீடு" என்றபடி அப்பற்றுமுற்றுநீக்

கவேண்டும். அதனைநீக்கவிடாமற்றடுத்துநிற்பன சிருஷ்டி திதி இர ண்டுமே. அது எப்படியெனின்? பொய்யெனும்படி ஒடுங்கியஉல கை நேரேதெரிந்து மெய்யென்றுபற்றிநிற்கும்படிவெளிப்படுத்த லே சிருஷ்டியாதலாலும் வெளிப்பட்ட உலகபோகங்கள் பொய் யென்றொழியாமல் யாவரும் ருசிகொண்டு அனுபவிக்கும்படிநிறு த்தலே திதியாதலாலும் அவ்விருதொழிலும் பற்றுநீங்கியுய்யவி டாமற்றடுப்பனவென்றறுதெளிவாம். சங்காரமோ சீவர்கள் சிரு ஷ்டியாற்சரீராதிகளைப்பெற்று, காத்தலால் வினைப்போகங்களைய னுபவிக்குமிடத்துச் சுவர்க்கநரகாதிகளிலுழலுகின்றதுக்கம்நீங்கி இளைப்பாறச்செய்து பற்றுவிடுதற்கேதுவாக அவ்வுலகம் பொய் யெனக்காணும்படி அழிக்தொழிப்பதாம். இதனுல் முத்தொழில் களிலுள்ள தராதரம் விளக்கமாம்.

உலகம் பொய்யெனக்கண்டுபற்றுவிடுதற்கேதுவாய்ச் சீவர் களிடத்துள்ள இரக்கத்தால் இளைப்பாறியிருக்கச்செய்யும் பரிசுத் தமானசங்காரஞ்செய்கின்ற ருத்திரனை அசுத்தனென்பது யாருக் குத்தான்சம்மதமாகும். புத்திமான்கள் பக்ஷபாதமின்றி உண்மை கூறுவாராக. (ஹைமவதிகங்கையின்வரலாறு.)

இனி அவர்கள் ருத்திரன் விஷ்ணுபாதகங்கையைத் தரித் தான் என்பதும் அபத்தமே. கங்கைகள் ஹைமவதி விஷ்ணுபதி யென்றிரண்டுள்ளன. ஹைமவதி இமயமலையரசன் புத்திரி பார் வதிக்கு மூத்தவள். சூரனுற்றுன்புறும் தேவர்கள் சிவனைவணங்கி முறையிட்டபோது நாம் ஒரு புத்திரனைத்தந்து துன்பத்தைநீக்கு வோமென்றருளினர். அதுகேட்டதேவர்கள், அத்துன்பத்தால் அறிவுகலங்கிநிற்கின்றுராதலால், சிவசொரூபநிலையையுற்றுநோக் க்காமல் சிவன் புத்திரனைத்தருவதாலுல் மற்றையனைப்போல்ஒரு பெண்ணிடமாகத்தான்தரவேண்டுமென்றுகருதி அச்சிவவீரியத் தைத்தாங்கிக்கொண்டு அப்புத்திரனைப்பெறுதற்குரியவலியுள்ளவள் ஹைமவதியேயெனநிச்சயித்து அவள்பிதாவாகிய இமவானுக்குத் தெரிவித்து அழைத்துக்கொண்டு பிரமனிடஞ்சென்றார்கள். பிரம ன்இவளுக்குச் சிவவீரியத்தைத்தாங்கிக்கொள்ளும்வன்மையில்லை யென்றுகூற, ஹைமவதி அதை மறுத்துத் தன்வன்மையைக்

கூறினாள். பிரமன் அவளைச்சலரூபியாகச்சபித்தான். அவள்பெரு வெள்ளமாய்ப் பிரமலோகத்தையழிக்க ஆரம்பித்தாள். பிரமன் வேதங்களால் அணைசெய்து தடுத்தான். அதனுளகப்பட்டு நீர்வடிவமாய்ப் பிரமனுலகில் இருந்தாள். (பகிரதன் வேண்டுகோள்.)

பின்னொருகாலத்தில் பகீரதன் தன்முன்னையோர் அறுபதினாயிரவர் நற்கதியடையும்பொருட்டு அக்கங்கை பூமியில்வரக்கருதிப் பதினாயிரம்வருஷம் பிரமனைநோக்கித்தவஞ்செய்யப் பிரமன் வந்து கங்கை என்வசப்பட்டவளல்லளென்றுபோயினான். பின் கங்கையைநோக்கிப் பதினாயிரம்வருஷம் தவஞ்செய்ய அவள்வந்து என்வேகத்தை ருத்திரனொருவனன்றி வேறெவராலுந்தாங்க முடியாது; ருத்திரசம்மதந்தெரிந்தால் வருவேனென்று போயினாள். பின் ருத்திரனைநோக்கி ஐயாயிரம்வருஷம் தவஞ்செய்து சம்மதந்தெரிந்து பின்னும் ஐயாயிரம்வருஷம் தவஞ்செய்ய அக்கங்கை அதிவேகமாய்வரும்போது சிவபிரான்யாவராயினும் அடங்காது அதிக்கிரமிப்பரேல் அக்கெர்வம்நீக்கி அடக்கியாளும் சர்வசக்திமான் தானொருவனேயென்பதைஉலகெலாமுணர்ந்துய்யும்படி அப்பெருவெள்ளத்தை ஒருதுளியளவாய்ச் சடைநுனியில் ஒடுங்கச்செய்து பின்பு பகீரதன்வேண்ட வெளியிட்டருளினார்.

(பாரதராமாயணபாகவதப்பிரமாணம்.)

இதனைப் பாரதத்தில் கங்கை பகீதரனைநோக்கி "அரசனே நீ வேண்டியபடிசெய்கின்றேன் சந்தேகமில்லை- மேலிருந்துவிழுகின்ற என்வேகம் வேறெவராலுந்தாங்கத்தக்கதன்று. மகாதேவன் நீலகண்டனாகிய மகேசுரனைத்தவிர மற்றெவனும் மூன்றுலகங்களினும்தாங்கவல்லனாகான்" என்றதனாலும் ராமாயணத்தில் பிரமன் "அரசனேகங்கையின்வேகத்தைப்பூமிதாங்கவல்லதன்று அதைத் தாங்குதற்குச் சூலபாணியாகிய சிவனைத் தவிரவேறொருவனை நான்காண்கிலேன்" என்றதனாலும், பாகவதத்தில் கங்கை "என் வேகத்தைத் தாங்குதற்குயாருமில்லையேற்பூமியைப் பிளந்துகொண்டு பாதலத்திற்போய்விடுவேன்" என்றதுகேட்டபகீரதன் கங்கையைநோக்கி, எவனிடத்தில் ஓதம்புரோதமாகிய இந்த உலகம் நிலைபெறும். சரீரிகளுக்கு ஆன்மாவாகிய அந்தருத்திரன் உன்

வேகத்தைத் தாங்கிக்கொள்வன் என்றதனாலும் மற்றும் வாமன கூர்மபுராணாதிவசனங்களாலுஞ் செவ்வேதெளியலாம்.

(விஷ்ணுபாதகங்கையின்வரலாறு)

இது விஷ்ணு திரிவிக்கிரமாவதாரத்தில் மேல்நீட்டியபாதம் அண்டமுகட்டைப் பிளந்தபோது அங்குநின்றொழுகியதென்றும் அப்பாதத்தில் பிரமன் அபிஷேகித்தசலமென்றும் இரண்டுவித மாகக் கூறப்படுகின்றது. பகீரதன்பொருட்டுவந்தது ஹைமவதி யாகியகங்கையே என்பது பாகீரதியென்னும் அதன்பெயராலும் விளக்கமே.

அதனையேசிவன்சடையிலொடுக்கினனென்பது பாரதராமா யணபாகவதாதிகள் தெளிவித்தலையும் நோக்காமல் சூரியனை ஒரு விரலால்மறைக்கும் புத்திமான்கள்போல, முழுதுமறைத்து விஷ்ணுபாதத்திலொழுகும்போது சிவன்சிரசைநீட்டித்தரித்துச் சுத்தனானென்று பிதற்றும் மூடவசனம் அறிஞர்சபையிலேறுமா? விஷ்ணுபாதகங்கை மேருவில்விழுந்து வாயுவினாற்பிரிக்கப்பட்டு நாலுவிதமாய் உடனே கடலிற்சென்றுவிட்டதென்று பாகவதாதி நூல்களேவிளக்குகின்றன. ஹைமவதியாகிய கங்கை முந்திய வராககற்பத்தில்வந்தது. விஷ்ணுபாதகங்கை பிந்தியவாமனகற்ப த்தில்வந்தது. இந்தக்காலவித்தேசந்தானுந்தெரியாமல் பின்வருங் கங்கையைமுன்னமே சிவன்தரித்தானென்றது மீளாநரகிற்றள் ளுங்காலவித்தேசமன்றிவேறில்லை. இது பின்யுகத்திற்பிறக்கும் ஒரு இழிகுலப்பெண்ணை முன்யுகத்தில் ஒரு பிராமணோத்தமன் மணந்தானென்பதேபோலுமாதலால் இந்தஆபாசத்தைமேலும் விரிப்பானேன். பாரதராமாயணபாகவதங்கூறுதற்கும் விரோத மாகவிஷ்ணுபாதகங்கையைத்தரித்தஆநந்தத்தினாலல்லவாருத்திர ன்சபையிலாடுகின்றான் "ஆநந்தந்தானல்லவோமுக்கணான்மன்று ளாடுவதே" என்றுகூறியபெரும்பாதகர் மேலும் துர்க்கதியிலழு ந்துவரென்பதை அவர் ஸ்ரீரங்கத்திலே மாடுகுத்திச்செத்ததுர்மர ணமேதெளியவிளக்கும். இதனை,

பீடுகுத்த பிள்ளைப் பெருமானை யங்ஙார்முன்
மாடுகுத்திச் செத்த வகைகேளீர்—தேடியெய்த்

தம்முதல்வன் காணுத் தனிமுதன்மா தேவனென்று
தம்மடமைப் போக்கினிந்தை யால். என்றபெரியாரு
ரையும்பிரகாசப்படுத்துகின்றது.

இனி, அவ்வைஷ்ணவர்களே திருவரங்கத்திலே திருவீதியி லே திருமாடு திருக்கொம்புசாத்தத் திருநாடலங்கரித்தார்.என்று புகழ்ந்துகூறுவதும் அவர்மாடுகுத்திச்செத்ததைவிளக்கும். பொய்களே புகன்று செய்யுஞ்சிவநிந்தை நோக்கி ரிஷபதேவரோவந்து குத்திக்கொன்றுரென்னுமுண்மை உத்தமருணர்வார்கள்.

(விஷபாநத்தினுண்மை)

பாகவதாதிகளினுண்மையு நோக்காமல், விஷ்ணுபாதகங் கையைருத்திரன் சுத்தனுதற்காகத் தரித்தானென்று கூறத்துணி ந்தமுழுப்புரட்டராதலால், விஷவெப்பத்தால் விஷ்ணுமேனிகரு கியது பலநூல்களானும் கரியவனென்றபேரானும் விளக்கமாத லையும் நோக்காமல், கடலில்வந்தவிஷத்தையும் விஷ்ணுவேருத்தி ரனுகியபாத்திரத்தால் உண்டானென்றுங்கூறி அதற்கோர்சுருதி யுங்காட்டுகின்றனர். அச்சுருதி, "கெஶீவிஷஸ்ய ... த்ரணவா தெத்ரணாவிஷகேஶீ!" என்பதாம். இதற்குக்கேசியாகியவிஷ்ணு ருத்திரனுகியபாத்திரத்தால் விஷத்தைக்குடித்தானென்பதுஅவர் கள்செய்யுந்துர்அர்த்தம்.கேசத்தையுடையவன்கேசியென்றுகும். யாவருங்கேசமுள்ளவரோ. அவரவர்கேசங்களெல்லாம் சிவகேசம் போன்ற விசேடமுள்ளனவல்ல. விஷ்ணுகேசமும் அப்படியே. ஆதலால்விஷ்ணுமுதலியமற்றையோர்கேசியென்று வழங்கப்பெ ற்றிலர். சிவகேசமோ அதிவேகமாய்வந்த கங்கைவெள்ளத்தை ஒருதுளியளவாகத் தன்னுனியிலடக்கியது. பொன்னிறத்தது, மேல்நோக்கிநிற்பது. இன்னும்பலவிசேடமுள்ளது. இவ்விசேட ங்களை இரண்யகேசி, ஊர்த்துவகேசி, வியோமகேசி முதலியசிவ நாமங்களும்விளக்கும். ஆதலால்,மேற்காட்டியசுருதியினுண்மைப் பொருள், கேசியாகிய சிவன் ஆலாலசுந்தரனென்னும் ருத்திராரா கிய பாத்திரத்தால்விஷத்தைக் குடித்தானென்பதேயாம். இதனை அகஸ்திய மஹரிஷிவாக்குந் தெளிவிக்கின்றது.

(அகஸ்தியபக்தவிலாசம்)

"சுருதி— ... " இ—ள்: உமாபதியானவர் விஷ்ணுவாதிதேவர்கள் விஷவேகத்தைச் சகிக்கமுடியாமல் அலறுவதைச் சமீபத்திற்கேட்டு ஆலாலசுந்தரராகியருத்திரரை யேவியருளினார். அவர்இரக்கமிகுதியால்விரைந்துசென்று அதிகோரமானவிஷத்தைக்கைவிரல்நுனியினால்நாவற்கனிபோல்கிரகித்தாரென்பதாம். அவ்வாறு கிரகித்துவந்தவிஷத்தை ஒலமிட்டலறியவிஷ்ணுமுதலியஎல்லாரும் உய்யும்பொருட்டுப்புறத்தும்விடாமல் உள்ளும்புகுத்தாமல்அவரையெல்லாம் காத்தருளுந்தலைவன் சிவனொருவனேயென்னுமுண்மையைமறந்தவருங்கண்டுதெளிசவெனக்கண்டத்தில் வைத்தருளினரென்றுபின்கூறுகின்றது. இச்சுந்தரர் சிவாலோகனதர்ப்பணத்தின் (கண்ணாடியின்) நின்றும் சிவரூபியாய்வந்தவராதலால் மேற்காட்டியசுருதியில் ருத்திரரென்று விளக்கப்பெற்றார்.

(விஷபாநசுருதியின்எதார்த்தத்துக்குப்பாகவதப்பிரமாணம்)

இதுவும், கங்காதாரணத்திலுண்மைவிளக்கியபாகவதத்தில் விஷ்ணு கடல்கடையப் புகுந்தமைகூறுமிடத்துக் கடலில்விஷம் வந்தவுடனே, அது அதிஉக்கிரமானது எங்கும்பரம்புவது மேலெழும்புவது சகிக்கமுடியாதவீரமுள்ளது; அதனால் பிரசைகள்எல்லாரும் விஷ்ணுவாதிதலைவருடன்சேர்ந்து,(அரக்ஷமாணுச்சரணம் ஸதாசிவம்)காக்கப்படாமற்பயந்து சதாசிவனையேபுகலாகத்துணிந்துஒடினார்கள்; பின்அத்தலைவர்கள், கிருத்திர, எவனுக்கு ரஜசுதமசுசத்துவமுக்குணங்களில்லையோ, எதுபேதங்கடந்தபிரமமோ, அத்தகையஉனதுபரஞ்சோதி, சகலலோகபாலவிரிஞ்சிவைகுண்டசுரேந்திரர்களால் அடையத்தக்கதன்றெனத் துதித்தார்களென்று விளக்குதலாலும், விஷ்ணு கேசியல்லவென்பதுதெளிவாய் அவர் ருத்திரபாத்திரத்தால் விஷத்தைகுடித்தாரென்றமுழுப்புரட்டுமடியோடுதொலைந்தமைகாண்க.

(சிவன்விபூதிஎன்புமுதலியவணிந்ததனுண்மை)

கடல்கடையும்போது இலக்குமி இந்திராணிமுதலியபொரு

ள்கள் தோன்றக்கண்டநிமிஷமே எனக்குஎனக்கென்று விஷ்ணு முதலியோர்கிரகித்ததுபோல, விஷம்வந்தபோதுஒருவரும்என க்கென்று கிரகிக்கமுடியாமற்பயந்தோடிமுறையிட்டதற்கிரங்கிச், சிவன் அதையுண்டு காத்தருளினுரென்று பாகவதாதிகள் கூறுவ தும்நோக்காமல், துர்அர்த்தம்பண்ணுகிறவர்கள், சிவன்வெண் ணீற்றை அங்கராகமென்றுதான், எலும்பு ஆமையோடு பன்றிக் கொம்பு மீனக்கண்தலைமாலைசர்ப்பமுதலியவைகளை ஆபரணமெ ன்றுதான், புலித்தோல்முதலியவற்றை ஆடையென்றுதான்தரித் தானென்றுங் கூறுவர்போலும். அவற்றினுண்மையுணராரியல் பைவிரிப்பானேன். வெண்ணீற்றுண்மைமுன்விளக்கினோம். எலு ம்புஆமையோடுமுதலியன விஷ்ணுஅவதாரங்களிற்கொண்டகெ ர்வநீக்கி அடையாளமாகத் தரித்தானென்பதைப் புராணங்கள் விளக்குகின்றன. பலகோடிஅண்டங்கள் புவனங்கள் புவனத்தலை வர்களை ஆங்காங்குவைத்து ஐசுவரியாதிகளுங்கொடுத்து நியமித் துநடத்துகின்றசர்வைசுவரியசம்பந்ந பரமகர்த்தாவாகிய சிவன், ரத்னுபரணுதிகளுக்குமுட்டுப்பட்டு எலும்புமுதலியவைகளைத்தரி த்தவனல்லனுதலால், அவையெல்லாம் விருப்புவெறுப்பில்லாதவ னென்றுஅவனதுவைராக்கியாதிகளையேவிளக்குவனவாம்.

இனி அவர்கள் வாணுசுரயுத்தத்தில் ருத்திரனைத் தோற்றோ டச்செய்தமையால் விஷ்ணுவேமேலானவனென்கிறுர்கள். அத னையும்விசாரித்தொழிப்பாம். (வாணுசுரன்சரித்திரம்)

வாணுசுரன் காஞ்சியிற்சிவலிங்கந்தாபித்துப்பூசித்துஅருந்த வஞ்செய்தான். அவன்முன் சிவன் எழுந்தருளிநடனஞ்செய்யக் கண்டுமத்தளமடித்துநின்றுதுதித்தான். சிவன்அவனுக்கு ஆயிரங் கைகளுண்டாகச்செய்து நீ வேண்டியதியாதென்றருள, அளவிலா வல்லபமும், செல்வமும், மூன்றுலகையும்ஆளும்வெற்றியும், என் னூருக்குஅக்கினிமதிலும், இடைவிடாதபத்தியுந் தந்தருளுக என் றுன். அப்படியேகொடுத்துமறைந்தருளினுர். வாணன்மூவுலகை யும்வசப்படுத்திஆளுங்காலத்தில்கயிலைசென்று(க)கைகளால்குட முழாவாத்தியஞ்செய்யச் சிவன் நீ வேண்டியதென்னென்றருள, வாணன்தினமுந்தெரிசிக்கும்படி என்அரண்மனைமுகப்பில் விரா

யகர் சுப்பிரமணியர் பார்வதிதேவியாருடன் வீற்றிருந்தருளு என்றுவணங்க, அங்குவீற்றிருந்தருளினார். அவனுங்காலந்தோறும்வணங்கிமேலும்வலியனாய்வாழ்ந்தான்

பின்புவாணன், சிவனை வணங்கி என்புயங்களில்தினவுமிருகின்றது, யுத்தஞ்செய்துமாற்றியருளுகஎன்றுவேண்டினான். சிவன்நகைத்துபிருகுசாபத்தால் யதுகுலத்துவந்த கண்ணன்மாற்றுவானென்றருள, வாணன். அக்கண்ணன் முப்பதுமுறையெனக்குத்தோற்றோடினவனல்லவா? என்றுகூற, உபமன்னியுமுனிவனையடைந்துபெற்றசிவதீக்ஷை சிவலிங்கபூசனையால்மிகுவலியனாயினன்முந்தியகண்ணனாகநினையாதே. அவன்உன்மகளுக்குஒருபழிப்புவரும்நாளில் வருவானென்றருள, வாணன் வணங்கிச்சென்றான்.

பின்புஅவன்மகள் உஷை, கண்ணன் பேரனைத்தழுவினதாக்கனவுகண்டுதோழியையனுப்ப, அவள்கட்டிலோடுதூக்கிவர, அவனைக்கலந்து கருப்பமுற்றாள். வாணன் அவனைச் சிறையில்வைத்தான். அவன்கொடியற்றுவிழுந்தது. பேரனைத்தேடியகண்ணன் நாரதரால்தெரிந்துசைனியங்களுடன் வாணனதுநகர்க்குள்வரும்போதுசிவபிரான்வில்லையேந்திநின்றார். கண்ணன்வணங்கி அடியேன்உட்புகும்படியருள்க என்றுவேண்டச் சிவன்புன்முறுவல் காட்டி நம்மைவென்றுட்புகுவாயென்றருளக் கண்ணன் நடுங்கி உன்அருளால்வலிபெற்றநான்உன்னுடன்எதிர்க்கவல்லவனாவனோ? எதிர்த்துயிர்பிழைத்தவருண்டா? சர்வாண்டங்களையும்ஒருநிமிஷத்தில்தகிப்பதுன்கண்ணில்வரும் அக்கினிப் பொறியன்றோ? சிரித்தனிலே முப்புரமுழுதும் நீறாக்கினை; ஒரு துரும்பினால் எல்லாத்தேவரையும்கெர்வபங்கஞ்செய்தனை; யாவரையும் வசமாக்கும்மன்மதனைக்கட்பொறியால்தகித்தனை; இராவணனை ஒருவிரலால்நசுக்கினை; இயமனையுதைத்தனை; நகநுனியாற் பிரமசிரங்கொய்தனை அடங்காதகங்கையை ஒருதுளியளவாக அடக்கினை; மீன் ஆமை பன்றி நரசிங்கவடிவங்களில்உன்புத்திரர்களாலேநான்தண்டிக்கப்பட்டேன்; தக்கன்யாகத்தை வீரன்அழித்தபோது என்னுடன் தேவரெல்லாரும் பட்டபாடுசொல்வானேன் என்னைத்தண்டிக்க

வேண்டில் வில்லெடுக்கவும்வேண்டுமா? நினைப்புமாத்திரம் போதாதா? உனக்குப்பாணமும் ரிஷபமும் பத்திநியுமாகிய அடியேனையெதிர்ப்பது அருளுக்கழகாகுமா? என்னைமுதலியயாவரையும் ஆரத்திய விஷத்தையுண்டுகாத்தருளிய நீலகண்டனே! இரங்கியருளென்று வணங்கினன். சிவன், கண்ணனே! நீ, மைநாகபர்வதத்தில் நம்மைநோக்கித் தவஞ்செய்தபோது ஒருசமயம் நம்மையும்வெல்லும்படி நாம் தந்தவரத்தைமறந்துவிட்டாயா? அர்ச்சுனன் நம்முடன்செய்த யுத்தத்தை நமதிளங்குமரன் விளையாட்டிற்சிறந்ததாகக்கொண்டதுபோல்உன்னுடன்செய்கின்றோம். பகையாகச்செய்திலோம் பயப்படாதேயென்று வில்லை வளைத்தருளினார். கண்ணனும் உய்ந்தேனென்றுவணங்கி ஒருபாணத்தைச் சிவபதத்தில் பூசனைமுறையாக விழச்செய்தான். இப்படி இருவரும் யுத்தஞ்செய்யும்போது தேவர் முனிவர்முதலியோர் நடுங்கினர். கண்ணனும் இனி ஆற்றிலேன் என்றுவணங்கச் சிவன் பராமுகமாயினர். விறகுசுமந்தும், மண்சுமந்தும், பிரம்படி வில்லடிபட்டும், தூதுசென்றும் அடியரெண்ணம்முடித்தருளும்சிவபிரான் கண்ணனுக்கு வெற்றிகொடுப்பது புதிதன்று. அபபெருங்கருணை நோக்கிக் கணணன் மேலும் வணங்கியுட்சென்றான். பின் வாணனுடன் போர்செய்து புயங்களையரியும்போது சிவன் கண்ணனே வாணன் உன்போலஅன்புள்ளவன் நம்மைப்பூசித்த இரண்டுகைகளை விட்டுவிடுவாயென்றருளினார். கண்ணன் எம்பெருமானே! வேதம் எப்பொருளும் ருத்திரனேயென்று கூறுதலால் மரத்தின் வேரில்விடும்நீர் எங்குங்குளிர்வித்தல்போல உன்னைப் பூசித்தவாணன் எங்களையும் பூசித்தவனாகின்றான். ஆதலால் நாலுகைகளை விடுகின்றேன். என்று அவ்வாறுவிட்டு உறவாகி வாணன் மகளைத் தன் பேரனுக்கு விவாகஞ்செய்து துவாரகைக்குச்சென்றான்.

இவ்வாறு தோற்றவனைக்கொண்டே வாணன் செருக்கை யொழித்தஇதனாலும் ஒன்றைச்செய்தல் செய்யாதுவிடுதல் வேறொன்றுசெய்தலாகிய கர்த்திருத்துவம் அகர்த்திருத்துவம் அந்நிதாகர்த்திருத்துவம் மூன்றுமுள்ள பரமகர்த்தா சிவனொருவனேயென்பதுதெளிவாயது. இச்சரித்திரம் வியாசவாக்காகிய காஞ்சிமா

ன்மியத்தில்விரிவாயுள்ளது. இங்கேசுருக்கிக்கூறினேம். பாகவத விஷ்ணுபுராணுதிகளிலுமுள்ளன. (பாகவதம்)

"மாபலியின்நூறுபுத்திரருள் மூத்தவனுகியவாணன் (சிவனு கிய)மிருடனைத்தாண்டவத்தில் (மத்தள) வாத்தியத்திஞல்மகிழ்வி த்து ஆயிரம்புயங்களைப் பெற்ருன். பகவான் கேட்டவரங்களைக் கொடுத்துமகிழ்வித்தான். வாணன்அசுரசாதியினியல்பால் துர்ப் புத்தியுடையனுய் மஹாதேவனே என் ஆயிரம்புயங்கள் சுமை மாத்திரமேயாயின; உன்னைத்தவிரஎன்னேடுபோர்செய்யவல்லவ னைமூவுலகினுங்கண்டிலேன்; புயத்தின்தினவிஞற் பர்வதங்களைப் பொடிபடுத்தித் திக்குயானைகளோடு யுத்தஞ்செய்யச்சென்றேன் பயந்துஒடின;ஆதலால்நீயேயுத்தஞ்செய்து என்புயத்தினவைமாற் றவேண்டுமென்றுவேண்டினன்.பகவான்உனதுகொடிஅற்றுவிழு ம்போது உனக்கு யுத்தமுண்டாகும் என்று கூறினர்." என்பது பாகவதவசனம். (விஷ்ணுபுராணம்.)

"வாணன் திரிலோசனன்முன்வணங்கி மஹாதேவ- ஆயிரம் புயங்களிஞல் யுத்தமின்றி வருந்துகின்றேன், யுத்தமுண்டாகுமா? இப்புயங்கள் பாரத்துக்கேயுளவாயின என்றுகேட்கச், சிவன் உன்மயூரத்துவஜம் அற்றுவிழும்போது யுத்தமுண்டாகுமென்று கூறினர்" என்பது விஷ்ணுபுராணவசனம், இவ்வசனங்களுஞ் சுருக்கிக்கூறப்பட்டன. இவற்றில் உன்னைத்தவிர என்னுடன் யுத்த ஞ்செய்யவல்லவனை மூன்றுலகிலுங்கண்டிலேனென்று வாணன் கூறிய பாகவதவசனமே தோற்ருேடியகண்ணனுக்கு வலிகொடு த்து வெல்லச்செய்தானென்பதை விளக்குகின்றது, இன்னும் இவ்வுண்மைவிளக்கும்பிரமாணங்கள் பலவுள்ளன.

(கண்ணனுக்கும் வாணனுக்கும் சிவன்செய்த அநுக்கி ரகம் அவர்தகுதியளவென்பது.)

சிவன், கண்ணனும் வாணனும் தன்னையே பூசிக்கின்றவர் களாயிருக்கக் கண்ணனல் வாணனைப் பங்கப்படுத்தியது முறை யோவெனில், கண்ணன் அடிமைத்திறத்தின் முறைதவருதவனுத லாற் பராமுகனுயுட்புகுத்திஞன். வாணன் அடிமைத்திறத்தின்

முறைதவறி நேரில்யுத்தத்திற்கு அழைத்த அவ்வளவு கொ்வ முடையவனுதலால், அவனுக்குத்தோற்றவனைக்கொண்டே அவன் கொ்வத்தை மாற்றினன். வாணனும் பின் சத்துவகுணத்தனுய் முத்திவேண்டிமேன்மைபெற்ருனுதலால்சிவபிரான் இருவருக்கும் செய்தது அநுக்கிரகமேயாமென்க,

(மாபலியிடம் விஷ்ணுசெய்த வஞ்சனை.)

விஷ்ணு, தன்னைப்பூசிக்கின்ற மாபலியிடத்துள்ள அக்கிரமத்தைமாற்ற வேறென்றுஞ்செய்யமுடியாமல், மூன்றடிமண் யாசிக்கின்றவர்போல அவன் இக்குறுகியவடிவின் மூன்றடி மண்தானேயென லகுவாய்நினைக்கட்டுமென்றவஞ்சனையால் நெடுமாலாயிருந்தும் குறுகியவடிவுடன் சென்றுயாசிக்க,அவ்வஞ்சனை தெரியாமல் தாராதத்தஞ்செய்யப்புகும்போது, சுக்கிராசாரியர் இவர் விரோதஞ்செய்யவேவந்தனர்கொடாதேஎன்றுதடுக்கவும்,எதுவரினும் வருகவென்று சொற்றவருமற்கொடுத்த உத்தம தாதாவின் தலையில் அடிவைத்தழுத்திப்பாதலத்தில்வீழ்த்திய வஞ்சனையாரறியாதார். இதனைத்திருவடி சூட்டியதென்பரேல்அது, (பாதமஸ்தக சம்யோகம்) பாதத்தைச்சிரசில்மெல்லவைத்து அருளுவதன்றிப், பாதலத்திற்றள்ளி இழிவுசெய்வதன்றெனக. விஷ்ணுவை வைஷ்ணவரும் கபடநாடகரென்றுகொண்டாடுவர். (திருவாய்மொழி) “ கைச்சக்கரத்தண்ணல் கள்ளம்பெரிதுடையான், மெய்ச்சப்படான்பிறர்க்கு மெய்போலும் பொய்வல்லான்” என்று தெளிவிக்கின்றது.

வைஷ்ணவர்செய்யும் சிவநிந்தைவிஷ்ணுவின்கோபத்துக்கிடமாம்

மேற்கூறிய பிரமாணங்களால் சிவன், கண்ணன் துதித்து வேண்டியதற்கிரங்கியே யுத்தத்தில் (ஔதாசீனியம்) பராமுகஞ் செய்தானென்பது தெளிவாயிருக்கவும், அவ்வுண்மைநோக்குமுணர்வின்றி நிந்தைசெய்து அதற்குஇம்மையிலும் தண்டனையாகச் சிவவாகனமாகிய மாடுகுத்திச் செத்தஒருவர், கண்ணன் வாணயுத்தத்தில் ருத்திரனைப்புறகிட்டோடச் செய்ததாகக் கூறினர். அப்பாதகத்தை “மோடியோட வங்கிவெப்புமங்கியோட வைங்கரன்முடுகியோடமுருகனேட முக்கணீசன் மக்களைத்தேடியோட”

என்பது முதலியவற்றாற்காண்க. அவையெல்லாஞ் சுருதியில்லாத அபத்தங்களே. இவர்முதலிய சிலகொடியவைஷ்ணவர விஷ்ணுவையுள்ளதுகூறித் துதிக்காமல், இல்லதுகூறிச்சிவநிந்தனை செய்தலால், சிவபக்தராகியவிஷ்ணுவின் அநுக்கிரகமிழந்து கோபத்துக்கேபாத்திரராய் மீளாநரகுக்கும் ஆளாவது போகூழின் புணர்ப்பேயாம். அவர்கள் விஷ்ணுவையுயர்த்தக்கருதியே சிவநிந்தைசெய்கின்றார்கள். உள்ளதுகூறியுயர்த்தினால் என்றும் நிலைபெறும். இல்லதுகூறின் அது சுருதிப்பிரமாணங்களின்முன்னர் இடியேற்றின் முற்பட்டபாம்புபோனின்றழியும். விஷ்ணுவாகிய நரசிங்கம் சிவனாகியசரபத்தை அடித்துவென்றதாகக்கூறுதல்முதலியயாவும்இல்லதுகூறலேயாம். பிரமவிஷ்ணுக்களாகியஎங்களைச் சிவனினும்மேலானவர்களென்று வழிபடுகின்றபாதகர்கள் மீளாநரகடைவர்கள். அவ்வாறன்றி எங்களைச் சிவனுடன் ஒத்தவர்களென்றுகூறுகின்றவர்கள் எங்களையுந் துன்பக்கடலில்வீழ்த்துகின்றார்கள். எங்களைச் சிவனுக்கு அடிமைத்தொண்டுசெய்கின்ற சிவபக்தர்களாகவேநினைத்து வழிபடுவார்க்கு அருள்புரிவோம். அப்படி நினையாதவர்களைப் பகைவர்களாகவே நினைக்கின்றோம் என்று பிரமதேவர் கூறுகின்றார். இதனை,

(கந்தபுராணம் உபதேசப்படலம்.)

நம்மையும் பரமென் றுன்னி நாதனிற் சிறப்புச் செய்யும்
வெம்மைகொ ணெஞ்சர் நீசர் வீழுமவெந் நிரயம் வீழ்வர்
தம்மையஃ தெடுத்தல் செய்யா சமமெனப் புகல்கிற் போர்க
ளெம்மையுந் துயரமென்னு மிருங்கடற் படுப்ப ரன்றே.

காணுறு புலித்தோ லாடைக் கண்ணுதற் கடவுட் கன்ப
ரானவ ரென்று மன்னு மடிமைதந் தொழில் புரிந்து வாழும்
வானவ ரென்று மெம்மை வழுத்தினர்க் கருள்வோ மல்லா
லேனையர் தம்மைத் தெவ்வ ரென்றெண்ணியே யிருத்துமியாமே

என்னும் உண்மையாற்கா[redacted]னா விஷ்ணுமூர்த்தி தம்பீடத்து வரம்வேண்டித் தவஞ்செ[redacted]தவனையநோக்கி நீ என்னைத்துதித்துச் சிவனைநிந்திக்கின்[redacted]களிடத்தில் எப்போதும் இருந்துகொண்டு அவர்கள்[redacted]னைக் கவர்ந்துண்பாயாக, என்

றும் அப்பரமசிவன் அருளினலன்றே நானும்பிரமனும்நன்மை மிகவாழ்கின்றோமென்றுங்கூறிச் சிவநிந்தைசெய்யும் வைஷ்ணவரிடத்துள்ள கோபக்குறிப்பை விளக்கினர். இதனை,

(இலிங்கபுராணம் முகடிதோற்றமுரைத்த அத்தியாயம்.)
முகடி—மூதேவி.

என்றலுமிங் கெனை வணங்கி யிரஞ்சடையண் ணலையுமையோ டிகழ்ந்து நாளும், ஒன்றியுறை வோர்பொருள்க ளொன்றறவே வவ்வியவ ணுற்றே நின்று, மன்றவருந் திடுதியான் மற்றவன்ற னருளினு லன்றே வானின், நன்றுமிகவாழ்கின்றே மலரோனும் யானுமென நவின்றபோரனுன். என்றஉண்மையாற்காண்க.

சைவராகிய எம்மவர்கள், சிவபூஜாதிகளில் விஷ்ணுவைச் சிவனுக்கொருசத்தியாகப் பரிவாரங்களில்வைத்து வழிபடுகின்றவராதலால், சிவனைத்துதிக்குமிடத்துச் சாஸ்திரப்பிரமாணமுள்ளனகூறித்துதிக்கின்றாரன்றி இல்லதுகூறி விஷ்ணுவை நிந்தனை செய்வாரல்லர்.

விஷ்ணுமுதலியயாவரையும் ஒடுஒடுங்கச்செய்த திரிபுரத்தவர் சலந்தரன் அந்தகாசுரன்மன்மதன் விஷமுதலியபகையை ஆயுதாதியின்றிச் சிரிப்புமுதலியவற்றால் ஒடுக்கி அத்தேவர்களைப்பாதுகாத்தவன் சிவனேயென்று வேதமுதலியநூல்கள் விளக்குகின்றன. (இருக்குவேதம்.)

விஷ்ணுவெஃவாராஹஂரூடுவலோஹாயஹ-ஸிதிஂவிஷாராயநு
ஹஹஹஹஂஹலோகூஸ்நுவாஉாலெஷணவஹொஹஸஹா
கூவெலோதாஹிகூலெஹிதாஹிகூவெஹ-ாதாஹிகூவெ
ஜெ்ஷொஹிகூவெஹெஷாஹிஹவஂஹிலோடஂவெஷ
உஷாஹவதிஹிஜூாதாஹவதிதாஹவதிகாஹிதாஹவதி
யஹஂவெஷஹிவஹாய-ஜ்லோவொதிஹிவஹாய-ஜ்லோவொதி

இ—ள், விஷ்ணு பனறியாயபூமியைக்கிழித்துச்சென்று ஆயிரம்வருஷங்களாகியும் சிவ[illegible]ணப்பெறுமல் வருந்தி, முன்பு நானேபிரமமென்றுகூறிய[illegible]தநீங்கி வணங்கிநின்று அப்பாதங்காண்டற்கு' ஆசைமி[illegible]பிரானை மனசால்நோ

க்கி அடியேனுக்கு மாதாவும்நீயே பிதாவும்நீயே உடன்பிறந்தவ னும்நீயே மூத்தவனும்நீயே உயர்ந்தவனும்நீயே என்று துதித்த னர். இம்மகிமையை அறியவல்லவனெவனோ அவனே சிவசாயுஜ் யத்தையடைகின்றான் என்றும், (பைப்பலாதோபநிஷதம்.

யொ஢க்ஷயஜெ௲ஷ்ரவஸம்ஹாரு விஜித்ய விஷ்ணும் யொரஹ்வாஸெநவீரஃ ॥

இ—ள், தக்கன் யாகத்திலே வீரபத்திரர் விஷ்ணுவைப்பா சத்தினாற்கட்டியுருட்டினார் என்றும் விளக்கமாகின்றன.

இவ்வாறு திரிபுரத்தவர்முதலியோரால்வருந் துன்பநீக்கிப் பாதுகாத்தவன் சிவனேயென்றும், சாக்ஷாத்விஷ்ணு அகந்தை யால் (கூ) வருஷந்தேடியும் சிவபாதங்காணப்பெறாது அகந்தை யொழிந்து துதித்துய்ந்தாரென்றும் சிவனால் ஏவப்பெற்றவீரபத் திரர் சாக்ஷாத்விஷ்ணுவைப் பாசத்தினாற்கட்டியுருட்டினாரென் றும் வேதோபநிஷதங்கள் செவ்வே விளக்கவும் விஷ்ணுவின் அம்ஸரான கிருஷ்ணருக்குச் சிவன் தோற்றோடினானென்று பிர மாணமின்றிக்கூறுகின்ற மூடவசனம் அறிஞர் சபையில் தலையெ டுக்குமா? (சிவன்சர்வவியாபகன்.)

சிவனொருவனே பிரகிருதிமாயாபுவனவாசிகளாய் அம்மட்டிலு ள்ள ஏகதேசவியாபகர்களாகிய விஷ்ணு பிரமாதிசகலஜீவர்களை யுந்தனக்கு அடிமைகளாகக்கொண்டு அவரவர்பருவத்துக்கிசைய அருள்புரிகின்ற ஆண்டவனும், அதனைவிளக்கும் ஈசநாமந் தனக் கேயுடையவனும், அப்பிரகிருதிமாயைக்குமேலுள்ள அசுத்தமா யை சுத்தமாயைகளையுங்கடந்துநிற்கும் மாயாதீதனுமாகிய சர்வ வியாபகனென்பதைப் பாண்டியன் பிரம்படி அர்ச்சுனன் வில்லடி முதலியவைகளாலுந்தெளியலாம். இதனை, (ஆலாஸ்யமான்மியம்)

திறப்படு முலக மெல்லாம் வியாபியாய்ச் சிறந்து நிற்கும்
அறப்பெருங் கடவுள் சோம சுந்தர னதனு லன்றே
கறைக்கதிர் வடிவேற் மழுவனன கையிற்பொற் பிரம்பு பட்ட
புறத்தடித் தழும்பு [illegible] புவனமும் பட்ட தன்றே,

துண்ணென மார்[illegible]ழுத்தனன் கமலச் சோதியும் யா தென வியந்தான், வி[illegible]பெருமான் வெருவினன் வானோர்

# வேதாந்தத்தெளிவு

வேறுளார் மெய்ப்பணிப் படைந்தார், வண்ணயா ழியக்கர் சித்தர்சா ரணர்தம் வடிப்படா வுடம்பினிற் பட்ட, புண்ணையா தென்று தத்தமிற் காட்டி மயங்கினர் புகுந்தவா றறியார்.

(பாரதம்.)

விண்ணினுறை வானவரில் யாரடிப டாதவர்வி ரிஞ்சனரி யேமு தலினோர், மண்ணினுறை மானவரில் யாரடிப டாதவர்ம னுக்கண்முத லோர்க ளதலக், கண்ணினுறை நாகர்களில் யாரடிப டாதவர்கள் கட்செவிம கிபன் முதலோர், எண்ணில்பல யோனியிலும் யாவடிப டாதனவி ருந்துழியி ருந்துழியரோ.

வேதமடி யுண்டனவி ரிந்தபல வாகமவி தங்களடி யுண்டனவொரைம், பூதமடி யுண்டனவி நாழிகைமு தற்பகல்செய் பொழுதொடுச லிப்பில் பொருளின், பேதமடி யுண்டனபி றப்பிலியி றப்பிலிபி றங்கலர சன்றன் மகளார், நாதனம லன்சமர வேடவடிவுங்கொடுந ரன்கையடி யுண்ட பொழுதே. என்பனவாதிகளாற் காண்க: இதிற்பிறப்பிலியிறப்பிலிநாதன் அமலன் என்று வைஷ்ணவர் வில்லிபுத்தூராருங்கூறிய உண்மைநயங்கவனிக்கத்தக்கது.

(வில்லிபுத்தூரர்பாரதம் தமிழில் பாடியதற்குக் காரணம்.)

வில்லிபுத்தூரர் பிரபலவித்துவானாய் விஷ்ணுபத்தராயிருந்தவர். இருந்தும், அடக்கம் பொறைமுதலிய சாத்துவிககுணம் வாய்க்கப்பெற்றிலர். அக்குணம் பூர்வதவவிசேஷத்தாலன்றிக் கல்வித்திறனால் வருவதன்று. கல்விவிசேடமுள்ளதேனும் அதுசார்ந்ததிற்குஞ்சீவனிலைநோக்கி நன்மைதீமைஇரண்டுக்கும் உதவியாகிறது எப்படியெனில்? பூர்வபுண்ணியவிசேடத்தால் திருவருட்பூர்த்திபெற்று எல்லாம் இறைவன்செயலே எமக்கொருசுதந்திரமுமில்லை இறைவனே எம்மைஅறிவித்துநடத்துகின்ற சுதந்திரகர்த்தாவென்றுள்ளபடிதுணிந்து அகந்தாதிதாமதகுணங்களின்நீங்கி அடங்கிநின்று யாவுந்திருவருளைமுன்னிட்டேசெய்து அவ்வருள்வழியினின்றொழுகும் உத்தமரிடத்துள்ள கல்வி மேலும்மேலும் நன்மைக்கே உதவியாகும். இக்குணங்களைச்சாராமல் பூர்வபாவவிசேடத்தால் அகந்தைவசப்பட்டுத் தம்[illegible]யிற்பெரியதொன்று யாவருமதிக்கவேண்டுமென்ற ஆசை[illegible]னால் தமது சாதிஅச்சி

ரமங்களுக்குரிய நியமானுஷ்டானாதிகளிலும் பராமுகராய் அவ்வாசையொன்றிலேயே உந்முகராயிடையறுதுமுயன்று நூலாராய்ந்து தாமறிந்த உண்மையைப் பிறர்க்கறிவித்தால் அவருந்தமக்குச் சமமாய்வருவரொன்றபொறாமையாலுண்மைகூறாது "கரவாகிய கல்வியுளார்" என்றஅநுபூதிவாக்கியலக்ஷியர்களாய்வித்துவசபா வெகுமானமதிப்பொன்றையே வேண்டிநிற்பாரிடத்துள்ள கல்வி மேலும்மேலும் அகந்தையேவளர்த்து அதன்வசப்பட்டுநிற்றலால் அறிந்துசெய்பாதகங்களுக்கும் பிராயச்சித்தமுண்டென்று அறிவுமயங்கி துணிந்து அஞ்சாதுபுரிதீமைகளுக்கும்உதவியாகும், இது கத்தி ஒன்றே திருத்தொண்டுபுரியுமுத்தமரிடத்திருந்தால் திருமாலைத்தொண்டுமுதலியநன்மைகளுக்கே உதவியாதலும் கள்ளுக்காமாதிவசப்பட்ட அதமரிடத்திருந்தாற் கொலையாதிதீமைகளுக்கே உதவியாதலும்போலாம்.

மேற்கூறிய வில்லிபுத்தூராரிடத்திருந்தகல்வி எதிர்வந்தவித்துவான்களின் காதுகளை அறுத்தற்கு உதவியாயிருந்து அகந்தையை வளர்த்துவந்தது. இவர்கல்விச்செருக்கினால் வித்துவான்கள் முன்னர் நாமிருவருஞ்செய்யும்வாக்குவாதத்தில் வென்றவர்கள் தோற்றவர்களுடைய காதைஅறுத்துவிடுவது அவ்வாதநிபந்தனையென்று பேச்சுறுதிசெய்து வாதித்துவென்று காதுகளை அறுத்துவருவாராயினர். அது தெரிந்த நமது ஸ்ரீஅருணகிரிநாதசுவாமிகள் அவர்முன்வந்து மேற்கூறியநிபந்தனைக்குழைந்துக்கொண்டு கந்தரந்தாதிபாடிவருங்கால் 54வதுபாட்டின்பொருள்கூறமுடியாமல் வில்லி—ர் நான் தோற்றுவிட்டேன் காதை அறுத்துவிடுக. என்று கூறியபின்னும் நமதுசுவாமிகள் உத்தமசத்துவகுணசீலராதலால் அவரைநோக்கி உலகத்தவர் அவரவர் வினைக்கீடாக இறைவன் அறிவித்தமட்டிலறிபவராதலால் அவர்களை அம்மட்டிலாவது கற்றுவந்தார்களேயென்றுமகிழ்ந்து மேலும் அவரறிவுவளர்தற்குபாயஞ்சொல்லி நன்மைசெய்வதேஉத்தமகுணமாகவும் நீர் அங்ஙனம்புரியாவிடினும் காதுகளைஅறுத்துவருத்துவது பெரும்பாதகமாதலால் இனிமேல்இப்பாதகஞ்செய்யேனென்றுஉறுதிகூறின்உமதுகாதைஅறுக்காதுவிடுகின்றேனென்றுஅவரிடத்துஉறுதிமொழிவாங்கிக்கொண்டு அவருக்கும் உலகர்க்கும் நன்மை

செய்துவந்தனர். இதனால் வில்லிபுத்தூரார் அகந்தையொழிந்தும் சிவ த்வேஷம்நீங்காமையால் ஒருநாள் திருவண்ணாமலைசமீபத்தில் தெரியக்கூடியவழியில் வரும்போது அம்மலையைப்பார்க்கப்படா தென்று மறைத்துக்கொண்டு சென்றனர். அதுதெரிந்த நமது அருணகிரிநாதசுவாமிகள்,

புரத்தைநர சிங்கத்தைப் போர்வேளைக் கூற்றை
எரித்தவற்குத் தாத னிவனோ—விரித்தபுகழ்த்
தேன்கட்டுஞ் சோணகிரித் தேசிகனைப் போற்றாமல்
ஏன்கெட்டுப் போறா னிவன்.

என்ற பாசுரத்தைப் பாடியருளினர். இப்பாசுரத்திற்கூறிய சிவபரத்துவம் சுருதிவிளக்கமே என்பதனை,

யோ தேவாநாம் ப்ரதமம் புரஸ்தாத்விஶ்வாதிகோ ருத்ரோ மஹ
ர்ஷி: | ஹிரண்யகர்ப்பம் பஶ்யத ஜாயமானம் ஸ
நோ தேவ: ஶுபயா ஸ்ம்ருத்யா ஸம்யுநக்து ||

என்ற சரபோபநிஷதமுதலியவற்றால் நன்கு தெளியலாம் இத்திருப்பாசுரம்பாடியஅளவிலே வில்லிபுத்தூராருடைய கண்கெட்டு ஒளிமறைந்தது. உடனே வில்லி...ர் தமது மதசம்பந்தமந்திராதிவைத்தியாதிகள்செய்தும் சாத்தியப்படாமையால் மிகவருந்தி வேதனைப்படுங்காலத்தில் ஆகூழ்வசத்தால் நமதுசுவாமிகள் திருப்பாசுரம்பாடியதுதெரிந்து திருவண்ணாமலையில்வந்து சுவாமிகளை அடுத்து வணங்கி அடியேன்செய்தஅபசாரம் பொறுத்துக் கண்ணொளிதந்தருளுகஎன்றுபிரார்த்தித்தனர்சுவாமிகள் நீசெய்த அபசாரமிகப்பெரிதாதலால் சிவபரத்துவவிளக்கமாகஒருநூல்செய்வாயேல்சிவத்துவேஷத்தால்மறைந்தகண்ணொளிபூர்த்தியாகுமென்றருளியதுகேட்டு வணங்கிச்சென்று சுவாமிகளின்செயற்கரிய அற்புதச்செயலும் அருள்வலியும்நோக்கி அவர்கட்டளைப்படிசெய்தாற்றான் கண்ணொளி கைகூடுமென்றுள்ளபடி துணிந்தவராய் சிவபரமானநூல் எதைச்செய்வோமென்றுயோசித்துத் தனிச்சிவநூலில் சிவபரத்துவம் விளக்குதலைக்காட்டிலும் விஷ்ணுசம்பந்தமுள்ளநூலில் விளக்குதலே மிகமேலாகும். அதுவேபுறநோக்களவில் நம்மதத்தருக்குஞ்சம்மதமாகுமெனச் செவ்வேதெளிந்து

விஷ்ணு பாண்டவர்க்கு எப்போதும் உடனிருந்து உபாயங்கூறி உதவிபுரிந்ததும் அவ்வுதவியால் அவர்கள்சிவபூஜாதிதிருத்தொண்டுகளேசெய்துவந்துசிவனருள்வலியாலேயேஆபத்துநீங்கிப்பகை வென்று வாழ்ந்ததுங்கூறுகின்ற பாரதத்தைத் தமிழில் சொன்னயம் பொருணயமுதலிய பன்னயங்களுஞ்செறியவைத்து சிவபரத்துவமகிமைகளே திகழப்பாடிமுடித்துக் கண்ணொளிபூர்த்திபெற்று வாழ்ந்தனர்.

இதனை அருணகிரியார்புராணத்தில விரிவாய்க்காணலாம்.

நாராயணனை ஆராதித்தல் சுருதிசம்மதமே. வைஷ்ணவர்கள் அளவிட்டிவில்லாமல் சிவநிந்தனைசெய்வது சுருதிவிரோதமேஎன்பதை, நாலுணர்ச்சியால் நோக்காதவரும் இவ்வில்லி—ர் சிவநிந்தனையாற் கண்ணிழந்து சிவமகிமைகூறிக் கண்பெற்றுச் சிவபத்தராய் வாழ்ந்தகதைநோக்கியாவது சிவநிந்தனையின்றி ஆராதித்துய்வாராக. (பிரமவிஷ்ணுவாதியர் ஏகதேசவியாபகர்கள்.)

பிரமவிஷ்ணுவாதியர்க்குப் பிரகிருதிமாயாபுவனவியாபகமாத்திரமன்றிச சர்வவியாபகமில்லையென்பதை,

எண்கணனைக் குட்டியகுட் டெங்கேனும் பட்டதோ
மங்கையர்மத் தாலடித்த மத்தினடி — யங்கேனும்
பட்டதோ கைப்பிரம்பு பார்த்தனார் வில்லினடி
பட்டதே யண்டமெலாம் பார்.

கண்ணான் றனையுரலிற் கட்டிமணித் தாம்பினாற்
புண்ணுறவவ்வாய்ச்சி புடைத்தவடு—வண்மை
பொருத்தினருக் கெல்லாம் பொருந்தாமை யான்மால்
பரத்துவனென் றெண்ணப் படான். என்றும் வருவன

வாதிகளாலுந் தெளியலாம். (வைஷ்ணவர்கூறும் சிவநிந்தனைகளும் அவைமுழுதும் அசாஸ்திரிகமெனவிளக்குமுண்மையும்.)

வைஷ்ணவர்கள் குருபரம்பராப்ரபாவத்தில் நம்பிள்ளைவைபவத்தில் சிவபஞ்சாக்ஷரமுதலான க்ஷுத்ரமந்திரங்களெனவும், இளையாழ்வார் (இராமாநுஜர்) வைபவத்தில் "வேதவிருத்தமான கள்ளப்பொய்ந்நூலாகிய சைவாகமத்தை" எனவுந்தூஷித்தனர்

இதற்குப்பிரமாணம் எந்தமூலையிலாவதொன்றுங்காட்டிலர். இவர் (கஅ) புராணத்தில் ஒன்றாகிய கூர்மபுராணத்தில்,

> சாறு வாகங் காபாலஞ் சாற்றும் பாஞ்ச ராத்திரநூல்
> மாறு செய்யும் வாமமுள்ள மயங்கச் செய்த நூலாகுந்
> தேறி யிந்நூற் படிநின்றோ ரிவற்றை யுலகிற் செப்பிடுவோர்
> பாறு தொடரு நரகத்தி னளப்பில் காலம் படிந்திடுவார்.

என்றும், சூதசங்கிதைஞானோற்பத்தியில்லாமைக்கு ஏதுநவின்ற அத்தியாயத்தில், "பாமரரேகொள்ளும்பாஞ்சராத்திரம்" என்றும், ஷைமோசகனேஉரைத்தவத்தியாயத்தில்,

> மறைமூ லகமா காதுலகின் மருவு பாஞ்ச ராத்திரநூற் [றோர்
> றுறைபோ மவர்கள் யாரேனுந் தொலையாப் பாவத் துறைசென்
> கறையார் மலின சித்தரோ கைக்கொள் வார்க ளந்நூலை
> யறைகோ டிகற்ப மாயிடினு மன்னோர் முத்தி யடைவரிதே.

என்றும் கூறுகின்ற வியாசவாக்காகிய பிரமாணத்துக்கு என் சொல்லுவர்.

இனி, அர்ச்சுநன் கண்ணன்காலிலிட்டபூக்களை ருத்திரன் சிரசிலணிந்தானென்றிழித்துக்கூறுவர். அதுஅவரதறியாமையே. அர்ச்சுநன்கண்ணன்சொற்படிபிரமவிஷ்ணுவாதிதேவாயுதங்களாற் சயத்திரதனை வெல்லமுடியாதென்றெண்ணிப் பாசுபதாஸ்திரம்பெறக் கைலைக்குச் செல்லும்போது, கண்ணனையே (சரீரம்) மூர்த்தியாகவைத்துச் (சரீரி) மூர்த்திமானாகிய சிவனை ஆவாகித்துப் பூசித்தானாதலால், அவனுடைய அன்பின்திடத்தை உலகர்க்குக் காட்டும்பொருட்டும், "ஆரொரு வருள்குவா ருள்ளத் துள்ளே அவ்வுருவாய் நிற்கின்ற வருளுந் தோன்றும்" என்ற திராவிடசுருதிப்படி எவ்வுருவில் யார்யார்வழிபட்டாலும் அங்கங்கே விளங்கிநின்றருளுவன் சர்வவியாபகனாகியசிவனென்றுசுருதிகூறுதலை, உபமந்யியரிடம் சிவதீக்ஷைபெற்றுப் பூசித்து அநுபவத்திற்றெளிந்தகண்ணன் "என்னையே சிவமூர்த்தியாகப்பாவித்துப் பூசிப்பாயென்று அர்ச்சுநனுக்குக்கூறியது பழுதாகாமல் விளக்கும்பொருட்டும், கண்ணன்மேற் சிவபாவனையால் அணிந்தபுட்பங்களை அவ்விருவருங்கைலைசென்று பன்முறைவணங்கித்துதித்து நிற்கும்போது சிவபிரான்றன்மேனியிலுள்ளனவாகக்காட்டி

யருளினாரன்றி, அர்ச்சுனன் கண்ணன்காலிலிட்டபூக்களைச் சிவன் அங்குவந்து விஷ்ணுவின் நிர்மாலியங்கிடைக்கவேண்டி வாங்கி யணிந்தாரல்லர். இதனை விரிவாக வைஷ்ணவராகிய வில்லிபுத்தூராரும் பாரதத்தில் விளக்குகின்றனர். (பாரதம்.)

என்றரி யியம்பலு மிருமருங்கினு
நின்றநன் மலர்கொய்து நிகரில் கேள்வியான்
மன்றலந் துழாய்முடி மாயன் மேன்மனை
மொன்றியே சிவாகம வுரையிற் சாத்தினான்.

இதில் அர்ச்சுனன் சிவாகமவிதிப்படி பூசித்தானென்பது தெளிவாயது. சிவாகமவிதிப்படிபூசிப்பது சிவனையாவிஷ்ணுவையாவென்பதையாவரறியாதார். இதனையும் அறியாது மாறுபட்டுநிற்பார்க்குமேலும் அறைவாம். (பாரதம்.)

கண்ணன்மேலணிமல ரனைத்துங் காயெரி
வண்ணன்மேற் காண்டலு மகிழ்ந்து மேதினி
யுண்ணுமா தவன்சிவ னுருவ மென்றுணர்ந்
தண்ணலு முடல்புள கரும்பினானரோ.

இதில் மாதவன் சிவனுருவமென்றது, சரீரம்கண்ணன்என்றும், சரீரி சிவன் என்றும் மேற்கூறியதைத் தெளிவித்தது. இப்படியே பொய்கையாழ்வாரும்,

ரன்றிகழு மேனிப் புரிசடையெம் புண்ணியனும்
றுலகந் தாய நெடுமாலும்—என்றும்
வராங்கத் தாற்பிரிவ ரேனு மொருவன்
வனாகத் தென்று முளன். என்று கூறி

(பாரதம்.)

ந்திரு மடமயில் கேள்வன் சென்றுசெவ்
திவா னிறத்தின னருள்செய் வாய்மையா
தியுள் விடுத்திட னான்ற னொடுதன்
திறின் மகிழ்ந்துமக் கிரத்துட் போயினான்.

ளை யாலெரி புராரி தன்முன்
னெறி னாரண னுனி யன்பினூற்

சரணபங் கயமுறத் தாழ்ந்து பன்முறை
கரனுற முகிழ்த்திரு கழறன் மேயினர்.
வொங்கரா வெயின்மணிப் பூணும் பேணுநீ;
றங்கரா கமுமுவந் தணிபு மேனியாய்
சங்கரா மேருவெஞ் சாபம் வாங்கிய
செங்கரா சிவசிவ தேவ தேவனே;

விண்ணிடைத் திரிபுரம் வெந்து நீறெழப்
பண்ணுடைச் செந்தழல் பரப்பு மூரலா
வெண்ணுடைக் காமனை யெரித்த பேரழற்
கண்ணுடைக் கடவுளே கால காலனே.

தருவது முயிரெலாங் காக்குந் தன்மையு
முருவற வொழித்தலு மூன்ற னுடலே
கருவரா தொழிந்தவர் கருத்திற் கண்டதே
யொருவனே யெம்மனோர்க் குரைக்கற் பாலயோ.

சித்தனே விமலனே சிகழ்சின் னுமனே
யத்தனே யடியவர்க் கெளிய வண்ணலே
பித்தனே யாதியந் தங்கள் பேசொணு
முத்தனே யுயிர்தொறு மூலாய முன்பனே. என்னுஞ்

செய்யுட்களாற் கண்ணனும் அர்ச்சுநனுமாகிய இருவரும் கைலாயத்திற் சிவாக்ஞைப்படி நந்திதேவர்உள்ளேவிடுப்பச்சென்றுபன்முறைவணங்கி யெம்பெருமானே படைத்தல் காத்தல் அழித்தலாகிய முத்தொழில்கள் உமது அருள்வலியாலாகின்றனவன்றி வேறில்லையென்பது[illegible]தலியவாகத் துதித்தார்களென்பது விளக்கமாகின்றது. (சிவலிங்கமகிமை.)

ஒருவைஷ்ணவர் லிங்கமதகண்டனமென்றொன்றெழுதி, அதில் சிவலிங்கம் ஆண்குறியும், அதன்பீடம் பெண்குறியுமாமென்பதுமுதலிய நிந்தனை செய்தனர். சிவலிங்கசொரூப மகிமை சிறிதுமுணராதமூடத்தால், அது இரண்டுநீண்டுள்ளவடிவமாத்திரம் புறப்பார்வையால் நோக்கி, ஆண்குறியென்றிகழுமவர்கள் கோபுரத்தைத் தாலிங்கமெனவுமுமு[illegible]பீடத்தைப் பத்திரலிங்க

மென்றும், பூசிக்கின்ற சிவாசாரியரை ஞானலிங்கமென்றும் சிவ சாஸ்திரங்கூறுகின்றபடியாலும், இனித் (தைத்திரியம் ஆருணசாகை) "சிவலிங்காயநம:" என்றபின். ஆதமாயநம: ஆத்மலிங்காயநம:' என்று கூறுகி ற படியாலும் கோபுரம் பலிபீடம் ஞானலிங்கம் ஆத்மலிங்கமென்பவைகளையும் ஆண்குறியென்பரோ? அவரதறிவின்மையை விரிப்பானேன். சிவலிங்கமகிமை பின்வருஞ் சுருதியாற்கண்டுண்மைதெளிக.

(இருக்குவேதம் சிவஜ்யோதியுபநிஷதம்.)

ஸத்யம் பரம்பரம் நித்யம் ஸத்யாகாசம் ஸத்யம் ஸத்யஜாதம் ஸச்சிதானந்தமயம் ஸ்தாணுரூபம் பூதபவ்ய வர்த்தமானம் ஸர்வம் ஸத்யம் தத்ஸிவலிங்காகாரம் ॥

இ—ள்; உண்மைப்பொருளாயும் மிகமேலானதாயும் நித்தியமாயும் சிதாகாசமாயும் சத்தியத்தினால் தோன்றுவதாயும் சச்சிதானந்தமயமாயும் ஸ்தாணுரூபமாயும் பூதபௌஷ்ய (வர்த்தமானகாலத்திரயங்களிலும் எல்லாப்பொருள்களுக்கும்) ஆஸ்பதமாயும் உள்ளதுஎதுவோ அது சிவலிங்காகாரம அது ஏகரூபமாயுமுள்ளதென்பது விளக்கமாகின்றது.

யகாரம் லிங்கமா நாளம் வகாரஞ்
சிகாரமேற் பீடந் தெரிக்கின்—மகாரந்தா
கண்டமே யாகுங் கவின்று ரடிபபீடம
பண்டிகழு நஃகான்மெய் பார். என்ற சைவசுருதி

சிவலிங்கம் பஞ்சாக்ஷரரூபமென்பதை விளக்குகின்றது.

காட்டு மோமெனு மெழுத்துநிட் களசிவன் றன்னை
யீட்டு மைம்பெரும் பிரமமாந் தனுவுடை யிறையைக்
கூட்டு மஞ்செழுத் துபயமா மொருபொருள் கொடு
மோட்டு றும்பவப் பிரணவ மஞ்செழுத தொன்றி.

இதனாற் பிரணவம் நிட்களசிவமென்பதும் அபபிரணவமுமபஞ்சாக்ஷரமுமாகிய இரண்டும் ஒன்றிநின்றவுருவமே சதாசி... கிய சிவலிங்கமென்பதுந் தெளிவாகின்றது.

இச்சிவலிங்கத்திலே (உச)ஆகிய ஆத்மதத்துவமான பிரமபாகமும் (எ) ஆகிய வித்தியாதத்துவமான விஷ்ணுபாகமும்(௩)

ஆகிய சிவதத்துவமான ருத்திரபாகமும் தோன்றும். இதனை,

(ஆலாஸ்யமான்மியம்.

ஆதியி லான்ம தத்துவ மான வலர்மகன் பாகமு நடுவில்
நீதியில் வித்தா தத்துவ மான நெடியவன் பாகமு முடிவி
லோதிய சிவதத் துவமென லான வுருத்திர பாகமு முதிக்கு
என்றதாற்காண்க.

இதில் சிவலிங்கத்தின் மத்தியம் விஷ்ணுரூபம் என்று வியா சபகவான் விளக்குதலால் சிவலிங்கத்தை ஆண்குறியென்றதின் தனை, விஷ்ணுவையுஞ் சார்தல் காண்பாராக.

மேற்காட்டிய இருக்குவேதமுதலியபிரமாணங்களால் சச்சி தாநந்தமயமுதலியசிறப்புவாய்ந்தசிவலிங்கம்சாதாக்கியதத்துவா திபதியாகிய சதாசிவரூபமாகும். இச்சதாசிவமே பிரம விஷ்ணு ருத்திர மகேசுர சதாசிவவிந்துநாதசத்திசிவமென்னும்ஒன்பதின் மத்தியதாய்க் கீழுள்ளரூபநான்கையும் மேலுள்ள அரூபநான்கை யும் தன்னுட்கொண்டு ரூபாரூபமாய் விளங்குகின்றது. இது சிவ சாதாக்கியம் அமூர்த்திசாதாக்கியம். மூர்த்திசாதாக்கியம், கர்த் திருசாதாக்கியம் கர்மசாதாக்கியமென ஐந்துவகையாம். இவ் வைந்துந்திரண்டது கர்மசாதாக்கியம். இதனை,

(சதாசிவரூபம்.)

சாதாக் கியவகை தாஞ்சிவ மமூர்த்தி
மூர்த்தி கருத்தா கரும மெனவைந்
தோதிய பரைமுத லைந்திலும் பவமே-
சிவசா தாக்கியஞ் சிவன்றனை யாதரித்
ததுமுத லொன்றை யொன்று சரித்தலி
லணிசா தாக்கிய மைந்துந் திரண்டது
தணிவில் கரும சாதாக் கியமே
யினமில் பொருள்க ளெவைக்குமா தாரந்
தானே கரும சாதாக் கியமே" என்றும் வருவனவற்றாற்
சாய்க. இக்கர்மசாதாக்கிய சிவலிங்கரூபமே சிவபக்தர்கள் செய் யும் பிராணப்பிரதிஷ்டைக்குரித்தாயுள்ளது. இதனை,

(சதாசிவரூபம்)

"சத்தி படைப்பினி யொத்தனா செய்யின்
யோகிக ளதிதிகள் ஞானிக ளிவர்க
ளாகிய தியானத் தளவிடற் பொருட்டாய்
நிட்கள மதனிற் சகள நிறைந்திடு
மப்பெயர் சாதாக் கியமென லாகும்" என்றும்,

(ஆலாஸ்யமான்மியம்.)

"முத்தனுகர் நீராற் சினைகுழைந் தாங்கிம் முழுமுதற் கருத்து நல் லவியின், பதமிவன் வடிவப பண்ணவர் பிறாக்குந் திருந்தி யாம் பரனிவன் முகத்தின், விதமுறு நித்த மாதிமூ விளக்கும் வேண்டியாங் குலகவர் போகம், கதிபெற வியற்றுரு சிவார்ச் சனை விளக்குங் காரண மிச்சிவ கோசம்."

என்றும வருவனவற்றுற்காண்க. இதனாற்சிவபூஜாதி செய் வோர்க்கு மற்றைய சிவமூர்த்திகளைக் காட்டிலும் சிவலிங்கமூர்த் தியே சிறந்ததென்பது தெளிவாயது, இதனை

"பலபலசட் டகநிறுவிப் பூசிதது வருவதினும் பண்பு மேவி யிலகுசிவ லிங்கநிறீஇப பூசித்து வருதிறனே யேற்ற மாகு, மலகுதவி ரக்குறிபபூ சனையினுயாந தவரோமா லயன்முன் னோரு, முலகுபுக ழதுபோலப பயன்கொடுப்ப தொன்று மிலை யுண்மை யிதால."

என்பதனூற்காண்க. இதிற்கண்டபடி விஷ்ணுமுதலியோரும் சிவலிங்கபூசனையாலேயே சிறப்புற்றாகளென்பதை மேலும்

(பாரதம் துரோணபர்வம்.)

"ஸைவஸைவ ஸ்லிங்கத்தா தாஸ்ஜயெஷ்டாவிஷ்ணுமாபவஞ்ஃ
ஸவஹாரூ வைமஸவஞ்ஜாஸ்யாஞ்பெ,ம2அடியதிதாவ ஸா்ழு ॥"

என்னும் வசனத்தாலுங்காணலாம். இதில் தேவர்களுக்குத் தெய்வமாய்ச்சிந்தனைக்கெட்டாத ஆத்மபாவராய்ப் பிறாற்செ யிக்கமுடியாதவராய் அழிவில்லாதவராய் விளங்கும் விஷ்ணுவா னவர் சிவனைச்சர்வரூபியெனத்தெரிந்து பிரபுவாகிய அவனைச் சிவலிங்கத்தின்கட் பூசிக்கின்றனரென்பது விளக்கமாகின்றது.

(ஸ்ரீவாகீசசுருதி.)

தாயி னுங்நல்ல சங்கர னுக்கன்ப
ராய வுள்ளத் தமுதருந் தப்பெறார்
பேயர்-பேய்முலை யுண்டுயிர் போக்கிய
மாயன் மாயத்துட் பட்ட மனத்தரே. என்று

விளக்கி ஒதுக்குகின்றது: இவர் அஞ்சாது கூறும் நிந்தாதியெல்லாம் எஞ்சாதழுந்தியலக்கணுறுமரு நரகிற்கேஏதுவாமென்க. சிலர் 'பாசண்டமதசபேடிகை' என்றுஎழுதி அதில் 'சாம்பற்பொதிசுமக்குஞ்சைவகரங்கள்' எனவும், 'இச்சைவக்கழுதைகளையல்லாதார் லுகாற்கழுதைகளைக்காட்டிலும் மேன்மையுடையனவாக'என்னவும் பலவாறுரைகின்றனர். விஷ்ணு சிவதீக்ஷைபெற்றவர் விபூதிருத்திராக்ஷதாரணர் என்பதும், பிருந்தைசாம்பரிற்புரண்டவரென்பதும் மேற்காட்டியபிரமாணங்களால் விளக்கமாதலால் அந்நிந்தனை விஷ்ணுவையுஞ் சாருமென்றறிந்திலர்.

ஆழ்வார் பாடல்கள் புராணங்கள் ஒன்றினுமில்லாத பஸ்மாசுரன்கதை என்றொன்று இவர்களாற் பாகவதத்திற் பிற்காலத்திற் சேர்க்கப்பட்டுள்ளது. அதுவும், விஷ்ணுவைப்பெண்ணென்றும் சிவனை ஆணென்றும் கூறுகின்றஅம்மட்டிலேயே அவர்பக்கத்துக்கு இழிவைவிளைப்பதறிந்திலர். இம்மட்டோ! இதற்கு அடுத்த அத்தியாயத்திலே மூவரிற்சத்துவகுணத்தர்இன்னொன்று பிருகுமுனிவர் பரீக்ஷித்தறியப்புகுந்து, ருத்திரனும் உமையும் விழாவளவும் புணர்ந்துகொண்டிருத்தலை ஞானக்கண்ணாற்கண்டு அவ்விருவர்க்கும் பகலிங்கங்கள் அறும்படிசாபங்கொடுத்துவிட்டுப் பிரமலோகத்திற் பிரமன் செருக்கைக்கண்டிகழ்ந்துவிட்டு வைகுண்டஞ்சென்று விஷ்ணுவின் தலையினுதைத்தாரென்றும், விஷ்ணு அவரைப்புகழ்ந்துநிற்ப அவர் விஷ்ணுவை சாத்துவிகருள் சர்வேசுரனென்றறிந்தாரென்றும் எழுதப்பட்டன. முன்தாருகவன முனிவர் சாபத்தால் அற்றுவிழுந்ததாகக்கூறியதை மறந்து இப்போது பிருகுமுனிவர் பகலிங்கங்கள் அறும்படிசபித்தாரென்று கூறினர். இப்பொய்யும் பொருத்தமில்லையெனப்படும் வேசியாமற் பகழும் அறும்படிசபித்ததாக்கூறினர்.அவர் மனப்பிவிந்தை

யிலேழுனைத்துகிற்றலாற் பசும் அறுவதெட்டியுடுவெனயோசித்தற் கிடந்தராமல்அம்மட்டிலேயேபொய்யைவெளிப்படுத்திவிட்டது. இனி, ஞானக்கண்ணால் ஏழுநாட்புணர்ச்சிகண்டதுண்மையானால் மற்றவைகளும் ஞானக்கண்ணாற் காணலாம். இன்னதுணர்ந்தபொன்று அங்கங்கேபோய்ப்பார்க்கவேண்டாவாதலால் இப் பெரும் புரட்டை விவேகிகள் உணர்வார்கள். ஆனாற் பிருகுமுனிவர் விஷ்ணுதலையிலுதைத்ததெதற்கோவெனில்? அவர்பத்தினியைக்கொன்றதனால்வந்தகோபம் முன்சாபங்கொடுத்தமட்டிலமையாமல் வைகுண்டஞ்சென்றுதலையிலுமுதைத்து அக்கோபமாறினரென்பதே உண்மையாமென்க. தாருகவனமுனிவர்சாபமொன்றும்பலிக்காத ருத்திரனையும் உமையையுஞ் சபித்தனரென்று எழுதியவர், பிரமனையுஞ் சபித்தாரென்றெழுதாமல் ஒதுக்கியதென்னையோ? கரியதிறஞ் செயல்வகைகளாலும் தாமசகுணவியல்பு காட்டும் விஷ்ணுவுக்குச் சாத்துவிகமகிமை கூற ஆசைப்பட்டவர்கள், அதற்குரிய சுருதிப்பிரமாணங்காட்டமுடியாமல், விஷ்ணுதலையில் முனிவர் உதைத்தவுதையே பிரமாணமாக் கூறிய பெருமை வியக்க[illegible]கக தே. சாபமும் உதையும் பெற்று வருந்தும் விஷ்ணு உதையைப் பொறுக்காமல் என்செய்வர். இதுதானு சாத்விககுணச்செயலாகிய பொறுமை. "செல்லிடத்துக் காப்பான் சினங்காப்பான் அல்லிடத்துக் காக்கிலென் காவாக்காலென்" என்னுந் தேவசுருதியை உற்றுநோக்கியுண்மைதெளிவாராக.

சிலர் ஒருபிரமாணமுமின்றிச் சரபரூபியாய் வந்தருத்திரனை நரசிங்கரூபவிஷ்ணு அடித்துவென்றதாக உளறுவர். இதனை நிருசிம்ம தாபினியுபநிஷதமாவது வேறு எந்தநூலாவது கூறியதுண்டா. இந்தப் புரட்டையும் பின்வருஞ் சுருதியாற்றெளிக.

(சரபோபநிஷதம்.)

[illegible]

[illegible]

இ—ள். பயங்கரமான சரபவேஷந்தரித்து லோகபீடிதமாயிருந்த நரசிங்கத்தை அடித்தவர் சிவபிரானென்பதாம் இம்மட்டோ.

உபநிஷதம்.)

# வேதாந்தத்தெளிவு

[illegible]
[illegible]

இ—ள, விஷ்ணுவையும அவரவதாரங்களான மீனகூர்ம நரசிம்மாதிகளையும் வாட்டிப்பிடித்து இரக்ஷித்தவர் சிவபிரான் என்பதாம்.

இராமதத்துவதீபிகையென்றொருசுவடியெழுதினவர், ராமேசரத்தை ரோமேசரமென்றும் ராமலிங்கத்தைரோமலிங்கமென்றும் எழுதிஅப்பாதகம் அந்நிந்தையை ராமர்தலையிலேற்றியதறியாது மகிழ்கின்றனர். அவரைவிவேகிகள், பேதாய் நீயெழுதியதில், ராமசப்தம் ரோமமாகமாறி விஷ்ணுநிந்தையாய்முடிந்ததையும், ஈசுரசப்தமும் லிங்கசப்தமும் மாறுமலுள்ளபடிவிளங்குதலையுமினியேனுமறிவாயென்றிடித்துரைத்து, நீ இன்னுஞ்சிவநிந்தை செய்யப்புகின் அது விஷ்ணுநிந்தையாகவேமுடியுமாதலால் அவ்வழியிற் புகாதொழிவாயென்றுண்மைவிளக்கி,இவ்வாறே சிவபக்தி[redacted]செய்த வைஷ்ணவர்கள் அகஸ்தியமுனிவர் தண்டனைக்குள்ளாகாமல் அவர்பாதத்தில்வீழ்ந்து வணங்கிநிந்தனைநீங்கி வந்தனைசெய்து உய்ந்தகதையும் எடுத்துக்காட்டுவாராக.

அக்கதையாதோவெனில்? திருக்குற்றாலமாகிய சிவஸ்தலம் முன்பு திருமுற்றமென்னும் பேருற்று விஷ்ணுஸ்தலமாய் வைஷ்ணவர்களாற் சூழப்பட்டிருந்தது. அக்காலத்தில் அகஸ்தியமுனிவர் அங்குவரும்போது வைஷ்ணவர்கள் முனிவரது சிவவேடமும் சிவநாமோச்சாரணமுங்கண்டு கேட்டு அவைபாதகமாமெனக்கொண்டமூடபுத்தியால், நீ இங்கே வரப்படாதென்று தடுத்தார்கள், முனிவர், மூடர்களே உங்கள்விஷ்ணு பத்துப்பிறப்பினும் சிவபிரானது அனுக்கிரகமும் நிக்கிரகமும் பெற்றதும், கண்ணையிடந்து பூசித்துச் சக்கரம்பெற்றதும், பிருந்தாதேவி உடல் எரிந்தசாம்பு சாம்பரிற்புரண்டழுதகாமமோகப்பிணிநீங்கும்படிஉமாதேவியார் ஔஷதமாகிய பச்சிலைமருந்தளிக்காத்ததும், விஷம் எழுந்தபோது தேவர்யாவரும் பயந்தோடவும் விஷ்ணு ஓடாது நின்றுநேரம்நின்று விஷவெப்பத்தால் உடல்கருகப்பெற்று வருந்தி அவர்க்கு முன்னோடிக் கயிலையடைந்து ஓலமிட்டலறச் சிவபி

ரான் இரங்கி அவ்விடத்தையுண்டு காத்ததும் முதலிய சிவமகிமை களை, நீலகண்டன் விஷ்ணுநேத்திரார்ச்சிதபாதன் சக்கரப்பிரதன் முதலியசிவநாமங்களே விளக்கவும், அவற்றைக்கேட்டுமறியாத பாதகர்களாகிய நீங்கள், எம்பிரான் விஷத்தையுண்ணுவிட்டால் யாவரும் இறந்தொழிவரோ அப்போது ஆரோடுசேர்ந்திருப்பீர் கள் பலமுனிவர் சாபத்தாற்பாதகரானீர்களென்று கூறிவிட்டு வடபாற்சென்று இலஞ்சிநகரில் முருகனைப்பூசித்துத் திரும்பிப் பாகவதவேடம்பூண்டுவந்து அவ்வைணவர்கள்வணங்கியழைப்பக் கோயிலுட்சென்று பெருமாள்வடிவத்தின்சிரசில் கையைவைத்த ழுத்திச் சிவலிங்கமாக்கிச் சிவவேடத்துடன் பூசித்தலைக் கண்டு வைஷ்ணவர்கள் முனிவரைக் கொல்லும்படிநெருங்க, முனிவர் கோபித்து ஒருதருப்பைப்புல்லையேவ, அதுகோபாக்கினியுடன்செ ன்று அவர்கள் ஓடோடத்துரத்தி வெதுப்புதலைச்சகிக்கமுடியா மல் நெடுங்காலம் பூசித்துவந்த அவ்விஷ்ணுவாலும்காக்கப்படா மல் வேறுபுகலின்றி ஓடிவந்து அம்முனிவர்காலில்விழு[redacted]வற, அவர்சாந்திசெய்து சிவநிந்தனையின்றி இக்கோயிலுள்ளே தென் மேற்கில் விஷ்ணுவைஆராதித்து வாழுகவென்றுஆஞ்ஞாபித்தன ரென்பதாம். இதனை,

(திருக்குற்றாலப்புராணம் திருமால் சிவனான சருக்கம்)

நிலைகிளர்ந்த கோபுரங்கள் பலசிகர மெனநிரைத்த நெடிய
மேரு,மலைகிளர்ந்த தெனக்கிளர்ந்த வலம்புரிச்சங் கணிக்கோயில்
வருங்கால் வேதக், கலைகடந்த பெரியதமிழ்க் குறுமுனியை வடதி
சையிற்கடைகாப் பாளர், இலைகிடந்த சூலத்தா னடியார்க்குத்
தடையெனவந் தெதிர்த்தார் மன்னோ.

பன்னுமறை வேதியரே பரந்துதடுப் பதுநோக்கிப் பரிகிலீர்கள்
மன்னுறுபத் தவதாரத் தனுக்கிரக நிக்கிரக மறந்தீர் கொல்லோ.

களபமெதிர் கரத்தபிரான் கண்ணிடந்து சாத்திடநாட் கயி
லையானி, யளவறுசீர்ச் சலந்தரனை யடர்த்தபடை கொடுத்தவரு
ளறிந்திலீரோ, தளவநிகர் குறுமுறுவற் பெருந்தைமயற் பிணிநீங்
கத் தம்பிராட்டி, துளவநறும் பச்சிலைமா மருந்தளித்து மாற்றி
யதுந் தோற்றிடாதோ.

பாரோடும் விண்ணோர்கள் பரந்தோடப் புரந்தரனுந் திசைக
ளோடத், தேரோடுங் கதிரோட மதியோட விதியோடத் திருமா
ல்மேனி, காரோடத் தொடர்ந்தோடுங் கடல்விடத்தைப் பரமனு
ண்டு காவா விட்டால், ஆரோடு நீரிருப்பீ ரெங்கோடி யுயிர்பிழை
ப்பீ ரறிவிலீர்காள்.

ஒன்றுபல நாலுணர்ந்து முணர்விலீ ருமக்குவிரித் துணர்
த்தி னலும், என்றுமுணரீருமது நேமியா னறிவமனங்க ளிறைவ
ன் சீர்த்தி, யன்றியுட லுயிர்போல மாறுமீ சனுமிருப்ப தறியீ
ரீண்டு, மன்றுளா ரடியனையோ தடுக்கின்றீர் மாயனையே மறுக்
கின் றீரால்.

கோதமன்கண் ணுவன்பிருகு துருவாசன் புரந்தரற்குக்
குலிச மீந்த, மாதவனே முதலோர்கள சாபத்தாற் பகுத்துணர்
மடவீ ரென்று, போதமிலா மறையவர்கள் கடைதப்பப் புறம்
போ[illegible]ன் புவன மூன்றில், ஆதிபரா மமரரொரு தட்டுநிற்பதெதா
னொரு தட்டமையநிற்பான.

இலஞ்சிநகர்சென்றுமுருகனைப் பூசித்துத்திரும்பிவரும்போது
துளசிமாலை முதலியபூணம் பாகவதவேடமுடையாராய் அவ்வை
ஷ்ணவர்கள் வணங்கிபுபசரிக்கக் கோயிலினுட்சென்று கதவைத்
தாழிட்டு விஷ்ணுமூர்த்தி தலையிலே தமது கையைவைத்து

குறுகுவலம் புரிக்கரத்து மான்குறுகப் பெரியதுழாய் முடி
யின்மீது, அறியமதிக் கலைகுறுகத் திலகநுதல் விழிகுறுகச் செழு
ம்பூண்மார்பி, னிறையரவப பணிகுறுக் கிகிலவுல கமுநிறைந்து
நீண்டமேனி, குறுகுகுறு கெனப்பரவித் திருவடிக்கீழ்க் குறுமு
னிவன் குறுகுகாலை

தவம்பெருக வறம்பெருகப் பொருள்பெருகத் தெருள்பெரு
கச் சைவ மோங்கிச், சுவம்பெருக மனுநீதித் துறைபெருக நிறை
பெருகச் சுருதிவாய்மை, நவம்பெருகச் சரியாதி சதுட்டயங்க
ளனிபெருக ஞால மெல்லாஞ், சிவம்பெருகக் குறுகியருள் பெ
ருகினன் குற்றாலத் தேவதேவன்.

இவ்வாறு முனிவர், விஷ்ணுமூர்த்தியைச் சிவலிங்கமாக்கிப்

பூசித்துத் திருக்கரத்தையுந் திறந்துவிட்டுத் துதித்துநிற்றலைக்கண்ட வைஷ்ணவர்கள்,

கறைமணித் [illegible]
கறுவுகொண் மனத்தி னானைக் கடைகட்ந் தேகா முன்னம்
இறுக்குறும் பிணிப்போ மென்ன வெழுந்தண்டு பாசத்தோடு
குறுகினர் வசியான் முன்னர்க் கொக்கினத் திரள்போற் கூடி.

ஒல்லென வருகைநோக்கி யொருகையிற் றருப்பை வாங்கிச்
செல்வனைத் திருக் குற்றாலத் தேவர்நா யகனை யுன்னி
யல்லினைத் திரண்ட காக மாயிர கோடிக் காங்கோர்
கல்லென விடுத்தானு மூரார்க் கடலினை யடக்குங் கையால்.

விடுத்ததோர் தருப்பை போந்து வேதிய ரடர்ந்து தாக்கும்
படைக்கெதிர் படையாய்மோதிப் படர்தலும்பனவரோங்கும்
தொடிக்கரம் விபாதன் மேனுட் குறுறுங் கரம்போனிற்ப
வடைக்கலம் பரம் யோகி யருளெனக் கபய மென்றார்.

போக்கிலா தலமந்தோடிப் புகலென்றார்க் கஞ்ச லென்று,
தாக்குமந் திரத்தால் விட்ட தருப்பையைச் சாந்தி யென்னு
நோக்குமந் திரத்தா லாற்றி நூல்புனை மறையோர் தம்மைக்
காக்குமந் திரத்தாற் கரத்தான் கடனுண்டு மலயங்காத்தான்
பனவர்தங் குழாங்களெல்லாம் பணிமதி தொடர்ச கோரத்
தினமெனப் பின்செல்வாரை யியற்றமிழ் முனிவனேக்கி.

நாதனூர் சங்க வீதி நயந்துறை தென்மேல் பாலின்
மாதவன் றனைப்பூசித்து வாழுமின் ... என்றான்

என்று சுருக்கிக்கூறிய செய்யுள்களாற்காண்க.

வைஷ்ணவர்கள், கூறுவிந்தைகள் பற்பல. அவைகளும் சைவர்களாகியவெம்மவர்கள்பிரமாணத்துடன்கூறும் சிவமகிமைக்கஞ்சிநோக்கித்துராசையாற்பொறாமைகொண்டு அவற்றிற்கு எதிரியாகப்பிரமாணமின்றித் தம்மனம்போனபடிக் கூறியஅபத்தங்களே யாம். இது பின்வருஞ்சரித்திரங்களால் விளக்கமே.

முன்னொருகாலத்தில் நந்திதேவர், அற்புதாசுரன் என்னுந் தைத்தியனைத் தலைவனைச் சிவகணங்களுடன் எங்குஞ்சென்றுதேவர்

கள் செய்கைகளைப் பார்த்துவரும்படி ஆஞ்ஞாபித்தனர். அவ்வாறு எங்கும் பார்த்துவருகிற அற்புதாக்ஷன் பிரதோஷகாலத்தில் வைகுண்டத்தில் விஷ்ணு மனுஷரூபியாய் இலக்குமியைப் புணர்ந்துகொண்டிருந்ததைக்கண்டு மிக்ககோபங்கொண்டும் நந்திதேவராஞ்ஞை பூர்த்துவரும்படியே ஆதலால் அவ்விஷ்ணுவை யொன்றுஞ்செய்யாமல் கயிலையில்வந்துதெரிவித்தான். அதுகேட்ட நந்திதேவர், அவ்விஷ்ணு, தன்னைவசப்படுத்தி அதிகரித்தெழுந்த அடங்காதபெருங்காமத்தால் மனுஷரூபியாய்ப் பிரதோஷகாலத்தில் கலவிசெய்து பிறர்பார்க்கும்போதும் எழும்பாமலழுந்திக்கிடந்த பெரும்பாதகத்தால் அவன் அப்பொழுதுகொண்ட மனுஷரூபனாய்ப் பூமியிற்பிறந்து தன்மனைவியை ராக்ஷதன் கொண்டுபோகவருந்தியலையக்கடவனென்றுசபித்தனர். இதனை,

(சிவரகசியம் (௯) அம்சம் (௨) காண்டம்(௪௬.)அத்தியாயம்)

மூன்முகூர்த்தனுமையாள்கேள்வன், றனைப்பணிந்த வாரத்தினில்
வைகுண்டலோகந்தனக்கரசாம் பாக்கியத்துட் சார்ந்துற்றனல்.
மற்றவன்றான் பிரதோட காலந் தன்னின் மானுடரூ பங்கொண்
டுமாமா தோடும், பொற்றடந்தோளவட னங்கண் ஞெமுங்கப் புல்
லிப்புணர்ந்துற்றான் சிவபூசை புரிய கில்லா, னுற்றதனை நந்திசன்க
ணங்கள் கண்டே யுயர்கயிலை வரைச்சென்று ரைவர்க்கட் கெல்லாம்,
கொற்றவனு மவன்றனையே பரமன் றோயிற் கோபுரவா யிலிற்க
ண்டார் குறைந்து தாழ்ந்தார்.

கணங்குகணங் களைநந்தி தேவர் நோக்கி மற்றுநீ ரெவ்வுலகிற்
போயவந்துறநீ, ரிணங்குறமெவ் வுலகத்த டம்பிற் றேவர் யாவரவர் யாதுசெய்துற் றார்க ளென்னக், குணங்கொளற்பு தாக்கன்றன் வணங்கி நின்று கூறுவா னடியனெவ் வுலகுஞ்சென்று கணங்கொளுந்தே வர்கள்புரி சரிதமெல்லாங் கண்டுவரப் பணித்தனையேற் கடவுளேயே.

அந்தந்த வுலகுதொறுஞ் சென்று பார்த்தே னச்சதனையன்றி மற்றைத் தேவ ரெல்லார், தந்தமுறை தவறிலார் பரமன் பூசை தனிற்பிரிய மாயிருந்தார் வைகுண் டத்தே, வந்தனைப்போதுபிர தோட காலம் வந்ததுகோ விந்தனெந்தை பூசை யாற்றான்,

மூர்த்திமா னுடல்வடிவாய் விந்தை யோடு யோகமுற்று கந்தமுள கண்டேன் யானே.

அவனை நீ யாவனடா வென்று கேட்டே னம்புயப்பெண் ணைத் தழுவ னீங்க கில்லா, னெவனமா துடன்கூடி யிசைசை யின்றி யென்னை நீ யாவனடா வென்று கேட்டான், கவன்முறு மிவன்றா ர்த்த னென்று கண்டேன் கருத்திலவன் றனைத்தள்ள வல்லே னெம்மான், சிவனருள்சே ருனதாளை குறித்து மீண்டேன் றேவ ரில் தொருபுதுமை யவன்பாற் கண்டேன்.

என்னையே யிவ்வாறு புரியு மன்னோற் கினிமேல்வந் திடுங்கதி தா னேதோ வீது, தன்னையே யெனக்கறிய வியம்பா யென்று சா ற்றுமற்பு தாக்கனைப்பார்த் துரைப்பா னந்தி, யன்னவன்றான் பூலோகந் தன்னின் மிக்க வயோத்திநகர்த் தசரதனென் றொரு மரண்மை,மன்னவன்றன் மைந்தனா யிராம னாகி வந்து பிறந் திடக்கடவ னருமன்றே.

ஆங்கவன்றன் மனைவிதனை யரக்கர் வேந்த னடவிபுகுந்தே கொடுபோந் திடவ வன்று, னேங்கியே யலைவன்.என்னுமுண்மை யாற்காண்க.

பின்னும்அவ்விஷ்ணு வைகுண்டத்தில் பிரதோஷகாலத்தில் இலக்குமியைப் புணர்ந்துகொண்டிருக்குஞ் சமயம், அங்குவந்த பிருகுமுனிவரை வாயிலிலிருந்தகருடன் அதிபரிசுத்தமுனிவரே உள்ளேவிஷ்ணு இலக்குமியைப் புணர்ந்துகொண்டிருப்பதால் அங்கேதாங்கள் போவதுஞாயமாகுமா என்றதுகேட்டமுனிவர் சிரிப்பக்கருடன் சாம்பராகஅவர் உட்செல்லும்போது விஷ்ணு இலக்குமியைப் புணருமின்பம்முற்றுப் பெறுதமனத்துட அம் முனிவரை இங்குவாராதொழிக என்னுங் குறிப்பினால் கைநீட்டி விலக்கச், சிவதெரிசனபூசாதிக்குரிய இப்புண்ணியகாலத்தில் அறி வினருஞ்செய்யாத அநுசிதகாரியஞ் செய்தனையென்றுகூறி இப் பிரதோஷகாலத்தில் உன்னைத்தரிசிப்பவரும் உனது நாமபசனை செய்பவரும் கொடியநரகடைவரென்று சபித்துச் சென்றார் அப் போது அவ்விஷ்ணுவைப் பார்த்ததோஷத்தைக் சிவதெரிசனத் தால் நீக்கிக்கொண்டார். இதனை,

(வைராக்கியம் இல்லெண்டிவடைபாலன் முத்திபெற்ற சருக்கம்.)

முன்ன ரோர்குசிவபத்தனும்பிருகுவென்னு, மாதவர்நீதி புலம்பெண்குஞ்செல்வான் வைகுண்டலோகமதில்வாழ்ந்திருந்தான்.

மாயனூர் கோயின்மணி வாயி றன்னில் வந்தானைத் திபில்வபின வேயன் கண்டான், அப்பனு முனிவதிரு வுடன்மாஞ் மாலைச் சர்தனி லைகள்புரிவா னுங்குத் தன்னன், ஞாயமா லென்புகின்றான் வார்த்தை கேட்டு ஞானமா தவன்பிருகு ன்னைதான் கொண்டா, ஞயதோர் தடைசொல்புள்ளின் வேநகைச்சாம்ப ராக்கினு னுட்புகுந்தா னரிலைக் கண்டான்,

முனிமுனிவி னேடுறமப் போது மாயன் மொய்குழலாளின்பமன் முற்று முன்னங், தனியெழுந்து மண்மாய்ச் சைகொடங்குச் சார்ந்திட லெனவுள்ளக்குந் தன்மை கண்டா, னியிய சிவ பூசைசெயும் பிரதோ டத்தி னிப்போதின் மாதரா லின்பஞ் செய்வாய், துனியிழைக்கு முன்னுடைய மோகந் தன்னைச் சுட வேண்டா வோவெனவிட் டேரஞ் சொல்வான்.

பிரதோட வேளையிற்பெண் கொடியைச் சேரும் பேதையர்க ளுனைப்போல்யாங் கண்டிலோமா, லரனுடல் புரிதரும்வேவளை தன்னி லரிவையர்க ளுடன்புணர்ந்த லரிய துன்பம், வருமேயென் பதுனை மறந்து னாயோ மற்றுனக்கிப் புத்தி வந்ததேது சொல்வாய், திருமேவு வேராநதிப் போது தன்னிற் சிவபூசை தனிற்காலம் போக்கு வாரோ.

என்னுரு மினியவந்த வேளை தன்னிலேசித்தையைப் புணர்ந்தோ ருனக்கிப் புத்தி,சொன்னாரா ருன்மத்த முண்டோ வென்று தூயமா தவன்றன்மா தவனை நோக்கிப், பன்னுரும் பிரதோடந் தனிலென் னுமம் பகர்களுமோர் தெளிந்தோர் பரவல் செய்தோர், துன்னுத நிரயத்திற் புகுவாரென்று துர்ப்போதத் தூற்றுமாறு. சொல்லிப் போனான்.

தெரிசனஞ்செய் பர்வமது நிரக் காசித் திருக்கோர் தனிற்சென்றான் கண்ட போதிற், கரியவனைப் பிரதோட காலந் தன்னிற் கண்டதுன்ப மொழிந்திஞ்பது கலநதான். என்னும் உண்மை வாக்கியங்களாற்காண்க.

விஷ்ணு அம்பரீஷன்மகள் ஸ்ரீமதிமேல் ஆசைமிகுதியால் முன்னமே சுயம்வரத்தில் அழைக்கப்பட்டிருந்த பருவதன் நாரதன் என்னுந் தமது அடியார்களைக் குரங்குகளாகவுந் தன்னைச் சுந்தரகுமாரனாகவுங் காணச்செய்து, அவளை மறைவாகத்தூக்கிச் சென்று புணர்ந்தின்புறுதல்தெரிந்த அவ்விருவரும் இவ்வஞ்சனை செய்யலாமா என்றுகேட்ப, அந்தோ நான் இச்செயலினைக்கவு மில்லையே என்றுபொய்கூறினர். உடனே அவ்விருவரும் இவ்வஞ் சகனை வழிபடுவதுதீமையேயென்று விலகிச்சிவபிரானையேவழிபட் டுப் பெண்ணாசைமுதலிய குற்றம்நீங்கிஉய்ந்தார்கள். இதனை,

(இலிங்கபுராணம் உத்தரகாண்டம் (௬—வது) அத்தியாயம்)

குரங்க தாக்கிமற் றெங்களைக்கொடியுரை மருங்குல்
இரங்கு மேகலை யேழையைக் கொணர்ந்திவண் வைகி
விரும்பு மாறெவ னென்னலும் விழுமணி கொழிக்குந்
தரங்க வாரிதிப் பள்ளியா னவர்க்கிது சாற்றும்
உரைத்தமாற்றநம் முளத்தினு முணர்ந்திலே மென்ன,
இன்றுதொட்டுநா மாமையிக் கியற்றிடு மிவனைச்
சென்று போற்றுத லிதென வொழிந்துதேன் பிலிற்றுங்
கொன்றைவேணியன் குரைகழற் கன்புபூண் டுயர்ந்தே
யன்று மாதவ ரிருவரு மாசற வுறைந்தார்.

என்னும் உண்மையாற் காண்க. இப்படியே விஷ்ணு மாதராசைமயக்கமிகையால் நீதிகடந்து புரிந்தவஞ்சச்செயல்கள் பற் பலஉள்ளன. விரிவுநோக்கிவிடுத்தாம். இவ்வாறு விஷ்ணுசெய்த மாதர்கலவிகளை நூற்பிரமாணத்துடன் கூறுதற்கு எதிரியாகச் சிவன்கைலையில் எழுநாள் இடையறாமல் உமையைப்புணர்ந்து கொண்டிருந்தானென்று கூறுகின்றனர். இதனுண்மை மேற்கூ றினம், அன்றியும் சிவகுமாரர்கள் பிரணவசித்திரம் நெற்றிக்கண் முதலியவற்றில்தோன்றியமேன்மையும், விஷ்ணுகுமாரர்கள் சிவ ரேதசுமூலம் விஷ்ணுவினிடம் தோன்றிய கீழ்மையும், கணேசர் முதலியர் சிவாலயத்தில் உரியராய் வசித்தலும், பிரமாமுதலியர் அங்குவசிக்கப்பெறாமையுமுதலியஉண்மைநோக்கியுந்தெளியலாம்

வரம்புபடாமற்கிடந்த வேதங்களைத் திருவருளால் வரம்பு செய்தவரும் (கஅ)புராணங்களையுஞ் சனற்குமாரகுருமுகமாயுணர்ந்து சூதர்க்கு அறிவித்தவருமாகியவியாசபகவான், தாமசகுணாதிக்கத்தாலோ; தண்டிக்கப்பட்டாவது சிவபரத்துவம் விளக்குங் கருத்தாலோ, காசியிலே விசுவேசசந்நிதியிலே நாராயணனே பரமென்று கையெடுத்துக்கூற, உடனே திருநந்திதேவர் உங்காரத் தொனியால் அக்கையும் நாக்கும் அசைக்கமுடியாமல்வருந்துஞ் சமயம், நாராயணன்வந்து அறிவில்லாதவனே என்னைப் பரமென்றசிவத்துரோகத்தால் கையும் நாக்கும் தம்பிக்கப்பட்டாய் சிவனையேபரமென்றுள்ளபடி துதித்துய்வாயென்று செவியில் ஸ்ரீபஞ்சாக்ஷரங்கூற, அப்படியே துதித்துவாழ்ந்தனர். இதனை,

(கந்தபுராணம்)

ஐயிரு புராணநூலமலற் கோதியுஞ்
செய்யபன் மறைகளுந் தெரிந்த மாயையான்
மெய்யறு சூழ்புகல் வியாத னீட்டிய
கையடு நந்திதன் கழல்கள் போற்றுவாம்

(காசிகாண்டம்)

எல்லிடையி லுள்ளோருங் கேண்மின்க ளிறையாவான்
புண்டரிகக் கண்ணனெனக் கையெடுத்துப் புகன்றனனால்
அருவுருவா யேகமா யனைத்தாய் நிறைந்தருளும்
பொருவரிய சிவனல்லாற் புண்டரிகக் கண்ணனே
பிரமமென மயக்குற்றுப் பிதற்றுகின்ற பிழையதனால்
உரைபயில்நாக் கையசையா தூமனென முனியிருந்தான்
அத்தலையிற் பிழைகூறி யணுரெய்து முனிவரன்பால்
மைத்தசெழும் புயலனைய மணிவண்ணன் வந்தெய்திப்
பித்தரின்யா னிறையென்னப் பிதற்றியதென் மதியிலோய்
எத்திறத்தா லெனையாளு மீசனைநீ மறந்தனையோ
முக்கண்ணன் சேவடியில் விழிமுளரி பெய்தன்றோ
சக்கரமு மலர்மகளுந் தணப்பருஞ்செல் வமுமடைந்தேன்
அக்கடவு ளருள்சிறிது மடையாரேற் றம்பரத்தில்
எக்கடவு ளேவென்றுங் கேமாப்புற் றிருக்குமால்.

ஊனமுறு சடமொருவ னுஞற்றினன்றி யாடாதால்
யாதுலக மளிப்பதுவு நான்முகத்தோ னியற்றுவது
ஆனிவருஞ் செஞ்சடையோ னூட்டுவித்த லாமதனால்
வானவர்தஞ் செயலெல்லா மரப்பாவைக் கூத்தாமால.
நண்ணிலவு மதிக்கண்ணித் தாழ்சடையோன் றாள்போற்றும்
புண்ணியநற் சிவகணங்கள் பூங்கழலிற் கிடப்பதெல்லாம்
எண்ணிறந்த வரிபிரமர் தலையன்றே வெனிற் சிறிதும்
நண்ணறிவி லாயெனையேன் பிரமமென நுவல்கின்றாய்
மின்வயிற்சேர் கொடியபிழை மொழிசெவியி னேர்படலும்
என்வயிற்றி னெரிதவழ வுளம்வெருவி யீண்டடைந்தேன்
பொன்னசலச் சிலைகுனித்துப் புரமூன்று மழலூட்டும்
முன்னவனை யானறியா முழுமுதலைப் போற்றென்றான்.
அன்னன்மால் விடையூர்ந்த வரும்பொருளைப் பழிச்சுதற்கு
பண்ணிடந்தோ யெனதுநா வழங்கவருள் வழங்கென்று
கண்ணினால் முனியுரைப்பக் கண்ணுதல்போர் செவியினிசைத்
தொண்ணிறநே மியங்கடவுள் விசும்பினெளித் தேகினனால்

நீறணிந்த செம்மேனி நீலகண்ட னன்றுமங்
கூறியது செவிப்புலத்திற் குறுகுதலு மருமயர்ந்து
தேறிமுதுக் குறைவெய்திச் செழுமறைதேர் வியாதமுனி
யாறணிந்த செஞ்சடையெம் மந்தணனை யேத்துவனால்

என்னும் உண்மையாற்காண்க. இவ்வாறு விஷ்ணுமூர்த்தி நேரேவந்துநானும் பிரமனும் தேவர்யாவரும் சிவனடியார்களே- சிவனொருவனே பசுக்களாகிய எமக்கெல்லார்தலைவனாகிய பசுபதி யென்றுவியாசபகவானுக்குவிளக்கியதுமன்றி அச்னி விந்துமுனி வர்க்குஉபதேசமுடிவில் எனது அடியவர்செருக்கினால் சிவனை வணங்காமல் இகழ்வரேல் மீளாநரகடைவரென்றுகூறினர். இதனை,

(காசிகாண்டம் விந்துமாதவன்றோன்றிய அத்தியாயம்)

அருமறைமுனிவவெம்முடையடியாரெனுமனச்செருக்கினலரனைப்
பரவிடாதிகழ்ந்தோருளப்பிலாக்கொடியபாழ்நரகிடைச்சுழியிருப்
பார். என்றதனாற்காண்க.

சுபனென்னும் அரசன் கோபமிகையால் ததீசிமுனிவரைவச் சிராயுதத்தால் வெட்ட, அதுமுனைமழுங்கி விழக்கண்டு பயந்து விஷ்ணுவை வேண்ட, அவர்வந்து சக்கிராயுதத்தையேவ, அது திரும்பிவிட, முனிவர், இச்சக்கரம் எமது இறைவன் உனக்குத் தந்ததாதலால் என்னை விரோதியாது திரும்பியது. நீ வேறுவிடுக என்றுகூற, விஷ்ணு வேறு ஆயுதங்கள்விடுப்ப, முனிவர்ஒருதருப் பைப்புல்லையேவ, அப்புல் அவைகளைப்பற்றி விழுங்க, அது கண்டு உலகர் பயந்தோட, விஷ்ணு தன்போலக்கோடிவடிவங்களை உண் டாக்கிவிட, முனிவர் கோபத்தால்அவைவெந்துசாம்பராக, விஷ் ணு, மாயையாற்பலஅண்டங்கள்செய்ய, முனிவர், உன்மாயைகள் நம்மால் அழிந்தன. உனக்குஞானக்கண்தருகின்றோம் நமதுமகா மாயைகளைக்காணுகஎன்றுகூறிப்பலமாயைசெய்ய, விஷ்ணு வலி யிழந்து மயங்கிநிற்குஞ்சமயம், பிரமன்வந்து உலகம் அஞ்சுமிந்த யுத்தத்தையொழிகவெனவேண்ட, விஷ்ணு உடனேமுனிவரைவணங் கிச் சென்றனர். அரசனும்வணங்கி முனிவரருள்பெற்றுச் சென்ற னன் இதனை, (இலிங்கபுராணம் ௩௪ ௩௫. அத்தியாயம்)

முடியின் மீதி னுதைப்ப முனிக்கெதிர்
மிடல்கொள் வேதியன் மார்பினில் வெட்டவாய்
மடிய வச்சிர மாநிலம் வீழ்ந்தது
கடலத் தானை யரசன் கலங்கினான்

கலங்கிய அரசன் விஷ்ணுவை வேண்டஅவர்வந்து,

எறிதந்த வாழியெதிர் செல்கில தாகி மீள
மறைதந்த நாவனைத் தென்னுமை வந்தி டாதாற்
கறைதந்த கண்டத்திறை யோன்கதிர் நேமி யீது
மிறநங்கு வெம்படை வேறு விடுத்தி யென்றான்
வானத்தவ ரோடுடன் கூடிய மாயன் விண்ட
தனைக்க செய்யமல ரோன்களை தெய்வ வாளி
கூனுற்ற வரிவில்லின் வரிநாணிற் கொளுவி யேவக்
காணுற்ற தருப்பைமறை யோன்கனன் றேவினானே.
தெய்வா யொழுகக் கனறும்பி கிணங்க மழ்ந்து
பைவாளா ரவொத்தெறி யுற்றபுற் பற்ற லோடு

மைவான்முகில் போலுமம் மாயவ னன்றி யாரு
நையாவொரு வித்திசை நான்கினு நண்ணி னாரே
பொன்னங்கம லங்கம ழுந்தியான் பொங்கி யார்த்துத்
தன்னிற்பொலி வெங்கணைங் சோடி சமைத்து விட்டான்
கன்னற்கு தலைக்கொரு பங்கனைக் காத லாலே
முன்னிக்கன லாவணைய வேவ முனிந்து நின்றான்.

அதுகண்டு மாயோன்பலவண்டங்கள் செய்த லோடு
மதிதங்கு மெய்ம்மைமறை யோன்மிகு மாயை செய்வன்
முதிர்கின்ற வாழித்துயில் வோயவை முன்னி நோக்கக்
கதிர்தங்கு ஞானவிழி தந்தனன் காண்டி யென்றான்.

புரிகின்ற மாயைபல நெஞ்சு புழுங்க நோக்கிக்
கரைகொண்ட வாழித் துயிலண்ணல் கலங்கி நிற்ப
மருவிண்ட வந்தண் கமலத்திறை வந்து நீவிர்
வெருவந்த விந்தச்சமர் விட்டுறை வீர்க ளென்றான்
மலருற்றுறை யந்தணன் வாசகங் கேட்டு மாயோன்
கலைமுற்றுணர் வேதியன் றாளிணை கைகள் கூப்பி
யலைதுற்றிய பாற்கடற் பள்ளிய னங்கு மேவக்
கொலைபற்றிய வேற்சுப னுள்ளங் குழைந்து சென்றான்
சென்றாங்கவன் சேவடித் தாமரை சென்னி சேர்த்தி
நின்றாரருள் செய்தி யென்றேத்தி நிகழ்த்த லோடுங்
குன்றாவரு ளந்தண னின்னருள் கூர்ந்து வேந்தே
பொன்றாத செல்வத்துயர் மாநகர் போதி யென்றான்

என்னுமுண்மையாற் காண்க. இதனால் விஷ்ணுவானவர்சிவ பத்தருக்கு எதிர் நிற்கும் வலியுமிலரென்பது தெளிவாயது.

ஈசனெதிர் நின்றாலு மீசனருள் பெற்றுயர்ந்த
நேசரெதிர் நிற்ப தரிதாமாற்—றேசுவளர்
செங்கதிர்முன் னின்றாலுஞ் செங்கதிர வன்கிரணந்
தங்குமணல் நிற்பரிதே தான் என்றார் பெரியோர்.

திருநந்திதேவர் பிருகுமுனிவர்பிருந்தாதேவிமுதலியர்சாபத் தால்விஷ்ணு,ராமகிருஷ்ணாதியராகப்பிறந்து அப்பலனை அனுபவித்

தலைலோகோபகாரச்செயலாகவுபசரித்துக்கூறுகின்றனர். திருநந்தி சாபவிவரம்முன்காட்டினும். பிருகுமுனிவர்பத்தினிகற்பிற்சிறந்த உத்தமி கெர்ப்பிணி தனக்குமாமியென்பதுநோக்காமல்அம்முனிவரில்லாதசமயம் சக்கரத்தாற்கொன்றவிஷ்ணுவை அவர் இப்பாதகன் அநேகயோனிகளிற்பிறந்துலைகளென்று சபித்தனர். அதனால் வருந்திச் சிவனையடைந்து பூசித்து வேண்டிய அவ்விஷ்ணுவுக் கிரங்கிச்சிவபிரான் பிருகுவைவிளிக்க, அவர்வந்துவணங்கிநிற்பஅன்பனே இவன்செய்ததுபெரும்பாதகமே; ஆயினும பொறுத்துச் சாபம்நீங்குதற்கோருபாயஞ் செய்கஎன்று கூற, முனிவர், அநேகமென்றது மாறிப்பத்துப்பிறப்பாகுக. ஒருபிறப்பில் பத்தினியை இழந்து காட்டிலுலைக. சக்கரம்ஒருமுகூர்த்தநேரம் ஒளிமழுங்கிக் கறையுறுக. என்றுகூறிச்சென்றனர். விஷ்ணு, சிவனை வணங்கி அடியேன் அப்பிறவிகளில் மயங்காமல்அறிவுதந்தருளுக என்று வேண்ட, ஐந்துபிறவிகளில் அனுக்கிரகமும் ஐந்தில் நிக்கிரகமும பெறுக என்றுஅருளினார் இதனை, (சீதலமான்மியம்.)

சிவபுரத்தமல னுள்ளஞ் செய்தனு மனத்திற் போந்து, தவ
நிறை பிருகு வெம்மான் சரண்முடிக் கொண்டுதாழ்ந்து, சிறியனே
னை ...சிந்தைசெய் தருளிற்றென்கொ றெரித்தருள் பெருமவென்
றான், நிறைவுறு முனிவ கேட்டி

பவவினை புரிந்து வருந்துமால் சாபம் பாறுமோர் பரிசுரை
எனவப், பவனருள் சிரமேற் கொடுமுனி யுரைக்கும் பங்கயக்கண்
ணநீயவனில், பவமென லகன்றி ரைந்துமட் டடைந்தப் பவங்க
ளுட் டசரதன் மகவாம், பவமதின் மனையை யிழந்து சின்னாளிப்
பாரினிற்கானிடைப்பயில்க.

சக்கர நீயா தவகுலத் துதிக்குஞ் சனனத்தோர்முகூர்த்தமா
மளவு, மிக்கபே ரொளிபோய்க் கறையுரு வடைந்து விளம்பிய
சாபமேற் றொழிகென் , றக்கட வுண்மா முனிசெல வரன்று
ளரிபணிந் தமலனே யடியேன், புக்குறை தருமப் பிறப்பிடை மய
ங்காப்போதமீந் தருள்கெனப் புகன்றான்.

திருமறுமார்பன் பணிந்துரை வாய்மை திருச்செவிமடுத்தர
னருளும், அந்நின தொருபான் பிறப்பினு ளைந்தே யனுக்கிர கம்

பெறற்கவை, உரியவிக் கிரகம் பெறுவமற் றைந்து மூவற்றினு மீற்றினியருள்வோம், பரிவுறேல் விழைந்த வாறுமென் ஞானம் பாலித்துன்பதம் புகவளித்தும். என்னுமுண்மையாற் காண்க.

அனுக்கிரகம் பெறுதற்குரியவென்ற ஐந்து பிறப்புள்ளும், ராமர் மாயமான் என்று அறியாதுமயங்கியதும், சீதைபிரிவால் வருந்தியதும், அனுமான் சுக்கிரீவன் முதலியதுணை வேண்டியதும் சீதையிருக்குமிடந்தெரியாது தேடியதும், வாலிசுக்கிரீவர்களின்வேற்றுமைதெரியாமல்சுக்கிரீவனுக்கு அடையாளஞ்சேர்த்தி வஞ்சமாகமறைந்துநின்றுவாலியைக்கொன்றதும், நாகாஸ்திரத்தால் கட்டுண்டு அறிவுமயங்கிக்கிடந்து அனுமான்உதவியால்தெளிந்தும், மாயாசீதையை வெட்டக்கண்டுபுலம்பியதும், அகஸ்தியரை வணங்கி ஆதித்தஇருதயம் சிவகீதைமுதலிய உபதேசமும் ஆயுதாதிகளும் பெற்றதும், பலதலங்களிற் சிவனைப்பூசித்து வரம் பெற்றதும், அவ்வலியினாலேயே ராவணனைக்கொன்றதும், அப்பிரமகத்தி சிவலிங்கபூசையால் நீங்கியதும், முடிவில்ராமரை யமன் வந்து அழைத்ததும், துருவாசரைத் தடுக்கமுடியாமல் இலக்குமணன்சரயுநதியில் வீழ்ந்து உயிர்நீங்க அதற்குவருந்தித் தாமும் சென்றும் மற்றெல்லாரும் அந்நதியில்வீழ, யமன்அழைத்தபடிவைகுண்டஞ் சென்றது முதலியவைகள் அவர் மலசகிதசீவரேயென்பதை நன்கு விளக்கும். இவைகள் வடமொழிதென்மொழிராமாயணம் இரகுவம்சம் முதலியநூல்களிற்கூறப்பட்டனவே. இவற்றைமனுஷ்யரூபியாய்வந்ததற்கியையச்செய்த நாடகமென்பர். மனைவியைராக்ஷதன் கவர்ந்ததும், வருந்தியதும், வாலியைமுன்னின்று கொல்லமுடியாமல் மறைந்துநின்றுகொன்றதும், அகஸ்தியரைவணங்கி உபதேசம்முதலியபெற்றதும், சிவனைப்பூசித்துவரம்பெற்றதும், இவை போன்றபிறவும் நாடகந்தானோ,

இனிக் கிருஷ்ணர்செயல்களைவிரிப்பிற்பெருகும். ராமரால் வஞ்சித்துக்கொல்லப்பட்டவாலியேவேடனாய்ப்பிறந்து கிருஷ்ணர் காலில் எய்த அம்பினால் அவர் இறக்கவென்பது பாரதத்துள்ளதே. இதனை இருப்புலக்கையின் துணுக்கைத்தன் அம்புக்குமுள்ளாக வைத்த ஜான் என்னும் வேடன்தூரத்திலிருந்து சுவாமி

திருவடியை ஒருமிருகமாகநினைந்துத்திருத்தாளின் அடிப்புறத்தில் எய்தான் என்று விஷ்ணுபுராணம் (௫ம் அம்ஸத்தில் ௩௭ம் அத்தியாயம் விளக்குகின்றது. பரசுராமர் அநீதியாகக்கார்த்த வீரியன் முதலிய அரசர்களைக்கொன்றபாதகம் நீங்கத்தீர்த்தயாத்திரை செய்ததைப் பாகவதங்கூறுகின்றது.

பலராமர் அகந்தையால் சூதமுனிவரைக்கொன்றபாதகம் நீங்கயாத்திரைசெய்ததும் அதுவேகூறும். வாமனர் தன்னைவழிபடுகின்ற மாபலியிடம்செய்த வஞ்சனை பிரசித்தமே. அவர் உடம்பிற்றோலைச் சட்டையாகத்தரித்தது சட்டைநாதர்வடிவும் விளக்கும். இனிப் பன்றி, ஆமை, மீன், நரசிங்கமானபோது சிவானுக்கிரகத்தால் பகைவென்றதை மறந்து அகந்தைவெறிகொண்டு உலகுக்குஅப்பகைவர்செய்தஇடரினும் பேரிடர்செய்ய, அதனைச் சகிக்கமாட்டாமல்தேவர்கள் சிவபிரானைவணங்கிவேண்ட. அவர் விநாயகர் சுப்பிரமணியர் வீரபத்திரரைஏவி அப்பன்றிக்கொம்பு ஆமையோடு மீனக்கண் நரசிங்கத்தோலை அடையாளமாகத்தரித்தருளினர்-

இவ்வாறு விஷ்ணு அகந்தையுற்றகாலங்களிலும் ஒதுக்கிவிடாமற் சிவபிரான் அதனைநீக்கி அவர் சுத்தராய்உய்யும்படி அவர் அவயவங்களையுந்தரித்து மேலும் அருள்செய்துவரும் நன்றிமறவாது பற்பலசிவஸ்தலங்களில்விபூதிருத்திராக்ஷதாரணராய்ப்பூசித்துய்ந்தனரென்னும்உண்மையை அத்தலங்களும் புராணங்களும் சுருதியாதிநூல்களும் விளக்குதலால், முற்காலத்துள்ளஉத்தமவைஷ்ணவர்கள் தாங்களும்விபூதிதரித்துவிஷ்ணுமூர்த்திக்குந்தரித்து ஆலயாதிகளில் வழிபட்டுவந்தனர். இதுமுற்காட்டிய பிரமாணவிளக்கமே. ராமானுஜர்வழிப்பட்ட இக்காலவைஷ்ணவர்கள் தாங்களுந்தரியாது விஷ்ணுமூர்த்திகளுக்குந்தரியாதொழிந்ததுமன்றித்தாங்களும்ஊர்த்துவபுண்டரமண்ணிட்டு விஷ்ணுமூர்த்திகளையுந்தம்போலச்செய்கின்றனர். அவருள்ளேதென்கலை வடகலைச் சண்டையால்மூர்த்திகளில்கம்மியரால் அமைக்கப்பட்டபுண்டரங்களை அர்த்திருல் தம்பக்ஷத்துக்கிணங்க மாற்றுகின்றனர். அம்மூர்த்திகளைச்செம்பென்றுங்கல்லென்றுந்நினைத்தே அக்கொடுந்தொ

யூில்களை அப்பாதகர்கள் செய்து விபூதிருத்திராக்ஷங்களை மறைக்கின்றனர். மறைத்தாலும் முற்காலத்து உத்தமவைஷ்ணவர்கள் விஷ்ணுமூர்த்திக்குவிபூதிருத்திராக்ஷம் தரித்துப்பூசித்துவந்தவியமப்படி திருக்கண்ணபுரத்திலே சவுரிராஜப்பெருமாளுக்கு ஒரு திருநாளிலே விபூதிருத்திராக்ஷந்தரித்து அலங்கரித்துவருதலை யாவருங் காணலாம்.

இனி, வைஷ்ணவர்கள் ருத்திரன்தாமசகுணத்தனென்று கூறுவதைமறுத்து, அக்குணம் செயல்பற்றிமேற்கொண்ட புறக்குணமே, அதுவுங்குணருத்திரரிடத்தன்றிக் குணாதீதபரசிவனிடத்தின்றெனக்கூறுதற்கு எதிரியாக, விஷ்ணு சிவனைப்பூசித்தது முதலியவெல்லாம் குணவிஷ்ணு செயலன்றிப்பரவிஷ்ணு செயல்அல்லவென்கின்றனர். இதுவும் எதிர்மொழியன்றிப் பிரமாணமொழியன்று. வேதாதிபொதுநூல்களும் திருவாய்மொழிமுதலிய சிறப்புநூல்களும் விஷ்ணுவை மூவருள் ஒருவனென்றேகூறுகின்றன. வைஷ்ணவர்களும் விஷ்ணுவை(௨௫)வதுதத்துவமாகிய பிரகிருதிமாயாரூபியென்றே கூறுதலாலும்(௨௫)க்குமேல் தத்துவங்கொள்ளாமை அவர்களுக்கின்மையாலும் அவர்கள் கருத்தின்படி அப்பரவிஷ்ணுவும் அவ்விருபத்தைந்துமட்டிலன்றி மேற்செல்லும் வழியிலனென்பதுதெளிவாம். சிவபிரான் அப்பிரகிருதிக்குமேல் அசுத்தமாயை சுத்தமாயைகளும் அவற்றின் விரிந்தனவாகிய(௩௬)தத்துவங்களுங்கடந்து நின்று மூவர்க்கும்மேலாய் விளங்குமுதல்வனென்பதுசுருதிவிளக்கமே. இதனை "மூவராலுமறியொணாமுதலாயவானந்தமூர்த்தியான்,, என்பதுமுதலிய திவ்யசுருதிகளாற்காண்க.

இதுகாறுங்கூறியவாற்றாலும் விரிவுநோக்கிவிடுத்தபலபிரமாணங்களாலும் விஷ்ணு சிவபூஜாதியதிருத்தொண்டுகள் செய்துவருகின்றவரேஎன்பதும், சிவாஞ்ஞையால் வைகுண்டபதம்பெற்றுவாழ்பவரேஎன்பதும், அத்தொண்டு நழுவினால் அத்தலைமையும் நழுவும்என்பதும், அதுஒவ்வொருகால் அகந்தையால் மாறியபோதும் ஒதுக்கிவிடாமல் அருளினால் தண்டித்து அறிவுறுத்தப்பெற்றுத்தன்னிலையிலும் தனது அவதாரநிலையிலும் எப்போதும் விபூதிருத்திராக்ஷதாரணராய்ச் சிவபூஜாதியதிருத்தொண்டுகளையே

காரணம் மூன்று

ஒருகாரியம்வெளிவருதற்கு முதற்காரணம் துணைக்காரணம் நிமித்தகாரணம் மூன்றுவேண்டும். நிமித்தகாரணனாகிய குசவன் முதற்காரணமாகிய மண்ணினின்று துணைக்காரணமாகிய தண்டசக்கராதிகளால் குடமாகியகாரியத்தை உலகர் பொருட்டுத்தோற்றுவித்தல்போல, நிமித்தகாரணமாகிய பிரமம முதற்காரணமாகியமாயையினின்று துணைக்காரணமாகிய சக்தியால் உலகமாகிய காரியத்தைச் சீவர்கள்பொருட்டுத் தோற்றுவிக்கின்றதென்பதே சாஸ்திரசம்மதம். இவ்வாறு உலகத்துக்கு முதற்காரணம் மாயையே என்பதை, (மிருகேந்திராகமம மாயாப்பிரகரணம்.)

" [illegible]
[illegible] "

இ—ள் உலகம் காரியரூபமாகக்காணப்படுகிறதாதலினாலே அதனைத் தோற்றுவிக்கின்ற நிமித்தகாரணனாகியகர்த்தா ஒருவனுண்டென்று எப்படி அநுமானத்தால் நிச்சயமாகின்றதோ அது போல அந்தஉலகத்துக்கு முதற்காரணமாகிய மாயையுமுண்டென்பது நிச்சயமே. அது நூலில்லாமல் வஸ்திரம்தோன்றாதவாறு போலாம் என்பதனாலும்,

" [illegible]
[illegible] "

இ—ள் அந்தமாயையானது ஏகமாய் சிவமல்லாததாய் ஜகத்துக்கு முதற்காரணமாய்ப் பலவேறுசக்திகளையுடையதாய்ச் சகசாரிகளாகியகர்மங்களின் அதிகாரமுடிவுவரை சீவர்களை மறைப்பதாய் வியாபகமாய் நாசமில்லாததாயுள்ளதென்பதனாலும்,

(பௌஷ்கராகமம் பிந்துபடலம்.)

" [illegible]
[illegible] "

இ—ள் விகாரப்படாததாய்ச்சித்தாயிருப்பதால் சிவமாவது சிற்சத்தியாவது ஜடமாகியஉலகத்துக்கு முதற்காரணமாகாது. சித்துக்கு (ஒருகாலத்தும்) விகாரமுண்டாவதில்லை. அசித்துக்கே

விகாரமுண்டு. அசித்தாகியமாயையே அசித்தாகிய ... முதற்காரணமாகுமென்பதனுலும், ஜடமாகியவஸ்திரத்துக்கு ஜடமாகியநூலே முதற்காரணமாதல்போல ஜடமாகியஉலகத்துக்கு ஜடமாகியமாயையே முதற்காரணம் என்பது தெளிவாயது. ஆகவே பிரமம் நிமித்தகாரணமேயென்பதும் விளக்கமே. இவ்வுண்மையை கைவல்லியம் ''எக்குணங்களும்பற்றுதோனிமித்தகாரணனுமீசன்'' என்று தெளிவிக்கின்றது. ஈசன் நிமித்தகாரணனென்ற இதனுல் மாயை முதற்காரணமென்பது சொல்லாமேயமையும்.

ஸ்ரீமந்நடராஜப்பெருமானுலுஞ் சிட்டுக்களியனுப்பிப்புகழ்ந்து பாராட்டப்பெற்ற உமாபதிசிவாசாரியர், மாயாவாதிகளின்கொள்கைகளைவிளக்குமிடத்து. ''அகமேபிரமமாயினனெனவுறிந்து ......மாயாவாதிவகுத்துரைத்தனனே' என்று விளக்கியருளினர். இதனுலும் நானே பிரமமென்பவனெவனே அவனே மாயாவாதியென்பது வெள்ளிடைமலைபோல விளங்குகின்றது. ஆதலால் அவர்களே மாயாவாதிகளென்பது தெளிக. இதனையே ''மிண்டிய மாயாவாதமென்னுஞ் சண்டமாருதஞ் சுழித்தடித்தார்த்து'' என்று ஸ்ரீமந்மணிவாசகசுருதியும் விளக்கியிருக்கியது.

(மாயாவாதிகள்கூறும் சிலம்பிபுவமைபொருந்தாமை)

இனி அவர்கள் சித்தாகியசிலம்பிப்பூச்சியில் சடமாகியநூல் தோன்றுதல்போலச், சித்தாகியபிரமத்தில ஜடமாகியஉலகந்தோன்றுமென்பர். சிலம்பியின்உயிர்தான் சித்து உடம்பு சடமே; சடமாகிய நூல் சடமாகியஉடம்பினின்றுதான் வருகின்றது ஆதலால் அந்நூலுக்கு முதற்காரணம அவ்வுடம்பேயன்றிஉயிரன்று. ஆதலால் அவ்வுவமை பழுதென்க. அப்படியானல் உயிர்நீங்கிய காலத்தும் அவ்வுடம்பினின்று நூல்வரவேண்டும்; வாராமையால் அவ்வுடம்பிற்றன் நூல்வருமென்பது பொருந்துமோவெனில்? சடமாகியஉடம்பு தானேநூலைவெளிப்படுத்தாது. சித்தாகியஉயிர் நிமித்தகாரணமாயிருந்து வெளிப்படுத்துமென்க. இதனைச், சடமாகிய மண் தானே குடமாய்வாராமையும் நிமித்தகாரணனுகிய குயவனுலேயே வெளிவருதலும் நோக்கித் தெளிக.

இது யாவருமுணரக்கூடியதே. இதனை ஆபத்துச்சமயத்தில் எதிரிகளை வெல்லுதற்குரிய அரியஆயுதம்போலக் கொண்டபடியால் இவ்வுவமையை நீலகண்டசிவாசாரியரிடம் சங்கராசாரியர் உபயோகித்துவென்றதாகச் சங்கரவிஜயத்தில் எழுதிவைத்துமகிழ்கின்றார்கள், விஷ்ணு ஆபத்துக்குத்துணையெனப்பெற்ற சக்கராயுதம் தாரகனிடத்துபயோகிக்கப்பட்டு அவனுக்கு அபகாரமாய் அவன்மார்பிற்பதக்கமென உபகாரமாயமைந்ததுபோல, இவ்வுவமை அவர்களால் எம்மவர்களிடம் உபயோகிக்கப்பட்டு அவர்களுக்கு அபகாரமாய் எமக்கே உபகாரமாய்ப் பிரமம் நிமித்தகாரணமே; மாயை முதற்காரணமேஎன்பதற்கே பிரமாணமாயது காண்க. (பிரமம் நிமித்தகாரணமென்பதில் வரும் ஆக்ஷேபத்துக்குச் சமாதானம்.)

ஆனால் சைவர்களாகிய நீங்கள் உலகெலாம் சிவனிடத்தில் ஒடுங்கித்தோன்றுவதாக "அந்தம் ஆதி" என்று கூறுதலால் முதற்காரணம் பிரமம் என்பது உமக்குச் சம்மதமன்றோவெனில்? அதுவும் உற்றுநோக்காதகுறையேயாம். அஃதாவது கிழங்கில் தோன்றும் தாமரையை அக்கிழங்குக்குஆதாரமாயுள்ள சேற்றில் தோன்றியதென்னும் பொருள்பட "பங்கஜம்" என்பதுபோல, (பங்கம்—சேறு. ஜம்—தோன்றுவது.) மாயையிற்றோன்றுமுலகைச் சிவனிடம் தோன்றியதென்பது அம்மாயைக்கு ஆதாரமாகிய சிவசத்தியொற்றுமைபற்றியன்றி வேறில்லை. இதனை, "வித்துண்டா மூலமுளைத்தவா தாரகமாம், அத்தன்றா ணிற்ற லவர்வினையால்—வித்தகமாம்........மண்போற்குளிர்ந்து" என்ற சிவஞானபோதத்தாற்காண்க. இதனில்; உலகமுதற்காரணமாயையும் அதில்தோன்றும் உலகமும், வித்தும் அதில்தோன்றும்முளையும்போலுள்ளன. அந்தவிதை தானாகமுளையை வெளிப்படுத்தமுடியாது; தனக்கு ஆதாரமாகிய பூமியிற்கிடந்து பூமிகுளிர்ந்தபோது தான் வெளிப்படுத்தும். அதுபோல, மாயையும் தானாக உலகத்தைவெளிப்படுத்தமுடியாது; தனக்கு ஆதாரமாகிய சிவசத்தியிற்கிடந்து அச்சத்தி உலகந்தோன்றுகவென்று நினைத்தபொழுதுதான் உலகை (தநுகரணபுவனபோகங்களை) சீவர்களின்வினைக்கீடாக, அவ்வவ்வியல்புக்குவிரோதமில்லாமல் வெளியிட்டுக்கொடுக்கின்றதா

ரியமுள்ளதென்பது விளக்கமாம். இதனை உற்றுநோக்கும்போது இந்நிலத்தில் இப்பயிர்தோன்றியதென்றொருவர் கூறினால், அப்பயிர் அந்நிலத்திற்கிடக்கும் விதையிற்றோன்றியதென்பதே உண்மையாதல்போலப், பிரமத்தில் உலகந்தோன்றியதென்னுமிடத்தும் அப்பிரமத்தில் அபின்னமாயுள்ள சத்தியை ஆதாரமாகக்கொண்டு கிடக்கும் மாயையிற்றோன்றியதென்னும் உண்மை தெளிவாகும். ஆனால் பிரமத்தில் உலகந்தோன்றுமென்பதூஉம் விரோதமில்லையேயெனின்? அவர்கள் மேற்கூறியபடி ஆதாரஆதேயஒற்றுமைபற்றியேகூறியதென்றுகொள்ளாமல் சித்தாகிய பிரமமே ஜடமாகிய உலகமாயதன்றி உலகமென்றொருபொருளேயில்லை; சீவர்களுமில்லை; எல்லாம் பொய்யே; பிரமத்தில் உலகத்தோற்றம் பிராந்தியே; அஃதாவது அறிவில்லாருடையமயக்கமே என்று முடிக்கின்றாராதலின் அது விரோதமேயென்க.

பிரமந்தவிர யாதுமில்லையென்பது யுத்திக்கும் பொருந்தாமை.)

இனி, மாயாவாதிகள் பிரமந்தவிர யாதுமில்லையென்று கூறுமிடத்து அங்ஙனங்கூறுகின்றவர் யாரெனில்? அவரும் பிரமமேயென்பாராயின், அது பிரமங்கூறினதாகுமாதலால், என்னைத்தவிர யாதுமில்லையென்று கூறவேண்டும். அதுவும் தானேசொல்லிக்கொள்ளாது. பிறரிருந்தாற்றான் அவர்க்குச் சொன்னதாகப்பொருத்தமாகும். இதனாலேயே பிறபொருளுமுண்டென்பது நிச்சயமாகும்போது பிரமந்தவிர யாதுமில்லையென்று பிறர் கூறுமிடத்து அவ்வாறு கூறிய பிறருமுண்டென்பதில் என்ன சந்தேகம்?

பிரமம் என்னுஞ் சொல் பெரிது,பெரிதாக்குவது என்னும் இருபொருளுந்தரும். இவற்றிற் பெரிதென்பதை அவ்வேதமே யாவராலுந் தியானிக்கத்தக்கவன் சிவன் ஒருவனே எனவிளக்குஞ் சிவஏகோதியேய: என்பதுமுதலியவற்றாலும், பெரிதாக்குவதென்பதைச் சிவத்தைச்செய்வோன்(பெரிதாக்குபவன்) எனவிளக்கும் சிவங்கர என்பது முதலியவற்றாலும் தெளிவிக்கின்றது. இதனை, அவ்வேதசாரதிராவிடசுருதி "சிவனெனுநாமந்தனக்கேயுடைய செம்மேனியெம்மான்" "சிவமாக்கியெனையாண்ட" என்பனவாதியாற்செவ்வேகாணலாம். இதனால் பிரமம்,பெரிதென்பதும் பெரி

தாக்குவதென்பதும் தெளிவாயது. ஆகவே அப்பிரமத்துக்கு வேறு பொருளிருந்தாற்றான் அதற்குப் பெரிதென்பது பொருந்தும். ஆதலால். எதற்குப்பெரிதெனில்? அப்பிரமவியாபகத்துள் வியாப்பியமாயடங்கிநிற்கும் பாசபந்தபசுக்களுக்குப் பெரிதென்பதாம். ஆகவே பிரமத்தைத்தவிர வேறுபொருளுண்டென்பது தெளிவாயது. வேறில்லையானால், பிரமம் சிருஷ்டிமுதலியனசெய்வது எதன்பொருட்டெனில்? அது சீவர்பொருட்டென்று கூறாமல்முடியாது. அன்றியும் வேதசிவாகமாதிகள் யாருக்குவந்தனவெனில், அவைகள் சீவர்க்கு வந்தனவென்றே கூறவேண்டும். இதன்விவரணம் முன்புவேதப்பகுதியில் விளக்கியுள்ளதே.

இனி உலகம் நானாவிதப்பொருள்களாய் நேரே காணப்படலால்இல்லையென்பது எப்படியெனின்? அவற்றைப் பிரமமாக்காணுமற் பலபொருள்களாகக்கண்டது பிராந்தியே(மயக்கமே)என்றுகூறுவர். அவர்கள் பிரமந்தவிர யாதுமில்லையென்றுகூறுதலால் மயங்கிக்கண்டது பிரமமே என்று கொள்ளவேண்டிவரும். முற்றறிவுள்ள பிரமத்துக்கு எக்காலத்தும் மயக்கமின்மையால் அது விரோதமாகும். ஆதலால் மயங்கிக்கண்டவர்கள் பிரமத்தின்வேறுயென்றுமுள்ள சிற்றறிவினராகிய ஜீவர்களேயென்றுமுடிவுபெறும். அதனை ஒத்துக்கொண்டால் எல்லாம் பொய்யென்கின்ற தமதுகொள்கைக்கு விரோதமென்றெண்ணிப்பிரமம்ஒன்றே பல பொருள்களாயினதென்பர். நிர்விகாரநிர்மலப்பிரமம்ஒன்றேவிகாரப்பட்டுப் பற்பலசமலப்பொருள்களாவதென்னெனில்? விளையாட்டினால்ஆயதென்பர். விளையாடுவது நன்மைதீமைபகுத்தறியாப் பாலர்செயலாய்ப் பயனற்றதாகும். பிரமம் பயனற்ற தொழில் செய்யாதென்க. ஆனால் நீவிர் அருள்விளையாட்டென்பதும் பயனற்றதாமேனெனில்? அதன்கருத்துப் பிரயாசையில்லாத இலகுவானசெயலென்பதேயாம். இதனை, சாத்தனுக்கு ஐங்கலப்பாரஞ்சுமப்பதோர்விளையாட்டு என்பதில், அது அவனுக்கு இலகுவானசெயல் என்று கொள்ளுதல் நோக்கிப் தெளியலாம்.

௬ (விவர்த்தக்கூறுவது பொருந்தாமை.)

இனி, அவர்கள் பிரமம் உலகுக்கு முதற்காரணமென்பதில், பிரமம் உலகம் என இருபொருள்கள் விளக்கமாய்ப், பிரமந்தவிர

பாதுமில்லையென்றதற்கு விரோதமாதலைநோக்கி, முதற்காரணமென்றது யதார்த்தமன்று விவர்த்தமென்பர். விவர்த்தமாவது:- கிளிஞ்சியில் வெள்ளி, பழுதையில் பாம்பு, கட்டையில் கள்ளன்தோன்றுதல் பொய்யாதல்போலப் பிரமத்தில் உலகந்தோன்றுமென்றதும்பொய்யென்பதாம். இது அவர்கள்கருத்து. அப்படியாகுங்கால், முன் பிரமம் உலகுக்கு முதற்காரணமென்பானேன்? என்றதனால் பிரமம் உலகமென இரண்டுண்டென்பது நோக்கிப், பின் அது பொய்யென்பானேன். பிரமமொன்றேஉள்ளதென்றதைச் சாதித்தற்குக் கிளிஞ்சியாதிஉவமை கூறியதனாலேயே ஒன்றென்றது பழுதாய்க், கிளிஞ்சி பழுதை கட்டைகளும் வெள்ளி பாம்பு கள்ளர்களும் மயங்கிக்கண்டாருமாகிய பலபொருள்கள் உள்ளனவாய் ஏகவாதம்போய் அநேகவாதமாய்முடிந்ததுகாண்க.

(அவர்கள்எடுத்துக்காட்டிய உவமைகளும் பொருந்தாமை.)

கிளிஞ்சியில் வெள்ளிதோன்றுவதாக ஒருவன் மயங்கிக்காண்பது கிளிஞ்சியும் வெள்ளியும் வெள்ளைநிறமாய்ரூபமுள்ளனவாயிருத்தலாலன்றி வேறில்லை. இதுபோல ரூபமில்லாதபிரமத்தில் நிறமுதலியஒற்றுமையில்லாததும் ரூபமுள்ளதுமாகிய உலகந்தோன்றியதாக ஒருவன் மயங்கிக்கண்டானென்பது பொருந்துமா? அன்றியும் கிளிஞ்சியில் வெள்ளிஒன்றுதான் தோன்றும், பிரமத்தில் பலவிதப்பொருள்களாகிய உலகந்தோன்றுமென்பது பொருந்துமா? வெள்ளிஒன்றுள்ளதாக முன்கண்டவனுக்குத்தான் கிளிஞ்சி வெள்ளியாத்தோன்றும். அவர்கள் பிரமந்தவிரயாதுமில்லையென்பதால் முன் காணப்படாத உலகம் பிரமத்தில்தோன்றியதென்பது பொருந்துமா? கிளிஞ்சியில்வெள்ளிகண்டது பொய்யன்றி வெள்ளியென்றொருபொருளுள்ளதென்பது பொய்யாகுமா? அதுபொய்யானால் கிளிஞ்சியில் மயக்கத்தால் வெள்ளிதோன்றுமா? இதுபோற் பழுதையிற்பாம்பு கட்டையிற்கள்ளனென்ற உவமையும் அறியப்படுமாதலால் அவ்வுவமைகள் பொருந்தாமையும், அவற்றானும் பிரமம் ஒன்றுதான் உள்ளதென்றபிடிவாதம் பழுதுபட்டதும்; விவர்த்தமாகப் பிரமத்தில் உலகந்தோன்றுமென்றது அபத்தமேயென்பதும் செவ்வே தெளிவாம்.

(ஒன்றேயென்பது கடாகாசவுவமையாலும் பொருந்தாமை.)

இன்னும் அவர்கள் பிரமம் ஒன்றே சரீரங்களினகப்பட்டபோது சீவப்பிரமம் என்றாகிநீங்கியபோது உள்ளபடி பிரமமாகும். சீவனென்றொருபொருள் வேறில்லை. இது ஆகாசமொன்றே கடங்களுள் வளைபட்டபோது கடாகாசமென்றாகிக், கடமுடைந்தபோது உள்ளபடி ஆகாசமாதல்போலாமென்பர். இதனையும்விசாரித்தொழிப்பாம். பிரமந்தவிர வேறில்லையென்றதைமறந்து அது சரீரங்களினகப்படுமென்றது சரீராதிகளுமுண்டென்பதைவிளக்கி ஏகவாதந்தொலைத்து அவர்க்கு அபகாரமே விளைத்தது.

இனி, அச்சரீரம் எவனால் எங்கிருந்து எதற்காகவந்ததென்று விசாரிக்குமிடத்து, நிமித்தகாரணனால் மாயையிலிருந்து சீவர்கள் கர்மசேஷம்நுகர்ந்து வினையொப்புமலபரிபாகம் சத்திநிபாதமுற்றுய்தற்காகவே வந்ததென்பது தெளிவாம். ஆகவே, நிமித்தகாரணனாகிய பதியும் சீவர்களாகிய பசுவும் மலம் மாயை கர்மம் ஆகிய பாசமும் எப்பொழுதும் உண்டென்பதே விளக்கமாயது, அவர்கள் கூறும் உவமானகடத்தையும் எவனால் எங்கிருந்து எதற்காகவந்ததென்று விசாரிக்குமிடத்தும் நிமித்தகாரணனாகிய குயவனால் மண்ணிலிருந்து சீவர்களுக்காகவந்ததென்றாகிக் குயவனும் மண்ணும் சீவர்களுமாகிய முப்பொருளும் உண்டென விளக்கி எமக்கே உபகாரமாதல் காண்க.

ஆகாசம் சடமாதலால் குடங்களைவனையும்போது குயவனால் அவற்றுள் வளைபட்டுநிற்குமென்பது பொருந்தும். சித்தாகியபிரமமும் சரீரங்களினுள்ளே கட்டுப்படுமென்பது பொருந்துமா? ஆகாசத்தைக் குடங்களினுள் வளைவித்த குயவனைப்போலப், பிரமத்தைச் சரீரங்களினுட்புகுத்தியது யார்? பிரமந் தானேபுகுந்ததென்பரேல், குயவனாற் குடங்களில் வளைவிக்கப்பட்ட ஆகாசத்தையுவமைகூறியது பொருந்துமா? சீவர்கள் வினைப்போகங்களை அனுபவித்துத்தொலைத்தற்காகச்சிவாஞ்ஞையாற் சரீரங்களிற்புகுந்துழல்வதையேசாஸ்திரங்கூறுவதன்றிப், பிரமம் சரீரங்களிற்புகுந்துழலுமென்று எந்நூலாவது எவராவது கூறுவதுண்டா? உண்டெனில் அது நூலாகுமா? அவரறிஞராவரா? சுத்தப் பிரமம் அங்

த்தசரீரங்களிற் கட்டுப்படக்காரணம் என்னவெனில்? அவிச்சை யாலென்கின்றனர். முற்றறிவுள்ளபிரமத்துக்கு அவிச்சை இல்லை யேயெனில்? மாயோபாதியால் வந்ததென்கின்றனர். அம்மாயை யும் அதன்மேல் அசுத்தமாயை சுத்தமாயைகளுங்கடந்த சுத்த சைதந்நியமாய், எதனாலும் தடைப்படாது தானேபிரகாசித்துப் பெரிதென்பதும், சோமசூரியாக்கினிகளுக்குந்தானேஒளிகொடுத் துப் பிரகாசிப்பித்துப் பெரிதாக்குவதென்பதும் விளக்குகின்ற சுயம்பிரகாசபரஞ்சோதியாகிய நிர்மலபிரமத்தைக் கீழ்ப்பட்ட பிரகிருதிமாயை உபாதிக்கவல்லதா? என்றுற்றுநோக்காமல் பிர மம் மாயோபாதியால் அவிச்சையுற்றுச் சரீரங்களிற்புகுந்துழலு மென்பதென்ன தலைவிதியோ? மலசகிதசீவர்க்குத்தான் மாயோ பாதி அவிச்சை சரீரசம்பந்தமுள்ளன. ஆதலால் அவர்கள் கூறும் பிரமம் சீவப்பிரமமேயென்பது தெளிவாம். ஆகவே அவர்கள் சீவப்பிரமவாதிகளேயென்பதுபிரத்தியக்ஷமாய்நிலைபெறுமென்க.

ஆனால், வேதம் ஒன்றென்பதென்னையெனில், "ஒன்றென்ற தொன்றேகாண் ஒன்றேபதி" வேதம் ஒன்றென்பதற்குப்பொருள் ஒன்றேயாம். வேறுபொருள்படாது. அதன்கருத்துப்பதிப்பொ ருள் ஒன்றே இரண்டில்லை என்பதாம். "பசுவாம் ஒன்றென்றநீ பாசத்தோடுளை" இவ்வுண்மையறியாமல் இங்குஒன்றென்றுசொ ல்லுகின்ற நீ பாசத்திற் கட்டுப்பட்டுள்ளாயாதலால் பசுவாம். என்றசிவஞானபோதசூத்திரத்தெளிக. பதியாகியபிரமமும் பசு வாகிய சீவனும் சித்துச்சாதிஒற்றுமையால் ஒன்றெனக்கூறினும் பிரமம் ஒன்றேயாய்ச்சரீராதிதொடக்கற்றசர்வஞ்ஞநிர்மலசித்து. சீவர்கள் அநேகர்களாய்ச் சரீராதிதொடக்குற்ற கிஞ்சிஞ்ஞசமல சித்து. என்னுமுண்மையால் அப்பிரமமும்சீவர்களும்பொருட்டன் மையால் வெவ்வேறுபொருள்களேயாம். ஆயினும் சீவர்கள் திரு வருளால் பரிபாகிகளாய்ச் சிவாகமங்கூறுஞ் சிவோகம்பாவனை யாற்சிவமேதாமாய் நிற்கும்நிலையில் இரண்டன்மையாகிய சுத்தா த்துவிதசித்தியானந்தமுற்றுவாழ்வர். இதனை, (தாயுமானவர்)

அப்பொருளு மான்மாவு மாரணநூல் சொன்னபடி
தப்பிலாச் சித்தொன்றே சாதியினுல்—ஒட்டிடுந்

தேரிற் றுவிதஞ் சிவாகமநூல் சொன்னதிட்டை
யாருமிடத் தத்துவிதமாம். என்பதுமுதலியவற்றுற்காண்க.

இவ்வாறு பிரமத்துக்கும் சீவர்களுக்குமுள்ள பொருள்வேற்றுமை விளக்கமாயிருக்கவும், சாதிஒற்றுமைநோக்கி ஏகதேசத்தில் ஒன்றெனக்கூறுமதனுண்மைநோக்காமல்சுத்தப்பிரமமொன்றே அழுக்கடைந்த சரீரங்களிற்புகுந்துழலுமென்கின்ற மாபாதகத்தை தயென்னென்று கூறுவது.

அவர்கள் அம்மட்டிலும்அமையாமல் சர்வஞானோத்தரமென்னுஞ் சிவாகமமும் மகாகாசகடாகாசவுவமை தங்கள் கருத்துக்கிணங்கக்கூறுகின்றதென்பர். அதனுண்மையும் விளக்கி அவர்கள் கருத்தை இல்லதாக்கியாக்குவாம்.

(சர்வஞானோத்தராகமம்.)

'கடத்திருக்கு மாகாயம் போலச்சீ வான்மாகருதுமகாகாயம்போற் பரமான்மாவிருக்குங், கடத்திருக்கு மாகாயங்கடமுடைந்தான் முன்னர்க்கருதுமகாகாயமா நிறைந்துநின்றாற் போலத்,திடத்திலுறு பிரகிருதிசம்பந்தமாய தேகவுபாதிகண் முழுதுநீங்கியபினர்தச், சடத்தமர்சீவான்மாவே பரமான்மா வாகுஞ் சர்வஞ்ஞுமெம்மாற் சொலப்பட்டதித்துவே''

இதுதான் அவர்கள் கருத்துக்கிணங்கக்கூறுகின்றதென்ற சர்வஞானோத்தராகமச்செய்புள். இது, கடத்துள்ளிருக்கும்ஆகாசம் (கடாகாசம்) போலச், சரீரத்துட் சீவான்மாஇருக்குமென்றும், கடத்துட்படாதஆகாசம் (மகாகாசம்) போலச் சரீரத்துட்படாத பரமான்மாஇருக்குமென்றும், கடமுடைந்தால் அக்கடாகாசம் மகாகாசமாய் நிறைந்துநிற்றல்போலச் சரீரம்நீங்கியபின் அச்சீவான்மா பரமான்மாவாகுமென்றும், விளக்குகின்றதேயன்றிப், பரமான்மாவாகிய பிரமமொன்றே அவிச்சையாற் பலசீவர்களாய்ச் சரீரங்களிற்புகுந்துநின்று ஞானம்வந்தபின் சரீரம்நீங்கிப் பிரமமாகியதென்ற அவர்கருத்தை விளக்கவில்லை. பிரமம் உள்ளபடி பிரமந்தானே; அதுவே பிரமமாகியதென்பது விரோதமன்றோ! பிரமம்சரீரத்துட்புகுந்தமையால் பிரமத்தன்மைகெட்டுச்

சரீரம்நீங்கியபின் பிரமமாகியதனால் விரோதமின்றென்பரேல் சரீரத்துட்புகுதற்குரிய மலசம்பந்தமியல்பாகவேயில்லாத அநாதிமுத்தசுத்தப்பிரமம் சரீரத்துட்புகுந்ததென்பது எவ்விதத்தும் எக்காலத்தும் பொருந்தாதாதலால் அவர் கூறுவது விரோதமேயாம். ஆகவே முன் பிரமமாகாதிருந்ததெதுவோ அதுதான் பிரமமாகவேண்டியதென்றுள்ளபடி நோக்குவார்க்கு முன் பிரமமாகாதிருந்தது சீவான்மாவே என்பதும் அவ்வான்மாவே திருவருளால் மலவலிநீங்கிப் பிரமமாகியதென்பதும் தெளிவாம்.

மேற்காட்டிய செய்யுளில் பரமான்மாவாகுமென்றதை, அந்நூலாரமபமுதற்கூறிவருமுறைபிறழாது நோக்குமிடத்து, இயல்பாகவேபாசங்களினீங்கிய சிவபரமான்மாவைச் சீவான்மா மலவலிநீங்கிசார்ந்து சார்ந்ததன்வண்ணமாய் நிற்குநிலையில் அச்சீவான்மாவே பரமான்மாவெனும்பெயர்பெற்று நிற்றலைபுணர்த்தும்.இதனைச்சர்வஞானோத்தரமுதலில், பசுவும்பாசமும் அதிகாரஞ்செய்துநிற்கும் பதியும், அதிகாரமின்றித் தன்னிலையினிற்கும் சிவமுமாகிய நித்தியப்பொருள்கள் நான்கினியல்புவினவிய சுப்பிரமணியப்பெருமானுக்குச் சிவபெருமான் அவ்வியல்புகள் விளக்கிவருமிடத்துப்,பசு,சார்ந்ததன்வண்ணமாய்நிற்குமியல்பினதாதலால்,அது சார்ந்துநிற்கப்படும பொருள்வகைபற்றிப்பூதான்மா அந்தரான்மா தத்துவான்மா சீவான்மா மந்திரான்மா பரமான்மா என ஆறுவகையாய்க் கூறபபடுமென முன்பு பொதுவாகவிளக்கிப், பின்புபஞ்சபூதபரிணமமாகிய உடம்பினியல்பும், பசு அவ்வுடம்பைப்பற்றியவழிப்பூதான்மாவெனநிற்றலும், அகத்தின்கண்ணவாகிய வாக்குக்களினியல்பும், பசு அவற்றைப்பற்றியவழி அந்தரான்மாவென நிற்றலும், சூக்குமபூதமுதலிய தத்துவங்களினியல்பும்,பசுஅவற்றைப்பற்றியவழித் தத்துவான்மாவென நிற்றலும, வினைப்போகங்களையனுபவித்துப் புருஷதத்துவமெனநிற்குமியல்பும், பசு அவ்வாறுநின்றுபிரகிருதிகுணங்களைப்பற்றிஇன்பதுன்பங்களையனுபவிக்குஞ் சீவிதநிலையிற் சீவான்மாவென நிற்றலும், தாவரசங்கமங்களெல்லாவற்றிற்கும் அதிதெய்வமந்திரங்களுள்ளனவே. அம்மந்திரங்களால் அதிட்டிக்கப்படாத உயிர்களி

ல்லை. மந்திரங்களை உச்சரிக்குமுறை இவ்வாறென அவற்றினியல்பும், பசு மந்திரங்களைச்செபிக்குமிடத்துப்படிகம்போல அந்தந்தமந்திரமயமாய் மந்திரான்மாவென நிற்றலும், அப்பசுவே தன்னின்வேறாகிய இந்த ஐந்துவகைப்பற்றுமுற்றுமற்று அவ்வைந்துவகைப்பெயரினீங்கப்பெற்று சச்சிதானந்த சிவபரமான்மா ஒன்றையேபற்றிச் சிவோகம்பாவனையால் சிவமயமாகுஞ் சுத்தாத்துவிதநித்தியானந்தநிலையில் பரமான்மாவென நிற்றலும் சிறப்பாகவும் விளக்கியருளினமையாலும், பரமான்மாவென்றதை முன்பின்நோக்கி யுண்மையுணராமல் அச்சொல்லளவே நோக்கி அதன்பொருள் சிவமோவென்று பிறர் மயங்காமைப்பொருட்டு முருகப்பெருமான் முதலில் வினவியநித்தியப்பொருள்கள் நான்கிற்பதியாவது, லயசிவம்போகசிவம் அதிகாரசிவம் மூன்றன்மத்தியதாய்மேலுள்ள லயசிவஅருவநிலையும் கீழுள்ள அதிகாரசிவஉருவநிலையும் தன்னிற்காணநிற்கின்ற சதாசிவமே என்றும் சிவமாவது, இம்மூவகையுங்கடந்து தன்னியல்பினிற்கின்றசொரூபசிவமே என்றும் விளக்கியருளினமையாலுஞ் செவ்வேதெளியலாம்.

இவ்வாறு சர்வஞானோத்தராகமத்தினுண்மையை முன்பின் விரோதமின்றித்தெளிவாய் நோக்காமல் கடாகாசமகாகாசமென்ற சொல்லைக்கண்டமட்டிலேசிவாகமத்திலும் நமதுகொள்கைக்கு ஒருஇலக்குவாய்த்ததென்று ஆராய்வின்றி மகிழ்ந்து விபரீதார்த்தங்கொண்டு மயங்குவது அவரது ஏகவாதமுரணிலையே யாமென்க. இதனையே ஸ்ரீமந்மெய்கண்டசிவம், ‘‘குடாகாயவாகாயக் கூத்தாட்டாமென்ப, தடாதுள்ளம்போமாறது.'' என்று தெளித்து விளக்கி ஒதுக்கியருளிற்றென்க.

இவ்வுண்மைகள் ஒன்றையுமுற்றுநோக்காமல் பிரமந்தவிர யாதுமில்லையென்பதையும், உலகம் நேரே காணப்படும்போது இல்லையென்பது பொருந்தாதென்று மறுப்பதுநோக்கி அப்படியன்று பிரமந்தான் உலகமாகப் பரிணமித்ததென்று மாறிக் கூறுதலையும், சித்தாகிய பிரமம் ஜடமாகிய உலகமாய்ப் பரிணமிக்க மாட்டாது; அன்றியும் பரிணமித்தல்பால்கெட்டுத்தயிராதல்போல்வதாதலால் பிரமங்கெட்டு உலகமாயதென்று பொருள்பட

பரிணாமங்கூறுதல் சிவத்துரோகமென்று மறுப்பதுநோக்கி அப்படியன்று பிரமத்திலிருந்தே உலகந்தோன்றியதென்று மாறிக் கூறுதலையும், சித்திலிருந்து ஜடந்தோன்றுமென்று மறுப்பது நோக்கி அத்தோற்றம் உண்மையன்று கிளிஞ்சியில் வெள்ளி போல் பொய்யேயென்று மாறிக்கூறுதலையும், மேலுங்கூறுமாறுபாடுகளையும் புத்திமான்கள் யோசிக்கின் அம்மாயாவாதிகள் தங்கள்மதநிலை இன்னதென்று தாங்களே நிச்சயித்தறிந்து கொள்ள மாட்டாத தடுமாற்றமுடையரென்பது செவ்வேதெளிவாகும்.

(பிரமந்தவிரயாதுமில்லையென்பது அநுபவத்துக்கும் பொருந்தாமை)

பிரமந்தவிரயாது மில்லையென்றது மேற்காட்டியயுத்திவகைகளாற்பழுதாய்முப்பொருளுண்மைதெளிவாயதுபோல அநுபவத்தாலுந்தெளியலாம். இப்பூமியிற்பல்லூழிகாலமாகவத்தனையோதலங்கள் சிவாலயவிஷ்ணுவாலயங்கள் தீர்த்தங்களிருக்கின்றன. அங்குள்ளசிவலிங்காதிமூர்த்திகள் சுயம்புகளாயும், தேவர்முனிவர் அசுரர்மனிதர்களாற் பிரதிஷ்டிக்கப்பெற்றனவாயும், யானைமுதல் எறும்பீறானஜீவர்களாற் பூசிக்கப்பெற்றனவாயும் விளங்குகின்றன. தேவர்முனிவர் முதலிய அப்பெரியார் உலகெலாமுய்யும்படி பிரமமே கிருதகாடின்னியம் போலச்சிவலிங்காதிமூர்த்திகளாய் விளங்குகின்றது. பசுக்களாகியநாமெல்லாம், அம்மூர்த்திகளைவழிபட்டுய்யவேண்டிய அடிமைகளேயென்னுமுண்மைகடைப்பிடித்தவர்களாதலால், அத்தலங்களிற்பூசித்து, என்றும்விளங்க வைத்தனர்; அப்படியே பின்வருவாரும் வழிபட்டு வருகின்றனர் அம்மூர்த்திகள் அவ்வழிபாடுகளையேற்று அநுக்கிரகிக்கின்றன. பிரமமாகியபதிநித்தியம் போலப்பசு பாசங்களும் என்றுமுள்ள நித்தியங்களேயாதலாலன்றோ; அப்பசுக்கள் வழிபாடுசெய்துபாசவலிநீங்கியுய்தற்காகமூர்த்திதலதீர்த்தங்கள் திருவருளால் விளங்குகின்றன. பாசமில்லையானால் வழிபாடும். பசுக்களில்லையானும்மூர்த்திதலதீர்த்தங்களும், யாருக்குவந்தனவென்ற கேள்விவரும். அதற்கஞ்சிஅவிச்சையாற் பிரமம் சிவலிங்கப்படுங்கால் வழிபட்டுய்தற்குவந்தனவென்றே கூறவேண்டும். இதுதலையாரிவீட்டில் ஏணித்தகதையாய்மேலும் விரிபுமாதலால் பாசபந்தபசுக்கள் வழிபட்

டுத்தற்கேயுள்ள மூர்த்திதலதீர்த்தங்களென்பது திண்ணமாமென்க. (விவகாரம்பரமார்த்தமென்பதனுண்மை)

ஆனால் மேற்காட்டிய சிவலிங்காதிபூசனைமுதலியவெல்லாம் விவகாரத்தில் உண்மையாகக் காணப்படினும், பரமார்த்தத்தில் பொய்யே என்பர். அது, பொருத்தமான சமாதானங்கூறமுடியாமல் கற்பித்துக்கொண்டதேயாம். அவர்கள்கருத்தின்படி விவகாரமெல்லாம் பொய்யானால்அவர்கள் அம்மூர்த்திதலதீர்த்தவழிபாடுசெய்வது எதற்காக? அது அவர்களைஉத்தமபத்தரென்று வந்து உலகரடுத்துபசரித்தற்கென்றுதானேமுடியும். அப்படியன்றெனில்? அது, மெய்யேயாய்க்குறித்தபலனைத்தருமென்று நம்பியே செய்வதாகவேண்டும், நம்பியபடியேஅவ்வழிபாடுகள் யந்திராதிகள் குறித்தபலனை அந்தந்த எல்லையில் கொடுப்பது நேரே தெரிந்தும் அவ்வழிபாடுமுதலியன விவகாரமாய்ப் பொய்யாய்க்கழியுமென்று வாசாமாத்திரமாக்கூறுவானேன். அக்கூற்று அவர்களை உத்தமரென்றுநம்பி அடுத்தவர்கள் அவ்வழிபாடுசெய்யாது கெடுதற்கு ஏதுவாமன்றோ! அடுத்தவர்களுக்கு அது பொய்யென்று கூறுவதில்லை அவ்வழிபாடுசெய்யவேண்டியது அவசியமென்றே கூறுவோமெனில்? அது தாம்பொய்யெனக்கொண்டதை மெய்யெனக்கூறும் வஞ்சச்செயலாக முடியுமன்றோ உள்ளபடி உண்மையெனக்கண்டதை உண்மையென்று கூறுவதன்றோ நிர்வஞ்சகமாகும். ஒருவன் அரிசிமுதலியனசேகரித்தல் பாகம்பண்ணுதல் விவகாரமாகும். அவ்விவகாரம் பொய்யானால் அன்னமுண்டின்புறுதலாகிய பரமார்த்தம்கைகூடுமா? அவர்கள் படிக்குநூல்கூறியபடிசெய்யப்படுஞ்சாதனசதுட்டயங்கள் விவகாரந்தானே அவை பொய்யானால் அப்பலனாகிய பரமார்த்தங்கைகூடுமா? சாதனம் பொய்யானால் சாத்தியம் மெய்யாகுமா? சாதனசதுட்டயம் பொய்யன்று மெய்யேயெனில்? மேற்கூறியமூர்த்திதலதீர்த்தவழிபாடும் உள்ளபடி மெய்ம்மைதானே. மேலும் றிப்பானேன் அவர்கள்கூறும் விவகாரமும் பரமார்த்தமும் பெத்தநிலையும் முத்திநிலையுமாம். பெத்தமுத்திகள் சீவர்க்கன்றிப் பிரமத்துக்கில்லையன்றோ! ஆதலால் அவர்கள் கருத்தின்படி

ஒன்றேயாகிய பிரமத்துடன் அனேகராகிய சீவர்களும் உள்ளபொருளே என்பதும் தெளிவாம். சீவர்க்குள்ள விவகாரபரமார்த்த பெத்தமுத்திநிலைதான் வேறுபொருளில்லையென்னும் பிடிவாதத்தால் பிரமத்தில் வைத்து அப்பிரமம் அவிச்சையாற் பந்தமுற்று அதுநீங்கி முத்திபெற்றதென்கின்றனர். உள்ளபடி பெத்தமுத்திகளை என்றுகொள்ளுஞ் சீவர்கள் சுருதிசம்மதமாயிருக்கவும் பொய்யென்று கழித்து அவற்றைப் பிரமத்தின்றலையிலேற்றுவது வேறெந்த இழிந்தமதத்தார்க்குமில்லாத பெரும்பாதகமேயாம். சீவர்க்குள்ளதைப் பிரமத்தில் வைத்துக் கூறுமவர்கள் சீவப்பிரமவாதிகளேயென்னுமுண்மை இதனாலுந் தெளிவாம். எப்போதும் ஒரேபடித்தாய் நிர்மலமாகிய சுத்தப்பிரமத்தில் விவகாரபந்தம் எவ்விதத்திலும் எக்காலத்துமவநுவதில்லை. பரமார்த்தமுத்திநிலையே பிரமசொரூபநிலையாம். ஆதலாற் பிரமத்தில் விவகாரமில்லை. உண்டென்றால் அதில் பரமார்த்தம் விளங்காது. இவ்வாறு ஒன்றுக்கொன்று விரோதமாகிய விவகாரபரமார்த்தங்களை எடுத்துக்கொண்டு விவகாரம் பொய் பரமார்த்தம் மெய்யென்று ஏற்படுவதொழிந்து விவகாரசாதனங்கள் சாத்தியமாய்ப் பலனைத் தந்து மெய்யாய்விளங்குந்தலையுற்றுநோக்கிப் பொய்யில் மெய்தோன்றாதாதலால் விவகாரம் மெய்தான் அதனில் மெய்யாகிய பலன்தோன்றுகின்றதென்னுமுண்மை கடைப்பிடித்து அதனையே உள்ளபடி தாங்களும் மேற்கொண்டு பிறர்க்கும் நிர்வஞ்சகமாகப் போதித்துவாராக. இதுவே சுருதி சம்மதம் இதனை, "இல்லதற்குத் தோற்றமின்மையின்" "உள்ளதே தோற்ற" இல்லது உள்ளதாகாது உள்ளது இல்லதாகாதென்று விளக்கும் மெய்கண்டசுருதியாலும், "நாஸதோவித்யதேபாவோநாபாவோவித்யதேஸத:" பொய்யில் மெய் உளதாகாது மெய்யில் பொய் உளதாகாதென்று விளக்கும் பகவத்கீதையாலும் செவ்வே தெளியலாம்.

(பிரமமாகிய பதி நித்தியமென்பதுபோற் பசு பாசங்களும் நித்தியங்களேயென்பதற்குச் சுருதிப் பிரமாணம்.)

இனி, இவ்வநுபவப்பொருத்தமே சுருதிசம்மதமென்பதைப் பின்வரும் சுருதிப்பிரமாணங்களால் செவ்வேகாணலாம். இருக்குவேதம் முதலாவது மண்டலம்(௧௬௪)சூக்தம்(௨0)வது மந்திரம்

"த்வா ஸுபர்ணா ஸயுஜா ஸகாயா ஸமானம் வ்ருக்ஷம் பரிஷஸ்வஜாதே தயோரந்ய: பிப்பலம் ஸ்வாத்வத்த்யநஶ்நந்நந்யோ அபிசாகஶீதி" பிரியாத இரண்டு பக்ஷிகள் ஒரே விருக்ஷத்திலிருக்கின்றன. ஒன்று இனியபழத்தை உண்கின்றது. மற்றது உண்ணாது பார்த்துக்கொண்டிருக்கின்றது என்பதாம். இதில் விருக்ஷமென்றது சரீரத்தையும் இரண்டு பக்ஷிகள் என்றது சீவான்மாவையும் பரமான்மாவையும், பழமென்றது வினைப்போகத்தையும், உண்கின்றதென்றது அதனைச் சீவான்மா அநுபவித்தலையும், உண்ணாது பார்த்திருப்பதென்றது அப்பரமான்மா வினையினீங்கி விளங்கிய அறிவின் முனைவனாதலால் அவ்வினைப்போகந்தன்னைச் சாராமல் ஒதுங்கிநின்று தான் எல்லாவற்றையும் பார்த்துக்கொண்டு சாக்ஷியாயிருப்பதென்பதையுங் குறிப்பித்தல் காண்க. இதனை; (கைவல்லியம்)

அசசு வக்கமென் றொருமர மதிலிரண் டொருபற வைகள்வாழ் ழும், நசசு மதனொரு பறவைபக் கனியினை நன்றாக ன் றெனத்தின் னும், மொசசு மற்றொரு பறவைதின் னாதென வியங்கியப் பொருளாக, வைச்சு மாமறை சீவனை யீசனை வகுத்தவா றறிவாயே.

"என்று தெரிவிக்கின்றது இதில வியங்கியப்பொருள் என்றது குறிப்பாற் பெறப்படும் பொருள். வேதம் குறிப்பாகக் கூறியதை வேதாந்தமாகிய (முண்டகோபநிடதம், ௩-௧-௨.)

" ஸமானே வ்ருக்ஷே புருஷோ நிமக்நோ(அ)நீஶயா ஶோசதி முஹ்யமாந: ஜுஷ்டம் யதா பஶ்யத்யந்யமீஶமஸ்ய மஹிமானமிதி வீதஶோக:॥

என்னும் மந்திரம் விளக்குகின்றது. இ—ள்; ஒரே (சரீரமாகிய) விருக்ஷத்திலே (சீவான்மாவாகிய) புருஷனானவன் (சுதந்திரமில்லாமையாகிய)‡ அநீசத்துவத்தால் மயக்கமுற்றுத் துன்ப(சாகரத்தில) மூழ்கிக்கிடக்கின்றான். அவன் இன்பத்தையுடைய ஈசுரனை எப்போது அறிந்து அவனுடைய மகிமைக்குணங்களைப் பெறுகின்றானோ அப்போது துன்பத்தின் நீங்கினவனாகின்றானென்பதாம்.

(திருமந்திரம்)

இங்ஙனமாகவும் அம்மாயாவாதிகள் திருமூலநாயனார் திருமந்திரங்களிற்சில தங்களுக்குச் சாதகமென்று கூறிமகிழ்வர்.

"சித்தாந்தத் தேசிவன் முத்திசித் திந்தலாற்
சித்தாந்தத் தேசிற்போர் முத்திசித்தித்தவர்."

"ஆய பதிதா னருட்சிவ லிங்கம்
ஆய பசுவு மடலே றெனநிற்கும்
ஆய பலிபீட மாகுநற் பாசமாம்."

"பதியும் பசுவொடு பாசமு மேலைக்
கதியும் பசுபாச நீக்கமுங் காட்டு
மதிதந்த வானந்த மாநந்தி காணுந்
துதிதந்து வைத்தனன் சுத்தசை வத்திலே."

"தத்துவ மாறுறு தன்மனு வேழ்கோடி
மெய்த்தரு வன்னமைம் பானென்று மேதினி
ஒத்திரு நூற்றிரு பானொன்கெண் பானொன்று
வைத்த பதங்கலை யோரைந்தும் வந்ததே."

"ஆணவ மாகும்விஞ் ஞான கலருக்கு
பேணிய மாயை பிரளயா கலராகும்
ஆணவ மாயை கன்ம மூன்றுமே
காணுஞ் சகலர்க்குக் காட்டு மலங்களே."

இன்னுமனேகமுள்ளன. இவையெல்லாம் சைவசித்தாந்தபரிபாஷைகளேயென்பது அவர்களுக்கும் உடன்பாடேயாம். இனி அவர்கருத்துக்கிணங்க விபரீதார்த்தங்கொண்டு ஏதேனுங்கூறவரினும் மேற்காட்டிய மந்திரங்களுக்குத்தக்க சமாதானங்கூறிவிளக்குக.

மேற்கூறிய இருக்குவேதவசனத்தின் குறிப்புப்பொருளை விளக்கிக்காட்டிய கைவல்லியச்செய்யுளாலும், முண்டகோபநிடதவசனத்தாலும், திருமந்திரங்களாலும் பரமான்மாவும் சீவான்மாவும் பாசமும் நித்தியப்பொருள்களேயென்பது நன்கு தெளிவாயது காண்க. (கைவல்லியம்.)

"தன்னையுந் தனக்காதாரத் தலைவனையுங் கண்டானேல்"
"ஆரோதியாஞ்சீவரெல்லாம்" என்ற செய்யுள்களில் பசுவும் பசுவுக்காதாரமாகிய பதியும், கண்டானேல் என்றதனால் ஞானமி

டாது மறைத்துநிற்கும் மலமாகியபாசமும் அநாதிநித்தியங்களே என்பது விளக்கமாயது. (பகவற்கீதை.)

உலகமுதலியவைகளை பொய்யென்பவர்கள் மீளாநரகமடைவரென்று பகவற்கீதை கூறுகின்றது. இதனை,

“ எண்ணிய வுலகமு முலகுக் கீசனும்
புண்ணிய பாவமும் பொய்யென் றேகொள்வார்
பெண்களிரை டாண்புணர் கின்ற பெற்றியால்
நண்ணிய திவ்வுல கென்று நாட்டுவார்,”

“கடப்பரி தாய நரகமென்கின்ற கடல்களில் வீழ்வே கடவார்” என்றுகூறியதனாற்காண்க.

இ—ள்; சேதனம் அசேதனமென்று எண்ணப்பட்ட உலகமும, அவ்வுலகுக்குத் தலைவனாகிய ஈசனும், புண்ணியபாவங்களும், பொய்யேயென்பவர்கள், கடக்கமுடியாத நரகமாகியகடல்களில் வீழ்வேகடவர்களென்பதாம். இதில் வீழ்வரொன்றமட்டில் அமையாமற் கடவரென்று மேலுங்கூறியது, கண்ணன் அவர்கள் மேற்கொண்ட கோபமிகுதியாற் சாபங்கொடுத்ததாக்கூறவுமிடந் தருதல் காண்க. சேதனமென்றது சீவர்களையும், அசேதனமென்றது சீவர்களுக்கு இறைவனாற்கொடுக்கப்பட்ட தநுகரணபுவனபோகங்களையுமாம. (பகவற்கீதை வடமொழி)

“ ஈஸ்வர: ஸர்வபூதாநாம் ஹ்ருத்தேஸேऽர்ஜுந திஷ்டதி
ப்ராமயந்ஸர்வபூதாநி யந்த்ராரூடாநி மாயயா
தமேவஸரணம்கச்ச ஸர்வபாவேந பாரத தத்ப்ரஸாதா
த்பராம்ஸாந்திம் ஸ்தாநம் ப்ராப்ஸ்யஸி ஸாஸ்வதம்”

இ—ள் அர்ச்சுநா! மாயாயந்திரமென்னும் யந்திரத்திலகப்பட்டுள்ள சகலசீவர்களையும் சுழற்றிக்கொண்டிருப்பவராய்ச் சகலசீவர்களின்இருதயத்தில்யார்இருக்கின்றாரோ, அவரையேசகலபாவனையினாலும் சரணமடையக்கடவாய். அந்தஈசுரனுடைய அநுக்கிரகத்தினாலே மேலானசாந்தியையும் சாஸ்வதமானஸ்தானத்தையும் அடைவாயென்று கண்ணன்கூறியவசனத்தாற்பதி பசுபாசநித்தியமேவிளக்குகின்றது.

ஒன்றா யுலகனைத்து மானாரென் றப்பமுனி
யொன்று மொழியாற் புகன்றிருப்பக்—குன்றாத
முத்தியினு மும்முதலு முண்டென் றுரைப்பதெவன்
பித்தமுறுஞ் சைவர்நீ பேசு." என்றசெய்யுளைக்காட்டிச் சித்தாந்த சைவர்களாகிய எம்மவர்களை வைது தமது மடமைக்குணத்தை வெளியிடுகின்றார். அவர், "ஒன்றாய்" என்ற சொல்லைக்கண்டளவே பிரமந்தவிரயாது மில்லை யென்பதற்கு ஒருபெரிய ஆதாரங்கண்டதாக் கொண்டு எம்மை வைது வெளியிட்டதே மடமைக்குணமென்பதை அத்தேவாரத்தினுண்மைப் பொருள்கண்டுதெளிவாராக. ஒன்றாய்" என்றது தன்னைப்போலப் பதிப் பொருள் வேறின்றித் தன்னந்தனியா யுள்ள ஒருபொருளாய் உலகர்க்குள்ளசுகதுக்கந்தன்னைத் தாக்காமல் நிற்றலையும், "உலகனைத்து மானார்" என்றது, சேதனாசேதனப்பிரபஞ்சமுழுதும் வியாபித்து நிற்றலையும் விளக்கும். சேதனம்—அறிவுள்ளது. அசேதனம்—அறிவில்லது "ஒன்றுநீயல்லை அன்றியொன்றில்லை" என்றமணிவாசகசுருதி முதலியனவும் இப்படியே விளக்குகின்றன. ஆதலால் "ஒன்றாய் ஆனார்" என்ற சொற்பொருளாகியபதியும், உலகனைத்துமென்றதில் சேதனப் பிரபஞ்சமாகிய சீவர்களும் அசேதனப்பிரபஞ்சமாகிய பாசங்களுமாகிய முப்பொருளுண்மையே விளக்கமாம். சேதனஉலகம் அசேதனஉலகம் எனப்பிரபஞ்சம் இரண்டு பிரிவாய்ப்பலவாயிருத்தல் நோக்கியே "உலகு" என்று ஒருமையாகக்கூறாமல் உலகனைத்து மென்று பன்மையாகக்கூறியருளியதென்க. அத்தேவாரசுருதி சைவர்களாகிய எங்களுக்குரியசொத்தாதலால், அது எமக்கே உபகாரமாமென்பதை நோக்காமல் ஒன்றாய்என்றமட்டிலேயே மகிழ்ந்து தமக்காதாரமென்று வெளிவந்த புத்திவிசேடத்தை விரிப்பானேன். பிரமம் ஒன்றுதவிரயாதுமில்லையென்றுகொள்கின்ற அவர் "ஒன்றாய்" என்றமட்டில் நில்லாமல் உலகனைத்துமென்று வாய்திறக்கலாமா? உலகமென்பதே யில்லையானால் "உலகனைத்துமானார்" என்று அச்சுருதிகூறுமா; எல்லாம் பொய் என்னும்பழியதோஷமே [illegible]யுற்றுநோக்கி யுண்மைதெளிதற்கு அவர் புத்தியிடந்தந்திலது.

இனி, முத்தியினும்மும்முதலுமுண்டென்றுரைப்பதெப்படியென்றதனால், பெத்தத்தில் மூன்றுமிருக்கலாம் முத்தியில் மூன்றுமிருக்கப்படாதென்பதே அவர்கருத்தாகின்றது. ஆகவேபந்தமுள்ளகாலத்திற் சீவர்கள் துன்பத்திலழுந்தியேகிடக்கட்டும். பந்தநீங்கி முத்தியிறசென்று இன்புற்றிருக்கபபடாதென்பது தெளிவாகின்றது. இதனாற் சீவர்கள் அவர்களுக்குச்செய்ததீமையென்னையோ?

இனிப் பந்தமுத்தி பிரமத்துக்கில்லையாதலால் பந்தமுள்ளவன்றான் அதுவிடுபட்டுமுத்தியுறவேண்டியவன்; முத்தியென்னுஞ் சொற்கு விடுபடுதலென்பதே பொருள். பந்தமுள்ளவர் சீவர்களே. அவர்க்கே முத்தியுண்டென்பது நிசசயமே. பந்தமுள்ளகாலத்தில் பிறப்பிறப்பாதிதுன்புறுவர். அதுநீங்கியபோது பேரின்புறுவர்; அதுவே முத்தியாம். அபபோது சீவர்களிருந்துதான் அவ்வின்பமனுபவிக்கின்றார்களாதலால். அம்முத்தியினுமின்பத்தைக்கொடுக்கின்ற சிவபரமான்மாவும் அநுபவிக்கின்ற சீவான்மாவும் அவ்வின்பத்தைவிளைவிக்கின்ற மலமுமென்னுமுப்பொருள்களுமுண்டென்பதே நிச்சயமாகும். இதனை,

"முத்தியினு மூன்று முதலு மொழியக்கேள்
சுத்தவனு போகத்தைத் துய்த்தலணு—மெத்தவே
யின்பங் கொடுத்தலிறை யித்தனுவினை வித்தன்மலம்
அன்புடனே கண்டுகொளப் பா." என்னும் உண்மைவிளக்கச் சித்தாந்தசுருதியாற்காண்க.

(மாயாவாதிகள்கூறும் சுருதிவஞ்சனை.)

இப்படியே, சொற்பொருள்களை முன்பின்விரோதம்வாராதபடி நுணுகிப்பாராமல், ஒன்றேயென்னும் பிடிவாதத்துக்கிணங்கவே பொருள்கூறிமகிழ்வர். இதனை அவர்கள்கூறுஞ் சிலசுருதிவஞ்சனைகள்காட்டிவிளக்குவாம். "யோகமஸ்மி" எவன்நானாகின்றேன்; "பிரமாஹமஸ்மி" பிரமம் நானாகின்றேன். "அஹமேவாஹம்" நானேநான்என்கின்றஇவைகளைமாத்திரங்கூறி, அதன்மேலுள்ள "மாம்கஹோமிஸ்வாஹா" என்னை ஹோமிக்கின்றேன் என்றவாக்கியத்தைக் கூறுதலிலேதுமில்லை; "பிரமைவாஹம்" பிரமமேயானவன் என்றதைமாத்திரங்கூறி அதன்மேலுள்ள "பிரமாப்

யெதி" பிரமத்தையடைகின்றான் என்றதைக் கூறாதுவிடுவதும் அறியாமையாலோ! அறிந்தும் வஞ்சனையாலோ! இதனைப் புத்திமான்கள் ஊகிப்பாராக. ஹோமித்தல்—சேர்ப்பித்தல். "என்னை ஹோமிக்கின்றேன்" என்பதையும் அங்குள்ளபடி அம்மூன்றுவாக்கியங்களுடன் சேர்த்துக்கூறினால், என்னையென்றுகூறுஞ் சீவான்மாவும், யாரிடத்தில் ஹோமிக்கின்றாயென்றால், சிவபரமான்மாவினிடத்தென்று கூறவேண்டுமாதலால் அப்பரமான்மாவும் இதுவரையும் ஹோமிக்கவிடாது தடுத்துநின்றமலமுமாகிய முப்பொருளும் எப்பொழுதுமுள்ளனவென்பதும், இதுபோலவே பிரமமேயானவன் பிரமத்தையடைகின்றானென்றுகூறினால் பிரமமும் அடைகின்றவன் ஒருவனும் அடையவிடாதுதடுத்த பாசமுமாகிய முப்பொருளுமுண்டென்பதும் விளக்கமாகுமென்றே சூரியனை ஒருவிரலால் மறைப்பார்போலமறைத்து வைத்தனர். " தலையின் மயிரைப் பறித்துண்ணுஞ் சாதி யமணர் மறைத்தாலும், நிலையிலாதார் நிலைமையினான் மறைக்க வொண்ணுமோ " என்று பெரியபுராணங்கூறியபடி அவ்வாக்கியங்கள் அவர்கள் மறைப்புளகப்படாமல் பிரகாசிக்கின்றன. மறைத்தவர்கள் "பிரமமேயானவன்" "பிரமத்தையடைகின்றான்" என்றஇரண்டில் பிரமத்தையடைகின்றான் என்றதைமறைத்துவிட்டால், பிரமமேயானவன் என்றசொற்குமுடிவில்லையேஎன்று யோசிக்காமல்மறைக்கப்புகுந்தது கள்ளம்வெளியாதற்கே காரணமாயிற்று. சைவசித்தாந்திகளாகியஎம்மவர்களோ, அவர்கள்போல வஞ்சித்தொழுகுங் குறையினரல்லராதலால், அவர்கள் சாதகமெனக்கொண்ட மூன்வாக்கியங்களையும் மறையாமல் முழுதுங்காட்டி என்னைஹோமிக்கின்றேன் என்றபடி தம்மைச் சிவத்திற்கலப்பித்து, அதனாற் பிரமமேயாகிப்பிரமத்தையடைந்து, அதனாற் பிரமம்நானாகின்றேன் பிரமமேநானெனக்கொள்ளும் பெரும்பேறுபெற்றுவாழ்கின்றார்கள். இவ்வாறு வஞ்சமின்றியுள்ளபடியொழுகாமல் சுருதியாதிவாக்கியங்களையும் தமது கருத்துக்கிணங்கப்பேதிப்பது அவர்கள் வழக்கம், அவற்றிலுஞ்சிலகாட்டுவோம். (சுருதிப்புரட்டு.)

இருக்குவேதம் பரமான்மாவுஞ் சீவான்மாவும் பாசமும்நித்தியமென்றுரூபித்ததை முண்டகோபநிஷதம் விளக்கியது.

அதனைக் கைவல்லியமும்தெளிவித்தது. வேதவேதாங்கங்களும்பல-இடங்களில் விளக்குகின்றன. இவ்விளக்கம் விரோதமென்றெண்ணிப் பாஷியஞ்செய்யப்புகுந்து, அங்கங்குள்ளவாக்கியங்களைமாற்றியும், கூட்டியும், தங்கருத்துக்கிணங்கவெளியிட்டும் அதற்கிணங்கச்சூத ஸம்ஹிதையைப் பதினெட்டுமுறைபடித்துப் பலஇடங்களிலிஷ்டப்படிசெய்தும், வைத்தார்கள். அதனில், யஞ்ஞவைபவகண்டத்துப் பிரமகீதை ஏழாம்அத்தியாயத்தில் "சீவன் ஈசனென்றிரண்டுபக்ஷிகள்இந்தச் சரீரத்தில்உள்ளன. சீவன் கர்மபலன்புசிக்கின்றது; ஈசுரன் புசிக்கின்றிலன்" என்றுள்ளபடியெழுதி, அதன்பின்" ஆகாசம், கடாகாசம் மகாகாசமென வேறுபட்டது போலப்,பரஞானம் (பரப்பிரமம்) ஈசுரனாகவும் சீவனாகவும் கற்பிக்கப்பட்டது" என்றெழுதிவைத்துச், சீவனும்பொய் ஈசனும்பொய்யென்னுந்தங்கள் கொள்கைக்கு ஆதரவுசெய்துகொண்டார்கள்.

"பிரமம் சீவனாகவும் ஈசனாகவுங்கற்பிக்கப்பட்டது எதற்காக? கற்பித்தவர் யாவர்? அதனால் என்னபலன்? அப்பலனை யாரடைகிறது. அடையாதபோதுள்ள குறையென்ன?" என்ற கேள்விகளுக்குயாதுகூறுவரோ? இருக்கட்டும்; யாராயினுந்தங்கள்பக்ஷத்துக்குஆதரவுதேடிக்கொள்வது வழக்கமே. அதனில் சாசனப்புரட்டிருந்தால், அரசரால் தண்டிக்கப்படுவதும் வழக்கமே; சிற்றறிவுஞ்சிறுதொழிலுமுள்ள இவ்வரசர்செயலே இப்படியானால், முற்றறிவும் முழுத்தொழிலுமுள்ள பரமேசுவரனுக்காகிய சுருதிகளையும்புரட்டிய பெரும்புரட்டு வீண்போகுமா? சிவசித்சத்தியாகிய உமாதேவியைச் சடசத்தியென்றும், மோகரூபிணியென்றும், விஞ்ஞானமுதலிய அருட்சத்திதிருநாமங்களை அந்தக்கரணவிருத்திகளென்றும், தகராகாயவியோமத்தை அவித்தை அஞ்ஞானம் மாயைசடசத்தியென்றும், சாமீபத்தை ஐக்கியம் என்றும், அத்துவாவைச்சங்கராகதியென்றும் இன்னும் பலவற்றைப்பலவிதமாகவும் புரட்டிஎழுதிவைத்தனர்.

இதனால் அவர்பின்னையோர் அம்மட்டிலும் அமையாமல் புரட்டுதலே தமது பிஜாரார்ச்சிதமெனக்கொண்டு ஒவ்வோராலயங்களில் 'தம்தி ஆதிக்கமிகுதியால்' சிவலிங்கபூஜாதிகளையும் புரட்டி

நடத்துகின்றனர். அவர்பின்னையோரும்சிவாகமத்தினுண்மைநோக்காமல் அதுவேமுறையென்றுரைத்துநின்று காலநீட்டித்த ஆட்சிப்படுத்திவருகின்றனர். இதனை, ராமேசுவரம் திருச்செந்தூர் காமக்கோட்டம் சிதம்பரமுதலியபெருந்தலங்களிற் காணலாம். இத்தலங்கள் முற்காலங்களிற் சிவாகமவிதிப்படியே பூஜாதிகள் நடந்துவந்தனவென்பதைஅப்புராணாதிகளும் விளக்கும். இதை நீக்கி உள்ளவாறுநடந்துவரும்படி திருவருளைப்பிரார்த்திக்கின்றனம். வைதிகரிற் சாஸ்திரங்கள் குருமுகமாகநன்குணர்ந்து பிரசித்திபெற்ற பெரியார்பலர் வேதத்தைக்காட்டிலும் அதன்சாரமாகிய காமிகாதி(உஅ)சிவாகமங்களைச் சிலாகித்து வேதம் பாற்கடல்போல்வது சிவாகமங்கள் அதன்சாரமாகிய வெண்ணெய்போல்வதென்றுள்ளபடிகருதியே வெகுசனசமுகத்திற் பிரசங்கித்துவருகின்றார்கள். இவ்வுண்மைகடைப்பிடித்து அவ்வழிப்பட்டோர் சிவாகமநிந்தையும், அதனைத் திரஸ்கரித்தலும் நீங்கி உய்யும்படி மேலுந் திருவருளைப்பிரார்த்திக்கின்றனம்,

(பகவற்கீதையின் முடிந்தகருத்து.)

அவர்கள் மிகக்கொண்டாடும் பகவற்கீதை கண்ணன் அர்ச்சுனனைக்கொலைசெய்யும்படிஏவியநூலென்பது பாரதம் படித்தார் கேட்டார் எல்லாருந்தெரிந்ததே. அருச்சுநன் வீராவேசத்துடன் யுத்தபூமியில்வந்தும் எதிர்நிற்பவர் ஆசாரியர்முதலியோரல்லவா? இவர்களைக்கொன்று நிலையின்றிஒழியும் மண்ணாட்சியைப் பெரிதெனநம்பிவாழ்வதென்று பயந்து போரிற்சென்ற புத்திமுழுது பாறிநிற்றலால், அவன்புத்தியைஇலகுவாகமாற்றமுடியாதென்று பதினெட்டுஅத்தியாயமாகவிரித்து அக்கீதைகூறினர். கூறியும் லக்ஷியம் கொலைசெய்யஏவுதலிலேயேநின்றது. அதனைஅருச்சுனன் அந்நூல்கேட்டபின் பயம்நீங்கிக் கொலைசெய்யத்துணிந்ததனாலுந் தெளியலாம். அந்நூலைஞானோபதேசநூலென்பர். சுத்தஸ்தானத்தில் அந்தரங்கத்தில் ஆசாரியன் உயர்ந்தபீடத்திலிருந்து சிஷ்யனைக் கீழேவைத்துக்கூறுவதே உபதேசமுறை. யுத்தகளமாகிய அசுத்தஸ்தானத்திலே அநேகவீரர்கள் ரதகஜதுரகபதாதிகள்

வாத்தியமுழக்கங்கள்கூடிய பகிரங்கத்திலே, ஆசாரியன் கீழிருந்து சிஷ்யனைமேற்பீடத்திலவைத்து அவன்பாதங்களைத்தன் தோள்களில்வைத்துச் சாதிமுறைமேற்கொண்டு எல்லாவையுங்கொல்லாயென்றுகூறியது ஞானோபதேசமாகுமா? இவ்வுண்மையை,

"பார்த்தனு ரிரதமேறிப் படைதனைப் பார்த்துச் சார்வை
கூர்த்தவம் பாலே பெய்து கொன்றா சாளே னென்னத்
தேர்த்தனி லிருந்து மாயஞ் செய்துமால் கொல்லச் செப்பும்
வார்த்தைநூ லாக்கிக் கொண்டாய் புரங்கொல்நூல் மதித்தி
டாயே." என்ற சித்தியார் செவ்வே விளக்குகின்றது.

இதன்கருத்துக் கொலைக்குப்பயந்தவனைக் கொலைசெய்யும்படிவிஷ்ணுவின்அம்சனாகிய கண்ணன் மாயஞ்செய்து கூறியவார்த்தையையொருநூலாக்கிக்கொண்டநீ சிவபூசகர்களாகிய திரிபுரத்தவர்களை நாம்கொல்வது முறையன்றென்று மறுத்த சிவபிரானையன்றிப் பிறர்வெல்லமுடியாமையால், அவர்களைச் சைவநெறியினீக்கிவிட்டால் சிவபிரான்வந்து கொன்று நமதுதுன்பத்தைநீக்கியருளுவாரென்றுகருதி அவ்விஷ்ணு வஞ்சனையாற்பௌத்தகுருவாய்வந்து கூறியவார்த்தையாகியபௌத்தநூலையும் ஒருஞானநூலாகமதித்து மேற்கொள்வாயாகவென்பதாம்.

வாசிட்டத்தின்முடிந்தகருத்து.

வாசிஷ்டமும் பிரபஞ்சபாரம்வகித்தலில் ஊக்கமின்றி நீத்தவிராமனை அதனிற்புகுத்தற்காக வசிஷ்டர்கூறியதாம். இதனை,

"அருச்சுநற்கு மிராமற்கு மதிகார மவைநோக்கி யுரைத்த நூலின், கருத்தறியாய்" என்று மகாராஜா துறவுநூலுந்தெளிவிக்கின்றது. கண்ணரும் வசிஷ்டரும் சிவபக்தர்களாதலால், சமயோசிதமாகக் கூறினாரேனும், அக்கீதையும் வாசிஷ்டமும் அங்கங்கே பதி பசு பாசவித்தியசைவநலமும் விளக்குகின்றன.

(மாயாவாதிகள் பசுஞானிகள்.)

அம்மாயாவாதிகள் தேகம் இந்திரியம் அந்தக்கரணம் முதலிய சடங்களையே பொருளெனக்கொள்ளும் நிலைகளை அங்கங்குள்ள பழுதுகண்டுநீக்கி, அச்சடங்களைக் கருவியாகவைத்தா

றுகின்ற சித்தல்லவா நாமென்றுகண்டமாத்திரமே சித்தாகியநம்மைச் சடங்களாகநினைத்த கீழ்நிலைநீங்கி உள்ளபடி சித்தெனக் கண்டு மேல்நிலைக்கு வந்துவிட்டோமென்ற களிப்பின்மிகையால் அவ்வசப்பட்டுநிற்றலால் நாம் சித்தானாலும் அறிவித்தால் அறிவதும் அதுவும் ஒன்றொன்றாய் அறிவதுமாகிய கிஞ்சிஞ்ஞசித்தன்றி எல்லாவற்றையும் ஒருங்கேதானே அறியும் சர்வஞ்ஞசித்தல்லேம். அச்சித்தாகிய சிவத்தையடைதற்குரிய சன்மார்க்கநிலைநிற்றலே நமதுகடமையென்றுண்மைநோக்குதற்கு மனம் இடந்தராமல் பசுவாகிய தம்மையே பிரமமெனக் களித்துநிற்கின்றாராதலால் அவர்கள் பசுஞானிகளேயாவர், இதனை,

"வேதசாத் திரமிருதி புராணகலை ஞானம் விரும்பசபை வைகரியா திந்திறங்கண் மேலாம், நாதமுடி வானவெலாம் பாச ஞான நனுகியான் மாவினைகீழ் நாட லாலே, காதலினு ளன்பிரம மென்னு ஞானங் கருதுபசு ஞானமிவ னுடலிற் கட்டுண், டோதி புணர்ந் தொன்றொன்று வுணர்ந்திடலாற் பசுவா மொன்றாகச் சிவனியல்பி னுணர்ந்திடுவன் காணே.'' என்னுஞ் சித்தியாரானுங் காண்க. (மாயாவாதிகளுக்குள்ள தத்துவங்களிருபத்தைந்தே.)

இருபத்தைந்துதத்துவங்களே அவர்களுக்குள்ளன. அங்ஙனமாகவும் அவர்கள் ஜீவன் ஈசுவரன் கூடஸ்தன மூன்றுகூட்டினங்களுக்கு இருபத்தெட்டுத்தத்துவங்களுண்டென்றும், இனி வாயுக்கள்பத்தும அவித்தையுங்கூட்டி முப்பத்தாறுண்டென்றுங் கூறுகின்றார்கள். சீவன் ஈசுரன் கூடஸ்தன்மூன்றும் தத்துவங்கள் போற் சீவனாற்கடந்து செல்லவேண்டியனவல்லவாதலால , அம்மூன்றையுந் தத்துவமெனக் கொள்ளுதல் பொருந்தாதென்க. இனிப் பத்துவாயுக்கள் பஞ்சபூதத்துளொன்றாயுள்ள வாயுபூதத்திலடங்கும்; அவித்தை மலத்திலடங்கும்; ஆதலால் அவர்களுக்குள்ள தத்துவங்கள் (௨௫) என்பதே நிச்சயம். இவ்விருபத்தைந்தின் விவரம், பிருதிவி அப்பு தேயு வாயு ஆகாயம்(௫)சத்தம் பரிசம் ரூபம் ரசம் கந்தம்(௫)மெய் வாய் கண் மூக்கு செவி (௫) வாக்கு பாதம் பாணி பாயுர் உபஸ்தம்(௫) மனம் புத்தி சித்தம் அகங்காரம் (௪)ஆக (௨௫,ம்) ஆன்மதத்துவமாகும். இது, தன்போ

னும் இதனையடுத்துள்ள புருஷதத்துவம் சீவனிலேயேயென்பதை விளக்கும். அவர்கள் முடிவாகக்கொண்டது. (உரு-வது) இப்புருஷதத்துவமேயாதலால் இவர்களைச் சிவப்பிரமவாதிகளேயென்பது நிராக்ஷேபமே.

(சைவர்க்குரிய தத்துவங்கள் முப்பத்தாறு.)

(உரு) க்குமேல் காலம் நியதி கலை வித்தை ராகம் மாயை ஆறும் புருஷதத்துவத்தோடுஞ்சேர்ந்து ஏழாய் வித்தியாதத்துவமென்றும் அதற்குமேல் சுத்தவித்தை ஈசுரம் சாதாக்கியம் சத்திசிவம்ஐந்தும் சிவதத்துவமென்றுங் கூறப்படும். இவை,

"காலஃ ஸ்வபாவோ நியதிர்யத்ருச்சா பூதாநி யோநிஃ புருஷ இதி சிந்த்யா" (என்னும் சுவேதாசுவதரசுருதியாலும்,

"ஶிவம் ஶக்திஞ்ச ஸாதாக்யமீஶம் வித்யாவபுஶ்ச"

என்னும் பிருஹஜ்ஜாபாலசுருதியாலுந் தெரியலாம். ஆகவே இம்முப்பத்தாறுந்தான் சுருதிசம்மதமான தத்துவங்களென்பதும், மாயாவாதிகள் சீவன் கூடஸ்தன்பிரமம்சேர்த்து (உஅ) என்றும் வாயுக்கள் பத்து அவித்தையொன்றுசேர்த்து(௩௯)என்றும் விகற்பித்துக்கூறுவனவெல்லாம் சுருதிசம்மதமன்றென்பதும் தெளிவாயது. நாம் பிரமமென்னும் மாயாவாதமதபாஷ்யகர்த்தாசங்கராசாரியர் இச்சுருதிசம்மதமானதெளிவு கடைப்பிடித்தேசிவானந்தலகரி சிவபுஜங்கம் தேவிபுஜங்கமுதலிய நூல்களிற் சைவசித்தாந்தமே கூறி இம்முப்பத்தாறுதத்துவங்களே தாம் மேற்கொண்டமையும் அப்பீடத்தின்மேற் சந்திரமௌளீசரைப் பூசித்துவருதலும் அதற்குரிய சிவதீக்ஷாதிசம்ஸ்காரமும்விளக்கினர். இதனுலிவர் நீலகண்டசிவாசாரியரிடம் சிவதீக்ஷாதிபெற்றுச் சைவநெறியொழுகுஞ் சைவரேனன்பது தெளிவாம். ஆனால் அவர் முன் பாஷியஞ்செய்ததென்னெனில்? புத்திமுதலியன பிரமமென்பார் இலக்குவாக மேலேறிச் சிவப்பிரமநிலையில் வருதற்கேயன்றி வேறில்லை. அது அவர் சிவபூஜாதிஉண்மைச்செயலாலும் விளக்கமே. இம்முப்பத்தாறுதத்துவங்களும் சைவர்களாகிய எம்மவர்களால் மேற்கொள்ளப்பெற்றன.

(மாயாவாதிகள் பிரமவாதிகளென்பது பொருந்தாமை.)

இம்முப்பத்தாறைபுங் கடந்து அதீதமாய்நிற்பதுபிரமம்.வரி
சைக்கிரமமாக இம்முப்பத்தாறைபும் கடந்து சென்று பிரமத்தை
யறிந்து வழிபடுகிறவர்கள் பிரமவாதிகளாவாரன்றி,இருபத்தைந்
துதத்துவபட்டிலேநின்று அப்புருஷனையேபிரமமென்பவர்கள்பி
ரமவாதிகளாகாராதலால் அவர்கள் அப்புருஷதத்துவ சிவப்பிர
மவாதிகளே என்பது தெளிவாமென்க. இம்மாயாவாதிகளுக்கு
இருபத்தைந்து தத்துவங்களே உள்ளனவென்பதை,

ஆகின்ற தொண்ணூற்றோடாறும் பொதுவென்ப
ஆகின்ற வாறு றநுஞ்சைவர்தத்துவம்
ஆகின்ற நாலேழ்வே தாந்திமாயாவாதிக்
காகின்ற வையைந் தறுநான்கு வைணவர்க்கே," என்னுந்தி

ருமந்திரத்தாற்காண்க. இவ்விருபத்தைந்தில் ஒன்றையாவதுசட
மெனக்கண்டு விட்டொழியாமல், அவற்றிற்கிடந்துழல்பவர்கள்
நாம் பிரமமென்பது வாசாமாத்திரமாயொழிந்து சிவத்துரோகத்
துக்கே ஏதுவாமென்க.

(நாம்பிரமமென்பதுபெத்தநிலை சிவோகமென்பது முத்திநிலை)

ஆனால் சைவர்கள்சிவோகம்என்பதும் அதுதானேயெனில்?
அப்படியன்று; அச்சொல்(௩௬)தத்துவங்களையுங்கடந்து பசுத்து
வம்நீங்கிச்சிவத்துவம் பெற்றபெரியார்அச்சிவன், முத்திநிலையிற்
சிவமேமுன்னிற்பத்தாங்கள் அதனுளடங்கிபின்னிற்கும் பேரா
நந்தநிலையை விளக்குவதேயாம்; இதுசிவமென்பது முன்னின்று
அகம்என்பது பின்சேர்ந்துசிவோகமெனவிளங்கும் அச்சொல்
லாலுந்தெளிவாம், இதனை, (ஆலாஸ்யமான்மியம்)

மாசாய் மறைக்கு மலவலிபு நானும் வேறின்றி
யாசா விகாரமல மாயினைனைப் பொருட்படுத்துப்
பேசாத வின்புருவினின்றேடென்னைப் பின்வைத்த
ஈசா" என்றதிருவாக்கும் தெளிவிக்கின்றது.

நான் பிரமமென்பதில் நான்என்னுஞ்சீவன் ஆணவமுனைப்
பான்முற்பட்டு நிற்பப்பிரமம் பிற்பட்டுநிற்றலால் இது மலபெத்
தர்களாகிய பசுஞானிகள்கூற்றேயாம். முத்திநிலையில் சிவமு

ற்பட்டுநிற்றலும் சிவன் அதனுளடங்கிப்பிற்பட்டு வியாப்பியமாய் நிற்றலும், பெத்தநிலையில் ஆணவமலமுனைப்பினால்சிவன்முற்பட்டு நிற்றலும் சிவன் அச்சிவபோதத்துக்கு வெளிப்படாதுமறைந்து பிற்பட்டுநிற்றலுமாகிய இதுசிவசாஸ்திரவிளக்கமே. இதனை

தானின் றெனைத்தனக் குள்ளே யொளிக்குமென் றன்மைநிற்க
யானின்ற போதெனக் குள்ளே யொளித்திடு மிப்பரிசே
வானின்ற சின்மய மாமாசி லாமணி மன்னுந்தன்மை
நானின்று கண்டனன் காணே னிதற்கொத்த நன்மணியே"

என்னும்பண்டாரமும்மணிக்கோவைத் திருவாக்கினுலுந் தெளியலாம். ஆகவேநான்பிரமமென்பது பெத்தநிலையையும் சிவோகமென்பதுமுத்திநிலையையுமுணர்த்துமென்க. இவ்வாறு, தத்துவம் ஒன்றையேனும் விட்டுநீங்காமல்சமுசாரத்துட்கிடந்துகொண்டே நாம்பிரமமென்றுகூறி, அதனாலுந்தாங்கள் பெத்தநிலைப்பட்டவர்களே யென்பதை விளக்குகின்றவர்களது விருதாகோஷத்தைவிரிப்பானேன். இவர்கள், நாமேபிரமமென்பது மகாபாதகச்செயலாகுமென்பதை,

நாம்பிரமங் கண்டவர்போற் றம்மைக்கண் டாங்கதுவே
நாம்பிரம மென்பவர்பா வனைத்தே

என்றஉமாபதிசிவாசாரியரும்" யாங்களேகடவுளென்றிடும் பாதகத்தவரும்" என்றுதாயுமானசுவாமியும் விளக்குகின்றன.

உள்ளபடி அவ்விருபத்தைந்து தத்துவங்களையும் ஒன்றொன்றாக அதனதன்சொரூபங்களைச்செவ்வேகண்டு அவையெல்லாஞ் சடங்களெனத்தெளிந்து விட்டுநீங்கி அவற்றின் விலக்ஷணர்களாய் (வேறுபட்டவர்களாய்) தம்மைச்சித்தெனக்கண்டு, பின்பு அச்சடங்களைப்பற்றாமல் அம்மட்டிலாவதுபடிமுறையாக மேலேறிவந்தவர்கள் அதன்மேலெட்டிப்பார்த்தற்குரிய சிவஞானக்கண்கிடைக்கப்பெறுதகுறையினால் கிஞ்சிஞ்ஞசித்தாகிய தம்மையேசர்வஞ்ஞசித்தாகிய பிரமமெனக்கூறிநிற்பினும், திருவருள்வழியால்மேலுள்ள தத்துவங்களையுங்கடந்து நன்னிலைக்கு வருவாராதலால் அவர்கள் மேற்கொண்டுநிற்கும் மாயாவாதவேதாந்தம் சைவவேதாந்தத்தின்கீழ் ஒருபகுதியாய் ஒதுங்கிநிற்பதாமென்க.

## (சைவவேதாந்தம்.)

சைவவேதாந்திகளாகியசம்மவர்கள், பதி பசு பாசம் மூன்றும் நித்தியப்பொருள்களே, பதி சிவனொருவனே மற்றையாவரும் அவன் அடிமைகளாகிய பசுக்களேயென்பதும், அப்பசுக்கள் விஞ்ஞானகலர் பிரளயாகலர் சகலர் எனமூன்றுவகையினர் அநேகரென்பதும், பாசங்கள் ஆணவமலம் மாயாமலம் கர்மமலம் எனமூன்றுபகுதியாய்ப் பசுக்களைப்பந்தித்துள்ளன என்பதும், திருவருளால் அப்பாசவலிநீங்கியபசுக்கள் சிவபதநிழலில் வாழுதலேமுத்தியென்பதும் திருவருளுணர்த்தச் செவ்வேதெளிந்து, அவ்வழிநின்று வாழுஞ்சிவாநுபூதிப் பெருஞ்செல்வர்களே.

ஈண்டுக்கூறிய வெல்லாம் மற்றைய வேதாந்தங்களிற்கூறிய உபசாரங்கள் போல்வனவல்ல; உண்மையேயென்பதை வருகின்ற பிரமாணங்களை நோக்கித்தெளிக.

### (சுருதிப்பிரமாணங்கள்)

சைவவேதாந்தமாகிய கடவல்லியுபநிஷதம்(உ,ம்அத்தியாயம்(ரு)ம்வல்லி(கங)ம்மந்திரம் "நித்யோநித்யாநாம்சேதநஶ்சேதநாநாம்" என்னும் மந்திரம்நித்தியப் பொருள்களுள்ளே நித்தியன் சேதநப்பொருள்களுள்ளேசேதநன் என்றுவிளக்குகின்றது. அழிவின்றியென்றுமுள்ளது எதுவோ அதுவேநித்திய மென்பதாம் மாயாவாதிகள் பிரமம்ஒன்றுதான் நித்தியம் வேறொன்றுமில்லையென்பதுண்மையானால் இவ்வேதாந்தம் நித்தியப் பொருள்களென்று பன்மையாகக்கூறுமா? பசுபாசங்களும் நித்தியமாதலானன்றோ அவ்வாறு கூறியதென்க. நித்தியங்களுள்ளே நித்தியன் என்றது. நித்தியமாயுள்ள பசு பாசங்களுள் மேலாய் விளங்கும் நித்தியன்என்பதாம். சேதநங்களுள்ளே சேதநனென்றது, விஞ்ஞானகலர் பிரளயாகலர்சகலர் எனமூன்றுபகுதியாய் அறிவித்தாலறியும் அறிவுடைப்பொருள்களாகிய பசுக்கள் போலாகாது தானேஅறியும் முற்றறிவினனாகிய சேதநனென்பதாம்.

சாந்தோக்கியோபநிஷதம்-ரு-வது பிரபாடகம்-கஅ-வது கண்டம்-முதலாவதுமந்திரம்- [illegible] என்று பசுக்கள்

த்தை அநுபவிக்கின்றனன் என்றும், கேநோபநிடதம் ௧௨. "விந்தே'ம்ருதம்" சிவானந்தத்தைத் திளைக்கின்றனன் என்றும், கடோபநிஷதம் (௬-௧௪) "அத மர்த்யோ'ம்ருதோ பவத்யத்ர ப்ரஹ்ம ஸமஶ்நுதே" பின்மனிதன் அமிர்தனாகின்றான் பிரமத்தை அநுபவிக்கின்றான் என்றும், பிரசிநோபநிஷதம். ௩. ௧௨.

"விஜ்ஞாயாம்ருதமஶ்நுதே விஜ்ஞாயாம்ருதமஶ்நுதே"

அறிந்து சிவானந்தம அநுபவிக்கின்றான் அறிந்து சிவானந்தம் அநுபவிக்கின்றான் என்றும், முண்டகோபநிடதம் ௨. ௨. ௭.

"தத்விஜ்ஞாநேந பரிபஶ்யந்தி தீரா ஆநந்தரூபமம்ருதம் யத்விபாதி"

எந்தப்பிரமம் ஆனந்தவடிவாகிய அமிர்தமாய் விளங்குகின்றதோ அந்தப்பிரமத்தை (அருள்) ஞானத்தினாற் பெரியோர் பார்க்கின்றனர் என்றும், கடஉபநிஷதம ௩. ௨. ௬. "விமுக்தோ'ம்ருதோ பவதி" (பாசத்தினின்றும்) விடுபட்டவனும் அமிர்தனாகின்றனன் என்றும், தைத்திரீயோபநிடதம் ௧, ௬. ௧ 'அம்ருதோ ஹிரண்மய:' பரமசிவன் பொன்னார்மேனியன் என்றுங்கூறுகின்ற இவ்வேதாந்த மந்திரங்களும் பதி பசு பாசங்கள் மூன்றும் நித்தியங்களேயென்பதை விளக்கிய பசுக்கள் திருவருளினாலே தம்மைப் பந்தித்துள்ள பாசத்தினின்றும் விடுபட்டுச் (சிவபதவியில்) சிவானந்தத்தை அநுபவிக்குமென்பதை விளக்குதல் காண்க. இம்மந்திரங்களில் அங்கு ங்கே அமிர்தமென்னுஞ்சொல் இறப்பில்லாத சிவனையே உணர்த்தி நிற்கின்றது. (சைவஉபநிஷதங்கள்)

சைவவேதாந்தமாகிய உபநிஷதங்கள், ஈசாவாசியம், கேனம், கடம், பிரசிநம், முண்டகம், மாண்டூக்கியம், ஐதரேயம், தைத்திரீயம், சாந்தோக்கியம், பிருகதாரணியம், கௌஷீதகிப் பிராம்மணம், பஸ்மஜாபாலம், பிருகஜ்ஜாபாலம், ஜாபாலம், சரபம், கைவல்லியம், காலாக்கினிருத்திரம், சுவேதாசுவதரம், மைத்திராயணம், அதர்வசிரசு, அதர்வசிகை முதலியனவாம். இவைகள் முற்கூறிய பதி பசு பாசநித்தியமென்பது முதலிய சைவலக்கணங்களை யொப்புக்கூறுகின்றன. அவையெல்லாம் ஈண்டெடுத்துக்கூறப்புகின்

விரிபுமாதலால், முடிவிலுள்ள அதர்வசிகோபநிஷத்தின்முடிந்த வசனம் ஒன்றுமாத்திரம் எடுத்துக்காட்டிமுடிப்பாம்

(அதர்வசிகை.)

இருக்கு யசுர் சாமம் அதர்வணம் என்னும்நான்கின் முடிந்தவேதம் அதர்வணம். அதன்சிரசுக்குமேல் முடிவாயுள்ளது அதர்வசிகை. இது சிவோத்கரிஷங்கூறிவந்து முடிவில்

"ஶிவஏகோத்யேயஶ்ஶிவங்கரஸ்ஸர்வமந்யத்பரித்யஜ்ய ஸமாப்தாஅதர்வஶிகா" என்று முற்றுப்பெற்றது.

இ—ள்; சிவனொருவனே(யாவராலும்)தியானிக்கத்தக்கவன் (எதனாலென்றால், ஒருவாறுநீடித்துநின்றாலும், அவரவர்காலஎல்லையில் அழிந்துபோகின்ற அநித்தியமாகிய அற்பமங்களங்களைச் செய்யும் மற்றைத்தேவர்கள்போலாகாமல் ஒருகாலத்தும் அழிவில்லாதநித்தியமகா) மங்களத்தைச்செய்பவன், ("சிவனெனுநாமந்தனக்கேயுடையசெம்மேனியெம்மான்" ஆகிய காலாதீதன் அவனேயாதலாலென்க.) (ஆனால், முன் பற்பலஇடங்களில் பிரமவிஷ்ணுவாதிதேவர்களையும தியானிக்கத்தக்கவர்களென்று பிறர் கருதும்படி, அவர்களுக்கும்பரத்துவங்கூறியதென்னையோவெனில்? அது அவரவர்க்குக்கீழுள்ளார் அடங்கிநடத்தற்காக விசேஷித்துரைத்தஉபசாரமேயன்றியுண்மையன்று. இதனை, அங்கங்கே பரத்துவங்கூறியஇடங்களிலும் அவர்களில் ஒருவருக்கும்தியேயசுப்தம்கூறாமல் மற்றைவாக்கியங்களால் விசேடித்தலாலும், விசேடிக்கினும்"நாராயணஃபரோத்யாதா" என்பதுமுதலியவாக்கியங்களால் அவரவர்க்கியல்பாயுள்ளநிலைமைவிளக்கலாலுந்தெளியலாம். ஆதலால்இங்கேமுன்னுள்ள உபசாரப்பொருள்களெல்லாவற்றிலுந்தெளித்தெடுத்துமுடித்துவிளக்கிய அப்பரமசிவனொருவனைத்தவிர)மற்றைத்தேவர்கள்யாவரையும் கைவிட்டு(மேற்காட்டிய பரமசிவனையேதியானிக்குக.)அதர்வசிகை முற்றிற்று என்பதாம்.

தீர்ப்பு.

ஒருவிவகாரத்தில் வாதிபிரதிவாதிகளைவிசாரித்துத்தீர்ப்புச் செய்கிறநீதிபதி முன்பு ஒவ்வோர்விஷயங்களைவிரித்துவிளக்கிவருந்

தாலும் அவற்றின்மேற் காரணபலங்காட்டி முன்விஷயங்களை விலக்கிமுடிவில்தீர்ப்புச்செய்வதுயாதுவோ அதுவேபிறரால்அசைக்கப்படாதநிச்சயமாகும். அதுபோல ஈசுரவாக்காகிய இவ்வேத வேதாந்தங்கள் ஒருவராலும் மறுக்கமுடியாத முக்கியபிரமாண நூல்களாதலால், முன்பிறர்க்கும்பரத்துவங்கூறினும்இவற்றின்முடிவிற்பிரமாணபலமுங்காட்டிச் சர்வலோகைகநாயகனாகியஈசுரனால்தீர்ப்புச்செய்யப்பெற்றஇம்முடிபுமற்றையதேவர்முனிவராதிஉலகர்களால் எவ்விதகாரணத்தினாலாவதுமறுக்கப்பட்டு வேறொரு தீர்ப்புவருவதில்லை. இவ்வுண்மையையுற்றுநோக்கி இச்சைவவேதாந்தமுதநூற்கூறியபடி எம்மவர்கள் மேற்கொண்டுள்ளசைவநெறியே யாவரும்மேற்கொண்டுநின்றுய்வாராக.

## தெளிவு.

இனித்தெளிவாவது யாதென்றால்? மற்றைவேதாந்தங்களெல்லாவற்றையுந்தன்கீழ்ச்சோபானங்களாகிய அங்கங்களாகக்கொண்டுதான் அங்கியாய்நிற்கின்ற சைவவேதாந்தத்தின்சாரமென்பதாம். இத்தெளிவாகியசாரமே சுத்தாத்துவிதசித்தாந்தசைவமென்க. சைவசித்தாந்திகளாகிய எம்மவர்கள் மேற்கொண்டுள்ள இத்தகையசுத்தாத்துவைதமே வேதசம்மதமாயுள்ளது. இதனை,

யசுர்வேதமண்டலப்ராஹ்மணோபநிஷதம்,

"வேதாந்தவிஜ்ஞானஸுநிச்சிதார்த்தா: ஸந்ந்யாஸயோகாத்யதய:
ஶுத்தஸத்த்வா: தே ப்ரஹ்மலோகேஷு பராந்தகாலே
பராம்ருதாத்பரிமுச்யந்தி ஸர்வே"

என்பனவாதிகளாற்காணலாம். இவ்வுண்மைநோக்காமல் வைஷ்ணவர்கள் தம்மைவிசிஷ்டாத்வைதிகளெனவும் மாயாவாதிகள் தம்மைக்கேவலாத்வைதிகளெனவும் சொல்லிக்கொண்டு அவ்வந்நெறியேபற்றிநிற்கின்றாராதலின் வேதங்கூறும்மெய்ப்பொருளாகியசுத்தாத்வைதத்தினுண்மைகண்டு அதனைமேற்கொள்ளும் பரிபாகம்பெற்றிலர். உள்ளபடி மெய்ப்பொருள்கண்டவர்களே அதனைமேற்கொண்டுய்யும்பரிபாகமுற்றவர்களென்க. இதனைத்

"பொய்கண்டார் காணாப் புனிதமெனுமத்துவித, மெய்தன்னுடைதனருண் மேவுநாளெந்நாளோ" என்றருளியவாற்றானுங்காண்க.

இவ்வாறு வேதங்கூறிய சுத்தாத்வைதசித்தாந்தத்தையே சிவாகமங்களும் விளக்குகின்றன. சுப்பிரபேதாகமம் 'ஸித்தாந்தோ வேதஸாரத்வாத்' என்றும், மகுடாகமம் 'வேதஸாரமிதந் தந்த்ரம்' இந்தத்தந்திரம் (சித்தாந்தம்) வேதசாரமென்றும் 'வேதாந்தார்த்த மிதம் ஜ்ஞானம் ஸித்தாந்தம் பரமம் சுபம்.' இந்தச் (சித்தாந்த) ஞானம் வேதாந்தப்பொருளென்றும், பரமானந்தமாகிய சித்தாந்தத்தையென்றும், இரத்தினத்திரயபரீக்ஷை, "ஸித்தாந்தோ வேதஸித்தாந்தஃ பூர்வபக்ஷாஸ் ததோऽபரே" சித்தாந்தமேசித்தாந்தமாம். அதற்குவேறானவைகள் பூர்வபக்ஷங்களென்றும்

வியாசவாக்காகிய கந்தபுராணம்

" ஸநகாதிமுநீந்த்ரேப்யஸ் ஸ்ருஷ்டிவத்த்ராயாகமாந்திகம்
ரஹஸ்யமோமோர்த்தாட்யம் ஸித்தாந்தம் கதயந் ஸ்தித: "

(கைலாசத்திலே சிவபெருமான்) சனகர்முதலிய முனிசிரேஷ்டர்களுக்குப் (பதிபசுபாசமென்னும்) திரிபதார்த்தங்களுடன்கூடிய ரகசியமாயுள்ள ஆகமாந்தம் என்னும்சித்தாந்தத்தைச்சொல்லிக் கொண்டிருந்தார் என்றும், "ச்ருதிஸாரமய: ச்ரௌத:" என்றும் காமிகாதிஸமாக்யாத ஸித்தஸித்தாந்த ஸம்ஜ்ஞிக: என்றும்விளக்குகின்ற பிரமாணங்களினுண்மைபாற்றெறியலாம். சிவபிரானைச்சனகாதி நால்வர்வணங்கிச்சுவாமிந் வேதவேதாந்தங்கள் எல்லாப்பக்கங்களிலும் எங்கள்புத்தியை, இருட்பெருங்கடலில் நடுராத்திரியிற்பெருங்காற்றிலகப்பட்டாற்போல அலைக்கின்றது. அதனால் உண்மை ஞானங்கைவந்திலது. இம்மயக்கம் நீங்கும்படி அருளுக என்று வேண்ட அவர்கள்புத்திதெளியும்படி சிவாகமத்தின் மூன்றுபாதம் விளக்கிமுடிவில் ஞானபாதம் சிர்முத்திரையானுபதேசித்தருளினர். இதனைக்,(கந்தபுராணம்)

இருட்பெருங் கடலுள் யாமத் தெறிமருத் திடைப்பட் டாங்குப்
பொருட்பெருங் கடலாம் வேதம் புடைதொறு மலைப்பவித்நாள்
அருட்பெருங் கடலே யெய்த்தே மமைந்தில துணர்வி யாங்கள்
மருட்பெருங் கடலி னீங்கும் வண்ணமொன் றருடி யென்றார்

"முந்துறை சனகனாதி முனிவரர் தொழுது கேட்ப
அந்தமி லாகமத்தி னரும்பத மூன்றுங் கூறி"
"உரத்திற்,கரதலமொன் றுசேர்த்தி மோனமுத்திரையைக்காட்ட
புனிதன தருளாற் றந்தம் புந்தியி னொடுக்கம் பெற்றார்."
என்னும் வழுவற்ற திருவாக்குக்களாற் காண்க.

(சிவப்பிரகாசம்)

"புறச்சமயத் தவர்க்கிருளா யகச்சமயத் தொளியாய்ப் புகலளவைக் களவாகிப் பொற் பணிபோலபேதப், பிறப்பிலதா யிருள்வெளிபோற் பேதமுஞ்சொற் பொருள்போற் பேதாபேதமுமின்றிப் பெருநூல்சொன்ன,வறத்திறனால்விளைவதாயுடலுயிர்கண் ணருக்க னறிவொளி போற்பிறிவருமத் துவிதமாகுஞ்சிறப்பினதாய் வேதாந்தத் தெளிவாஞ் சைவசித்தாந்தத் திறனிங்குத் தெரிக்க லுற்றாம்" என்று திராவிடசித்தாந்த சிவபிரகாசசுருதி செவ்வே தெளிவிக்கின்றது.

இ—ள்; பதிப் பொருளானது, லோகாயதரும்; பௌத்தரில் மாத்தியமிகர், யோகாசாரர் சௌத்திராந்திகர், வைபாஷிகராகிய நால்வகையினரும்; ஆருகதராகிய சமணருமென்கின்ற புறப்புறச் சமயத்தார் அறுவரும்; தார்க்கிகன், மீமாஞ்சகன், ஏகாத்மவாதி, சாங்கியன், யோகி, பாஞ்சராத்திரி என்கின்றபுறச்சமயத்தார் அறுவரும்;(அவைதிக)பாசுபதம், மாவிரதம், காபாலம், வாமம், வைரவம், ஐக்கியவாத சைவமென்கின்ற அகப்புறச்சமயத்தார் அறுவருமாகிய பதினெட்டுவகையினரும் பதிபசுபாசங்களினுண்மையுணர்ந்து மேற்செல்லுதற்குரிய பரிபாகங்கைகூடப்பெறாத பாசப்பிணியினராய் அவரவர்கொள்கைகளிலேயே அழுந்திக்கிடத்தலால், குருடன்கண்ணுக்கு எல்லாம் இருளாய்த்தோன்றுதல் 'போல' அப்புறச் சமயத்தவர் அறிவுக்கு இருளாயும், பாஷாணவாதசைவம், பேதவாதசைவம், சிவசமவாதசைவம், சிவசங்கிராந்தவாதசைவம், ஈசுரவிகாரவாதசைவம், சிவாத்துவிதசைவமாகிய அறுவகை அகச்சமயத்தவரும் திரிபதார்த்தங்களை மேற்கொண்டவர்களாய், அவரவர்நிலைமைக்குத்தக்க பரிபாகங்கைகூடப் பெற்றுப்பசுநீக்கத்துக்குரியவர்களாயிற்றலால், அவர்கள

திவிளைவுக்கிசைந்த ஒளியாயும், அவரவர்களாற்கூறப்படுகின்ற அளவைகளுக்கும்(பிரமாணங்களுக்கும்) இடங்கொடுத்து நிற்கும் அவ்வவ்வளவினதாயும் அப்பதிப்பொருள் உயிர்களிடத்துச்சென்றுநிற்கும் நிலையானது, கேவலாத்துவிதிகளாகிய ஏகாத்மவாதிகள், பொன்னும் பணியும் போலென்றுகூறும் அபேதமில்லதாயும், துவைதவாதிகளாகியமாத்துவர்கள் இருளும்வெளியும்போலென்றுகூறும் பேதமில்லாதாயும், விசிஷ்டாத்துவிதிகளாகியவைஷ்ணவர்கள் சொல்லும் பொருளும் போலென்றுகூறும் பேதாபேதமில்லாதாயும், எம்மவர்கள் உடலும் உயிரும்போலென்றுகூறும் உவமைக்கிசைந்த அபேதமாயும்(ஒன்றாயும்), கண்ணும் சூரியனும் போலென்றுகூறும் உவமைக்கிசைந்தபேதமாயும்(வேறாயும்), ஆன்மபோதமுங்கண்ணொளியும் போலென்றுகூறும் உவமைக்கிசைந்த பேதாபேதமாயும்(உடனாயும்)பிரிவின்றிநிற்கின்ற சுத்தாத்துவிதமாகிய சிறப்புவாய்ந்ததாயும், வேதாந்தத் தெளிவாயுமுள்ளசைவசித்தாந்தப் பகுதியை ஈண்டுத்தெரிவிக்கத் தொடங்குவோமென்பதாம்.

அபேதம்.

ஏகாத்மவாதிகள், பிரமமொன்றே பலசீவர்களாகியது. அது பொன் ஒன்றே பலஆபரணங்களாதல்போலாமென்று கூறும் உவமைபொருத்தமில்லை. எதனாலென்றால்? பிரமந்தானேசீவர்களாயிற்றென்பது அவர்கருத்து. அது போற் பொன்னுந்தானே ஆபரணமானால் அவ்வுவமை ஒருவாறு பொருந்தும். பொன் ஒருகம்மியனாலுருக்கித் தட்டிநீட்டிச்செய்யுந் தொழிலால் ஆபரணமாகுமன்றித் தானே ஆவதெங்குமில்லை. எமது கொற்றங்குடியடிகள் "பொன்பணியாகை தன் பணியன்றே" என்றுவிளக்கியதுங்காண்க. இனி, அழுக்கற்றொளிரும்பிரமத்தை, அழுக்குப்பிடித்தசீவனுக்குதற்கு ஒருபேர்வழியைத்தேடிவைத்துக்கொண்டு அவர்கள்கூறிய உவமானப்பொருள்களாகிய பொன்பணிமுதலியவேறு பொருள்களுமுள்ளனவேயெனக்கொண்டு பிரமமொன்றேயுள்ளதென்னும் ஏகவாதத்தைமுழுதுங்கைவிட்டுக் கூறுவார்களாகில் அவ்வுவமானம் அம்மட்டில்ஒருவாறுபொருந்தும்; அதனிலும்பலவிரோதமுண்டு.

இனிப்பொன்னுயிருந்தபோதும் அதுபணியாய்வந்தபோது

ரம் நிறங்குணமுதலியனவேறுபடுவதில்லை. அதுபோலப்பிரமம் சீவனாய்வந்தபோதும், அப்பிரமத்தின்நிர்மலத்துவாதிசத்தகுணங் களே அச்சீவனிலிருக்கவேண்டும்; அப்படியின்றிமலசம் பந்தத் தாற்பிறப்பிறப்பாதி துக்கத்துட்கிடந்துவருந்துவது சீவனாதலா ல், இம்முறைநோக்கியும் அவ்வுவமைபொருந்தாமைகாண்க. இப் பழுதுகள் நோக்கியே அவர்கூறுமுவமையைப்"பொற்பணிபோ ல்பேதப்பிறப்பிலதாய்" என்று ஒதுக்கிவிட்டு அபேதமாய் (ஒன் றாய்) நிற்றற்கு எமது சைவசித்தாந்தவியல்புக்குரியதாய், உடலு முயிரும்போலென்னும் உவமானங்கூறியருளியதென்க.

இது, உடல்சீவனுக்கும் உயிர்பிரமத்துக்கும்உவமையாய் அவ்விரண்டும் கலப்பினாற்பிரிவின்றி ஒன்றாய்நிற்றலைபுணர்த்தியத ன்றி அவர்கள் பொன் பணியாய் வந்ததுபோலென்றுஉவமித்துச் சுத்தப்பிரமம் அழுக்குப்பிடித்த சீவனாய்வந்ததென்றுகூறுதல் போல உயிர் உடலாய்வந்ததென்றுவமித்துச்சிவம் சீவனாய் வந்த தென்றுணர்த்துவதன்று. உயிர் உடலாய் வருவதொருகாலத்து மில்லை; அதுபோலச் சிவம் சீவனாய்வருவதும் ஒருகாலத்துமில்லை யென்பதுதிண்ணமாயது. பேதம்.

மாத்துவர்கள் பிரமமும் சீவனும் வெவ்வேறாகவேஇருக்கும். இது, இருளும்வெளியும்போலாமென்றுகூறுவதும்பொருந்தாது எதனாலென்றால்? இங்கேவெளியென்றது சூரியனொளியை. அவ் வொளியுள்ளபோது இருளிராது இருளுள்ளபோது சூரியனொளி யிராது; அன்றியும், அவ்விருளும் ஒளியும் ஒன்றுக்கொன்றுப காரப்பொருள்களாம். அவ்விருள் ஒளியின் அபகாரத்தைப்பெற் று மாய்வது. இதுபோலப்பிரமம் உள்ளபோது சீவனில்லையென் றாவது சீவனுள்ளபோது பிரமம் இல்லையென்றாவதுகூறமுடியா து. பிரமமும் சீவனும் ஒன்றுக்கொன்றுநண்புடையன. பிரமம் உபகாரஞ்செய்வதும் சீவன் அவ்வுபகாரத்தைப்பெற்று வாழ்வே ன்டியதுமாம். இதனால், அவ்வுவமைபொருந்தாதென்க.

இனி இதற்குஎமது சைவசித்தாந்தமுறைப்படி கண்ணும் அருக்கனும்போலென்று உவமைகூறுமிடத்து அவ்விரண்டும் ஒன்றுக்கொன்று விரோதமின்றிஉபகாரம் செய்வதொன்றும்

அஃதப்பெறுவதொன்றுமாய்எப்போதுமுள்ளசிவாநுபவ-பனவாதலால் இவ்வுவமையேபொருத்தமாதல்காண்க.

## பேதாபேதம்.

வைஷ்ணவர்கள், பிரமமும் சிவனும்வேறாயும் ஒன்றாயுமிருக்கும். இது,சொல்லும்பொருளும்போலாமென் றுவமைகூறி அச்சொல்லும்பொருளும் வேறாயும் ஒன்றாயுமிருக்குமென்பது பொருந்தாது, எதனாலென்றால்? ஒருபொருளுக்கு இரண்டுதன்மை கொள்ளுதல்பொருந்தாமையாலென்க. சொல்லும் பொருளும் வேறாயிருப்பனவன்றி ஒன்றாயிரா. ஒருசொல்லைச்சொல்லும்போது அதன்பொருளும் உடன்விளங்கித்தோன்றுதல் பற்றி ஒன்றாயிருக்குமென்கின்றார். உண்மையன்று. இதனை,பசுஎன்னுஞ்சொல்லாக்கிலும் அதன் பொருள் நாலுகால்கள் இரண்டுகொம்புகள்முதலிய அவயவங்களுடன்கூடிய வடிவத்தையுடையதாய் வேறிடத்திலும் இருத்தலைநேரேகண்டுதெளியலாம். இதுபோலவேமற்றைச்சொற்பொருள்களுமிருக்கும். ஆதலால் இவ்வுவமை வேறாயிருத்தற்குப்பொருந்துமன்றி ஒன்றாயிருத்தற்குப்பொருந்தாது. இப்பொருந்தாமைநோக்கியே இதனையொழித்து எமதுசைவசித்தாந்தமுறைப்படி ஆன்மபோதமும் கண்ணொளியும் உவமையாகக்கொண்டதென்க. இவ்விரண்டும்பொருளால் வேறாயும் கண்ணொளி ஒருரூபத்தைப்பார்க்கும்போது ஆன்மபோதமுங்கலக்கப்பெற்றேபார்த்தலால் ஒன்றாயும் நிற்பதேயாம். இதனால் அவ்வுவமையே அபேதாபேதத்துக்குப் பொருத்தமாதல்காண்க. ஈண்டுக்கூறிய உடல் உயிர் கண் அருக்கன் அறிவுஒளியாகிய இம்மூன்றுவமைகளும் பரமசிவன் சீவாகளோடு கலப்பினாலொன்றாயும் பொருட்டன்மையால் வேறாயும் உயிர்க்குயிராதற்றன்மையாலுடனாயுமிருக்குநிலையை விளக்குகின்றன. இதனை,

"ஈறாய்முத லொன்றாயிரு பெண்ணாண்குண மூன்றாய்
மாறாமறை நான்காய்வரு பூதம்மவை யைந்தாய்
ஆறார்சுவை யேழோசையொ டெட்டுத்திசை தானாய்
வேறாயுட னானானிடம் வீழிம்மிழலையே."

என்னும் ஸ்ரீஞானசம்பந்த திருவாக்கும் விளக்குகின்றது.

# வேதாந்தத்தெளிவு

இது காறுங்கூறியவாற்றால் வேதாந்தத்தின் தெளிவுசுத்தாத்துவிதசித்தாந்த சைவமேயென்பது நிச்சயமாயது. இதனை யின்னு மோர்திராவிடசுருதியெடுத்துக் காட்டிமுடிப்பாம்.

"சூடிலை யென்னுந் தடவயல் நாப்பண்
அருள் வித்திட்டுக் கருணைநீர் பாய்ச்சி
வேதமென்னும் பாதவம்வளர்த்தனை
பாதப மதனிற் படுபயன் பலவே அவற்றுள்
இலைகொண் டுவந்தனர் பலரே யிலையொரீஇத்
தளிர்கொண் டுவந்தனர் பலரே தளிரொரீஇ
யரும்பொடு மலர்பிஞ் சருங்கா யென்றிவை
விரும்பினர் கொண்டுகொண் டுவந்தனர் பலரே
யவ்வா றுறுப்பு மிவ்வா று பயப்ப
வோருங்வே தாந்தமென் றுச்சியிற் பழுத்த
வாரா வின்ப வருங்கனி பிழிந்து
சாரங் கொண்ட சைவசித் தாந்தத்
தேனமு தருந்தினர் சிலரே யானவர்
நன்னிலை பெறுதற் கன்னிய னாயினு
மன்னவர் கமலப் பொன்னடி விளக்கிய
தீம்புன லமுத மார்ந்தன னதனால்
வேம்பெனக் கொண்டனன் விண்ணவ ரமுதே."

இதனால், சிவபிரான், சுத்தமாயையாகிய நிலத்திலே * திருவருளுங்கருணையும் வித்துநீருமாகநின்று வெளிவரச்செய்தருளிய வேதமாகிய விருக்ஷத்தி னுச்சியிற்பழுத்து முதிர்ந்துள்ளகனியினது ரசம்போன்ற சமயாதீத சைவசித்தாந்தசன்மார்க்கத்தைச் சார்ந்துய்தற்குரிய அருந்தவ வலியின்மையால், தார்க்கிகன்,

---

* சிவபிரான்சர்வசீவரிடத்தும் வைத்துள்ள இரக்கமே செயல்வகையால் திருவருளென்றும், கருணையென்றும் பாகுபாடுபெற்றது. திருவருளாவது அச்சீவர்களிற்பொய்ப்பற்றொழிந்து மெய்ப்பத்தியராய்ப் பரிபாகமுற்று, சத்திநிபாதம்பெற்ற உத்தமர்களைக்குறித்து [illegible] அநுக்கிரகமுறையில் தனித்துச்

மீமாஞ்சகன், சாங்கியன், யோகி, பாஞ்சராத்திரி, ஏகான்மவாதியாகிய அறுவரும், அவ்விருக்ஷத்திலுள்ள இலை தளிர் அரும்பு மலர் பிஞ்சு காய்போன்ற ஒவ்வோர்மதமேசிறந்ததாக மேற்கொண்டு நிற்றலால், அம்மதங்களுக்குமேல் உண்மைப்பொருளையெட்டிப்பார்த்தற்குரிய உண்மைஞானங் கைவரப்பெறாதவராய்க் "கொடிறும் பேதையுங் கொண்டது விடா" என்றபடிதாந்தாம் மேற்கொண்டமதங்களையே இறுகப்பற்றிநின்றுண்மைப்பயன் பெறாதொழிகின்றனர் என்பதும், சத்திநிபாதத்துத்தமபரிபாகிகளாகிய எம்பெருமக்களே அத்தகைய சமயாதீதசைவசித்தாந்த சன்மார்க்கஞ்சார்ந்து உண்மைப்பயனாகியசிவானுபூதிச்செல்வராய் வாழ்கின்றனரென்பதும், அதுகிடைக்கப்பெறாத என்போலிகளும் அப்பெரியார்திருவடியலம்பிய திவ்யதீர்த்தஞ் சிறிதுட்கொளப்பெற்றால், சுவர்க்காதிவிண்ணுலகவாழ்விற்சிறிதும் பற்றின்றி வெறுப்புற்று அப்பெரியாரைப்பற்றிநின்று சிவானுபூதிச்செல்வராவரென்பதுந்தெளிவாயது.

இவ்வேதாந்தத்தெளிவாகிய சைவசித்தாந்த சன்மார்க்கமேற்கொண்ட சிவானுபூதிப்பெருஞ்செல்வர்கள் அரிபிரமேந்திராதியர் பதவாழ்வையெல்லாம் ஒருபொருளாக நினைத்தலுஞ் செய்யாரென்பதும், சிவத்துவ விளக்கம் வாய்ந்த அவர்கள் அப்பெருந்தேவர்களாலும் வணங்கத் தக்கவர்களேயென்பதும் முதலியபெருஞ் சிறப்பெல்லாம் பின்வருந் திராவிடசூக்திகளாற் காண்க.

திருஞானசம்பந்தர்தேவாரம்.

மங்குறோய் மணிமாட மதிதவழு நெடுவீதிச்
சங்கெலாங் கரைபொருது திரைபுலம்புஞ் சாய்க்காட்டான்
கொங்குலா வரிவண்டி னிசைபாடு மலர்க்கொன்றைத்
தொங்கலா னடியார்க்குச் சுவர்க்கங்கள் பொருளலவே.

---

செல்வதாம். கருணையாவது அவரவர்பக்குவத்தளவிற் பயன்படுமாறு எவ்வுயிர்களிடத்தும் பொதுவாகப்பரந்துசெல்வதாம். இக்கருத்துவிளக்கவே சிவானுபூதிப்பெருஞ்செல்வராகிய குமரகுருபரஸ்வாமிகள் இக்கவியில் அருளினைத்தென்றும் கருணையை நீரென்றும் உருவகஞ்செய்தருளினார்.

இங்கே சுவர்க்கங்களென்றபன்மை அதற்குமேலுள்ளபிரம விஷ்ணுவாதியர் பதங்களையுமுணர்த்தும்.

திருநாவுக்கரசு தேவாரம்.

முழுத்தழன் மேனித் தவளப் பொடியன் கனகக்குன்றத்
தெழிற்பெருஞ் சோதியை யெங்கள் பிரானை யிகழ்திர்கண்டீர்
தொழப்படுந் தேவர் தொழப்படு வானைத் தொழுத பின்னைத்
தொழப்படுந் தேவர்தம் மாற்றொழு விக்குந்தன் றொண்டரையே.

இத்திருவிருத்தம், உலகராற்றொழப்படுகின்ற பிரமவிஷ்ணுவாதிதேவர்களாற்றொழப்படுகின்ற சிவபிரான், அத்தேவர்கள் தன்னைத்தொழுதுபரிபக்குவமுற்றபின்பு, தன்றொண்டரைத்தொழச்செய்துஉய்விக்கின்றனரென்று விளக்குகின்றது. இதனால், மேற்கூறிய சிவாநுபூதிச்செல்வர்களாகிய சிவனடியார்களை வணங்கிஉய்யும்பெரும்பாக்கியம்அத்தேவர்களுக்கும் முன்பு சிவபிரானைவணங்கிப் பக்குவமுற்றபின்புதான் கிடைக்குமென்பதுதெளிவாயது.

சுந்தரமூர்த்தி தேவாரம்.

இந்திரன் மால்பிரம னெழி லார்மிகு தேவரெலாம்
வந்தெதிர் கொள்ளவென்னை மத்த யானை யருள்புரிந்து
மந்திர மாமுனிவ ரிவ னாரென வெம்பெருமான்
நந்தமா ரூரனென்றா னொடித் தான்மலை யுத்தமனே.

பிரமவிஷ்ணுவாதிதேவர் சுந்தரமூர்த்திநாயனார் திருமுன்வந்து வலஞ்செய்துவணங்கிஅஞ்சலித்துநின்று வெள்ளையானைமீது எழுந்தருளும்படி பிரார்த்தித்தமையை அந்நாயனார் இப்பாசுர முதலியவற்றால் விளக்குதல் காண்க.

திருவாசகம்.

கொள்ளேன் புரந்தரன் மாலயன் வாழ்வு குடிகெடினும்
நள்ளேன் னினதடி யாரொடல் லானர கம்புகினும்
எள்ளேன் றிருவரு ளாலே யிருக்கப் பெறினிறைவா
உள்ளேன் பிறதெய்வ முன்னையல் லாதெங்க ளுத்தமனே
சுரவமுன் னோட்டக்கண் வேள்வித் தகர்தின்று நஞ்சமஞ்சி
ஆவெந்தாயென் றவிதா விடுநம் மவரவரே [மே
மூவரென் றேயெம்பி ரானொடு மெண்ணிவிண் ணாண்டுமண்—
தேவரென் றேயிறு மாந்தென்ன பாவந் திரிதவரே.

திருக்கோவையார்.

புரங்கடந் தானடி காண்பான் புவிவிண்டு புக்கறியா
திரங்கிடெந் தாயென் றிரப்பத்தன் னீரடிக் கென்னிரண்டு
கரங்கடந் தானொன்று காட்டமற் றாங்கதுங் காட்டிடென்றே
வரங்கிடந் தான்றில்லை யம்பல முன்றிலம் மாயவனே.

திருவிசைப்பா.

பாம்பணைத் துயின்றோ னயன்முதற் றேவர் பன்னெடுங் காலநிற் காண்பான், ஏம்பலித் திருக்க வென்னுளம் புகுந்த வெளிமையை யென்றுநான் மறக்கேன், தேம்புனற் பொய்கை வாளைவாய் மடுப்பத் தெளிதரு தேறல்பாய்ந் தொழுகும், பூம்பணைச் சோலை யாவணவீதிப் பூவணங் கோயில் கொண்டாயே.

துணுக்கென வயனு மாலுந் தொடர்வருஞ் சுடரா யிப்பால்
அணுக்கருக் கணிய செம்பொ னம்பலத் தாடிக் கல்லாச்
சிணுக்கரைச் செத்தற் கொத்தைச் சிதம்பரைச் சீத்தையூத்தைப்
பிணுக்கரைக் காணா கண்வாய் பேசாதப் பேய்களோடே.

திருப்பல்லாண்டு.

சொல்லாண்ட சுருதிப்பொருள் சோதித்த தூய்மனத் தொண்டருள்ளீர், சில்லாண்டிற் சிதையுஞ் சிலதேவர் சிறுநெறி சேராமே, வில்லாண்ட கனகத் திரண்மேரு விடங்கன் விடைப்பாகன், புல்லாண்டென்னும்பதங்கடந்தானுக்கே பல்லாண்டுகூறுதுமே.

பெரியபுராணம்.

மால யன்சத மகன்பெருந் தேவர் மற்று முள்ளவர்கண் முற்று நெருங்கிச், சீல மாமுனிவர் சென்றுபின் றுன்னித் திருப்பிரம்பினடி கொண்டு திளைத்துக்' காலநேர்படுதல் பார்த்தய னிற்பக் காதலன்பர்களை நாதர் புகும்பொற், கோல நீடுதிரு வாயில் விறைஞ்சிக் குவித்த செங்கைதலை மேற்கொடு புக்கார்.

கந்தபுராணம்.

கோல நீடிய விதிபதி வாழ்க்கையுங் குறியேன்
மேலை யிந்திர னரசினைக் கனவிலும் வெஃகேன்
மாலயன்பெறு பதத்தையும் பொருளென மதியேன்
சால நின்பதத் தன்மையே வேண்டுவன் றமியேன்.

திருவிளையாடற்புராணம்.

புள்ளியதோ லாடை புனைந்தரவப் பூணணிந்த
வெள்ளிய செங்கண் விடையா னடிக்கமலம்
உள்ளிய மெய்யன் புடையா ரருவருத்துத்
தள்ளிய செல்வத் தருக்கினை யென்செய்தாய்.

வண்டுளருந் தண்டுழாய் மாயோ னிறுமாப்பும்
புண்டரிகப் போதுறையும் புத்தே ளிறுமாப்பும்
அண்டர்தொழ வாழ்மன் னிறுமாப்பு மாலால
முண்டவனைப் பூசித்த பேறென் றுணர்ந்திலையால்.

இவைபோல் இன்னும் பற்பலவுள்ளன; விரிப்பிற்பெருகும். திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் திருநாவுக்கரசுநாயனார் சுந்தரமூர்த்திநாயனார் மாணிக்கவாசகசுவாமிகளாகிய சமயாசாரியர் நால்வர், திருநந்திதேவர் சனற்குமாரர் சத்தியஞானதெரிசனி பரஞ்சோதி மெய்கண்டார் அருணந்தி மறைஞானசம்பந்தர் உமாபதியாகிய சந்தானாசாரியர் எண்மர், அரி பிரமேந்திராதிதேவர்பல்லோர், வாமதேவர் பதஞ்சலி வியாக்கிரபாதர் உபமந்நியர் அகஸ்தியர் துர்வாசர் வியாசர் வசிட்டர் தேவகுரு நாரதராதி மகரிஷிகள் பல்லோர், மனுவாதி சோழ சேர பாண்டிய முடிமன்னர் பல்லோர், இன்னுமளவில்லோர் யாவரும் இச்சைவநெறியே மேற்கொண்டு விளக்கினர். இதுவே மற்றெம்மதங்களையும் புறக்கணித்துத்தள்ளிவிடாமல் படிமுறையில் அங்கங்களாகக்கொண்டு தான் அங்கியாய்நின்று தனது பூரணநிலை எவர்களாலும் எக்காலத்தும் மாறுபடாமல் அம்மதங்களெல்லாம் பரிவாரங்களாகத் தன்னைச் சூழ்ந்துநிற்ப மௌனமுடிசூடித் தத்துவாதீதஉத்தமோத்தமசுத்தராஜாங்கத்தமர்ந்திருந்து சிவச்செங்கோல் வளர்ப்பதாம். இதனை, "விண்ணவரிந்திரன்முதலோர்" "இயல்பென்றுந் திரியாமல்" என்பனவாதியதாயுமானசுருதிகள் விளக்குகின்றன, மற்றையமதங்களெல்லாந் தம்மளவில் தம்மைமாத்திரம்பெரிதென்றுகூறிக்கொண்டு தனித்தனியாக நிற்பனவன்றி அயல்மதங்களைத்தழுவிக்கொள்வனவல்ல. அதனை, மற்றைமததெய்வங்களைத்

தம்முட்கொள்ளாத அவ்வக்கோயில்களிலுங் காணலாம். இதனு லும், அம்மதங்களும் அத்தெய்வங்களும் அந்தந்தமட்டிலுள்ள ஏகதேசவியாபகமுள்ளனவே என்பது செவ்வேதெளியலாம் நமது சைவசித்தாந்தசன்மார்க்கம் ஒன்றுதான் மேற்கூறியபடி மற்றெம்மதங்களையுந் தன்கீழ்வரிசையாகத் தழுவிக்கொண்டு மேலாய் விளங்குகின்றது. இதனை, முழுமுதற்கடவுளாகிய சிவபிரான் வீற்றிருந்தருளுகின்ற திருக்கோயில்கள் இலக்குமிநாயக விஷ்ணுவாதிய அந்நியமத தெய்வங்களையுந் தம்முட்கொண்டு விளங்குதலாலுங் காணலாம். இதனாலும் இச்சைவசமயமும் இச்சமய தெய்வமாகிய மகாதேவனும் சர்வவியாபகநிலையில் விளங்குவது செவ்வேதெளிவாம் ஆதலால்; தாந்தாம் நிற்கும் நிலைநின்றும் மேற்சென்றுய்வ தொன்னெறியே விரும்பும் புத்திமான்கள்இதுகாறுங் கூறிய பிரமாணங்களெல்லாவற்றையும் முன்னுக்குப்பின் விரோதம் வராமல் உண்மை இது உபசாரம் இதுவென உள்ளபடி கடைப்பிடித்துப் பக்ஷபாதமின்றி நடுநிலை நின்று தெளிந்து, அத்தெளிவில் முடிந்து நின்ற சித்தாந்த நிலையையே இறுகப்பற்றிப் பழைய வாசனைகளால் மனஞ்சலியாது உறைத்துநின்றுய்யும் வண்ணந் திருவருளைப் பிரார்த்திக்கின்றேன்.

திங்களொடு கங்கைபுனை யங்கணனார் செப்புதிரு வருளினோடு தங்குருவாம் பரஞ்சோதி முனிவனினி தறைகுறிப்புந் தகவாக்கொண்டு, துங்கமுறு சிவஞான போதமும்வார்த் திகப்பொழிப்புஞ் சுழிப்புநீர்சூழ்ந், திங்கமருந் தமிழ்நாடு வீடுபெறப் புரிகுரவ ரிருதாள் போற்றி.

## வேதாந்தத் தெளிவு முற்றுப்பெற்றது.

மெய்கண்ட தேவன் திருவடிகளே சரணம்.

திருச்சிற்றம் பலம்.



சிவமயம்.

# அநுபவம்.

இனிமேற்கூறிப்போந்தவேதாந்தத்தெளிவாகிய சைவசித்தாந்தசந்மார்க்கஞ் சார்ந்து நிற்கும் எம் பெருமக்கள் சைவநல முழுதும்ஐயந்திரிபற ஆராய்ந்துணர்ந்து சிவாநுபூதி சுவாநுபூதியாகப் பெற்று வாழ்தற் கின்றியமையாச் சிறப்பினதென மேற்கொண்ட சிவசாஸ்திரம் சிவஞானபோதம்.

இப்பெருஞ்செல்வர்கள்,

"வாழ்வெனுமையல்விட்டு வறுமையாஞ்சிறுமைதப்பித்
தாழ்வெனுந்தன்மையோடுஞ் சைவமாஞ்சமயஞ்சார்ந்து"

திருவருளால் மலவலிமுழுதுமொழியப்பெற்று அருளிலடங்கி நின்றுஇன்புறுகின்ற சிவஞானபோதாநுபவநிலையைத், "தாமின்புறுவ துலகின் புறக்கண்டு—காமுறுவர் கற்றறிந்தார்" என்றபடி தம்மைவந்தடுக்கின்ற நிர்வாணசிவதீக்ஷாதிகாரிகளுக்கும் விளக்கி இன்புற்று வாழச்செய்வார்கள். அதனைச் சிறிது விளக்குவாம்.

# சிவஞானபோதம்.

### மங்கலவாழ்த்து.

கல்லா னிழன்மலை
வில்லா ரருளிய
பொல்லா ரிணைமலர்
நல்லார் புனைவரே.

இதன்பொருள். (அருள்வடிவாகிய) கல்லாலநிழலில் (வீற்றிருந்தருளி, நந்திபிரானுக்கு இந்நூலால்) மலைவுதீர்த்தருளிய

சிவபிரான் அருளும்பொருட்டு, திருவெண்ணெய்நல்லூரிலே சுயம்புமூர்த்தியாய்வீற்றிருந்தருளுகின்ற விநாயகப்பெருமானுடைய ஞானக்கிரியாசத்திகளாகிய திருவடிமலர்களைக், கேட்டுச் சிந்தித்துத் தெளிந்த மெய்யன்பர்கள் தமது ஞானக்கிரியாசத்திகளுக்கு வியாபகமாக்கொண்டு தாடலைபோலடங்கிநிற்பரென்பதாம்.

## அவையடக்கம்.

தம்மை யுணர்ந்து தமையுடைய தன்னுணர்வா
ரெம்மை யுடைமை யெமையிகழார்—தம்மை
யுணரா ருணரா ருடங்கியைந்து தம்மிற்
புணராமை கேளாம் புறன்.

இ—ள். ஆன்மாக்களாகிய தமதியல்பையுணர்ந்து தம்மையுடைய தலைவனாகிய சிவனையுணரும் சிவாநுபூதிப்பெருஞ்செல்வர்கள், எம்மையுடையவராதலால் எமது குற்றங்கணிக்கிக் குணங்கொண்டு கோதாட்டுவதன்றி) எம்மையிகழார் (ஆதலால் எம்மாற்செய்யப்படும் நூலையும் கைக்கொள்வர்)தம்மையுணராதார் தலைவனையுமுணரமாட்டார் (ஆதலால் அவர்கள்) தம்முள் ஒற்றுமைப்படாமையால் மாறுபாடுடையராவர். (அவர்கள் எம்மையும் எம்மாற்செய்யப்படும் நூலையும் இகழ்ந்துரைக்கும்)புறம்பாகிய சொல்லை (நாம்)ஒருபொருளாக்கொள்ளோம் என்பதாம்.

## நூல்.

இந்நூலாசிரியர், தமிழுலகம் உய்யத் திருவுளங்கொண்டு, முதல்வன் சிவாகமங்களிற்கூறும் ஞானபாதப்பொருள்களின் மலைவுதீர்த்தற்பொருட்டருளிச்செய்த முதனூலிலுள்ளபடி இத்தமிழ்நூலைப் பொதுஉண்மையென்றிரண்டதிகாரமாக்கிப், பொதுவைப் பிரமாணவியல் இலக்கணவியல் எனவும், உண்மையைச் சாதனவியல்பயனியல் எனவும் நால்வகைப்படுத்திப் பொதுவில் பதி பாசம் பசுமூன்றும் உண்மைப்பொருள்களென்பதற்குப் பிரமாணம்மூன்றுசூத்திரங்களாலும், அப்பதிபசுபாச இலக்கணங்கள் மூன்றுசூத்திரங்களாலும், உண்மையில் சாதனஞ்செய்து பயன்பெறுதற்குரிய அதிகாரியினியல்பும், சாதனத்தினியல்பும், சாதிக்கு முறைமையும் மூன்றுசூத்திரங்களாலும், அவ்வதிகாரி

யால் பெறப்படும்பயனாகிய பாசநீக்கமும், சிவத்தை அடைதலும், அடைந்தோர் தன்மையும் மூன்றுசூத்திரங்களாலும் விளக்குவாராய் முதலில் பதி யுண்மைக்குப் பிரமாணங்கூறியருளுகின்றார்.

## முதற்சூத்திரம்.

அவனவ ளதுவெனு மவைமூ வினைமையிற்
றோற்றிய திதியே யொடுங்கிமலத் துளதா
மந்த மாதி யென்மனார் புலவர்.

இச்சூத்திரத்தின் கருத்துரை. சங்காரகாரணனாயுள்ள முதலையே முதலாகவுடைத்து இவ்வுலகம் என்பதுணர்த்துதனுதலிற்று.

இ—ள். அவன் அவள் அது என்னும் பகுப்பினதாய்க் காணப்படுமுலகத்தைத் தோற்றி நிறுத்தி ஒடுக்குங்கடவுள் மற்றையரல்லர்; சங்காரக்கடவுளாகிய சிவபிரானேயென்று பொதுநீக்கிச் சிறப்பாகப் பிரமாணத்தால் உணர்த்துகின்றதென்பதாம்.

இச்சூத்திரப்பொருள்; உலகம் சித்தும் சடமுமென்றிருவகையாம். சித்து—சிற்றறிவுடைய உயிர்கள். சடம்—சரீராதிகள். இவ்வுலகம் விரிவாயிருத்தலால் பிரபஞ்சமென்பதாம்.(பஞ்சம்—விரிவு. பிர—உபசர்க்கம்,) இப்பிரபஞ்சம், அவன், அவள், அது, என்று சுட்டி அறியப்படும் அவயவப்பகுப்பினதாய்த் தோன்றல் நிற்றல் ஒடுங்கலாகிய முத்தொழிற்படுதலால் ஒருவரால் தோற்றப்பட்ட உள்பொருளேயாம். எவராலெனின்? முன் ஒடுக்கிய கடவுளால் தோற்றப்பட்டதேயாம். தோன்றுவது எதற்கெனில் மலம் நீங்குதற்பொருட்டேயாம். ஆதலால் அச்சங்காரக்கடவுளே முதற்கடவுள், மற்றையரல்லர் என்று பெரியார் கூறுவரென்பதாம்.

இச்சூத்திரம், "அவனவள தெனு மவைமூ வினைமையின்" எனவும், "தோற்றிய திதியே ஒடுங்கி யுளதாம்" எனவும், "அந்த மாதி யென்மனார் புலவர்" எனவும் மூன்றதிகரணமாகப் பகுக்கப்படும். அதிகரணமாவது தான் மேற்கொண்டபொருளும் (மேற்கோளும்) அதன்கணுண்டாகும் ஐயமும் அதற்குப் பிறர் கூறும் பக்ஷமும், அதனை மறுத்துவைக்கும் சித்தாந்தத்துணியும்

அதற்கு எடுத்துக்காட்டும் இயைபுமாகிய ஐந்தையுந் தன்னிடத்துக்கொண்டதாம்.

## முதலதிகரணம்.

மீமாஞ்சகரும் உலகாயதரும், உலகம் நிற்பது நேரே காணப்படுதல்போலத், தோன்றுவதும் அழிவதும் ஒன்றொன்றாத் தோன்றி அழிவதன்றி முழுதுந்தோன்றி முழுதுமழியக்கண்டிலமாதலால், தோற்றவொடுக்கஞ் சந்தேகமாம்; அன்றியும் நித்தியமாய்க் காணப்படும் உலகம் முத்தொழிற்படுமென்பது பொருந்தாதென்று கூறுவது நோக்கி "அவனவ ளதுவெனு மவைமூவினைமையின்" என்ற சூத்திரமுதற்பாகத்தைப் பதம்பிரித்துரைக்கும் மேற்கோள்.

கண்டு உளதாய் ஒருவன் ஒருத்தி ஒன்றென்று சுட்டப்பட்ட பிரபஞ்சம் உற்பத்தி திதி நாசமுடைத்தென்றது.

இ—ள். மூவித அவயவப்பகுப்பினதாயும் அம்மூவகை பலவேறாய்ச் சடமாயும் முயற்கோடுமுதலிய பொய்போலாகாமல் மெய்யாகச்சுட்டி அறியப்படுவதாயுமுள்ளபிரபஞ்சம் இம்மூன்று காரணங்களாலும் தோன்றிநின்றழிதலையுடையதென்பதாம்.

உலகாயதர் தோன்றல் அழிதல் நேரேகாணப்படாமையால் பிரத்தியக்ஷமல்லாத பிரமாணம் எமக்குடன்பாடன்றென்றுகூறுவதுநோக்கிப் பிரத்தியக்ஷத்தாலும் மேற்கோளைச்சாதிக்குமேது.

தோற்றமும் ஈறும் உள்ளதன்பாலே கிடத்தலின்.

இ—ள். உற்பத்தியும் நாசமும், நேரே காணப்படும் திதியின் பக்கத்தே காணக்கிடத்தலால் அப்பிரபஞ்சம் முத்தொழிலுடையதே என மேற்கொண்டதென்பதாம்.

நேரே காணப்படும் திதியின் பக்கத்தில் மற்றிரண்டும் கிடப்பதெப்படியென்றுகூறுவதுநோக்கி ஏதுவை வலியுறுத்தும் உதாரணம்.

பூதாதி யீறு முதலுந் துணையாகப்
பேதாய் திதியாகும் பெற்றிமையி—னோதாரே
ஒன்றொன்றிற் றோன்றி யுளதா யிறக்கண்டு
மன்றென்று முண்டென்ன வாய்ந்து.

இ—ள். பிரத்தியக்ஷப்பிரமாணத்தாலும் அறியமாட்டாத மடவோனே, பஞ்சபூதங்களாகிய முதற்காரணத்தினின்றுந்தோன்றி நேரே காணப்படும் உலகம் ஒன்றிற்றோன்றித்தானிற்கின்றது. தோன்றியது அழியும் ஆதலால் மத்தியில் நிற்பதாகிய திதி முன்னும்பின்னும் சிருட்டி சங்காரங்களைத் துணையாக்கொண்டு தான் நிகழ்கின்றது. அங்ஙனமாயினும் ஒன்றுதோன்ற ஒன்று நிற்ப ஒன்று அழிவதன்றி ஒருங்கே தோன்றிநின்று அழியக் கண்டிலமென்பாயாகில், ஏகசாதிப்பயிர்முதலியன ஒவ்வொரு காலவிசேடங்களில் முழுதுந்தோன்றிநின்று முழுதும் அழிதலைக்கண்டிருந்தும், அவ்வாறேஉலகமும் முழுதுந்தோன்றிநின்று முழுதும் அழிபுங்காலவிசேடமுண்டென்று சொல்லாயோ உன் பேராமடைமையில்லாதோவென்பதாம்.

## இரண்டாமதிகரணம்.

இனி இல்லதற்குத் தோற்றமின்மையின் உள்ளதற்குச் செய்வோரின்றிச் செய்வினையின்மையின் ஒடுங்கினசங்காரத்தினல்லது உற்பத்தியிலலை என்றது.

இவ்வதிகரணம் "தோற்றிய திதியே ஒடுங்கியுளதாம்" என்ற இச்சூத்திரத்தின் இரண்டாம்பாகத்தைப் பதம்பிரித்துரைத்துமேற்கொண்டதாகும். இதனை உரையாசிரியர் "திதியே" எனவும் "தோற்றிய" எனவும், "ஒடுங்கியுளதாம்" எனவுமூன்றதிகரணமாகப் பகுத்து உரைக்கின்றார்.

(க) புத்தர், உலகம் முத்தொழிற்படுமாயினும் அது இல்பொருளாய் ஒவ்வொன்றும் அதனதன் சார்பிலே தானேதோன்றி அழியுமியல்பினதே. ஆதலால் அது ஒரு முதல்வனையுடையதென்றல் பொருந்தாதென்றுகூறுவதுநோக்கி "திதியே" யென்னும் பாகத்தைப் பதம்பிரித்துரைக்கும் மேற்கோள்.

இனி, உலகம் உள்ளதென்றது,

இ—ள். மேற்கூறி நிச்சயிக்கப்பட்ட உலகம் உள்பொருளே என்பதாம்,

உலகம் உள்பொருளாவதெப்படியென்று கூறுவதுநோக்கி மேற்கோளைச் சாதிக்கும் ஏது.

# சிவஞானபோதம்.

இல்லதற்குத் தோற்றமின்மையின்.

இ—ள். உலகம் இல்பொருளானால் முயற்கோடுபோல முக்காலத்தும் தோன்றுவதில்லை உருவமாய்த்தோன்றுதல் காணப்படுதலால் அது ஒரு கடவுளாற் றோற்றப்பட்ட உள்பொருளே என மேற்கொண்டதென்பதாம்.

(உ) நிரீச்சுர சாங்கியர் உள்ள உலகம் அதன்முதற்காரணத்தில் தானேதோன்றி அழியும் அதற்கு ஒருகடவுள்வேண்டாமென்றுகூறுவதுநோக்கித் "தோற்றிய" என்றபாகத்தைப்பதம்பிரித்துரைக்கும் மேற்கோள்.

இனி, உலகஞ் செய்வோனையுடைத்தென்றது.

இ—ள். உலகம் தானே தோன்றிநின்றழியாததாதலால் அதனைத் தொழிற்படுத்தும் நிமித்தகாரணனை யுடையதென்பதாம்.

அதற்குப் பிரமாணமென்னையென்றுகூறுவதுநோக்கி மேற்கோளைச் சாதிக்கும் ஏது.

உள்ளதற்குச் செய்வோரின்றிச் செய்வினையின்மையின்.

இ—ள். மண்ணிற் சூக்குமமாயுள்ளகுடம் தூலமாய் வருதற்கு வனைதற் றொழில்நிகழவேண்டும், அது, குயவனின்றித்தானே நிகழாது. அதுபோல, மாயையிற் சூக்குமமாயுள்ள உலகம் சடமாதலால் தூலமாய்வருதற்கு அத்தொழில்நிகழவேண்டும். அது சித்தாகிய நிமித்தகாரணனின்றித் தானேநிகழாது ஆதலால் உலகஞ் செய்வோனை உடையதே எனமேற்கொண்டதென்பதாம்.

(ங) வைஷ்ணவர்முதலியோர், உலகைத்தோற்றுவிப்பானொருவனுண்டென்றகருத்தா விஷ்ணுபிரமன்முதலியோரில் ஒருவராதலமையுமென்று கூறுவதுநோக்கி "ஒடுங்கியுளதாம்" என்ற பாகத்தைப்பதம்பிரித்துரைக்கும் மேற்கோள்.

இனி, ஒடுங்கின சங்காரத்தினல்லது உற்பத்தி இல்லை என்றது.

இ—ள். உலகம் தான் ஒடுங்கிய சங்காரகருத்தாவினின்று தோன்றுமன்றி வேறுவழித் தோன்றாதென்பதாம்.

அதற்குப் பிரமாணமென்னை? என்றுகூறுவதுநோக்கி மேற்கோளைச்சாதிக்கும் ஏது.

ஆண்டு ஒடுங்குதலின்.

இ—ள். உடைந்து மண்ணில்ஒடுங்கியகுடம் மீளவும் மண்ணிலன்றி வேறுவழித்தோன்றாதவாறு போலச் சங்காரக்கடவுளிடத் தொடுங்கிய உலகம் அக்கடவுளிடத்திற்றான் றோன்றுமெனமேற்கொண்டதென்பதாம்.

புத்தர், உலகம் உள்பொருளானால் உள்ளது உள்ளபடியிருக்கும் உண்டாகவேண்டுவதில்லை, உண்டாகுமென்னிற்சற்காரியவாதம் அடுக்காதென்று கூறுவது நோக்கி "இல்லதற்குத்தோற்றமின்மையின்" என்ற ஏதுவை வலியுறுத்தும் உதாரணம்.

இலயித்த தன்னிலில யித்த தாம லத்தா
லிலயித்த வாறுளதா வேண்டும்

இ—ள். உலகம் உள்ளதாயினும் சங்காரகாலத்திலொடுங்கியதாதலால் ஒடுக்கிய கடவுளினின்றும் சிருஷ்டிகாலத்தில் தோன்றும். ஒடுங்கியது மீளத்தோன்றவேண்டா. வேண்டுமேல் ஒடுங்காதிருக்கலாம். ஒடுங்குதலும் தோன்றுதலும் எதற்கெனில்? கர்மமலம்பக்குவமாதற்கு ஒடுங்கி, ஆணவமலம்பக்குவமாதற்கு மீளத்தோன்றும். ஆனால் முன்ஒடுங்கியதுநாசமாகப் பின்வேறுபொருள் தோன்றுமென்னாமல், அதுவே தோன்றுமென்பதற்குப் பிரமாணமென்னெனில்? நிலத்தில் எந்தவிதைவிதைக்கப்பட்டதோ அந்தப்பயிரேவெளிவருதல்போல, முன்ஒடுங்கிய உலகமேமீண்டு வருமென்பதேபொருத்தமாதலால் அதுவேயாவராலும் விரும்பப்படுஞ்சம்மதமென்பதாம்.

அன்றியும், முன்ஒடுங்கியஉலகம் ஆணவமலபக்குவம் பெறாமல் ஒடுங்கினமையால் அப்பக்குவம்பெறுதற்கு அதுவே மீண்டுதோன்றவேண்டும். அப்படியன்றி அது நாசமாதலும் வேறு தோன்றுமென்றலும் பொருத்தமின்மை காண்க.

வைஷ்ணவர், காரியம் காரணத்தில் ஒடுங்குமென்னுஞ்சற்காரிய முறைப்படி உலகமாகிய காரியம் அதன்காரணமாகிய பிரகிருதியில் ஒடுங்கும். அப்பிரகிருதிவிஷ்ணுவின்வடிவமாதலால் அவனிடத்து ஒடுங்குமென்பதே பொருத்தம்; சங்காரக்கடவுளிடத்து ஒடுங்குமென்பது பொருந்தாதென்று கூறுவதுநோக்கி முன்

"ஒடுங்கினசங்காரத்தின்" என்றும், "இலயித்த தன்னில்" என்றுங்கூறிய குறிப்பேதுவை வலியுறுத்தும் உதாரணம்.

இலயித்த

தத்திதியி லென்னி லழியா தவையழிவ
தத்திதியு மாதியுமா மங்கு

இ—ள். உலகம் ஒடுங்கியது பிரகிருதிமாயாரூப விஷ்ணுவினிடத்தென்பாயானல், அசுத்தமாயா சுத்தமாயாபுவனங்கள் விஷ்ணுவியாபகத்துக்குமேலுள்ளனவாதலால், கீழுள்ள ஏகதேசமாத்திரமன்றி முழுதும் அவனிடத்து ஒடுங்கா. முழுதும் ஒடுங்குவதெங்கெனில்? அம்மாயைகள் முழுதுங்கடந்தவனும் அவ்விஷ்ணுபிரமர்கள்தோன்றுதற்குக்காரணனுயுள்ள சங்காரக்கடவுளிடத்திலேயே அவ்விருவரோடும் ஒடுங்கு மென்பதாம்.

சாங்கியர், உலகுக்கு நிமித்தகாரணனுகியமுதல்வனொருவனுண்டெனக்கொள்ளினும், எது எதனில் ஒடுங்குமோ அது அதனிற்றோன்றுவதே (அவிநாபாவம்) இன்றியமையாததாதலால், மாயையில் ஒடுங்கிய உலகை மாயையே தோற்றுவிக்கும்; கடவுள் வேண்டாவென்று கூறுவது நோக்கி "உள்ளதற்குச் செய்வோரின்றிச் செய்வினையின்மையின்" என்ற ஏதுவை வலியுறுத்தும் உதாரணம்.

வித்துண்டா மூல முளைத்தவா தாரகமா
மத்தன்றா னிற்ற லவர்வினையால்—வித்தகமாம்
வேட்டுவனு மப்புழுப்போல் வேண்டுருவைத் தான்கொ
கூட்டானே மண்போற் குளிர்ந்து. [டுத்துக்

இ—ள். 'முளை விதையிற் றோன்றுவ துண்மை யாயினும்' விதை, தனக்குஆதாரமாகிய நிலத்திற்கிடக்க, நிலங்குளிர்ந்தபின்புதான் அவ்விதையில் முளைதோன்றும். விதை தனித்துநின்று முளையைத்தோற்றுது அதுபோல, மாயை தனக்குஆதாரமாகிய சிவசத்தியிற்கிடத்தலால் அச்சத்தி உலகம் தோன்றுகவென்று நினைத்தபின்புதான்; அவ்வக்காரியங்களை அவ்வவ்வியல்பிற் பிறழாமற் றோற்றுஞ்சாதுரியமுடையதாம். தனித்துநின்று தோன்

ருது. ஆதலினால் அச்சத்தியைப் பிரியாதசத்தனாகிய இறைவனிடமே உலகம் ஒடுங்கித் தோன்றியதாம். இதனைக் கிழங்கிற் றோன்றிய தாமரையை அக் கிழங்குக்கு ஆதாரமாகிய சேற்றிற்றோன்றியதெனப் பொருள்படப் பங்கஜம்" என்பதனாலும் அறிக. பங்கம்—சேறு. ஜம்—தோன்றுவது. அன்றியும், மாயை சடமாதலால் உலகைத் தானாகத்தோற்றாது, நிமித்தகாரணனாகிய இறைவனே ஆன்மாக்களின் வினைக்கீடாகத் தோற்றுவிப்பன். வினைவசத்தாற், றோற்றுவிப்பனேல், தன்வயத்தனாகான் போலுமெனில்? குளவிவண்டு எடுத்துவைத்த புழு குளவியையே நினைத்துக்கொண்டிருந்து விரும்பியபடி, அவ்வினைக்குத்தக்க அவ்வடிவினை அக்குளவிகொடுத்தல்போல, இறைவனும் அவரவர் விரும்பியபடி, வினைக்குத்தக்க வடிவும் பயனுங்கொடுப்பனாதலால் இறைவன் தன்வயத்தனென்பதற்கிழுக்கில்லையென்பதாம்.

இங்கே விதையில்முளைதோன்றல்போல் என்றதனால்விதையில்லையேல் முளைதோன்றாதவாறுபோல மாயையில்லையேல் உலகந்தோன்றாதென்பது விளக்கமாம். இதனால், பிரமமே உலகமாய்ப் பரிணமித்ததென்னும் பரிணாமவாதிகளையும், மாயை உண்டென்றும் இல்லையென்றுஞ் சொல்லமுடியாத அநிர்வசனமென்னும் மாயாவாதிகளையும், மாயை முதல்வனின்வேறன்றென்னும் சிவாத்துவிதிகளையும் பாஞ்சராத்திரிகளையும் மறுத்தவாறாயிற்று.

முதற்கடவுளுண்டெனக் கொள்ளினும், அவன், சிருட்டி முதலியபலவேறு தொழில்செய்வனேல் விகாரியாய்ப் பந்தமுறுவனென்று கூறுவதுநோக்கி ஏதுவை வலியுறுத்தும் உதாரணம்.

நோக்காது நோக்கி நொடித்தன்றே காலத்திற்
றாக்காது நின்றுளத்திற் கண்டிறைவ—னாக்காதே
கண்ட நனவுணர்விற் கண்ட கனவுணரக்
கண்டவனி லிற்றின்றாங் கட்டு.

இ—ள். காலமானது, இறந்தகாலம் நிகழ்காலம் எதிர்காலம் வருஷம் மாதம் முதலியவாக வேறுபட்டுப் பலதொழில்கள் செய்தும் விகாரமின்றி நிற்றல்போல, முதல்வனும் விகாரமின்றி நின்று சிருஷ்டியாதிகளைக் கருவிகளாற் செய்யாமல் நினைப்புமா

த்திரத்தாற் செய்தலால் விகாரப்படுதலும் அவற்றாற் பந்தப்படு தலுமிலன். இது படித்தநூலிலுள்ள சொல்லும் பொருளும் உள்ளத்திற்றோன்றும்போது அவ்வுள்ளம் அச்சொற்பொருட்களிற் றொடக்குறாமையும், ஒருவன் கனவிற்கண்டவைகளை நனவில்விளங்க அறியும்போது அவன் அக்கனவிஷயங்களிற்றொடக்குறாமையும் போன்ற இத்தன்மைத்தென்பதாம்.

## மூன்றாமதிகரணம்.

அநேகேசுரவாதிமுதலியோர், சங்காரக்கடவுளே உலகிற்கு முதல்வனென்பதுண்மையாயினும், தேர்முதலியன பலர் செய்தல்போல, அவற்றினும் அதிவிசித்திரவுலகிற்கு முதல்வர் பலருளரென்று கூறுவதுநோக்கி "அந்தமாதி" என்ற மூன்றாம்பாகத்தைப் பதம்பிரித்துரைக்கும் மேற்கோள்.

இனிச், சங்காரமே முதலென்றது,

இ—ள். சங்காரகர்த்தா ஒருவனே உலகிற்கு முதற்கடவுளென்பதாம்.

அதற்குப் பிரமாணமென்னை? என்பாரைநோக்கி மேற்கோளைச் சாதிக்கும் ஏது.

சுட்டுணர்வாகிய பிரபஞ்சஞ் சுட்டுணர்வின்றி நின்ற சங்காரத்தின் வழியல்லது சுதந்திரமின்றி நிற்றலான்.

இ—ள். ஒன்றொன்றாச் சுட்டி அறியும் சேதனவுலகர் சுட்டின்றி எல்லாம் ஒருங்கே அறியுஞ் சுதந்திரனாகிய சங்காரகர்த்தா ஒருவன் வழிப்பட்டுப் பரதந்திரராய் நிற்பதன்றித் தமக்கெனச் சுதந்திரமுடையரல்லராதலால் சுதந்திரனாகிய அவனே முதல்வனன்றிப் பரதந்திரராகிய மற்றையர் முதல்வராகாரென மேற்கொண்டதென்பதாம்.

தேர் முதலியன பலர்செய்யினும் ஒரு தலைவனேவலாற்செய்வசாதலால் அவரெல்லாம் முதல்வராகாமல் ஏகியவொருவனே முதல்வனாதல்போலச், செய்தும் செய்வித்தும் எத்தொழிற்குங் கருத்தாவாய் நிற்கும் முதல்வன் சங்காரகாரணனொருவனே என்பது கருத்து.

அங்ஙனமாயினும், சுட்டியறியு முலகர் பலராதல்போல, ஒருங்கேஅறியும் சங்காரகருத்தாவும் பலரென்றுகொள்வோம் அவ்வாறன்றி ஒருவனே என்றற்குப் பிரமாணமென்னையென்று கூறுவதுநோக்கி எதுவைவலியுறுத்தும் உதாரணம்.

ஒன்றலா வொன்று ளதாகி நின்றவா
றென்றலா வொன்றில்லை யீறத—லொன்றலா
வீறே முதலதனி னீறலா வொன்றுபல
வாறே தொழும்பாகு மங்கு.

இ—ள் தானோருலகப்பொருளாகாது உலகாதீதனாகிய ஒப்பற்ற சங்காரக்கடவுளாலேயே உலகம் தோன்றிநிற்றல் போல அக்கடவுளிடத்திலேயே ஒடுங்குதலால் அவன் ஒருவனே உலகிற்கு முதல்வனாம். ஆனால் சேதன உலகர், முத்தியிற் சிவசமமாதலால், அவர்களும் முதல்வராவரெனில்? முதல்வன்போல நித்தியராகிய அவர்கள், அம்முத்தியிலும் பலவாற்றானும் முதல்வனுக்கு அடிமைகளே என்பதாம்.

உலகம் சடமாதலானும் பிரம விஷ்ணுவாதி சீவர்களாகிய சேதனஉலகர், சுட்டுணர்வினராய் ஒன்றையுந் தாமாகஅறிதலுஞ் செய்தலுமில்லாத மலபெத்தராதலானும்' இவ்விருவகைச் சேதனஅசேதனஉலகைத் தொழிற்படுத்துபவன் அவற்றின் வேறாய் அவற்றைக் கடந்தவனாயிருந்தாற்றானமையுமாதலானும், பிரகிருதிமாயாரூபியாகிய விஷ்ணுமுதலியோர் அதன்மேலுள்ளமாயைகளைக் கடந்தவரல்லராதலானும், சங்கரிப்பவனே அம்மாயை மூன்றையுங்கடந்து மேனிற்பவனாதலானும் அத்தகையமுதல்வனொருவனுண்டென்பது பெறப்படும். பெறவே; பிரபஞ்சம் விசித்திர காரியமாய்க் காணப்படுதலால் இவ்வாறு நடத்தும் முதல்வன் முற்றுணர்வு அளவிலாற்றல் பேரருள் சுதந்திரமுதலிய பரத்துவ குணங்களுடையன் என்பதுபெறப்பட்டது. படவே இத்தன்மையனாகிய முதல்வனொருவனே அமையுமாதலால் வேறும் அத்தன்மையருண்டெனக்கொள்ளின் மிகை என்னுங் குற்றமாம். அன்றியும் சங்காரத்துக்குரிய இலக்கணங்களுள் ஒன்றேனும் ஒருவாற்றானும் வேறுபடாது நிறைந்துள்ளபோது அவ்விலக்கணத்தை

யுடைய இலக்கியமாகிய முதல்வன் ஒருவனேயன்றிப் பலராதல் செல்லாதென்னுங் கருத்தால் "ஒன்றலாவொன்று" எனவரைய றுத்தோதினர். ஆகவே பிரபஞ்சம் அதிவிசித்திரசாரியமாயினும் அதனைச் சங்கரித்தற்கு அப்பாரத்துவகுண முதல்வனொருவனே போதிய ஆற்றலுடையானென்பது தெளிவாம்.

இருணீங்கியபோதும் கண்கள் சூரியனையின்றிக் காணமாட்டாதவாறுபோல, மலநீங்கிய முத்தியிலும், ஆன்மாக்கள் உடனின்று அறிவிக்கு முதல்வனையின்றி அவனையறியமாட்டாமையும் கண்ணும் படிகமும் ஆகாசமும்போல ஆன்மாக்கள் சார்ந்ததன் வண்ணமாய் நிற்பனவன்றி முதல்வனைப்போலத் தனித்துநில்லாமையும், அவனைப்போல ஐந்தொழிற்குரிமையின்றிச் சிவானுபவமொன்றுக்கே உரியனவாதலும், சமவியாபகமுள்ளனவாயினும் விளக்கொளியிற் கண்ணொளிபோல முதல்வன் வியாபகத்துள் வியாப்பியமாய் அடங்கிநிற்றலுமுதலிய பலவாற்றானும் ஆன்மாக்கள் முத்தியினும் அடிமைகளே என்பது தெளிவாம். இதனால் அநேகேசுரவாதிமதமேயன்றிச் சிவசமவாதிசங்கிராந்தவாதி உற்பத்திவாதி ஆவேசவாதி மதங்களும் மறுக்கப்பட்டன.

இச்சூத்திரம், உலகம் முத்தொழிற்படுதலால் அவற்றைச் செய்யுங் கடவுளொருவருண்டு; அவர் சங்காரகாரணரே. உலகம் அவரிடத்தொடுங்கித்தோன்றலால் அவரே முதற்கடவுளென்பதுணர்த்தி, அதனை ஒத்துக்கொள்ளாமல் முதலதிகரணத்தில் தோன்றல் அழிதல் நேரே காணப்படாமையால் உலகம் நித்தியமென்றுகூறும் லோகாயதர் மீமாஞ்சகரையும்(உ)தோன்றியழியுமேனும் இல்பொருளாய் அதனதன் சார்பிலேதோன்றிநின்றழிவது அதனியற்கையாமென்றுகூறும் புத்தரையும், உள்பொருளாதல் உள்ளபடியிருக்கும் இறைவன் வேண்டாவென்று கூறுஞ் சாங்கியரையும், வேண்டுமாயினும் விஷ்ணுமுதலியரே இறைவராவரென்றுகூறும் பாஞ்சராத்திரிமுதலியரையும், (ங) சங்காரக் கடவுளே முதல்வராயினும் அதிவிசித்திரஉலகம் ஒரேகடவுளாற் செய்தல் கூடாமையால் பலகடவுளருளராதல் வேண்டுமென்று கூறும் அநேகேசுரவாதிகளையும் மறுத்து மேற்கூறியபடி சங்காரகாரணனாகிய சிவபிரானே யாவர்க்குமேலானமுழுமுதற்றலைவ

னென்பதை வலியுறுத்திப் பொதுச்சிறப்புவகையின் அநுமான ப்பிரமாணத்தின் வைத்துப் பதியுண்மை விளக்கியவாறு காண்க.

---

## இரண்டாஞ்சூத்திரம்.

பாசவுண்மை.

அவையே தானே யாயிரு வினையிற்
போக்கு வரவு புரிய வாணையி
னீக்க மின்றி நிற்கு மன்றே.

கருத்துரை. புனருற்பவம் வருமாறுணர்த்துதனுதலிற்று.

இ—ள். உலகமானது, ஒடுங்கிய முதல்வனினின்றும் மீளத் தோன்றுதலை வகுத்துணர்த்துமுறையில், முதற்காரணதுணைக் காரணங்களில்லையேல் அம்முதல்வன் நிமித்தகாரணனாவதெப்படி யென்று கூறுவது நோக்கி அம்முதல்துணைகளாகிய மாயாமலமும் கன்மமலமும் உள்பொருள்களே எனப் பாசஉண்மைக்குப் பிரமாணமுணர்த்துவதென்பதாம்.

சூ—ள், முற்கூறிய சங்காரக்கடவுளாகிய சிவபிரான், (அவையேயாயும்) (உயிர்களுடன் கலப்பினால் உடம்பின் உயிர் போல ஒன்றேயாயும்) (தானேயாயும்) (பொருட்டன்மையாற் கண்ணின் அருக்கன்போல வேறாயும்) (அவையே தானேயாயும்) (உயிர்க்குபிராதற்றன்மையாற் கண்ணொளியின் ஆன்மபோதம் போல உடனாகியும் நின்று) தனது ஆணை என்னும் பரியாயப் பெயருடைய சிற்சத்தியாற் செலுத்தப்பட்டுவருகின்ற இருவினை களால் அச்சீவர்கள் இறத்தல் பிறத்தல்களைக் கொள்ளும்படி எப் போதும் அச்சிற்சத்தியுடன் பிரிவின்றி நின்றருள்வனென்பதாம்.

இறத்தலாவது, சீவர்கள் தூலசரீரத்தைவிட்டு நீங்குதல். பிறத்தலாவது, தூலசரீரத்துடன் வெளிவருதலாம். இச்சூத்திரத் தில் "ஆணையின்" என்றதனால் நிமித்தகாரணனாகிய முதல்வனுக் குத் துணைக்காரணம் சிற்சத்தியென்பதும், "இருவினையின்" என் றதனால் அச்சத்திவழித் துணைக்காரணமாகிய கன்மமலமும், போக்குவரவுபுரிய என்றதனால் அதற்குப் பற்றுக்கோடாய், உயி ர்கள் இறத்தல் பிறத்தற்கிடமாகிய சரீராதிகளைக் கொடுக்கும்

ஆதற்காரணமாயாமலமுமாகிய பாசங்கள் உண்டென்பதற்குப் பிரமாணங்கூறினமை காண்க.

இச்சூத்திரம்: "அவையே தானேயாய்" எனவும் "ஆணையின் இருவினையின்" எனவும், "போக்குவரவுபுரிய" எனவும், "ஆணையினீக்கமின்றி நிற்குமன்றே" எனவும் நான்கதிகரணமாகப் பகுக்கப்படும்.

## முதலதிகரணம்.

முதல்வனுஞ் சீவனும் பொன்னும்பணியும்போல் அபேதமோ? இருளும் வெளியும்போல் பேதமோ? சொல்லும்பொருளும்போல் பேதாபேதமோ? என்றுவினவும் ஐயப்பாட்டில் அம்மூன்றுள் ஒவ்வொன்றே பற்றிநிற்கும் மாயாவாதிகள் மாத்துவர்கள் பாஞ்சராத்திரிகள் கூறுவது நோக்கிச் சூத்திரத்தில் "அவையே தானேயாய்" என்னும் முதற்பாகத்தைப் பதம்பிரித்துரைக்கும் மேற்கோள்

ஈண்டு இவ்வான்மாக்கள் பலவும் முதல்வன்றானேயாய் நிற்குமென்றது.

இ—ள். முதல்வன், வினைப்போகங்களை அனுபவிக்கச்செய்து ஒழித்தற்காக உயிர்களிடத்து உடலும் உயிரும்போலக் கலந்துநிற்றலால் ஒன்றாயும், அவ்வுயிர்களுக் கறிவித்தற்காகக் கண்ணும் அதற்குப் பொருள்களை அறிவிக்குஞ் சூரியனும்போலப் பொருட்டன்மையால் வேறாயும், அறிவித்தவழியே நடப்பித்தற்காகக் கண்ணொளியும், அதனைப் பொருள்களிற்செலுத்தும் ஆன்மபோதமும்போல உயிர்க்கு உயிராதற்றன்மையால் உடனாயும் நின்றுபகரித்தருளுவனென்பதாம்.

முதல்வன் "அப்பொருளுமான்மாவு மாரணநூல் சொன்னபடி, தப்பிலாச் சித்தொன்றே சாதியினால்" என்றபடி சீவர்களுடன் கலந்திருக்குந் தன்மைநோக்கி ஒன்றாய் என்றும், "எப்படியுந்தெரிற்றுவிதம்" என்றபடி பொருட்டன்மையால் இரண்டென்னும் உண்மைநோக்கி வேறாய் என்றும், "சிவாகமநூல்சொன்னவீட்டின், யாருமிடத்தத்துவிதமாம்" என்றபடி உயிர்க்குயிரா

யுடனின்றுசெலுத்து நன்மைநோக்கியுடனாயென்றும் கூறினும் இம்மூன்றியல்பும் சீவர்களிடத்து வேறின்றி உடனாய்நிற்கும் அத்துவிதமென்பதே முடிவாம்.

இவ்வாறு மூன்று விதமாய்நிற்றற்குப் பிரமாணம் என்னை? என்று கூறுவதுநோக்கி மேற்கோளைச்சாதிக்கும் ஏது.

அத்துவிதமென்றசொல்லானே ஏகமென்னில் ஏகமென்று சுட்டுவதுண்மையின் அத்துவிதமென்றசொல்லே அந்நிய நாத்தியை யுணர்த்துமா யிட்டு.

இ—ள். அத்துவிதமென்ற சொல்லின் முதலிலுள்ள(ந)அகரத்துக்கு இன்மைப்பொருள்கொண்டு அத்துவிதமென்ற சொல்லுக்குப் பொருள்ஒன்றே எனில்? அவ்வொன்றாகியபிரமம் தன்னைத்தானே ஒன்றெனச் சொல்லிக்கொள்ளமாட்டாதாதலால் அவ்வாறு சொல்பவன் வேறொருவனேயென்பது விளக்கமாதலானும், எண்ணுப்பெயர்முன்வரும் (ந)அகரம் அன்மைமாத்திரமன்றி இன்மைமுதலியபொருளுணர்த்தும் வழக்கம்இன்மையால் அத்துவிதமென்றசொல்லே வேறுகாரணம் வேண்டாது வேறன்மையையுணர்த்துமாகலானும், ஆன்மாக்கள் பலவும் முதல்வன்றானேயாய் நிற்குமெனமேற்கொண்டதென்பதாம்.

அத்துவிதமென்னுஞ் சொல், அ—துவிதம் எனப்பிரிபடும். துவிதமென்பது இரண்டென்னும் எண்ணைக்குறித்ததே. இதனில் யாருக்கும் ஆக்ஷேபமில்லை. இதன்முதலிலுள்ள, (ந) அ—என்னும் எழுத்துக்குத்தான், பலர் பலபொருள் கூறுகின்றார்கள், இந்த அகரத்துக்கு, சாமியம், இன்மை, பேதம், அற்பம், இழிவு மறுதலை என்னும் பொருள்களுண்டு. இதனை,

(சப்தகல்பதுருமம்.)

𑌤𑌤𑍍𑌸𑌾𑌦𑍃𑌶𑍍𑌯𑌮𑌭𑌾𑌵𑌶𑍍𑌚 𑌤𑌦𑌨𑍍𑌯𑌤𑍍𑌵𑌂 𑌤𑌦𑌲𑍍𑌪𑌤𑌾 ।
𑌅𑌪𑍍𑌰𑌾𑌶𑌸𑍍𑌤𑍍𑌯𑌂 𑌵𑌿𑌰𑍋𑌧𑌶𑍍𑌚 𑌨𑌞𑌰𑍍𑌥𑌾𑌃 𑌷𑌟𑍍 𑌪𑍍𑌰𑌕𑍀𑌰𑍍𑌤𑌿𑌤𑌾𑌃 ॥

என்று விளக்குகின்றது. சாமியப்பொருள் அன்மைப்பொருளில் செல்லும். இதனை,

# சிவஞானபோதம்.

(பரிபஷேந்துசேகரம்)

नञिवयुक्तमन्यसदृशाधिकरणे तथा ह्यर्थगतिः

என்பதனுற் காண்க.

இந்நூல், பேதமும் அபேதமுமாகிய அன்மைப்பொருளே (அநந்ய) உதாரணத்தால் விளக்குகின்றது.

பாதஞ்சலமகாபாஷியம் 2-ம்அத்தியாயம், 2-ம்பாதம் க-ம் ஆந்நிகம், சு-ம்(நஞ்)என்னும் சூத்திரம் இந்தஅன்மைப்பொருளேகூறுகின்றது. (முண்டகோபநிடதம் ந-க-ந)

" तदा विद्वान्पुण्यपापे विधूय निरञ्जनः

परमं साम्यमुपैति ।"

" [illegible]

[illegible]"

என்று சாமியப்பொருள் விளக்குகின்றது.

ஆகவே சாதிருசியம் என்றது அன்மை என்பதேயாப்

இது, ஒருபிராமணன் ஒழுக்கந்தவறியுள்ளானுகில், அவனே அப்பிராமணன்என்று ஒருவர்கூறுமிடத்து, அச்சொற்குப் பிராமணத்தன்மையுடையான் அல்லனென்று, அன்மைப்பொருள் கொள்ளுதலானுங்காணப்படும். பிராமணன் இல்லையென்று இன்மைப்பொருள்கொண்டால் அப்புருஷனேயில்லையென்றகும் ஆதலால் மேற்காட்டிய(ந)அகரத்துக்கு அன்மைப்பொருள்கொள்ள வேண்டிய இடங்களில், புத்திமான்கள் இல்லையென்பதாகிய இன்மைப்பொருள் கொள்ளாரென்க.

இன்மைப்பொருள், அபோஜனம் என்பதற்குப் போஜனமின்மை(உபவாசம்)எனக்கொள்ளுதல்போல, இல்லையென்பதாம்.

மறுதலைப்பொருள், இவன் அதர்மன் என்பதற்குத், தருமத்துக்கு மறுதலையாகிய பாவஞ்செய்பவன் எனக்கொள்ளுதல்போல; எதிர்மறை என்பதாம்.

பேதப்பொருள், இது அகடம் என்பதற்குக், கடத்துக்கு வேறுகிய படமெனக்கொள்ளுதல்போல, வேறென்பதாம்.

அற்பப்பொருள், இவள் அநுதரி என்பதற்குச் சிறுவயிறுடையவள் எனக்கொள்ளுதல்போலச், சிறுமை என்பதாம்.

இழிவுப்பொருள், இது அதனம் என்பதற்குத் தனமென்றெண்ணப்படாத தோற்காசெனக்கொள்ளுதல்போல இழிந்ததென்பதாம்.

இவ்வாறு பலபொருள்கொள்ள இடமிருந்தாலும் எவ்விடத்தில் எப்பொருள் பொருந்துமோ அப்பொருள் கொள்வதே பொருத்தமாயிருக்க, மாயாவாதிகள் இந்தஅகரம் துவிதமென்னும் எண்ணுப்பெயர்முன் அத்துவிதமென நிற்கும்போது, இரண்டன்மையெனக் கொள்ளாமல் இரண்டில்லையென்றும் அதற்குப் பொருள் ஒன்றே என்றும், அது பிரமமேஎன்றும் அதுதவிர ஒருபொருளுமில்லையென்றும் கூறுகின்றனர். அஃதுண்மையானால் அத்துவிதம் என்னுஞ் சொல்லுக்குப்பொருள் ஒன்றே என்று பிரமங்கூறியதாகவே முடியும். பிரமம் தன்னைத்தானே ஒன்று என்று சொல்லிக்கொண்டிருக்குமா? சொல்லுமெனில் அது அறிவொழிந்த பித்தர்களின் வாயப்புலம்பல்போலாமன்றி உண்மையாகுமா? உண்மை நோக்குமிடத்து அவ்வாறு சொல்லுகின்ற புருடன் வேறொருவனுளனென்பதே நிச்சயமாம். ஆகவே, பொருள் இரண்டுஉண்டென்பது தெளிவாகின்றது. அன்றியும், ஒன்று என்றே கொள்ளவேண்டுமானால், பலபொருள் தந்து பிறர்சந்தேகித்தற்கிடஞ்செய்யும் அத்துவிதம் என்னுஞ்சொல்லைவிட்டுத் தெளிவாய் விளங்கும்படி ஏகம என்றே கூறலாம். அப்படியின்றி ஊகித்துணருமபடி அத்துவிதமென்று கூறியது இரண்டு அன்மையென்னுமுண்மை தெளிதற்கேயாமென்க.

(மைத்ரேயோபநிஷதம்)

[illegible]

என்ற மந்திரம், சிவ்பரப்பிரமம் நான் ஒன்றென்னும் எண்ணும் இரண்டென்னும் எண்ணும் அற்றவனாயிருக்கின்றேன். என்று கூறியதில்வைத்து, அத்துவிதமென்ற சொற்பொருளினுண்மை விளக்குகின்றது. பிரமமே இவ்வாறு பிறர்க்குக்கூறுதலும் நோக்காது மாயாவாதிகள் ஒன்றே என்று கூறும் பிடிவாதம், கொடி

னும் பேதையுங் கொண்டதுவிடார் என்பதை விளக்கிச் சிறிதும் பயன்படாதொழிதல் காண்க.

அன்றியும், அகரம் மேற்காட்டிய போஜனம் முதலியபேர்களில் முன்வந்து அபோஜனம் முதலியவாக நிற்குமிடத்து இல்லையென்பதுமுதலியபொருள்களைத் தருமேயன்றி, ஏகம் துவிதம் என்ற எண்ணுப்பெயர் முன்வந்து அநேகம் அத்துவிதம் என்று நிற்கும்போது இல்லையென்னும்பொருள் தரமாட்டாது. அவ்வழக்கமும் எவ்விடத்துமில்லை. இருந்தால் வெளியிட்டுவிளக்கலாம். இவை ஒன்றும் நோக்காமல் இல்லையென்பதேபொருளென்றால் அநேகம் என்பதற்கும் ஒன்றுஇல்லைஎன்றே கொள்ளவேண்டும். கொண்டால், அநேகம் என்பதற்குப் பல என்பதே பொருளாதலால் அது பொருந்தாது. ஒன்றுமுதலாகப் பலசேர்ந்துதான் பலவாகும். ஒன்றே இல்லையென்றால் பல என்பது எப்படி நிலைபெறும். ஆதலால், அநேகம் என்பதற்கு ஒன்றல்லாத பலவென்பதே பொருத்தமாய் அன்மைப்பொருளே விளக்கமாதல்போல அத்துவிதம் என்ற பெயரும் மேற்காட்டியபடி அன்மைப்பொருளையே தருமென்க.

மேற்கூறியபடி, ஒருகடவுள் ஒன்றாயும் வேறாயும் உடனாயும் மூவிதமாய் நிற்பதெப்படி என்று கூறுவதுநோக்கி (அவையேயாய்) ஒன்றாய்நிற்றலை உவமைமுகத்தால் விளக்கும் உதாரணம்.

கட்டு முறப்புங் கரணமுங் கொண்டுள்ள
மிட்டொரு பேரழைக்க வென்னென்றாங்—கொட்டி
யுவனுளமா கில்லா னுளமவனு மாட்டா
தவனுளமா யல்லனுமா மங்கு.

இ—ள் உயிர், நரம்புமுதலியவற்றாற் கட்டப்பட்ட உடம்பையும் பொறிமுதலிய கருவிகளையுங்கொண்டுள்ளதே. உடம்பு சடம். உயிர் சித்து. இரண்டும் பொருளால் வேறாயினும் ஒருவனை உடம்புக்கிட்டபேரால் அழைத்தவிடத்து அவனே என்னென்றுவருதலால் அவன் அவ்வுடம்பைஒட்டி ஒன்றெனநிற்றல்போல, முதல்வன் முற்றறிவினன். உயிர் சிற்றறிவினது. இருபொருளும் வேறாயினும் முதல்வன் உயிரைஒட்டி ஒன்றெனநிற்பன். நிற்பி

னும், மேற்காட்டிய உடம்பு உயிராகாமலும் உயிர் உடம்பாகாமலும் அவ்வுயிர் உடம்பின்வேறாய்த் தனித்துநிற்றலும், உடம்பு தனித்துநில்லாமையும்போல, உயிர் முதல்வனாகாது; முதல்வன் உயிராகான்; முதல்வன் உயிரின்வேறாய்த் தனித்துநிற்பன் என்பதாம்.

இங்கே தனித்துநிற்றலென்றது உயிர்களைப் பிரிந்துநிற்பதன்று. அவ்வுயிர்கட்குவரும் சுகதுக்காதியிற் கட்டுப்படாது நிற்றலையேயாமெனக். இதனால் மேற்கூறிய மூன்றனுள் ஒன்றாய்நிற்றல் விளக்கமாயது.

வேதம் அத்துவிதமென்றதுமன்றி, ஏகம்(ஒன்று) என்றுங் கூறுதலால் அதற்குமாறாக, முதல்வன் உயிர்களுடன் கூட்டிநிற்பனென்றிரண்டுபட கூறுவதெப்படி என்று கூறுவது நோக்கி அச்சொற்குத் தாற்பரியங்கூறுமுகத்தால் (தானேயாய்) வேறாய்நிற்றலை விளக்கும் உதாரணம்.

ஒன்றென்ற தொன்றேகா ணொன்றே பதிபசுவா
மொன்றென்ற நீபாசத் தோடுளைகா—ணொன்றின்று
லக்கரங்க ளின்று மகர வுயிரின்றே
லிக்கிரமத் தென்னு மிருக்கு.

இ—ள். வேதம் ஒன்றென்றதற்குப் பொருள் ஒன்றென்பதேயாம். அதன்கருத்துப் பதிப்பொருள் ஒன்றே; இரண்டில்லை என்பதாம். இதனையறியாமல் ஒன்றென்று கூறியநீ அப்பதியின் வேறாய பசுவே. நானும் சித்தாயிருக்க என்னைப் பசுவென்றதென்னெனில்? நீ பாசத்திற் கட்டுப்பட்டிருத்தலால் பசுவென்றுசொல்லப்பட்டாய் ஆனால், வேதம்பிரமமில்லையேல் ஒருபொருளுமில்லையென்பதென்னெனில்? அது, உயிரு மெய்யுமாகிய எல்லாஎழுத்துக்களுமுள்ளவேயாயினும், அவ்வெழுத்தெல்லாவற்றுள்ளுங்கலந்துநின்றுஒலிக்கச்செய்கின்றநாதவடிவாகிய அகரமில்லையேல்எழுத்துக்கள் ஒன்றுமில்லையென்பதுபோல, எப்பொருளினுங்கலந்து நடத்துகின்ற பிரமமில்லையேல் ஒருபொருளுமில்லையென்கின்ற அளவையேயாதலால், மேற்கூறியபடி முதல்வன்உயிரனுபவத்திற்கு ஒன்றாய் கூட்டிநிற்பினும், அவைகளுக்கு அறிவித்தற்கு வேறாயும் நிற்பனென்பதாம்.

வேதம், ஏகம் என்றுகூறும் பிரமத்தையே ஒவ்வோரிடங்களில் அத்துவிதம் என்றுங்கூறுதலால், சைவர்களாகிய நீவிர், அத்துவிதம் என்பது பதியும் பசுவுமாகிய இருபொருள்கள் கலந்திருத்தலைவிளக்குமென்பது பொருந்தாது ஏகம் என்பதிற்போல அத்துவிதமென்பதற்கும் ஒன்றென்பதேபொருளாமென்றுகூறுவதுநோக்கி அதனை நீக்குமுகத்தால் (அவையேதானே) உடனாய்நிற்றலை விளக்கும் உதாரணம்.

பண்ணையு மோசையும் போலப் பழமதுவு
மெண்ணுஞ் சுவையும்போ லெங்குமா—மண்ண
லத்துவித மாத லருமறைக ளொன்றென்னா
தத்துவித மென்றறையு மாங்கு.

இ—ள். வேதம், பிரமத்தை ஏகம் என்றசொல்லினாலேயே எங்குங் கூறியமையாமல். பண்ணும் அதன் ஓசையும்பொருட்டன்மையால் இரண்டாயிருந்தும் பிரிந்து நில்லாமற்கலந்தே நிற்றல்போலவும், பழம் சுவைமுதலியவைகளும் அப்படியேநிற்றல்போலவும், முதல்வன்றிருவருள் எங்குநிறைந்து உயிர்களைப்பிரிவின்றிக் கலந்து நிற்றலாற்றான் அத்துவிதமென்றும் அவ்விடங்களிற்கூறியதாதலால் இதனை ஊகித்துணராமல் அத்துவிதத்துக்கு ஒன்றென்பதேபொருளென்றல் பொருந்தாதென்பதாம்.

எனவே, வேதம், பிரமம் உயிர்களை ஒட்டிநின்றும், அவ்வுயிர்களின் சுகதுக்காதிகள் தன்னைப்பற்றாதிருக்குந் தனிமைநோக்கியே ஏகம் என்றும், அவ்வுயிர்களைப் பிரியாது நடத்திஉடனாய்நிற்றல் நோக்கியே அத்துவிதமென்றும் வேறுவேறுசொல்லால் விளக்கியதென்பது தெளிவாயது.

இவ்வாறு வெவ்வேறு உவமைகூறினால் அநேகாந்தவாதமாகுமென்று கூறுவதுநோக்கி ஒரே உவமையால் அம்மூன்றினையும் விளக்கி அது அநேகமுடிவாகாமல் ஒரேமுடிவுதான் என்பதை வலியுறுத்தும் உதாரணம்.

அரக்கொடு சேர்த்தி யணைத்தவக் கற்போ
லுருக்கி யுடங்கியைந்து நின்று—பிரிப்பின்றித்

தானே யுலகாந் தமியே னுளம்புகுந்த
யானே யுலகென்ப னின்று.

இ—ள். அரக்கை உருக்கி அதனுடன் சேர்த்த கற்பொடி அவ்வரக்குடன் இயைந்து நிற்றலால் ஒன்றாயும், அரக்கும் கற்பொடியும் வேறுவேறு பொருளென்று தெரியநிற்றலால் வேறாயும், அங்ஙனம் நிற்பினும் பிரிவின்றிநிற்றலால் உடனாயும் நிற்றல் போல, முதல்வனும் உயிர்களினிடத்துக் கலப்பினால் ஒன்றாயும், பொருட்டன்மையால் வேறாயும், பிரிவின்மையால் உடனாயும்நிற்பனுதலால் அநேகாந்தவாதமாகாதென்பதாம்.

ஆனால் வாமதேவமுனிவன்முதலியோர் யானே உலகெலாமாயினேனென்றுகூறுதலால்,முதல்வனது ஒன்றாய் வேறாய் உடனாய் நிற்கும் இலக்கணம் அம்முனிவன்முதலிய ஆன்மாக்களிடத்து முண்டென்று கொள்ளவருமன்றோவெனில்? பாசமுற்றும் நீங்கப்பெற்றுச் சுத்தமாய்த் தனித்துநிற்கும் என்னிடத்தும் சிவோகம்பாவனையால் முதல்வன் வேற்றுமையின்றி விளங்கலால் அவ்வுரிமைபற்றி இம்முத்திகாலத்துயானே உலகெலாமென்பேனாயினேன். அதுபற்றி உயிரெல்லாம் அவ்விலக்கணமுடையனவாகா வென்பதாம்.

கண்ணன், இப்பாவனைமுதிர்ச்சியாற் சிவமாய்நிற்றல்பற்றியே அர்ச்சுநற்குக் கீதை உபதேசிக்குமிடத்து நானே உலகமெலாமாயினேனென்றுகூறி முதல்வனது விசுவரூபமுங்காட்டி எவற்றையுங்கைவிட்டு என்னையே வழிபடுக என்று கூறினான்.

கண்ணன் சிவமாய்நின்றுகூறினமையால், அது சிவாஞ்ஞையென்பதுள்ளபடி தெரிந்த அர்ச்சுநன் சிவபூசனையே எப்போதுஞ் செய்துவந்தான். இதனால் கண்ணன் உபமந்யுமுனிவரையடைந்து வணங்கிச் சிவதீக்ஷை சிவபூசைமுதலிய சிவசம்ஸ்காரம்பெற்றுச் சிவத்துவம்வாய்க்கப்பெறுமுன் அவனிடத்து முதல்வனது விசுவரூபங்காட்டுதல் முதலிய சிவச்செயல்கள் நிகழாவென்பது தெளிவாயது.

# சிவஞானபோதம்.

## இரண்டாமதிகரணம்.

பரிணாமவாதிகள், முதல்வன் மீளவுஞ் சிருஷ்டிக்குங்கால் வினைகளாய துணைக்காரணமுதலியன வேண்டின், அவனது சுதந்திரத்திற்கும் அளவிலாற்றற்கும் இழுக்காதலால் அவை வேண்டப்படாவென்பதை மறுத்து "ஆணையின் இருவினையின்" என்ற இரண்டாம்பாகத்தைப்பதம்பிரித்துரைக்கும் மேற்கோள்.

இனி, இவ்வான்மாக்களுக்கு இருவினைமுதல்வன் ஆணையின் வருமென்றது.

இ—ள், உயிர்களுக்குமுன்செய்யப்பட்டு மாயையிற்கிடந்த இருவினைகள் முதல்வனது ஆணையாகிய சிற்சத்தியால் வருமென்பதாம்.

ஆணையின் வரும் என்றதனால், முதல்வனது சுதந்திரத்திற்கு இழுக்கில்லை என்பது விளக்கமாயது.

சிருட்டித்தற்கு ஆணையாகிய சத்தியே போதியதாம். இருவினைகள் எதற்கென்றுகூறுவதுநோக்கி மேற்கோளைச்சாதிக்கும் ஏது.

ஒரு நகரியைக்காப்பான் பாடிகாவலிட்டாங்கு அவை அவனதாக்கினையாகலான்,

இ—ள். ஒரு நகரத்தைக்காக்கும் அரசன், தனது ஆணையால் சிறைச்சாலையிற்செய்யுந் தண்டத்தொழிலை அது செய்தற்குரிய ஒருவனிடம்வைத்து நடத்துதல்போல முழுமுதற்றலைவன் மீளச்சிருட்டிப்பதாகிய தனதுஆணையை இருவினைகளில்வைத்து நடத்தலே முறையாகலான் இருவினைகள் முதல்வன் ஆணையின் வருமென மேற்கொண்டதென்பதாம்.

வினையுண்டு, அஃது உயிர்க்குப் பயனாய்வரும். பயனை அநுபவிக்குமிடத்தும் மேலும் வினை ஏறும். அது முதல்வனையின்றித் தானாகப் பயன்தராதென்பதற்குப் பிரமாணமென்னை யென்று கூறுவதுநோக்கி, ஏதுவை வலியுறுத்தும் உதாரணம்.

'உள்ளதே தோற்ற வுயிரனைய மவ்வுடலி
னுள்ளதா முற்செய்வினை யுள்ளடைவே—வள்ளலவ

## இரண்டாஞ்சூத்திரம் இரண்டாமதிகரணம்.

*செய்பவர் செய்திப் பயன்விளைக்குஞ் செய்யேபோற்*
*செய்வன் செயலணையா சென்று.*

இ—ள். இல்லது தோன்றாதாதலால், முன்உள்ளதாகிய சஞ்சிதவினையே தன்பயனாகிய இன்பதுன்பங்களையும் உடம்பையும் தோற்றுவிக்கச் சடமாகிய உடம்புக்கு அநுபவங்கூடாமையால் உயிர் அவ்வுடம்பைச் சார்ந்து அப்பயனை அநுபவிக்கும். அநுபவித்தொழிந்தால் மேலும் வினை ஏறுவதெப்படிஎனில், அநுபவிக்கும்முறையில் விருப்புவெறுப்பு நிகழ்தல்பற்றி மேலைக்கும் வினையுளதாம். ஆனால் வினையே பயனைப் வரும், முதல்வன் வேண்டாவெனில்? உழவர் செய்புந் தொழிற்குப் பயனை நிலங்கொடுப்பதன்றி அத்தொழில் கொடாது. அதுபோல, உயிர்க்கு உணவும் வித்துமாய் வரும் வினைகளை முதல்வனே சேர்ப்பனன்றிச் சடமாகிய வினை தானே பயனைய் வராதென்பதாம்.

ஆனால், உயிர் சித்தாதலால் வினைப்பயனைத் தானே எடுத்து அநுபவிக்கும், முதல்வன் வேண்டாவென்று கூறுவது நோக்கி வேண்டுமென அதனைவலியுறுத்தும் உதாரணம்.

*அவ்வினையைச் செய்வதனி லவ்வினைஞர் தாஞ்சென்றங்*
*கவ்வினையைக் காந்த பசாசம்போ—லவ்வினையைப்*
*போராம லூட்டும் பிரானி லுகாரோ*
*லார்தா மறிந்தணைப்பா ராங்கு.*

இ—ள். இரும்பை இழுக்கும் இயல்பினதாயினும் காந்தம் இரும்பிருக்குமிடத்திற்போயிழுக்கமாட்டாது, ஒருவன் நேரிற் சேர்த்தபோதுதான்இழுக்கும். அதுபோல, வினைப்பயனை அநுபவிக்குமியல்பினவாயினும் சிற்றறிவுயிர்கள் வினைக்குத்தக்கபயனைத் தாமாகஅறிந்தெடுத்துக்கொள்ளமாட்டா. ஆதலால், முற்றறிவுடைய முதல்வனே அவரவர் வினைக்குத்தக்க பயனை மாறுபடாமல் அவரவர்க்குச்சேர்ப்பன். உயிர்கள் அதற்குரியஉடலைப் பொருந்திநின்று அப்பயனைஅநுபவிக்கும். அறிவுஞ் சுதந்திரமுமின்றி மலத்தின் மறைந்துகிடக்கும் அப்பெத்தகாலத்தில் அம்முற்றறிவுடைய முதல்வனையன்றி வேறுயாவர் அப்பயனையறிந்து சேர்ப்பர் ஒருவருமில்லையென்பதாம்.

அவ்வினை, ஒருகாலத்தில் வந்த ஆதி என்றால், இல்லாதது பின்வந்ததென்றாகிச் சற்காரியவிரோதமாம். அநாதி என்றால், அதுதானே உயிரைப்பற்றிநிற்கும். ஒருவர் சேர்க்கவேண்டாவென்று கூறுவதுநோக்கி வேண்டுமென அதனை வலியுறுத்தும்உதாரணம்.

நெல்லிற் குமியு நிகழ்செம்பி னிற்களிம்புஞ்
சொல்லிற் புதிதன்று தொன்மையே—வல்லி
மலகன்ம மன்றுளவாம் வள்ளலாற் பொன்வா
ளலர்சோகஞ் செய்கமலத் தாம்.

இ—ள். நெல்லில் உமியும் செம்பிற் களிம்பும் நெல்லுஞ்செம்பும்உள்ளபோதே உள்ளன. இடையில்வந்தனவல்ல. அதுபோல மாயை ஆணவம் கன்மமாகிய மும்மலங்களும் உயிர்களினிடத்து அநாதியே (முன்னரே) உள்ளனவாம். அம்மலங்கள் தத்தங்காரியங்களைச் செய்தல் முதல்வனாலேயேயாம். அது முன்னரேஉள்ள தாமரைப்பூ மலர்தலும் குவிதலுஞ் சூரியனாலேயே ஆதல்போலு மென்பதாம்;

ஆணவமலகாரியம், மோகம் மதம்முதலியன. கர்மமலகாரியம், இன்பதுன்பமுதலியன. மாயாமலகாரியம், தநுகரணமுதலியன. இவ்வெண்பாவில் "வள்ளலால் ஆம்" அம்மலகாரியங்கள் முதல்வனாலேயாம், என்றதனால், அம்முதல்வனின் வேறாகாத சிற்சத்தியே சீவர்களின் வினைப்பயன்களை அநுபவிப்பித்துத் தொலைக்கும்பொருட்டு அவ்வநுபவவிடயங்களின் குணங் குற்றங்களை மறைத்துநிற்கும் அவசரத்தில் திரோதானசத்தியாய் நிற்குமுண்மை பெறப்படும். திரோதானம்—மறைப்பு. அத்திரோதான சத்தி, அம்மலங்களின்வழிநின்று மோகமுதலிய அம்மலகாரியங்களைத் தொழிற்படுத்துஞ் சிவசங்கற்பத்திற்கு ஏதுவாய்நிற்றலால் மலமென்றுபசரித்துக் கூறப்படும். இவ்வாறு ஆணவம் கன்மம் மாயை திரோதானம் மாயாகாரியமாகிய மாயேயம் என்னும் ஐவகை மலமுண்டென்னுமுறை காண்க.

ஆணவமலம், ஒன்றேயாய் ஆன்மாக்கடோறும் வெவ்வேறாய்த் தத்தங்காலஎல்லையினீங்கும் அநேகசத்திகளை உடையது.

மாயை, சுத்தம் அசுத்தம் என்றிரண்டாம். சுத்தமாயையில், ஐந்துகலையும் நான்குவாக்கும் சிவதத்துவமைந்தும் சுத்தகாலமுதல் சுத்தபூமிவரை (௩௫)தத்துவங்களும்: அசுத்தமாயையில், அசுத்த காலமுதல் அசுத்தபூமிவரை (௩௬) தத்துவங்களுந் தோன்றும். கன்மமலம், ஆகாமியம் சஞ்சிதம் பிராரத்தமென மூன்றுவகையாய் "நாசோற்பத்திபண்ணிவருமாதலாலநாதி" என்றபடி பிரபஞ்சம்போல் ஒடுங்கித் தோன்றிவருதலால் பிரவாகாநாதியாயுள்ளதொன்றாம், "ஏக னனேக னிருள்கரும மாயையிரண்,டாக வினை யாறுதியில்" "ஆணவமுதலனறதுபோற் கருமமும்" என்றபடி அம்மூவகைவினைக்கும் முதற்காரணமாய் அநாதிநித்தமாயுள்ள மூலகன்மம் ஒன்றுமெனக் காரியகாரண முறையிலிரண்டின்னான காண்க. இவ்வினைகள், லௌகிகம் வைதிகம் அத்தியான்மிகம் அதிமார்க்கம் மாந்திரமென ஐவகையாய் முறையே ஒன்றுக்கொன்று மேலாய் நிவிர்த்தியாதி ஐந்துகலைகளினடங்கி நின்று அசுத்தபோகம் சுத்தாசுத்தபோகம் சுத்தபோகங்களைத் தரும்.

## மூன்றாமதிகரணம்.

கிரீடாப்பிரமவாதிகள், மீளப் பிறப்பது சரீராதிசடங்களே. உயிராகிய சித்துக்கில்லை முன்வினை இப்போது உயிர்க்குவருமென்பது பொருந்தாது. உயிர சரீரம்புகுந்துநிற்பினும், குடமுடைந்தபோது அதிலுள்ள ஆகாசம், ஆகாசத்திற்சேர்தல்போல, உடம்பு நீங்கியபோது அதிலுள்ளஉயிர் பிரமத்தைச்சேரும். ஆதலால், அது மீளப்பிறப்பதில்லை என்றுகூறுவதுநோக்கி, "போக்குவரவுபுரிய" என்றமூன்றாம்பாகத்தைப் பதம்பிரித்துரைக்கும் மேற்கோள்.

இனி, இவ்வான்மாக்கள் மீளப்பிறந்து வருமென்றது.

இ—ள். உடம்பு, சடமாதலால் இருவினைப்பயனை அநுபவியாது. அநுபவித்தற்குரிய இவ்வுயிர்களே இறந்தும் மீளப்பிறந்தும் இவ்வாறே அநுபவித்துவருமென்பதாம்.

அதற்குப் பிரமாணம் என்னையென்றுகூறுவதுநோக்கிமேற்கோளைச்சாதிக்கும் ஏது

தோற்றமு மீறும் உள்ளதற்கல்லது உளதாதலின்மையான.

இ—ள். பிறப்பதும் இறப்பதும் அழிவின்றி எப்போதுந் தொடர்ந்துவருகின்ற உயிர்க்கன்றி அவ்வவ்வெல்லையில் அழிந்து போகுமுடம்புக்கில்லையாதலால், அவ்வுயிர்களே உடம்பைப் பொருந்திப்பிறந்து வருமென மேற்கொண்டதென்பதாம்.

எனவே, முன்வினை உயிரைப்பற்றியே வருமென்பது தெளிவாயிற்று.

இனிச், சிவாத்துவிதிகள், குடத்திலுள்ள ஆகாசம் மகாகாசத்தின் வேறன்மைபோல, உடம்பிலுள்ள உயிர் சிவத்தின்வேறன்றாதலால், பிறப் பிறப்புக்கள்உயிரின் பொருட்டுச்சிவத்துக்கேயாமென்றும்; சாங்கியர், பிரகிருதியிற்றோன்றும் புத்திதத்துவத்திற்கே பிறப்பிறபபுண்டென்றுங்கூறுதலை மறுப்பதிவ்வதிகரணமெனக்கொண்டு, பிறப்பும் இறப்பும் அவைக்குரிமையுள்ளதற்கேயன்றி ஏனையவற்றிற்கின்மையால், இவ்வுயிர்களே மாறிமாறிப் பிறந்துவருமென்று மேற்கொண்டதென்றதுமாம். இப்பொருள்கூறுமிடத்துத், "தோற்றமுமீறும் உள்ளதற்கு" என்றதில் உரிமை உள்ளதற்கென அவாய் நிலையால் உரிமை வருவித்துக்கொள்க.

மாறிப் பிறந்து வருங்காற் படும்இயல்புகளுணர்த்தி அதனைவலியுறுத்தும் உதாரணம்.

கண்ட நனவைக் கனவுணர்விற் றான்மறந்து
விண்படர்ந்தத் தூடு வினைபிறாற்—கண்செவிகெட்
டுள்ளதே தோற்ற வுளமனுவாய்ச் சென்றுமனந்
தள்ள விழுங்கருவிற் றான்.

இ—ள். இவ்வுடம்புநீங்கியபோது முத்திகிட்டும்வரை நிலைத்துள்ள சூக்குமதேகமே வானுலகுக்குரிய பூதசாரசரீரம், நரகுக்குரிய யாதனாசரீரம், பூமிக்குரிய பூதசரீரமாகத் தோன்ற, உயிரானது வினைக்குத்தக்கபடி அச்சரீரங்களைப் பொருந்திச்சுவர்க்க நரகாதியிற்சென்றநுபவித்துப், பின்பு நனவிற் கண்டதைக் கனவில் மறந்து, அறிவுவேறுபடுதல்போல, முன் உடம்பு நீங்கி, வேறுடம்பிற்புகுந்து சுவர்க்க நரகாதிகளிற்சென்றது அங்கநுபவித்தது முதலியவற்றை மறந்து அறிவு வேறுபட்டு, முன்னுட

ம்பு இறக்குங்கால் அடுத்தவினைக்குரிய கதியை அவ்வுயிர் விரும்பும்படி மனஞ்செலுத்தலால், அக்கதிகளொன்றிற்புகுத்தற்கேதுவாய் முன்அநுபவித்தெஞ்சிநின்ற புண்ணியபாவசேடத்தால் சூக்குமதேகமாத்திரையாய் அம்மனந்தள்ளிய கதிக்கியைந்த கருவிற் புகுந்திருந்து பிறக்குமென்பதாம்.

உயிர்கள் மீளப்பிறப்பதில்லை என்றுவாதிகள் எடுத்துக்காட்டும் குடாகாய உவமைக்குண்மைப்பொருள்கூறி அஃதுண்டென்பதையே வலியுறுத்தும் உதாரணம்.

அரவுதன் றோலுரிவு மக்கனவும் வேறு
பரகாயம் போய்வருமப் பண்பும்—பரவிற்
குடாகாய வாகாயக் கூத்தாட்டா மென்ப
தடாதுள்ளம் போமா றது.

இ—ள். உயிர், தூலஉடம்புநீங்கியபின் சூக்குமதேகத்தாற் பெறப்படும் பூதசார முதலிய உடம்புகளிற் புகுந்து சுவர்க்கநரகாதிகளிற் செல்லுதற்குப், பாம்பு, முன்னுள்ளதோலைநீங்கி வேறுதோல் போர்த்துச் செல்லுதலும், புருடன், நனவுடம்புநீங்கிக் கனவுடம்பிற் செல்லுதலும், யோகிகள், தம்முடம்புநீங்கிப் பரகாயத்திற் சென்றுமீளுதலுமாகிய உவமைகளே மிகுதியாய் வழங்கப் படுகின்றன. இவற்றிற்குமாறாகக் குடாகாயம் குடமுடைந்தபின் மகாகாயத்துடன்கூடுதல்போல்வதோர் கூத்தாட்டாமென்று நீகூறுவதுபொருந்தாது. அக் குடாகாய உவமை,உயிர் முத்திகிட்டும் வரை தனைவிட்டுநீங்காத சூக்குமஉடம்பை விட்டுப் போதற்கே கூறியதென்பதாம்.

எனவே,இவ்விருவித உவமைகளும ஆகமங்களிற்கூறுதலால் அவற்றின்கருத்துமாறுபடாமல்,முந்தியமூன்றுவமைகளும்,உயிர், தூலஉடம்பைவிட்டுப்போதற்கும், குடாகாய உவமை சூக்கும உடம்பைவிட்டுப் போதற்கும் கூறியதென்பதே உண்மையாதலால்,அது தூலஉடம்பைவிட்டுப்போதற்குக் கூறியதோவென்றுமலைபாதொழிகவென வலியுறுத்தியவாறு காண்க.

## நான்காமதிகரணம்.

மீமாஞ்சகர்முதலியோர், மீளப்பிறத்தற்கு ஏதுவாகிய வினையைச் செலுத்துவதென்ற சிற்சத்தி, முதல்வனின் வேறென்றும்

தார்க்கிகர்முதலியோர் வேறன்றென்றுங் கூறுதலைநோக்கி "ஆணை யினீக்கமின்றிநிற்குமன்றே" என்ற நான்காம்பாகத்தைப் பதம்பி ரித்துரைக்கும் மேற்கோள்.

இனி நீக்கமின்றி நிற்குமன்றே என்றது.

இ—ள். முதல்வன், தனதாணையாகிய சிற்சத்தியுடன் பிரிவி ன்றி நிற்பனென்பதாம்.

அதற்குப் பிரமாணமென்னென்பாரை நோக்கி மேற்கோ ளைச் சாதிக்கும் ஏது.

அவன், ஏகாநேகமிரண்டுமின்றிச் சருவவியாபியாய்நிற்றலான்"

இ—ள். முதல்வன் ஒன்றென்பதும் வேறென்பதுமின்றி இர ண்டிற்கும் பொதுவாய் எங்கும் வியாபியாய் நிற்றலால், சிற்சத்தி யோடு பிரிவின்றி நிற்பனென்பதாம்.

ஒன்றுமின்றி வேறுமின்றிப் பொதுவாய் வியாபித்துநிற்ற லால் என்றது, சத்தியுடன் பிரிவின்றி நிற்பன் எனறதற்கு ஏது வாய் இன்றியமையாமையாமாறு எப்படி? என்பாரை நோக்கி அதனை வலியுறுத்தும் உதாரணம்.

எங்குமுள னொன்றனவை யொன்றன் றிரண்டென்னி
லெங்கு முளனன் றெவற்றெவனு—மங்க
ணவையவ னன்றில்லைப் பொன்னொளிபோ லீச
னவையுடைமை யாளானா மங்கு.

இ—ள். எங்குமுளனென்று கூறியதனாலேயே முதல்வனை ஒரு பொருளென்றல் கூடாது. ஒன்றானால் கங்கைக்கரையினின்றவன் காவிரிக்கரையினும் ஒரேசமயத்தினிற்றல் முடியாதவாறுபோல ஒருபொருள் ஓரிடத்தன்றி எங்கும் வியாபித்து நிற்கமாட்டாதெ ன்பதாம். அப்படியானால், முதல்வன் இருபொருளாய் வேறுபட் டு நிற்பனெனில்? தன்னில்வேற்றுமையுடையவன் பிறபொருள் களில் வேற்றுமையின்றி எங்கும் வியாபித்துநிற்கமாட்டானென் பதாம். இவ்விருதிறனும் ஒன்றுக்கொன்றுமாறுபடுதலால் எங்கு முளனல்லனெனில்? (அகரவுயிரின்றேல் அக்கரங்களில்லை என்ற படி) எல்லாப்பொருள்களும் அம்முதல்வனையின்றியமையாமை

யால், எங்குமுளனல்லனென்பதும் பொருந்தாது. அப்படியாயின் முடிவுதான் என்னை? எனில், சூரியனும் ஒளியும் வேறாயும், பிரிவின்மையால் ஒன்றாயும் இரண்டிற்கும் பொதுவாய்நிற்றல்போல, எங்குமுளனாகிய முதல்வன் அவ்விரண்டிற்கும் பொதுவாய் தாதான்மியத்தாற் சிவமுஞ்சத்தியுமெனக்கலந்து நிற்பனென்க. அப்படியாயின், வியாபகப்பொருள்களாகிய பசு பாசங்களும் இம்முறைபற்றி இரண்டற்கும்பொதுவாய் முதல்வன்போலத் தத்தஞ் சத்திகளுடன் கலந்துநிற்றலால் முதல்வனுடன் சமமாகும்போலுமெனில்? அவ்வாறாயினும் முதல்வன் வியாபகத்தைநோக்கி வியாப்பியமாயடங்கிநிற்றலால், அப்பாசங்கள் அம்முதல்வனது உடைமைகள், பசுக்களாகிய நாம் அடிமைகளே என்பதாம்.

இச்சூத்திரம், முதல்வன் ஒன்றாய் வேறாய் உடனாய் உயிர்களினின்று அவற்றின் வினைவழித்தாய் அதனை ஊட்டுந் தனது சத்தியால் அவ்வுயிர்கள் இறத்தல் பிறத்தலைக் கொள்ளும்படி செய்வனென்பதும், உயிரும் முதல்வனும், ஒன்றே, வேறே, ஒன்றும் வேறுமே என்பாரைமறுத்து முதல்வன் அம்மூன்றும் ஒருங்கேயுள்ளவன் என்பதும், முதல்வன்மீளச் சிருட்டித்தற்குத் துணைக்காரண முதலியவேண்டில் சுதந்திரதிக்கு இழுக்கென்பாரை மறுத்து அக்காரணங்கள் அவன் ஆணைவழிநிகழ்தலால் இழுக்கில்லை என்பதும், குடாகாய உவமையால் உயிர்மீளப் பிறப்பதில்லை என்பாரைமறுத்து அவ்வுவமைக்கு அவர்கொள்ளும்பொருள்பொருந்தாமை காட்டிப், பாம்பு, கனவு, யோகிகள் உவமையால் உயிர்மீளப்பிறக்குமென்பதும், சத்தி, முதல்வனின் வேறெனவும், வேறன்றெனவும் உரைப்பாரை மறுத்துமுதல்வன் அவ்விரண்டற்கும் பொதுவாய் வியாபித்து நிற்றலால் சிவமும் சத்தியுமெனக் கலந்து நிற்பனென்பதும், உரியபிரமாணங்களால் விளக்கிப் பாசவுண்மை கூறியவாறு காண்க.

---

## மூன்றாஞ்சூத்திரம்.

### பசுவுண்மை.

உளதில தென்றலி னெனதுட லென்றலி
னைம்புல னொடுக்க மறிதலிற் கண்படி
லுண்டிவினை யின்மையி னுணர்த்த வுணர்தலின்
மாயா வியந்திர தனுவினு ளான்மா.

மாயறிந்துவந்த அவ்வறிவே நீஎன்பதறிவாயாக, அப்படியானால் மாயேயமும் சிவமும் உளவென்று முற்சூத்திரங்களால் நிச்சயிக்கப்பட்டமையால் அவையே அவ்வறிவையும் அறிந்துநிற்குமாதலால் வரம்பின்றிபோடுமாறில்லை எனில்? உன்னாற் சாரப்பட்ட மாயை அம்மாயாகாரியப்பொருள்களை உனக்குக் கண்ணாடிபோல விளக்குவதன்றி அறிவதன்றாகலான் அறிகின்ற நீ அம்மாயையல்லை. மாயையான்விளங்கி அறியும்நீ அதற்கதீதமாகிய சிவமுமல்லை. அவற்றின்வேறாகிய உயிரோ என்பதாம்.

## இரண்டாமதிகரணம்.

தூலதேகான்மவாதி, அவ்வறிவு, தேகமின்றி நிகழாமையானும், நான் பருத்தேன் சிறுத்தேனென உடம்பினையே நானென்று வழங்குதலானும், அத்தேகமே ஆன்மா என்றுகூறுவதுநோக்கிச் சூத்திரத்தின் இரண்டாம்பாகத்தைப்பதப்பிரித்துரைக்கும் மேற்கோள்.

இனி, எனதுடலென்றலின் ஆன்மாவுளதென்றது.

இ—ள். நான் பருத்தேன் சிறுத்தேன் என உடம்பின்குணங்களையே உபசாரத்தால் உயிருக்கேற்றி வழங்கினும், நான் உடம்பு நான் கைகாலெனவழங்குவாரின்றி,எனதுடம்பு கைகாலென வேற்றுமைப்படவே வழங்கலால் இவ்வுடம்பின்வேறாய் ஆன்மா உண்டென்பதாம்.

தலைமாத்திரமுள்ள ராகுவை ராகுவின்றலைஎன்று கூறுமிடத்து வேற்றுமையின்றி ஒற்றுமையாய்க்கொள்ளுதல்போல, எனதுடல்என்பதும் வேற்றுமையின்றி ஒற்றுமையேயாம். ஆதலால் அவ்வுடலின்வேறாய் உயிருண்டென்பது பொருந்தாதென்றுகூறுவதுநோக்கி மேற்கோளின் தாற்பரியம் விளக்குவது.

என்பதி என்மனை என்றாற்போல என்கை என்காலென நிற்ப தூலாதாதலின் அதுவே ஆன்மாவாமென்றது.

இ—ள். இராகுவினது தலை என்றாற்போல்வன ஏகதேசவழக்கம். என்பதி என்மனைவியென்றல்போலவே என்கை என்கால் என்கண் செவி பொறி பிராணன் அறிவெனப் பலவகையினும் பெரும்பாலும் வழங்கலால், இம்மிகுவழக்கம் வேற்றுமைப்பொ

ருள்படவே நிற்றலால், அவ்வாறு எனதெனக் கூறிக்கொண்டு வரும் பொருள் ஒன்றுண்டல்லவா? அதுவே அவ்வுடலின்வேறாகிய ஆன்மாவென்பதாம்.

மனைவி இறந்தால் நான்இறந்தேன், மனைஇடிந்தால் நான்இடிந்தேன் என்பது எங்குமின்றி அம்மனைவிமுதலியபுறப்பொருள்கள் வேறாய்நிற்றலால், அப்பொருள்களைப் பிறிதின்கிழமையாக (வேறாக) எனதுஎன்பதுபோலன்றி, நான் நடந்தேன் அடித்தேன் என்று தேகத்தின்றொழிலை ஒற்றுமைப்படக்கூறுதல்போலக் கைகால் முதலியவைகளைத் தற்கிழமையாக எனது என்றலால் இவ்விருமொழிப் பொருளால் ஒவ்வாதென்றுகூறுவதுநோக்கி ஒக்குமென்றும், உடலின்வேறாய் உயிருண்டென்றும் அதனை வலியுறுத்தும் உதாரணம்.

எனதென்ற மாட்டி னெனதலா தென்னை
னுனதலா துன்கைகால் யாக்கை—யெனதென்று
மென்னறிவ தென்று முணர்த்துநீ நிற்றிகா
ணுன்னிலவை வேறா யுணர்.

இ—ள், நீ உலகாயதநூலுணருமுன் மனைவிமுதலிய புறப்பொருள்களை உனக்கு வேறெனக்காணாமல் உன் உயிரெனமயங்கித் தற்கிழமைப்பொருளாக எனதெனக் கூறிநின்றாற்போல, உனதல்லாத கை கால் முதலியவைகளை எனதென்றும், அங்ஙனம் அறிந்த பாசஅறிவை என்னறிவென்றும் தற்கிழமையாக் கூறிக்கொண்டு நீ ஒருபொருள் வேறாகநிற்கின்றாய்; அந்நூலுணர்ந்தபின்பு மனைவிமுதலிய பொருள்களை வேறெனக்கண்டாற் போலக், கை கால்முதலியவைகளையும் ஏதுக்களால் ஆராய்ந்து நோக்கில் அவைகள் உனக்குவேறென்பதுதெளிவாய். ஆகவே தேகம் ஆன்மாவன்றென்பது காண்பாயாகஎன்பதாம்.

## மூன்றாமதிகரணம்.

இந்திரியான்மவாதி, செவி மெய் கண் வாய் மூக்குஎன்னும் ஞானேந்திரியம் ஐந்தும், அறிவில்லாததேகம்போலாகாமல் அறியுந்தன்மையுடையனவாதலால், அவ்விந்திரியங்களை ஆன்மா என்று கூறுவதுநோக்கி இந்திரியங்களின் வேறாய் உயிருண்டெ

ணச் சூத்திரத்தின் மூன்றாம்பாகத்தைப் பதம்பிரித்துரைக்கும் மேற்கோள்.

இனி, ஐம்புலனறிதலின் ஆன்மா வுளதென்றது.
இ—ள். ஐந்து விடயங்களையும் தானே அறிதலால் இந்திரியங்களின் வேறாய் அவ்வறியுமுயிருண்டென்பதாம்.

ஐந்தையும் அறிதலால் ஐம்பொறியின்வேறாய் உயிருண்டென்பதெப்படி? என்று கூறுவதுநோக்கி அதன்றாற்பரியமுணர்த்துவது.

ஐம்புலனாகிய சத்தப் பரிச ரூப ரச கந்தங்களை இந்திரியங்கள் ஒன்றறிந்தொன்றறியாமையின் இவ்வைந்தினாலும் ஐம்புலனுமறிவதுளதாகலின் அதுவே ஆன்மாவாமென்றது.

இ—ள். சத்த முதலிய ஐம்புலன்களைச் செவி முதலிய இந்திரியங்களுள் ஒருவிடயத்தை அறிந்தஇந்திரியம் மற்றொன்றைஅறியாமையால் இவ்வைம்பொறிகளாலும் ஐந்துவிடயங்களையும் அறியும்பொருளொன்றுண்டாகலான் அதுவே மேற்கூறிய ஆன்மா என்பதாம்.

இந்திரியங்கள், ஒன்றறிந்ததை வேறொன் றறியாதென்றது சரி. அவ்வைந்தும் ஐந்துயிரெனக்கொள்வதில் எமக்கிழுக்கில்லை. இனி இவ்வைந்தினாலும் ஐம்புலனையும் ஒருபொருளே அறியுமென்பதற்குப் பிரமாணங்கண்டிலம். குடத்தைக்கண்ட நானே அதனைத் தீண்டினேனென்னுமிடத்து, கண்டதும் தீண்டினதும் நானே என்று அவ்வறிவுதொடர்ந்து வருதல்போல, ஒருடம்பிலிருக்கும் ஒற்றுமையுடைய அவ்வைம்பொறிகளே ஒவ்வொன்றையுந் தொடர்ந்தறியுமாதலால், அவற்றின்வேறாய் உயிரொன்றுண்டென்பது பொருந்தாதென்று கூறுவதுநோக்கி அவ்விந்திரியங்களின்வேறாய ஆன்மா உண்டென்பதைவலியுறுத்தும் உதாரணம்,

ஒன்றறிந்த தொன்றறியா தாகி யுடன்மன்னி
மூன்றும் புலனையவ் வஞ்செழுத்தை—யொன்றறிந்த
துள்ளதே யாகி லதுநீ தனித்தனிகண்
டுள்ளவவை யொன்றல்ல போர்,

இ—ள். உடம்பினிருக்கும் அவ்வைந்திந்திரியங்களும் ஒன்றறிந்ததைவேறொன்றறியாததுமன்றி தம்முள் மாறுபடும் ஐந்தனுள் ஒன்றைமாத்திரம் அறிவதும் தாமாக அறிவதில்லை. சூக்கும பஞ்சாக்ஷரங்கள் செலுத்தச் சென்றறியும். அங்ஙனம் அறிகின்ற இந்திரியங்களின் தொழில்களைக், கண்உருவத்தை அறிவது செவி ஓசையை அறிவதென்றிவ்வாறு அறிகின்ற பொருள் ஒன்றில்லை எனில்? அவ்வறிவுநிகழாதாதலால் உள்ளதேயாம் அதுவே நீயாகிய ஆன்மா வென்க. அவ்வாறு அறிவதும் அவ்விந்திரியங்களே யெனில்? அவைகள் ஒவ்வொன்றும் அக்ஷரங்கள் செலுத்தச் சென்று ஒவ்வொரு விஷயங்களை வேறுவேறாயறிதன்மாத்திரை யேயன்றி, நாம் அறிந்தேமென்றும் அறியமாட்டா. அப்பயன் களையுங் கொள்ளமாட்டா. அவ்விந்திரியங்களின்வழியாக விஷயங்களை ஒருங்கே அறிவதும் நான் அறிந்தேனென்பதும் அப்பயன் களைக்கொள்வதும் அவற்றின் வேறாகிய ஆன்மாவே என்பதை ஆராய்ந்தறிவாயாக என்பதாம்.

இம்மூன்றதிகரணங்களாலும் சாக்கிரத்தினிகழும்பல்புபற்றி ஆன்மாவினுண்மைசாதிக்கப்பட்டது.

## நான்காமதிகரணம்.

சூக்குமதேகான்மவாதி, இச்சூக்குமதேகம் புறத்தேகாணப் படாதாயினும் (ஞேசவிந்திரியங்கட்குநிகழறிவிதனாற்காண்டிய)சத்தம் பரிசம் ரூபம்ரசம் கந்தம் மனம் புத்தி அகங்காரம் எட்டுமாகிய இச்சூக்குமதேகத்தால் அவ்விந்திரியங்கட்கு அறிவு நிகழுமெனவீனிருங் கொள்ளுதலால் அச்சூக்குமதேகமே உள்நின்று இந்திரியங்களைச் செலுத்தி அறியும். அதனின்வேறாய் ஆன்மா ஒன்றுள்ளது அதுவே அறியுமென்பது பொருந்தாதென்று கூறுவதுநோக்கிச் சூக்குமதேகத்தின்வேறாய்உயிருண்டெனச்சூத்திரத்தின் நான்காம் பாகத்தைப் பதம்பிரித்துரைக்கும் மேற்கோள்.

இனி, ஒடுக்கமறிதலின் ஆன்மாவுளதென்றது.

இ—ள். அவ்விந்திரியமைந்தும் ஒடுங்கின சொப்பனத்தில் நிகழ்ந்ததை அறிதலால் அங்ஙனமறியுமான்மா அதனின் வேறாயுண்டெனபதாம்.

சொப்பனத்தில் நிகழ்ந்ததைப் புறத்தேயறிவதுஞ் சூக்குமதேகமேயாதலால், இது முன்சித்தித்ததையே மேலுஞ் சாதிக்குஞ் சித்தசாதனமாகிய குற்றமாமென்று கூறுவதுநோக்கி அதன் குற்பரிய முணர்த்துவது.

நனவின்கட் கனவுகண்டாமென்றுங் கண்டிலமென்றும் நிற்பதுளதாகலின் அதுவே அவ்வான்மாவா மென்றது.

இ—ள். சொப்பனங் கண்டனங் கண்டிலமென்று சாக்கிரத்தில் மயங்கி அறியும்பொருளொன்றுள்ளதாதலால் அதுவே முற்கூறிய ஆன்மா வென்பதாம்.

ஒடுக்கமறிதலென்றது, சொப்பனத்தின் நிகழ்ந்ததை சாக்கிரத்தின் மயங்கியறித லென்பதேயாதலால் சித்தசாதனதோஷமாகா தென்க. கனவுகண்ட சூக்குமதேகமே சாக்கிரத்தில் அதனையும் அறியுமாயிற் கண்டபடியன்றி மயங்கி யறியாது, மயங்கியறிதல் காணப்படுதலால், சூக்குமதேகம் போல ஒருபடித்தன்றிக் கனவிற் செல்லுதல் நனவில்வருதல் முதலிய வேறுபாடுடைய உயிரே கனவுகண்டேன் கண்டிலே னெனமயங்கியறியுமாதலால் அதுவே அச்சூக்குமதேகத்தின் வேறுயுண்டென்பதுகாண்க.

கனவிற் செல்லுதலும் அங்கு நிகழ்தலும் மீளவருதலுமுணர்த்தி யதனை வலியுறுத்தும் உதாரணம்.

அவ்வுடலி னின்றுயிர்ப்ப வைம்பொறிக டாங்கிடப்பச்
செவ்விதி னவ்வுடலிற் சென்றடங்கி—யவ்வுடலின்
வேறொன்று கொண்டு விளையாடி மீண்டதனை
மாறலுடனீயல்லை மற்று.

இ—ள். தூலஉடம்பினின்று தொழிற்படும் ஐம்பொறிகள் அத்தொழிலின்றிக்கிடக்கும்போது புறத்தொழிலெல்லாமடங்கி அத்தூலவுடம்பினுட்சென்று அவ்வுடம்பிற்போல அதனின் வேறாய சூக்கும உடம்பெடுத்துக்கொண்டு வேறோர் வழியால் விரைந்து சத்தாதிவிடயங்களைப்பற்றிவிளையாடி மீண்டு அத்தூல உடம்பில் வருகின்றாயாதலால், அத்தூலவுடம்பினின்று புறத்து நிகழ்வனவற்றை அறிதல்போலச், சூக்குமவுடம்பினின்று அக

த்துநிகழ்வனவற்றை அறிகின்ற நீ அச்சூக்குமதேகமல்லை; னின் வேறாய ஆன்மாவேயென்பதாம்.

இவ்வதிகரணத்தாற் சொப்பனத்தில் நிகழுமியல்புபற்றி உயிருண்மை சாதிக்கப்பட்டது.

## ஐந்தாமதிகரணம்.

பிராணன்மவாதி, கனவிலன்றி மேற்செல்லமாட்டாத சூக்குமதேகம்போலாகாமல் சுழுத்திதுரியங்களிலுஞ் சென்று தொழிற்படும் பிராணவாயுவே கனவில் இந்திரியங்களை அடக்கியும், சாக்கிரத்தில் வெளிப்படுத்தியும் அறிவதாகிய ஆன்மாவாகுமென்றுகூறுவதுநோக்கி அப்பிராணனில் வேறாய், ஆன்மா உண்டெனச் சூத்திரதின் ஐந்தாம்பாகத்தைப் பதப்பிரித்துரைக்கும் மேற்கோள்,

இசரிக், கண்படில் உண்டிவினையின்மையின் ஆன்மா உளதென்றது.

இ—ள். நித்திராகாலம் பிராணவாயு சுழுத்தியில்இருக்கும்போதும் இன்பதுன்பஅநுபவமும் உடம்பு தொழிற்படுதலுமின்மையால் அநுபவித்தலுந்தொழிற்படுத்தலு முடைய ஆன்மா ஒன்று அப்பிராணவாயுவின் வேறாய் உண்டென்பதாம்.

சுழுத்தியில் அநுபவமும் தொழிலும் உடம்புக்கில்லையென்றது சரி. சுழுத்தியிற் பிராணவாயு நடத்தலாற் றொழிலும், பின்பு சுகமா உறங்கினேன் என்றலால் அநுபவமும் காணப்படுதலால் அப்பிராணவாயுவுக்கு அவ்விரண்டுமஅங்குஇல்லையென்றதுபொருந்தாதென்று கூறுவதுநோக்கி அதன்றாற்பரியமுணர்த்துவது. ஒடுங்கினவிடத்து இன்பத்துன்பம் சீவனம் பிரகிருதிக்கின்மையின் ஒடுங்காதவிடத்து இன்பத்துன்பஞ் சீவியாநிற்பதுளதாகலின் அதுவே அவ்வான்மாவாம் என்றது.

இ—ள். அநுபவமென்றது, உறங்கிய சுகத்தையன்று; விஷயங்களால் வரும் இன்பதுன்பங்களையே. தொழில் என்றது; வாயுநடத்தலையன்று; உடம்பின்றொழிலையே. ஆதலால், இவ்விரண்டும் பிராணவாயு நடக்கும்போதும் சுழுத்தியில் இன்மையானும்

சாக்கிரத்தில் உண்மையாலும் அவ்வின்மை உண்மைகட்கு ஏதுவாம் சுழுத்தியிற் கருவிகளை ஒடுக்கியும் சாக்கிரத்தில் ஒடுக்காமலும் நிற்பதொன்றுளதல்லவா? அதுவே பிராணவாயுவின் வேறாகிய ஆன்மாவென்பதாம்.

சுழுத்தியில், கருவிகள் ஒடுங்கிநிற்றலால் அநுபவமும் தொழிலும் உடம்புக்கில்லையென்பது பற்றிப் பிராணவாயுவை ஆன்மா வென்பதற்கு இழுக்கு என்னை? யென்று கூறுவதுநோக்கி அதனை வலியுறுத்தும் உதாரணம்.

கண்டறிவு மிவ்வுடலே காட்டொடுங்கக் காணாதே
யுண்டிவினை யின்றி யுயிர்த்தலாற்—கண்டறிவு
முள்ளம்வே றுண்டா யொடுங்கா துடனண்ணி
லுள்ளாதா மூண்டிவினை யூண்

இ—ள், உடம்பின்கண்ணேகருவிகள் தொழிற்படா தொடுங்கியபோது அநுபவமுந் தொழிலும் உடம்புக்கில்லையாகவும் பிராணவாயு நிலைபெற்றியங்குதலால் அதுவேஉயிரானால் அநுபவமும் தொழிலுமில்லாமற் போகவேண்டாம், ஆதலால் விடயங்களைக் கண்டறியும் உரிமையுடைய உயிர் பிராணவாயுவின் வேறு யுண்டு. அவ்வுயிர் ஒடுங்காமல் அவ்வுடம்பிற்பொருந்துமானால் அவ்வுடம்பு அநுபவமுந் தொழிலும் உடையதாம். அதனை ஆராய்ந் தறிவாயாக என்பதாம்.

இவ்வதிகரணத்தால் சுழுத்திதுரியங்களில்நிகழுமியல்புபற்றி உயிருண்மை சாதிக்கப்பட்டது. இதுகாறும் சார்மாயைநீயல்லை என்றதனை வலியுறுத்தியவாறு.

## ஆறுமதிகரணம்.

விஞ்ஞானான்மவாதி, மேற்கூறிய பிராணவாயுமுதலியவை சடங்களாதலால் அவைபோலாகாமல் என்றுஞ்சித்தாயுள்ளபிரமமே ஆன்மா என்று கூறுவதுநோக்கி பிரமத்தின்வேறாய் உயிருண்டெனச் சூத்திரத்தின் ஆறும்பாகத்தைப்பதம்பிரித்துரைக்கும் மேற்கோள்.

இனி, உணர்த்த வுணர்தலின் [ஆன்மா உளதென்றது.]

# மூன்றாஞ்சூத்திரம் ஆறாமதிகரணம்

இ—ள். நீகூறும் பரப்பிரமம் எக்காலத்தும் வேறுபடாமல் எல்லாவற்றையும் தானே அறிந்து நடத்துவதாம். ஆன்மாவோ, சாக்கிரத்தினின்று சொப்பனாதிகளில் போக்கு வரத்துச்செய்து துரியாதீதத்திற் கேவலமாய் அறிவின்றிக் கிடந்து, கலையாதிகருவிகளால் சிறிது அறிவிக்க அறிவதாம். இவ்வான்மாவை அப்பிரமமென்பது தகாதாதலால் அவ்வாறு அறிவிக்க அறியும் ஆன்மா வேறுண்டென்பதாம்.

அப்பிரமமே அவிச்சைக்காலத்துக்கருவிகளுடன் கூடிநின்றறியும். அதுபற்றி உயிர்வேறுண்டென்பது பொருந்தாதென்று கூறுவது நோக்கி அவ்வளவில் அவன்மகிழ்க என்னும் நியாயத்தால் வேறும் அதன்றாற்பரியம் உணர்த்துவது.

அவனறிந்தாங் கறிவனென் றறிவிக்க வறிந்து உபதேசியாய் நிற்பதொன் றுளதாகலின் அதுவே யவ்வான்மாவாமென்றது,

இ—ள். கருவிகளுடன்கூடி அறியும்போதும் மறந்து மறந்தறிவ தன்றி அறிந்தபடியே அறியாமல் அங்ஙனம் அறியுமிடத்தும் விஷயங்களையறிவதன்றித் தன்னையும் தலைவனையும் அறியாத ஆன்மாவைப்போலாகாமல், அறிந்தபடியே அறியும்பேரறிவுடையது பிரமமென்பதும், தான் அடிமையென்பதும் வேதாகமங்களால்அறிவிக்க அறிந்து, அறிந்தபடி அநுபவநிலைவரும்பொருட்டுச்சற்குருவின் உபதேசம்பெற்று நிற்பதொன்றுள்தாதலால் அதுவேமுற்கூறிய ஆன்மாவென்பதாம்.

பிரமம் கருவிகளுடன்கூடியபின்னும் அஞ்ஞானம்நீங்காமையால் விஷயமாத்திரமன்றித் தன்னியல்பறியாது. உபதேசத்தால் அறியுமாதலால், அதுபற்றி இழுக்கென்னை என்று கூறுவது நோக்கி அதனையும் அவ்வளவில் அவன் மகிழ்க என்றநியாயத்தால் உடன்பட்டு இன்னுமொரு தாற்பரியங்கூறுமுறையில் விடயங்களை அறியும்போதுமுண்டாம் வேறுபாடு கூறி அதனை வலியுறுத்தும் உதாரணம். பிரமம் அறிந்தாங்கறியுமாறும் உயிர் மறந்துமறந்தறியுமாறும் தெரித்துணர்த்திவலியுறுத்துவதெனினும் அமையும்,

அறிந்த மறிவதே யாயு மறியா
தறிந்ததையும் விட்டங் கடங்கி— யறிந்த
தெதுவறிவு மன்றாகு மெய்கண்டா னென்றி
னதுவதுதா னெனலு மகம்.

இ—ள். சாக்கிரத்தில் எல்லாக்கருவிக ளுடனிருந்தும, எல்லாவற்றையும் அறியமாட்டாமல் ஒன்றையறிந்தும், வேறொன்றை அறியச்சென்றும், முன்னறிந்ததை மறந்தும் இப்படி ஒவ்வொன்றை யறிந்ததையும தொடர்ந்தறியாமல், விட்டு விட்டு ஐந்தவத்தைகளில்ஒன்றில் அறிந்ததைமற்றொன்றில் அறியாதடங்கி மீண்டும் அறிந்துவருதல் காணப்படுதலால், அப்படி அறிந்துவரும் பொருள் அவ்வறிவுடைமையாற் சடமுமன்று; இயற்கையாக எல்லாம்ஒருங்கு அறியும் பிரமமுமன்று. இதனை, உண்மையான சித்தாந்தநெறிஉணர்ந்தவன் உற்றுநோக்குவனேல், காட்டுகின்ற சூரிய னொளிக்குவேறாய கண்ணொளிபோல, அறிவிக்கின்ற பிரமத்துக்கு வேறாய்ச்சார்ந்ததன் வண்ணமாய் நின்றறியும் ஆன்மாவே யென்பது அறிவனென்பதாம்.

## ஏழாமதிகரணம்.

சமுகான்மவாதிகளாகிய சௌத்திராந்திகர், வைபாடிகர், மேலே தேகம் இந்திரியம் முதலியஒவ்வொன்றை மாத்திரம்ஆன்மா வென்றதுபொருந்தா தென்றது சரி; இவைகளி லொன்றுகுறையினும் அறிவுநிகழாமையாலும், எல்லாங்கூடியபோது அறிவு நிகழ்தலாலும்எல்லாங்கூடிய சமுதாயமே ஆன்மா வென்றுகூறுவது நோக்கிஅச் சமுதாயத்தின்வேறாய் உயிருண்டெனச்சூத்திரத்தின் ஏழாம்பாகத்தைப் பதம்பிரித்துரைக்கும் மேற்கோள்.

இனி, மாயா வியந்திர தனுவினுள் ஆன்மா வுளதென்றது.

இ—ள். நீ கூறிய சமுதாயப் பொருளெல்லாம் மாயா காரியங்களாய்ச் சூத்திரப் பாவைபோல ஒருசரீரமாய்க் கட்டப்பட்டு அழியுந் தன்மையவாதலால், அவ்வுடம்பினுள்ளே மாயாகாரியு மாகாத நித்தியமான ஆன்மாஒன்று உண்டென்பதாம்.

சித்தமும் சித்தப்பகுதியு மாகிய அகச்சமுதாயம் ஈந்தும்மா யாகாரியமா யழியுந் தன்மையவென்பது எமக் குடன்பாடில்லை

யாதலால், அதுபற்றி ஆன்மாவேறுண்டென்பது பொருந்தாதென்று கூறுவதுநோக்கி அவ்வளவின் அமையா மதிமுக என்னும் நியாயம்பற்றி வேறுமோர் வழியால் ஆன்மா வேறுண்டெனச் சாதிப்பது.

அவைதாம் வெவ்வேறு பெயர்பெற்று நிற்றலான்.

இ—ள். நீ ஐந்துகந்தமெனக் கொண்டமாயா காரியங்கள் ஆன்மா வென்று பெயர்பெறாமல் வெவ்வேறுபெயரினிற்றலால் அவைகள் ஆன்மாவல்ல அவற்றின்வேறாய் மாயாதனுவினுள் ஆன்மா உளது என்பதாம்.

அவைகள் வெவ்வேறுபெயர்பெறினும், எல்லாஞ்சேர்ந்தசமுதாயத்தில் ஆன்மாவென்னும் பெயர் பெறும் எனக்கொள்வோம் அதுபற்றி இழுக்கில்லை என்று கூறுவதுநோக்கி அவை வெவ்வேறுபெயர் பெறுமிடத்தும் அவர் கூறியபடி உருவம் விஞ்ஞானமுதலிய பேரின்றி வேறுபேர்பெறுதலும் அவைமாயாகாரியங்களேயாதலும் அச்சமுதாயத்திலும் ஆன்மா வெனும் பேரின்றி வேறுபேர் பெறுதலுமுணர்த்தி ஆன்மாவேறுண்டென்பதை வலியுறுத்தும் உதாரணம்.

கலையாதி மண்ணந்துங் காணிலவைமாயை
நிலையாவாந் தீபமே போல—வலையாமன்
ஞானத்தை முன்னுணர்ந்து நாடலாற்றனுவாந்
தானத்தின் வேறாகுந் தான்.

இ—ள். அச்சமுதாயங்கள் எவைகளென்றாயிற்கலைமுதற் பிருதிவி வரையுள்ள தத்துவங்களேயாம். அவையாவுமமாயா காரியமாதலால் சிலகாலம்நின்று அழிவனவாம். அச்சமுதாயத்தில்விளங்கும் ஞானவியல்பைமனம் ஒருவழிப்படாநின்று அசையாமன்முன்னுணரின் அதுகருவி ஞானமேயாம். பின அச்சமுதாயம்யாதென்றாராயின் அது, கண்ணுக்கு விளக்கு அறிதற்கருவியாதல்போல, உயிர்க்குத் தூலசூக்குமகாரணதேகங்களாகிய அறிதற் கருவியேயாம். ஆதலால், கண் விளக்கின்வேறானாற்போல உயிர் உடம்பின் வேறேயென்பதாம்,

இச்சூத்திரம், சூனியமே ஆன்மா, தூலதேகமே ஆன்மா, இந்திரியமே ஆன்மா, சூக்குமதேகமே ஆன்மா, பிராணவாயுவே ஆன்மா, பிரமமே ஆன்மா, சமுதாயமே ஆன்மா என்றுகூறும்வாதிகளை மறுத்து, ஆன்மா இவற்றின்வேறாயுள்ளதென்று பிரமாணங்கள்காட்டிப் பசு வுண்மைவிளக்கிய வாறு காண்க.

ஆனால், பதி பசு பாசமென்றிம்முறையாகக் கூறாமல், பதி பாசம் பசு என்றுகூறியதென்னையோவெனில்? தலைமைபற்றிமுதற்சூத்திரத்தில் நிமித்த காரணமாகிய பதி யுண்மைகூறி அக்காரணவொற்றுமைபற்றி இரண்டாஞ்சூத்திரத்தில் துணைக்காரணமாகிய கன்மமும் அதற்கு ஆதாரமாயுள்ள மாயையுமாகிய பாச வுண்மையும் அதனால் உலகம் காரியப்படு முறையுங்கூறி அதனாலாகும் பிரயோஜனங்களைப் பெற்றுக்கொள்வது பசுவேயாகுமுறைபற்றி மூன்றாஞ்சூத்திரத்தில் அப் பசு வுண்மையுங்கூறியவாறுமென்க.

## நான்காஞ்சூத்திரம்

### பசு விலக்கணம்.

அந்தக் கரண மவற்றினொன் றன்றவை
சந்தித்த தான்மாச் சகச மலத்துணரா
தமைச்சர சேய்ப்பநின் றஞ்சவத் தைத்தே.

கருத்துரை. இதுவுமது.

இ—ள். பிரமாணத்தாலும் இலக்கணத்தாலும் முப்பொருளுண்மை விளக்கத்தொடங்கிய முறைபற்றி முன்மூன்று சூத்திரங்களாலும் பிரமாணங் கூறப்பட்ட பதி பாச பசுக்களின் இலக்கணம் எதிர் நிரனிறையாகக் கூறத்தொடங்கி அம்மூன்றனுள் இச்சூத்திரம், இதற்கு முன் அடுத்துநின்ற பசுவின் இலக்கணங் கூறுவதென்பதாம்.

கூ—ள். மூன்றாஞ்சூத்திரத்தால், என்றுமுள்ளபொருளென்று நிச்சயிக்கப்பெற்ற ஆன்மாவானது, மனம் புத்தி அகங்காரம் சித்தமாகிய அந்தக்கரணங்களுள் ஒன்றாவதன்று. ஆயினும், அரசன் பொதுமையாகத் தனக்கு அறிவிருந்தும் பகுத்தறியும் நுண்ணறிவின்மையால் ஆலோசனைத்துணைவர்களாகிய மந்திரி முத

லானவர்களுடன் சேர்ந்துநின்று அவர்களாற் பகுத்தறிவுகொண்டு உலக காரியங்களிற் போக்கு வரத்துச் செய்தல்போல, அவ்வான்மாவும் தன்னை அநாதியே பந்தித்துள்ள சகச மலமாகிய ஆணவத்தால் அறிவு மறைபட்டுக்கிடந்து பின் கலை முதலிய தத்துவங்களால் பொதுவாகச் சிறிது அறிவுபெற்றும் அம்மட்டிலமையாமல், பகுத்தறிவுஞ் சிறப்பறிவு விளக்குதற்குரிய ஆலோசனைத் துணைவர்போன்ற, அவ்வந்தக்கரணங்களுடன் சேர்ந்துநின்று அவத்தைகளிற் போக்கு வரத்துச்செய்யுமாதலால் ஐந்து அவத்தைகளை உடையதாகுமென்பதாம்.

இச்சூத்திரம், அந்தக்கரணமவற்றி னொன்றன்று, (அன்றுபினும்) சகச மலத்துணராது அமைச்சரசேய்ப்ப அவைசந்தித்தது, அமைச்சரசேய்ப்பநின்று அஞ்சவத்தைத்தே எனமூன்றதிகரணமுள்ளது.

## முதலதிகரணம்.

அந்தக்கரணான்மவாதி, முன் மற்றெல்லாம் வெவ்வேறு பெயர் பெறுதலால் அவைகள் ஆன்மாவல்லவென்றது சரி "சிந்தையைச்" சீவனென்று நீவிரும் வழங்குதலால் அச்சிந்தைமுதலிய அந்தக்கரணங்கள் தனித்தனி ஆன்மாவாமென்று கூறுவது நோக்கி அவை ஆன்மாவன்றெனச் சூத்திரமுதற்பாகத்தைப்பதம்பிரித்துரைக்கும் மேற்கோள்.

ஈண்டு இவ்வான்மாவாவது அந்தக்கரணங்களாயுள்ள மனோபுத்தி யாங்கார சித்தங்களில் ஒன்றன்றென்றது.

இ—ள், மேற்கூறிய உயிராவது, புறவந்தக்கரணங்களாகிய மனம்புத்தி அகங்காரஞ் சித்தங்களின்வே றென்பதாம்.

"மனமும் புத்தியகங்காரஞ்சித்த நான்கு மருவியான்மாவே யென்னவரும்" என்று நீவிருங்கொள்ளுதலால், உயிர், அந்நான்குளொன்றுமெனிற் பழுதென்னை? என்று கூறுவதுநோக்கிமேற்கோளைச் சாதிக்கும் ஏது.

அவைதாம் பிரகாசமாய்நின்றே அப்பிரகாசமாய் நிற்றலான்.

இ—ள். அந்தக்கரணங்கள், கீழுள்ள இந்திரியங்களுக்கு அறிவித்தல்நோக்கி(சீவன்) சித்தென்று உபசரித்துக் கூறப்படினு

ம், தம்மை எனி நடத்தும் ஆன்மாவைநோக்கி அசித்தேயாம் ஆதலால் தன்னைநோக்கியும் எப்போதுஞ் சித்தாயுள்ள ஆன்மா அவற்றின் வேறே என்பதாம்.

எனவே, உயிரால் அதிட்டிக்கப்பட்டுப் பொறிகளின்வழியாக விடயங்களை அறிகின்ற அந்தக்கரணங்களுள்ளே, சித்தம், இதுயாதென்று சிந்தித்தறியும்; யான் சிந்தித்தேனென்று தன்னையறியாது. மனம் இஃது இன்னதாமெனவும் ஆமோ அன்றோவெனவும் அதனைப்பற்றிநின்றறியும்; யான் பற்றினேனென்று தன்னையறியாது. அகங்காரம், நிச்சயித்தறிவேனென்றெழும்பிநின்றறியும்; யான் எழும்பினேனென்று தன்னை யறியாது. புத்தி, நிச்சயித்தறியும்; யான் நிச்சயித்தேனென்று தன்னை யறியாது. ஆன்மாவோ அந்நான்கையுங் கருவியாகக்கொண்டு நான் சிந்தித்தேன்; பற்றினேன்; எழும்பினேன்; நிச்சயித்தேன் என்று தன்னையும் அறியும் அதன்பின் புத்தியால் நிச்சயிக்கப்பட்டுச் சுகதுக்கமோகரூபமாய்த்தன்பால் வந்தவைகளை கலாதிகளுடன்கூடி நின்று இது சுகம் இது துக்கம் இது மோகம் என்றுபிறவற்றையும் சுகித்தேன் துக்கித்தேன் மோகித்தேனென்றுதன்னையும் அறியும். இவ்வாறு பிறவற்றைநோக்கியும் தன்னைநோக்கியும் சித்தாயுள்ள ஆன்மா, தம்மைநோக்கிச் சித்தாகாத அந்தக்கரணங்களில் வேறுமென்பது தெளிவாம்.

“இவன்றானும் புத்தியுஞ் சித்திவனுமோபுத்தி” என்று வழிநூலாசிரியர் கூறியதும் இவ்வியல்புநோக்கியே. ஆலோசனை மட்டிற்கே அரசனைச்சார்ந்துநிற்கப்படும் மந்திரிகள் அரசராகார், அவரையும் அரசனென்பது அணுக்கவுரிமை நோக்கிக் கூறும் உபசாரமே, அதுபோல, பகுத்தறிதல் மட்டிற்கே துணைக்கருவியாக ஆன்மாவினைச் சார்ந்துநிற்கப்படும் அந்தக்கரணங்கள் ஆன்மாவாகா" கருவியாமனமும் புத்தியகங்காரஞ் சித்தநான்கு மருவியான்மாவை” என்றது, மற்றைப் புறக்கருவிகள் போலாகாமல் ஆன்மாவுக்கு அணுக்கமாய் நிற்கும் சிறப்புநோக்கிக்கூறும் உபசாரமே, உண்மையன்றென்க.

# நான்காஞ் சூத்திரம் முதலதிகரணம்:

இதனால், முன்சூத்திரத்தில் மறுக்கப்படாது நின்ற அந்தக் கரணான்மவாதியை மறுத்தலாயிற்று.

அந்தக்கரணங்கள், தங்கீழுள்ளவற்றை நோக்கிச் சித்தாதலும் மேலுள்ளவற்றை நோக்கியும் தம்மை நோக்கியும் அசித்தாதலும் உணர்த்தி மேற்கூறியதை வலியுறுத்துமுதாரணம்.

மனமாதி யாலுணர்தன் மன்று புலன்கண்
மனமாதி மன்புலனி னல்லன்—மனமே
லுதித்தொன்றை யுள்ள முணர்த லதனி
லுதிக்குங் கடற்றிரையை யொத்து

இ—ள். மனமுதலிய அந்தக்கரணங்கள், இந்திரியங்களின் வழியாகப் புறவிடயங்களை உணரும். ஆன்மா, அம்மனத்துக்கு மேலாகிய புத்தியின்வழிவரும் சுகதுக்காதிகளை உணரும். அவ்விருவித அறிவும் ஒன்றன்பின் ஒன்றாக ஆன்மாவையே சாரும். அது, கடலின் வருந்திரை, ஒன்றன்பின் ஒன்றாகக் கரையைச் சேர்தல்போலாம். அதனால், ஐம்பொறிவழியா யுணரும் அந்தக்கரணங்கள் அப்பொறிகளின் வேறாதல்போல அந்தக்கரணங்களின் வழியாயுணரும் ஆன்மாவும் அவற்றின் வேறென்பதாம்.

ஒன்றன்பின் ஒன்றாகச்சார்தலாவது, முன்னர் வாயிற்காட்சியறிவும், பின் மானதக் காட்சியறிவும், அதன்பின்தன் வேதனைக் காட்சியறிவும் ஆன்மாவில் வந்து சாருதலாம்.

முன். பொதுவாக, இந்திரிய வழியாய் அறியுமென்ற அந்தக் கரணங்கள் தனித்தனி இவ்வாறு அறியுமென்று சிறப்பாகக் கூறும்முறையில், அவ்வந்தக்கரணங்களால் அறியும் மானதக்காட்சியுள்ளும் கடற்றிரைபோல ஒன்றன்பின் ஒன்றாய் வெவ்வேறுணர்வு நிகழுமுறை யுணர்த்தி, ஆன்மா அவற்றின்வேறாதலை வலியுறுத்தும் உதாரணம்.

சிந்தித்தாய் சித்தந் தெளியாதா யாங்காரம்
புந்தியா யாய்ந்து மனமாகிப்—பந்தித்து
வெவ்வேறு தானே துணிந்துள்ள மிவ்வேறு
மவ்வேறும் போதுபோ லாங்கு.

# சிவஞானபோதார்த்த லெகுவசனம்.

இ—ள். ஆன்மா, இந்திரியக்காட்சியால் கண்ட விஷயங்களை மனமாதியாலறியும் மானதக் காட்சியிலும்ஒருதன்மைப்படாமல், சித்தமாய்நின்று இதுயாதெனச் சிந்தித்தும், மனமாய்நின்று இஃது இன்னதாமெனப்பற்றியும், அகங்காரமாய்நின்று இன்னதென நிச்சயிப்பேனென்று தெளிவின்றி யெழுந்தும், புத்தியாய்நின்று இன்னதெனத் தெளிந்தும் இப்படியே வெவ்வேறாக அறிதலால். அவ்வாறு அறியும் ஆன்மா, ஒன்று மற்றொன்றை அறியாத அவ்வந்தக்கரணங்களின் வேறாம்; அது, சூரியன்முதலியவற்றுடன் கூடிநின்று நாழிகை, நாள், பட்சம், மாசம் முதலியவாக வேறுபடுத்துகின்ற காலதத்துவம் அவற்றின் வேறாய் நிற்றல்போலு மென்பதாம்.

அந்தக்கரணங்களை, அசித்தென்றலால் அம்மானதக்காட்சியின் அறிவெப்படி நிகழுமென்று ஐயுறுவண்ணாம் அவற்றினுடனின்று செலுத்தும் அக்ஷரங்கள் இவையென்பதும் அவற்றால் அறிவு மாறிமாறித் தோன்று முறையு முணர்த்து முதாரணம்.

அகார வுகார மகங்காரம் புத்தி
மகார மனஞ்சித்தம் விந்துப்—பகாதிவற்றை
நாத முளவடிவா நாடிற் பிரணவமாம்
போதங் கடற்றிரையே போன்று.

இ—ள். அகரம்—அகங்காரத்தையும், உகரம்—புத்தியையும், மகரம்—மனசையும், விந்து—சித்தத்தையும், நாதம்—ஆன்மாவையும் செலுத்துதலால் கடலில் அலை புதிதாய்த்தோன்றி ஒடுங்கிவருதல்போல (மகாசகலம்) எல்லாக்கருவிகளும் தொழிற்படுகின்றசாக்கிரத்தில், அறிவு கணந்தோறும புதிதுபுதிதாய்த் தோன்றியும் ஒடுங்கியும் மாறி மாறிவரும் இவ்வக்கரம் ஐந்தும் தனித்தனிப்பிரிவின்றிச் சேர்ந்துநிற்பது பிரணவமாகு மென்பதாம்.

சூக்குமைமுதலியவாக்கு நான்கும் நிவிர்த்திமுதலிய ஐந்துகலைகளைப்பற்றி அகாரமுதலிய பஞ்சகலைவடிவாய் நின்று அந்தக்கரணங்களை வேறுவேறு செலுத்தலால்மகாசகலத்திற் கணந்தோறும் நினைப்பும்மறப்புமாகிய சகலகேவலங்கள்காற்றாடிபோலமாறி மாறிஅதிநுட்பமாய்நிகழுமென் றுணர்க.

## ஞானகாருசூத்திரம் இரண்டாமதிகரணம்.

அவ்வக்கரங்களும் சடமாதலால் அவற்றை யதிட்டிக்கு மதிதெய்வங்க ளிவையென் றுணர்த்து முதாரணம்.

எண்ணில வோங்காரத் தீசர் சதாசிவமா
நண்ணிய விந்துவொடு நாதத்துக்—கண்ணிற்
பகரயன்மா லோடு பரமனதி தெய்வ
மகரவுக ரம்மகரத் தாம்.

இ—ள். நாதத்திற்குச் சதாசிவமும்விந்துவுக்கு மகேசனும் மகரத்துக்குருத்திரனும் உகரத்துக்கு விஷ்ணுவும் அகரத்துக்குப் பிரமனும் அதிதெய்வங்களென்பதாம்.

## இரண்டாமதிகரணம்

ஆன்மா, அந்தக்கரணங்களின்வேறாறல் அவற்றுடன் சார்ந்து நிற்றற்கு ஏது என்னென்று கூறுவதுநோக்கிச்சூத்திரத்தின் இரண்டாம் பாகத்தைப்பகுப்பித்துரைக்கும் மேற்கோள்.

இனி, இவ்வான்மாசகசமலத்தினாலுணர்வின்றென்றது.

இ—ள். அவ்வுயிர், முதல்வனைப்போல் அந்தக்கரணங்களின் வேறாய் அறிவுடையதாயிருப்பினும், அவ்வறிவைமறைத்துக்கொண்டு செம்பிற்களிம்புபோல அநாதியேதன்னுடன்சகசமாய் நிற்கும் ஆணவமலத்தினால் தன்னியல்பின் அறிவதன்றி, அந்தக்கரணேந்திரியங்களுடன் கூடிநின்றறிவதாயிற்றென்பதாம்.

இதனால், மூலமலத்திற்குத்தன்னியல்பு அறியாமையைச் செய்வதாகிய கேவலாவஸ்தையி னிகழு மியல்பே என்றும், பொதுவியல்பு கருவிகளுடன் கூடி அவத்தை யுறுவதாகிய விபரீத வுணர்வைச் செய்புமியல்பே என்றும், அவ்வாணவமலத்தின் இருவிதஇலக்கணமும் விளக்கமாதல் காண்க.

சகச மலத்தால் அறிவில்லையேற் பின்கருவிகளாலுண்டாவதெப்படி? உண்டேல், இல்லது உள்ளதாகாது; உள்ளதில்லதாகாது என்னுஞ்சற்காரிய விரோதமல்லவா? வென்று கூறுவது நோக்கிமேற்கோளைச்சாதிக்கும் ஏது.

அது தான்ஞானதிரோதகமாய்மறைத்துக்கொண்டு நிற்றலாக்

இ—ள். அச்சகசமலம், ஞானம்நிகழவொட்டாமல அதனை இல்லையென்னும்படிமறைத்துக்கொண்டு நிற்றலால் உணர்வின் றெனமேற்கொண்டதென்பதாம்.

அம்மலத்தால் மறைந்திருந்த அறிவுதான் கருவிகளால்விளக்கமாவதன்றி முன்இல்லாததுபின் உள்ளதாகவில்லையாதலால் சற்காரியவிரோதமின்றென்க.

ஐக்கியவாதசைவர், ஆகந்துகமலமாகியமாயையே ஆன்ம அறிவை மறைக்கும், வேறுமோர்மலமுண்டென்பது மிகையாமென்று கூறுவதுநோக்கி அவ்விரு மலங்களின் செயல்வேற்றுமையுணர்த்துமுறையில் ஏதுவை வலியுறுத்தும் உதாரணம். -

மாயா தனுவிளக்கா மற்றுள்ளங் காணுதே
லாயாதா மொன்றை யதுவதுவாய்—வீயாத
வன்னிதனைத் தன்னுண் மறைத்தொன்றுங் காட்டம்போற்
றன்னைமல மன்றணைத ருன்.

இ—ள், ஆன்மா, மாயா காரியமாகிய உடம்பைக்கொண்டு தான்விடயங்களையறியும். உடம்பில்லையேல் ஒருவிடயத்தையும் அறியாது. அவ்வுடம்பு பொருள்களைக்காட்டும் விளக்குப்போல் வதன்றி அறிவைமறைப்பதன்று. மறைப்பது, மேற்கூறியபடி அநாதியேபந்தித்துள்ள ஆணவமலமேயாம். அது, அதுஅதுவாயின்று தனக்கு அழிவில்லாத அக்கினியைத்தன்னுண் மறைத்துக்கொண்டு ஒன்றே என்னும்படிநிற்கும் விறகு முதலியன போலுமென்பதாம்.

ஆகவே, ஆகந்துகமலமாகிய மாயை விளக்கொளிபோலும்; அநாதி மலமாகிய ஆணவம் இருள்போலுமென அவ்விருமலங்களும் மாறுபட்டுநிற்கும் வேற்றுமை பெரிதாதலை விளக்கிய வாறுமென்க

## மூன்றுமதிகரணம்.

அந்தக்காரணன்மவாதி, இருளிலகப்பட்டகண, விளக்குடனகூடியபோது பொருள்களையறிவதன்றி வெவ்வேறவத்தைப்படுவதில்லை. அதுபோல, மலத்திலகப்பட்டஆன்மா, கருவிகளுடன்

# நான்காம்சூத்திர மூன்றுமதிகரணம்.

கூடியபோது ஒருதன்மைத்தாயறியுமன்றி வெவ்வேறவத்தைப படுமென்பதெப்படி? யென்று கூறுவதுநோக்கிச் சூத்திரத்தின் மூன்றும்பாகத்தைப் பதம்பிரித்துரைக்குமேற்கோள்.

இனி, இவ்வான்மாச் சாக்கிரஞ் சொப்பனஞ் சுழுத்தி துரியந்துரியாதீத மாயுள்ள பஞ்சா வத்திதனாய் நிற்குமென்றது.

இ—ள் சகச மலத்தால் அறிவின்றிக்கிடந்து அந்தக்கரணங்களுடன்கூடி அறிவு தொழிற்பட நிற்குமான்மா, மந்திரிகளுடன்கூடித் தொழிற்செய்யும் அரசன்போல் நிற்றலால், அவ்வரசன் மந்திரிமுதலியசைனியங்கள் தன்னைச்சூழப் புறஞ்சென்றுமீண்டு தன்மாளிகையுட்செல்லுங்கால், நிறுத்தவேண்டியவர்களை அந்தஅந்தவாயில்களில்நிறுத்திக்காவலும் வைத்துவிட்டு உட்செல்லுதல் போல அவ்வான்மாவுந் தன்னைத் தத்துவங்கள் சூழப்புறஞ்சென்று மீண்டு அத்தத்துவங்களை அறிவுகாவலாக அங்கங்கே நிறுத்திவிட்டு உட்செல்லுமுறையில், சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, துரியம், துரியாதீதமாகிய ஐந்தவத்தையுடையனாய் நிற்பனென்பதாம்.

அரசன் போல, ஆன்மா அஞ்சவத்தைப்படின் அதன்வியாபகத்துக்கு இழுக்கா மென்று கூறுவதுநோக்கி இழுக்கின்மை விளக்கி மேற்கோளைச்சாதிக்கும் ஏது.

அது தான் மலசொரூபத்தின் மறைந்து அரூப சொரூபியாய்நிற்றலான்.

இ—ள். அவ்வான்மா. மலவடிவின் மறைப்புண்டவிடத்து அருவ வடிவாகிய தத்துவ சொரூபியாய் நிற்றலால் அத்தத்துவங்கள தொழிற்படும அவத்தை வேறுபாடுபற்றி அஞ்சவத்தைப் படுமென்று மேற்கொண்டதென்பதாம்.

அதனால், ஆன்ம அறிவு அங்கங்கேநிற்குங்கருவிகளுடன்கூடி வியாபித்து நிற்றலால் அதன் வியாபகத்துக்கு இழுக்கில்லையென்க.

தத்துவங்கள் தொழிற்படுமிடத்து வரும் அவத்தைகளின் வேறுபாடு தெரிவித்து ஆன்மதத்துவ சொரூபியாய்நிற்பினு மதற்கு ஏதுவாதலை வலியுறுத்தும் உதாரணம்,

ஒன்றணையா மூலத் தயிரணையு நாபியினிற்
சென்றணையுஞ் சித்த மிதயத்தின் — மன்றவே
யையைந்தா னணுகலிற் கண்டத்தின் வாக்காதி
மெய்யாதி விட்டகன்று வேறு.

இ—ள். மூலம், நாபி, இருதயம், கண்டம், புருவநடுவாகிய ஐந்திடங்களினுமுறையே நின்று தொழிற்படும் தத்துவங்கள். க. உ. ங. உரு. ஙரு. என்பதாம்.

அவத்தைகள், கேவலம், சகலம், சுத்தமெனமூன்றும். இவற்றின் காரியாவத்தைகள் மூவைந்துபதினைந்தாம். ஆகவே இம்மூன்றுங்காரணாவத்தைகளென்க.

ஆன்மா, ஆணவமலத்தால் அணுத்தன்மையாய் அறிவுமறைபட்டு ஒருகருவிகளோடுங் கூடாமல் தனித்திருக்கும் நிலை கேவலாவத்தை என்பதாம். கேவலம்— தனிமை. அவத்தை— இருத்தல். சகலம்- ஆன்மா, கலையாதி கருவிகளுடன் கூடி அறிவு விளங்கப்பெற்று நிற்கும் நிலையாம். சுத்தம்- ஆன்மா, அநாதிமலமுத்தசுத்தபதார்த்தமாய்க் கருவிகளொன்றனும் பற்றப்பெறாது தத்துவாதீதமாய்நிற்கும் சிவத்துடன்சாருதற்குரிய நிலைதிருவருளாற்கைவரப்பெற்றுத் தானுங் கருவிகள் முழுதும் நீங்கிச் சுத்தமாய்ச் சார்ந்துநிற்கும் சுத்தாத்துவித நிலையாம். இம்மூலாவத்தைமூன்றிற் கேவல காரியாவத்தை- ஆன்மா சகலத்தினின்று கீழ்நோக்கிச்செல்லும் கேவலசாக்கிரம், கேவலசொப்பனம், கேவலசுழுத்தி, கேவலதுரியம், கேவலதுரியாதீதமெனஐந்தாம். இதுகீழாலவத்தை. சகலகாரியாவத்தை- ஆன்மா, சகலத்திற் கீழ்நோக்காமலும் மேல்நோக்காமலும், நினைப்பு மறப்புக்களாற் கணந்தோறும் மாறிச்செல்கின்ற சகலசாக்கிரம், சகலசொப்பனம், சகலசுழுத்தி, சகலதுரியம், சகலதுரியாதீதமெனஐந்தாம். இதுமத்தியாலவத்தை. சுத்தகாரியாவத்தை- ஆன்மா, யோகமுறையில் இருதயம், கண்டம், தாலுமூலம், புருவநடு, பிரமரந்திரமாகிய ஐந்திடத்தும் மேல்நோக்கிச் செல்லும் நிலையாம். இதுமேலாலவத்தை. இம்மூன்றில் மூலகேவலம் இச்சூத்திரத்திற் "சகசமலத்துணராது" என்றதனுலுணர்த்தப்பட்டது. அதன்காரியமாகிய கீழாலவத்தை (ஒன்றணையா) என்றஇவ்வெண்பாவில், ஆன்மா,

பஞ்சகஞ்சுகளும்புருடனிலைபுற்றுச்சாக்கிரத்தானமாகிய புருவநடுவில். ௩௰௫. தத்துவங்களும், சொப்பனத்தானமாகிய கண்டத்தில். ௨௰௫. தத்துவங்களும், சுழுத்தித்தானமாகிய இருதயத்தில். ௩. தத்துவங்களும், துரியத்தானமாகியநாபியில். ௨. தத்துவங்களும் தொழிற்படத்துரியாதீதமாகிய மூலாதாரத்தில் தான்மாத்திரம் நிலைபெறுதலாமென்க.

அங்ஙனம் அதீதத்தினின்ற ஆன்மா சாக்கிரத்திலும் ஐந்தவத்தைப்படுமென அதனை வலியுறுத்தும் உதாரணம்.

இலாடத்தே யைந்தவத்தை யெய்திய வுள்ள
மிலாடத்தே யைந்தவத்தை யெய்து—மிலாடத்தே
யவ்வவ விந்திரியத் தத்துறைகள் கண்டதுவே
யவ்வவற்றி னீங்கலது வாங்கு.

இ—ள். அவ்வாறு கீழ்ச்சென்றபடி மீண்டு புருவநடுவில் உணர்ந்துமுறைச்சாக்கிரத்தில்வந்த ஆன்மா, அங்கும் சாக்கிர சாக்கிராதிஐந்தவத்தைப்படும். அவை, அச்சாக்கிரத்தானத்தில் அவ்வவ்விந்திரியங்களால்அவ்வவ்விடயங்களையுணர்ந்து அப்போதப்போதே அவைகளைமறந்து விடுதலாம். இவைபோலச்சுத்தாவத்தையும் ஐவகைப்படுமென்பதாம்

இனிச் சகலாவத்தை ஐந்தாஞ்சூத்திரத்தும் சுத்தாவத்தை ஆறாஞ்சூத்திரத்துங்காண்க.

இச்சூத்திரம், ஆன்மா, அந்தக்கரணங்களின் ஒன்றன்று ஆயினும் சகசமலத்தால் மறைபட்ட அறிவுவிளங்கும்பொருட்டு அவற்றைச்சார்ந்து ஐந்தவத்தைப்படுமென்றும், சிந்தையைச் சிவனென்று கூறுதலால் அச்சிந்தைமுதலிய அந்தக்கரணங்கள் ஆன்மாவெனில்? அவைகள் இந்திரியங்களைநோக்க அறிவுடைமைபற்றி ஆன்மாவென்று கூறினும், ஆன்மாவையும் தம்மையும் நோக்க அறிவுடையனவன்றாதலால், அவ்வான்மாவுக்கு கருவியாகிய அந்தக்கரணமு ஆன்மா அன்றென்றும், அவற்றுடன் ஆன்மா கூடுவானேனெனில்? அறிவுவிளக்கத்தின் பொருட்டே என்றும் கூடினவிடத்து ஒரேவிதமின்றிப்பலவித அவத்தைப்படுவானேனெனில்? கருவிகள் ஒரேவிதமாய்க் கூடியில்லாமல் குறை

ந்தும் பிரிந்தும் நிற்றலால் ஐந்தவத்தைப்படுமென்றும் விளக்கி இது ஆன்மாவின் பொதுஇலக்கணமென விளக்கியவாறுகாண்க.

## ஐந்தாஞ்சூத்திரம்.

### பாசவிலக்கணம்.

விளம்பிய வுள்ளத்து மெய்வாய் கண்மூக்
களந்தறிந் தறியா வாங்கவை போலத்
தாந்த முணர்வின் றமியருள்
காந்தங்கண்ட பசாசத் தவையே.

**கருத்துரை.** இவ்வான்மாக்களிடத்துத் தமது முதலுபகார முணர்த்துதனுதலிற்று.

இ—ள். ஆன்மா, ஐந்தவத்தைப்படும்போது, அதற்கு மந்திரிகள்போலும் அந்தக்கரணாதி கருவிகளினுபகாரமே போதியதாதலால் அங்கு முதல்வனால் ஆகத்தக்கதொருபயனில்லை போலுமென்று கூறுவதுநோக்கி அங்கும் முதல்வனுபகாரம் இன்றியமையாதென்பதை விளக்குமுகத்தால், முன்உள்பொருளொன்று பிரமாணங் கூறியபாசத்தினிலக்கணங் கூறுவதென்பதாம்.

௫—ள். மேற்கூறிய ஆன்மாவினால், இந்திரியங்கள் விஷயங்களை இஃதின்னதென்று அளவிட்டறிந்தும் அங்ஙனமறியும் தம்மையும் தம்மைஅதிட்டித்துநின்றுசெலுத்தி அறிவிக்கின்ற ஆன்மாவையும் அறியமாட்டா. அவைகள்போல, அவ்வுயிர்களும், தமது அறிவுக்கு விளக்கஞ்செய்கின்ற முதல்வனுடைய திருவருளால் மேற்கூறியஇருவகை ஐந்தவத்தைகளிற் போக்கு வரத்துச் செய்து பின்றுவினைப்பயன்களை அளவிட்டறிந்து அநுபவிக்கும். அநுபவிக்கின்ற நம்மை அச்சடங்களின்வேறாகிய சித்தென்றறியமாட்டா. தம்மை அதிட்டித்துநின்று விஷயங்களிற்செலுத்துகின்றதிருவருளையும் அறியமாட்டா. உயிர்கள் அவ்வாறு அறிதல் முதல்வன் சந்நிதிமாத்திரத்தால் ஆகும். ஆனால் ஆன்மா இந்திரியங்களைச்செலுத்தி விஷயங்களை அநுபவிக்கும்போது பலவகையாய் விகாரப்படுதல்போல, ஆன்மாவைச்செலுத்தி அநுபவிக்கச்செய்து உடனிற்கின்ற திருவருள்முதல்வனும் விகாரப்படுவனோ? வெனில், காந்தத்தைக்கண்ட இரும்பு (ஊசி) அக்காந்தம் விகார

# ஐந்தாஞ்சூத்திரம் முதலதிகரணம்.

மின்றி அசையாதிருப்ப அதன்சந்நிதியில் அதனால் இழுத்துக் கொள்ளப்படுதல்போல முதல்வன் உயிர்களைக்கருவிகளாற்செலுத்துவதின்றிப் போகங்களை அநுபவிக்குநனென்று நினைத்தலாகிய சந்நிதிமாத்திரையேசெலுத்துதலால் ஒருகாலத்தும் விகாரப்படானென்பதாம்.

இங்கே திருவருளென்றது. ஆன்மாக்களைச் செலுத்திப்போகங்களை அநுபவிக்கச்செய்யுமென்றதற்கேற்பத்திரோதான சத்தியேயாம். இதனிலக்கணம் இவ்வாறு கூறவே இதற்குக்கருவியாய் இதனுளடங்கிநிற்குமாயை கன்மங்களினிலக்கணமுங்கூறியவாறாம்.

இச்சூத்திரம், "விளம்பியவுள்ளத்து மெய்வாய்கண்மூக்கு அளந்தறிந்தறியா" எனவும், "ஆங்கவைபோலத் தாங்குமுணர்வின்றமியருள் காந்தங்கண்டபசாசத்தவையே" எனவும் இரண்டதிகரணத்தது.

## முதலதிகரணம்

சாங்கியர், தாமரையிலைநீர்போல் ஆன்மா பற்றற்றுநிற்ப அதன் சந்நிதியில் புத்திதத்துவமே ஐம்பொறிவழியாக விடயங்களையறியுமாதலால், அவ்வான்மா கருவிகளுடன்கூடி அவத்தைப்படுமென்பதுபொருந்தாது என்றுகூறுவதுநோக்கிச்சூத்திரமுதற்பாகத்தைப் பதம்பிரித்துரைக்கும் மேற்கோள்.

ஈண்டு, ஐயுணர்வுகள் ஆன்மாவாலுணரு மென்றது.

இ—ள். ஐம்பொறிகள் தாமாக ஒன்றையும் அறியாவாதலால், ஆன்மாவால்விடயங்களை யறியு மென்பதாம்.

அதற்குப் பிரமாண மென்னென்பாரை நோக்கிமேற்கோளை வலியுறுத்தும் ஏது.

அவற்றினுள் ஆன்மா வொற்றித்துக் காணினல்லது அவையொன்றையும் விடயியா வாகலான்.

இ—ள். அவ்வைம்பொறிகளுடன் உயிர் ஒற்றுமைப்பட்டு நின்று அறிந்தாலன்றி அவை ஒருவிடயத்தையும் விடயிக்கமாட்டா வாகலால் ஐம்பொறிகள் ஆன்மாவா லுணருமென மேற்கொண்டதென்பதாம்:

உயிர், அவ்வாறு ஒற்றித்துநின்றுசெலுத்துதலும்ஐம்பொறிகள் உயிரையின்றி யுணரமாட்டாமையும்,எதனால் விளங்கப் பெறுவோமென்பாரைநோக்கி அவற்றைவிளக்கி ஏதுவைவலியுறுத்தும்உதாரணம்.

ஐம்பொறியை யாண்டங் கரசா யுளநிற்ப
வைம்பொறிக ளுள்ள மறியாவா—மைம்பொறியிற்
காணாதேற் காணாது காணுமுளாங் காணாதேற்
காணாகண் கேளா செவி.

இ—ள். அரசன் அத்தாணி மண்டபத்திருந்து ஏவலாளரைக்காரியங்களிற் செலுத்திஆளுதல்போல,ஆன்மா,புருவநடுவி லிருந்துபொறிகளை அந்தந்தவிடயங்களைஅறியும்படி செலுத்துதலால்,அரசனாலேவப்பட்டோர்ஏவியகாரிய மட்டிலன்றி மேற்செய்ய மாட்டாமைபோல,அப்பொறிகளும் உயிராற் செலுத்தப்பட்ட விடயமட்டிலன்றி செலுத்தும்உயிரை அறியமாட்டா. ஆனால்,பொறிகள் உயிரானன்றி அறியாவாயினும்,உயிர்,பொறிகளானன்றியும் அறியும்போலுமெனில்? அரசன் மந்திரிகளையின்றியும், மந்திரிகள் தலைவனையின்றியுஞ் செய்யமாட்டாமைபோல, பொறிகளையின்றி உயிரும் உயிரையின்றிப்பொறிகளும் விடயங்களை அறியமாட்டாவென்பதாம்.

## இரண்டாமதிகரணம்.

ஈசுர அவிகாரவாதி, கருவிகள் சடமாதலால் சித்தாகிய உயிரையின்றியறியாவாயினும், சித்தாகிய உயிர்முதல்வனுதவியை வேண்டாது; வேண்டுமேல் முதல்வனுக்கும் வேறுதவிவேண்டுமென்றாகிவரம்பின்றி ஓடுமென்றுகூறுவதுநோக்கிச்சூத்திரத்தின் இரண்டாம்பாகத்தைப் பதம்பிரித்துரைக்கும் மேற்கோள்.

இனி, இதுவுந்தமது முதலாலேயுணருமென்றது.

இ—ள். இவ்வான்மாக்களுந்தமது முதல்வனாலே அறிவிக்க அறியுமென்பதாம்.

தமதுமுதலென்றதனால், மேலொருமுதற் பொருளினடங்கிநிற்கும் பொருள்களே அறிவிக்க அறிவனவன்றித், தானே முதலாயுள்ள பொருளுக்குப் பிறரறிவிக்கவேண்டா; ஆதலின் வரம்பி

ன்றி ஒடுதலின்றென்பதூஉம் உடம்பொடுபுணர்த்து விளக்கியவாறு காண்க.

ஐம்பொறிசடமாதலால், சித்தாகிய உயிரால் அறியுமென்றது பொருந்தும், சடமல்லாத உயிர் முதல்வனால் அறியுமென் மேற்கோள் கூறியது பொருந்தாதென்பாரை நோக்கி அது பொருந்துமென மேற்கோளை வலியுறுத்தும் ஏது.

இவ்வான்மாத்தன்னாலே யுணருமிந்திரியங்களைப் போலத் தானுந் தன்னையுணராது நிற்றலான.

இ—ள். உயிர் சித்தும் ஐம்பொறி சடமுமாகிய வேற்றுமை யுறினும் ஐம்பொறிதம்மையும் தமக்கு அறிவிக்கு முயிரையும் அறியாதவாறுபோல உயிர்களும் தம்மையும் தமக்கு அறிவிக்கு முதல்வனையும் அறியாவாதலால் அவ்வொற்றுமை நோக்கி மேற்கோள் கூறியது பொருந்தமே என்பதாம்.

ஆன்மாவினால் விடயங்களை யறியுமிந்திரியங்களுக்கு வரும் பயன் ஆன்மாவைச்சேர்தல்போல, முதல்வனால் அறியும் ஆன்மாவுக்கு வரும்இன்பதுன்பங்கள் முதல்வனைச்சேரும்போலுமென் பாரைநோக்கி அங்ஙன மாகாமைகூறி ஏதுவை வலியுறுத்தும் உதாரணம்.

மன்னுசிவன் சந்நிதியின் மற்றுலகஞ் சேட்டித்த
தென்னு மறையி னியல்மறந்தாய்—சொன்னசிவன்
கண்ணா வுளம்வினையாற் கண்டறிந்து நிற்குங்கா
ணெண்ணான் சிவனசத்தை யின்று.

இ—ள். இங்கேகூறிய அநுமானப் பிரமாணமுமன்றி, நிலை பெற்றசிவசந்நிதியில் பிரபஞ்சம் தொழிற்படுகின்றதென்று கூறும் (வேதப்பொருளையும்) ஆகமப்பிரமாணத்தையும் மறந்து பிணங்குகின்ற பேதையே, இந்திரியங்கள் தமக்காகவென்றும் அறிவதில்லை உயிருக்காகவேயாம். உயிர் அவற்றின்வழியாய் அறிவனவெல்லாம் தமக்கேயாம். அவ்வான்மாதனக்கு வேதத்துள் எடுத்தோதப்படும்முதல்வன் அறிவித்துக்கொண்டுநிற்பத் தான்செய்த

# சிவஞானபோதார்த்தலெகுவசனம்.

விளங்கிடாக ஒவ்வொன்றை அறியும், இவ்வேறுபாடறிவாயாக மங்கல ரூபியாகிய சிவன் உயிர்க்கு அறிவித்துடனிற்பினும், தன் சந்நிதியில் அமங்கலமாகிய பிரபஞ்சம் முற்பட்டுத்தோன்றாதாதலால் அவ்வின்பதுன்பப் பயனை அநுபவியானென்பதாம்.

இங்கே சிவசந்நிதிஎன்றது, அவிகாரவாதிகள்கூறும் சிவனது அபிமுகமாத்திரையன்று, சிவசத்தி அவ்வக் காரியங்களில் உன்முகமாதலாகிய சங்கற்பமே.

உயிர், அறிவிக்க அறியுமிடத்து முதல்வனின் வேறாய் நின்றறியுமோ? ஒன்றாய்நின்றறியுமோ? வென்பாரைநோக்கி அவ்விருவிதமுமின்றி நின்றறியுமென்றுணர்த்தி அதனை வலியுறுத்தும் உதாரணம்.

வெய்யோ னொளியி லொடுங்கி விளங்காது
வெய்யோனை யாகாத மீன்போல—மெய்பவனிற்
கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியு மைம்புலனைக்
கண்டுடனாய் மன்னுதலைக் காண்.

இ—ள். சூரியனொளியிலடங்கி வேறுமாகாமல் சூரியனாயும் ஒழியாத நக்ஷத்திரங்கள் அச்சூரியனால் ஒளியுடையனவாதல் போல, உயிர் ஐந்துவிடயங்களையும் மெய்ப்பொருளாகிய முதல்வனா லுணர்ந்து வேறாதலும்ஒன்றாதலு மின்றிஅவ்விரண்டுக் கும்பொதுவாயடங்கி உடனாய்நிற்றலை அறிவா யென்பதாம்.

முதல்வன் அறிவிக்க அறியும்உயிர்க்கு, அறிவுபலவேறாதலால் அவ்வேறுபாடு முதல்வன் அறிவிக்கும் வேறுபாட்டாலாயதேல் சுருதி அவனைநிர்விகாரிஎன்பதற்குமாறாய் விகாரியென்று கூறவருமென்பாரைநோக்கி விகாரியாகாமைபுணர்த்தி அதனை வலியுறுத்தும் உதாரணம்.

அருளுண்டா மீசற் கதுசத்தி யன்றே
யருளுமவனன்றி யில்லை—யருளின்
றவனன்றே யில்லை யருட்கண்ணார் கண்ணுக்
கிரவிபோ னிற்குமர னேய்ந்து.

இ-ள் முதல்வனுக்கு உயிர்களின்பசுத்துவ நீக்கிச் சிவத்துவம்விளக்கவேண்டுமென்னு மிரக்கம் அநாதியேயுள்ளது: அது அவனது சத்தியே. சத்தியும்முதல்வனும் குணமுங் குணியுமாதலால் சத்திமுதல்வனைவிட்டுத் தனித்துநிற்றல் அமையாது. முதல்வனும் சத்தியைஇன்றி யமையாதவனாய் ஞானக்கண்ணுடையா ரறிவிற்குச் சூரியன் தன்னொளியுடனியைந்து நிற்றல் போல, சத்தியுடனியைந்துநின்று அறிவிப்பன். ஆதலால் தன்வயத்தனாய் விகாரமின்றிச் சத்திசங்கற்பமாத்திரையி னாலேயே யாவுஞ்செய்கின்ற முதல்வன் விகாரியாதலில்லை என்பதாம்.

இங்கே ஞானக்கண்ணுடையாரென்றது, சித்தாந்தசைவரையே. அவர்க்கன்றி மேற்கூறிய உண்மை விளங்காதென்க. சூரியனொளியாலேயே அவ்வொளியையும் சூரியனையும் அறிதல் போலச், சித்தாந்த சைவர்கள் சிவசத்தியாகிய அருளாலேயே அவ்வருளையும் சிவத்தையும்அறிவர்; இவ்வுண்மை "அவனருளாலே யவன்றாள்வணங்கி" என்று ஸ்ரீவாசகசுருதிவிளக்குதலா லுங்காண்க.

இச்சூத்திரம், மந்திரிகளுடனும் அரசன்போல அந்தக்கரணங்களுடனு யவத்தைப்படு முயிர்க்கு அவையே யமையும். முதல்வனாலாவதோர்பயனில்லை யென்பாரைமறுத்து அங்கும் முதல்வனுதவிவேண்டுமென்பதுணர்த்து முறையில், ஐம்பொறிகள்போல உயிரும் தன்னையும் தலைவனையும் அறியாது முதல்வனருளாற் றானறிந்தவத்தைபுறும். அப்படியறிதல் காந்தத்தின் முன்இரும்புபோலாதலால் முதல்வன் விகாரப்படானென்றும்; ஆன்மசந்நிதியில் புத்திதத்துவமே அவத்தையுறுமென்பாரைமறுத்து, புத்தியினாற்பொறிகள்விடயங்களையறியா ஆன்மாவினாற்றான் அறியும்; அவத்தையுறுவது சித்தாகிய ஆன்மாவே சடமாகியபுத்தியன் றென்றும், உயிர் சித்தாதலால் அது முதல்வனாலறிய வேண்டா. வேண்டின்மேல் அவனும் பிறரால்அறியவேண்டுமென வரம்பின்றி ஓடுமென்பாரை மறுத்து, தனக்குமேல் ஒருமுதலை யுடைய உயிர்க்கன்றித் தனக்குமேல் ஒருமுதலின்றித்தானே முதலாயுள்ள சர்வஞ்ஞ சித்துக்குப் பிறர் அறிவிக்கவேண்டா

வாதலால் வரம்பின்றி ஓடுவதில்லையென்றும், உயிரின் அறிவு பலவேறாய் நிகழ்தலால் அவ்வேற்றுமை அறிவிக்கும்முதல்வனுளா யதென்றாகிஅவன் விகாரிபோலுமென்பாரை மறுத்து, முதல்வனருளாகியசத்திசங்கற்பத்தால் அவ்வருளினடங்கிநின்று யிரறியுமாதலால் முதல்வன் விகாரப்படானென்றும் விளக்கி, ஆன்மாக்கள் தம்அறிவை விளக்கும் "தமியருளாகிய" திரோதானசத்திசங்கற்பத்தாலறிந்துநிற்கின்ற சகலாவத்தையாகிய உணர்த்துமுறைச் சாக்கிரத்தினியல் புணர்த்தியவாறு காண்க.

## ஆறாஞ்சூத்திரம்

### பதியிலக்கணம்.

உணருரு வசத்தெனி னுணரா தின்மையி
னிருதிற னல்லது சிவசத்தா மென
விரண்டு வகையி னிசைக்குமன் னுலகே. [தலிற்று,

கருத்துரை. சத்தும் அசத்தும் வரைசெய்துணர்த்துதனு

இ—ள். முற்கூறியபொருள்களில் சத்துஇது அசத்துஇது என்றுணர்த்து முகத்தால் பதிஇலக்கணங்கூறுவதென்பதாம்.

கு—ள். ஆன்மஅறிவுக்கு விளக்கஞ்செய் துபகரிக்கு முதற்பொருள், பிரமாணங்களால் சுட்டிஅறியப்படுமியல்பினதென்றால், அப்படி யறியப்படும் உலகப்பொருள்போலஅழியும் அசத்துஎன்றாகும்; எவ்வழியினும் அறியப்படாததென்றால் முயற்கோடுபோல சூனிய மென்றாகும். ஆதலால் அவ்விருபகுதியுமின்றிப் பாசஞானம் பசுஞானங்களால் அறியப்படாமையாற் சிவமென்றும்,சிவஞானத்தால்அறியப்படுதலால் சத்தியென்றும்இவ்விருவகையினால் சிவசத்தென்று மெய்புணர்வினால் நிலைபெற்றுயர்ந்த மேலோர் கூறுவரென்பதாம்.

சிவமென்றது சித்தென்னும்பொருட்டு. பிரமாணங்களால் அறியப்படுதலும் எவ்விதத்தும் அறியப்படாமையுமாகிய அவ்விருவகையுமின்றிப், பாசஞானம், பசுஞானங்களால் அறியப்படாத சித்தாயும், பதிஞானத்தால் அறியப்படுகின்ற சத்தாயும்

நிற்றலே பதியிலக்கணமென்க. இது சொரூபலக்கணமென்னுஞ் சிறப்பிலக்கணமாகும். இன்னுமுள்ள சிறப்பியல்புக்குணங்களெல்லாம் சித்து சத்து என்னுமிரண்டிளடங்கும். அக்குணங்கள், சர்வஞ்ஞதாதி எண்குணங்களாம். முன்ஒன்றாயும், வேறாயும், உடனுமாயும் நிற்பனென்னக்கூறியது தடஸ்தலக்கணமென்னும் பொது இலக்கணமாம். இங்கே சத்தென்றது முக்காலத்தும் ஒரேபடித்தாயுள்ள சிவப்பொருளையே; அசத்தென்றது மாயையிற்றோன்றிநின்றொடுங்கும் உலகப்பொருளையே. இது தோன்றி நின்றொடுங்கும் வேறுபாடுநோக்கி அசத்தென்றுகூறியதன்றி இல்பொருளென்னுங்கருத்தாற்கூறியதன்று. மாயையிற் றோன்றிநிற்கும்போது ஸ்தூலமாயும்ஒடுங்கியபோதுசூக்குமமாயும் என்றும் உள்ளதேயாதலால் இது சடசத்தென்பதாம். ஆதலாற்றான் மேலே பதியாகிய சிவபிரானை சித்தாகிய சத்துஎன்பதுதோன்ற சிவசத்துஎன்றுகூறியதென்க.

இச்சூத்திரம், "உணருருவசத்தெனி னுணராதின்மையின்" எனவும் "இருதிறனல்லது சிவசத்தாமென இரண்டுவகையினிசைக்குமன்னுலகே" எனவும்இரண்டதிகரணமுள்ளது.

## முதலதிகரணம்

தார்க்கிகர், முதல்வனும அறியப்படாமையபொருளே என்றும், சாங்கியர், எல்லாப்பொருளுஞ் சத்தாதலாற்பிரபஞ்சமும் சத்தே என்றுங் கூறுவதுநோக்கிச் சூத்திரத்தின்முதற்பாகத்தைப்பதம் பிரித்துரைக்குமேற்கோள்.

ஈண்டு, அறிவினலறியப்பட்ட சுட்டுஅசத்தென்றது.

இ—ள். சுட்டறிவினல் அறியப்பட்ட சுட்டுப்பொருளெல்லாம் அசத்தென்பதாம்.

தார்க்கிகன், உள்ளதாய் நேரேகாணப்படும் பிரபஞ்சத்தை இல்பொருளாக அசத்தென்றலும், சாங்கியர், சத்தாகியபிரபஞ்சத்தைச் சுட்டியறியப்படுதல் மாத்திரம்நோக்கி அசத்தென்றலும் பொருந்தாதென்பதுநோக்கி மேற்கோளைவலியுறுத்தும் ஏது.

அவை தாம் பிரகாசமாய்நின்றே அப்பிரகாசமாய்நிற்றலான்

இ—ள். உலகமாகிய அச்சுட்டப்பொருள்கள், இராஜத பிரு தியாற்பிரமனாற் படைக்கப்பட்டுள்ளதெனநின்று தாமத பிருதி யால் ருத்திரனாலழிக்கப்பட்டில்லையெனநிற்றலால் அசத்தென மேற்கொண்டதென்பதாம். இது தார்க்கிகனுக்குக்கூறியதாம்.

இனிஇரட்டுறமொழிந்து, அவைதாம், காரியாவத்தையிற் றாலமாய்விளங்கிநின்று காரணாவத்தையிற்சூக்குமமாய் விளங் காதுமறைந்துநிற்கும்வேற்றுமையால் விளங்கியறியப்படாதகா ரணப்பொருள்களை நோக்கி அறியப்படும் காரியப்பிரபஞ்சம். அசத்தென்றல் பொருந்துமாதலின் அவ்வாறுமேற்கொண்ட தென்றும் பொருள்கொள்க. இதுசாங்கியனுக்குக்கூறியதாம்.

தார்க்கிகன், உலகத்துள் அழியும்பகுதிகளை அசத்தாயினும் அழியப்படாது காணப்படுவனவும் அசதெதென்றற்குப்பிரமாண மென்னென்பதுநோக்கி ஏதுவைவலிபுறுத்துமஉதாரணம்.

அசத்தறியாய் கேணீ யறிவறிந்த வெல்லா
மசத்தாகு மெய்கண்டா னயின்.

இ—ள். அசத்தினியல்லை யறியாதவனேநாம்கூறுதலைநீமனம் பற்றிக் கேட்பாயாக. சத்தினியல்லை அறிந்தவன் ஆராய்ந்தா னேல் சுட்டறிவினாலறியப்பட்டனவெல்லாம் அசத்தென்றே யறி வனென்பதாம்.

"அசத்தறியாய்" என்றதனால், அசத்தினியல்லையறிந்தா யாயின் இவ்வாறுபிணங்குவாயல்லையென்பதும், கேள்நீ" (என்ற தனால், "எந்தைதாட்பால் வணங்கித்தலைநின்றிவைகேட்க) இனி யாவது முனைப் பொழிந்து திருவருளினடங்கித் தலைபன்பி னு றைத்துநின்று கேட்டறிந்துதெளிவா யென்பதும், "அறிவறிந்த வெல்லா மசத்தாகும் என்றதனால், உள்ளதென்றுணரப்படும் பொருளெல்லாம் இல்லையென்றுணரப்படும்அசத்தாதல் நிச்சய மென்பதும், "மெய்கண்டான்" என்றதனால், சத்தினியல்லை யறிந்தாற்கன்றி அசத்தி னியல்பறிய்முடியாதென்பதும், "ஆயி

ன்" என்றதனால், அது அறிதற் கரியதென்பதும் அச்சொல்லா ற்றலால் விளக்கமா மென்க.

முன்பு சாங்கியனைநோக்கி, இரட்டுறமொழிந்துகாரியாவத் தையில் விளங்கிக்காரணாவத்தையில் விளங்காமையால் அசத்தே யாமென்று" கூறியதை வலி யுறுத்தும் உதாரணம்.

—அசத்தலாய்

நீரி லெழுத்து நிகழ்கனவும் பேய்த்தேரு
மோரினவை யின்றாமா றுப்பு.

இ— ள் அசற்காரிய வாதியாகாமற் சற்காரியவாதியாகிய அறி வுடையவனே அவ்வாறு தோன்றிமறையும் பிரபஞ்சத்தை அசத் தென்பதற்குவமானம் ஆராயின் நீரிலெழுத்தும்நிகழ்கனவும்பேய் த்தேரு மா மென்பதாம்.

நீரிலெழுத்து" தோன்றியவுடனே மறைந்துபோதலையும், நி கழ்கனவு" தோன்றிய விஷய முடிவுபெறாமல்மறைந்துபோதலை யும், "பேய்த்தேர்" (கானல்நீர்) ஒருகாரணங்காட்டிமறைந்து போதலையும்விளக்குதற்கே மூன்றுஉவமைகூறி அருளிற்று. மேக முதலியவற்றால் மறைந்துபோதலே காரணங்காட்டி மறைத லென்க. கனவைப்பொய்யென்பாரைமறுத்தற்கே "நிகழ்கனவு" என்றடைகொடுத்தருளிற்று.

இச்சூத்திரத்தில் "உணராதெனின்இன்மை" என்றதன்பொ ருள், எவ்வகையினும் அறியப்படாதபொருள்சூனியமேயாகும். அதுஎல்லாச்சமயத்தாருக்கும் சம்மதமாதலால் அதுபற்றி ஆச ங்கையில்லை யென்க.

## இரண்டாமதிகரணம்.

மாயாவாதி, • உணர்பொருள்அசத்து உணராப்பொருள் சூனியமென்றுமேலேநிச்சயித்தலால்,இவ்விரண்டின்வேறாயமுதல் வனியல்பு, உணரப்படுமென்றும்படாதென்றுஞ் சொல்லமுடியா தஅநிர்வசனமென்பதுபோலுமென்றகூறுவதுநோக்கிச்சூத்திரத் தின் இரண்டாம்பாகத்தைப்பதம் பிரித்துரைக்கும்மேற்கோள்.

இனி, இவ்விரண்டுதன்மையுமின்றி வாக்குமனாதீதகோசரமாய்நின்றவதுவேசத்தாயுள்ள சிவமென்றுணரற்பாற்று.

இ—ள். உணர்தல் உணராமை இரண்டுமின்றி (வாக்கு) நாதவழிப்பட்டபாசஞானத்திற்கும், (மனம்) மனம்முதலிய கரணங்களுடனொட்டிநின்றுணரும்பசுஞானத்திற்கும், (அதீதமாய்) அறியப்படாததாய், ஒற்றுமைப்பட்டுநின்றுணரும் பதிஞானத்திற்கே விளங்கித்தோன்றுவதாய் நிற்கும் அதுவே, பிரமாணங்களால் இன்னதென்று அறியப்படாமைநோக்கி மகாவாக்கியத்தால் "அது" என்றுகூறப்படும் சத்தாகிய சிவமென்றுணரும் பான்மையதென்பதாம்.

அறியப்படுதல் படாமை இரண்டுமில்லாதபொருளை (அநிர்வசனமாய்) இன்னதென்றுசொல்லமுடியாதாய்நிற்பதென்னாமல், பாசபசு ஞானங்களால்அறியப்படாது பதிஞானத்தால்அறியப்படுமென்பதெப்படி? என்பாரைநோக்கி மேற்கோளைச்சாதிக்கும் ஏது.

பிரகாசத்திற்குப் பிரகாசிக்க வேண்டுவதின்மையானும், அப்பிரகாசத்திற்குப் பிரகாசமின்மையானும்.

இ—ள். வாக்கு மனங்களால்உணரப்படும்பொருளானால் அதனை யறிதற்குரிய சாதனங்கள் பின் (அ-வது) சூத்திரத்திற்கூறவேண்டா. ஒருவாற்றானும் அறியப்படாததானால் அங்குக்கூறிய அச்சாதனங்களால் ஒருபயனுமில்லை. ஆதலால் அவ்விருவகையுங்கடந்து அதீதமாய் அச்சாதனவழிநின்று பதிஞானத்தால்அறியப்படுங் கோசரப்பொருளாய்நிற்கும் அதுவேசத்தாகிய சிவமாமெனமேற்கொண்டதென்பதாம்.

அவ்வாறுநிற்கும் பரமார்த்தமாகியபிரமம்அஞ்ஞானத்துடன் கூடியபோது (வியவகாரத்தில்) சீவான்மா, பரமான்மா, என்றிருவகைப்பட்டுப் பின் கூறப்படுஞ் சாதனங்களினின்றறியவும்படும். அஞ்ஞான நீங்கியபோதுபரமார்த்தத்தில் அவ் விருவகையுமின்மையால் சத்தென்றாவது அசத்தென்றாவது அறியப்படாமலிருக்கும். ஆதலால் அப் பிரமத்தைக் கோசரம் (அறியப்படும்

பொருள்) என்பதுபொருந்தா தென்பாமை நோக்கி ஏதுவை வலியுறுத்தும் உதாரணம்.

எண்ணரிய சத்தன்றசத்தன்று மென்றலென்
கண்ணரிய தென்றன் மெய்கண்டா— னெண்ணி
யறிய விரண்டா மசத்தாதல் சத்தா
மறிவறியா மெய்சிவன்றா னாம்.

இ—ள். அப்பிரமம்விவகாரத்திற்கருதப்படும் சத்துமன்று அசத்துமன்றெனில் அப்படி ஒருபொருளுண்டென்றதுஎன்ன பிரமாணம் நோக்கியோ? பிரமாணமுண்டென்றல்பிரமாணத்தால் அறியப்படும்பிரமேயமென்றாகி அறியப்படும்பொருளாய்முடியுமென்றஞ்சிப்பிரமாண மில்லையென்றல் அது பிரமாணங்களால் அறியப்படாதசூனியமாய்முடியும். இவ்வாறு அறியப்படுவதும் படாததும்உண்மையுணர்ந்தோன் ஆராயின் அசத்தேயாம். ஆதலால் சாந்தோக்கியஉபநிடதங்களிற்சத்தென்று கூறப்படுவதாயுஞ் சுட்டறிவினலறியப்படாதாயுமுள்ள மெய்ப்பொருள் சைவஉபநிடதங்களினும் சைவாகமங்களினும் வேற்றுமை யின்றி நின்றுணரும் அநுபவஞானத்திற் கோசரிப்பதென்றோதப்படுஞ் சிவனருளாவதன்றி நீகூறுஞ்சூனியமன்று. அஞ்ஞானத்துடன்கூடி விகாரப்படுவது மன்றென்பதாம்.

இதனல்போந்தபொருள்சத்துமன்றி அசத்துமன்றி ஒன்றுண்டெனிற்பிரமாணமென்னை? பிரமாணஞ்இதசூனியமெனில்சூனியமும் அழிபொருளும் அசத்தேயாதலால் பிரமம்அசத்தென்றாகிசத்தென்னுஞ் சுருதிகளுக்குமாறுபடும். ஆதலால் சத்தெனலும்பிரமம் உண்மைஞானத்திற்கோசரிப்பதென்று நாங்கூறுஞ் சிவமேயன்றி நீகூறுஞ்சூனியமன்றெனமாயாவாதியைமறுத்துக் கோசரமென்றதை வலியுறுத்தவாறுமென்க

இனி. தார்க்கிகன், முன் பிரத்தியக்ஷத்தாலறிந்த ஒருபொருளைப்பின் அநுமானத்தால்அறியவிரும்பில் அவ்வழியினும்அது அறியப்படுதல்போல, முதல்வன் முன் பாசபசுஞானங்களாலும் அறியப்படுவன் பின்சாதனங்களாலும்(பதிஞானத்தால்) அறியப்

படுவன். ஆதலால்முன்வாக்கு மனங்களால்அறியப்படான் முதல்வனென்றது பொருந்தாதெனாமையைநோக்கி அதனைவலியுறுத்தும் உதாரணம்.

உணர்ப வசத்தர்த லொன்றுணரா தொன்றை
யுணருநீ தானுணரா யாபி—னுணருமுனிற்
றானிரண்டா மெய்கண்டான் றன்னா லுணர்தலாற்
றானிரண்டாய்க் காணான் றமி.

இ—ள். அவ்வாக்கு மன முதலிய கருவிகள் தாமேயறியாமல் ஆன்மாவாகிய உன்னாலேயே அறியப்படுதலால் அவைகள் அறிவில்லாத அசத்தாகும். ஆதலால் அக்கருவியுள் ஒன்றேனுமுதல்வனையறியமாட்டாது (ஆகவே பாசஞானத்தால் முதல்வன் அறியப்படானென்பது தெளிவாம்) நீ அக்கருவிகளைக்கொண்டேயறியவனாதலால் நீயும் தனித்து நின்று அறியமாட்டாய். இதனால் பசுஞானத்தால் அறியப்படானென்பது காண்க. நீயே ஆராய்ந்தறிவையானால் அக்கருவிகளால் அறியப்படும் பொருள்கள் உனக்கு வேறாதல் போல முதல்வனும் உனக்கு வேறன்றாம். பொருட்டன்மையால வேறாயினும், முதல்வன் கலப்பினால் உயிர்க்குயிராய் நின்றறிவிப்பனாதலால் உயிர்க்கு அறிவு விளங்குமுண்மைபுணர்ந்தோன் தன்னறிவு சிவனருளினடங்கி அதுவேயாய் ஒற்றித்துநின்று அவ்வருளாலறிவானன்றி ஏனைப்பொருள்களைவேறாய்நின் றறிதல்போல அம்முதல்வனை அவனின்வேறாய் நின்றறியமாட்டானென்பதாம்.

இனி, யோகமதஸ்தன், முதல்வனால் முதல்வனை அறியவேண்டுமென்பதில் (ஆன்மாச்சிரயதோஷம்) தன்னைப் பற்றுதலென்னும் குற்றமுண்டாமாதலால்யோகநூலிற்கூறும்தியான பாவனைகளால் முதல்வன் அறியப்படுவானென்பதுநோக்கி முதல்வன் அவனாலன்றி அப்பாவனையா லறியப்படானென்பதை வலியுறுத்தும் உதாரணம்.

பாவகமேற் றானசத்தாம் பாவனா தீதமெனிற்
பாவகமா மன்றென்னிற் பாழதுவாம்—பாவகத்தைப்

பாவித்த ருனென்னிற் பாவகமாந் தன்னருளாற்
பாவிப் பதுபரமில் பாழ்.

இ—ள். நீகூறும் பாவனை மனமுதலியகருவிகளுடன் நின்று பாவிப்பதெனில், அது சுட்டி அறியப்படுதலால் அசத்தாகும். கருவிகளை நீங்கிநின்று பாவித்தலால்பாவனையைக் கடந்ததெனில் மனமுதலிய கருவிகள் நீங்கியபோது ஒன்றுமறியாத கேவலாவஸ்தையாய் முடியுமாதலாற் பாவகமாக்கிரியையன்றிப் பயனில்லையாம், இவ்விரண்டுமின்றிஇன்னதென்று சொல்லமுடியாத அநிர்வசனமாகப் பாவிப்பதெனில், அதுசூனியமாம். பாவனையிலகப்படாததைக அகப்பட்டதாகப்பாவிப்பதெனில், அதுபோலியாய்ப் பாவனைதீதம்போல் பயனறறதாம். ஒருபாவனைக்கும் இட்டாத பொருள் (சூனியம்) பாழாமென்பாயேல், நீ கூறியஅப்பாவனைகளிற் காலம்போக்கிப் பயனின்றி ஒழியாமல் திருவருளாற் பாவித்தறியப்படுவதே அப்பரம்பொருளாதலால், நீகூறும் பாவனைகளுக்கு அகப்படாமைபற்றிப்பாழென்று கூறமுடியாதென்பதாம்.

இங்ஙு, முதல்வன் அவனது திருவருளால் அறியப்படுவன் என்றதனுல், தன்னைப்பற்றுதலென்னும் குற்றமின்றென்பதுவிளக்கமாம்.

யோகநூலார் கூறும்பாவனை இந்நான்கனுள் ஒன்றாவதன்றி வேறில்லையாதலால் திருவருளாற்பாவிக்கப்படாத அப்பாவனை ஒன்றாலும் பயனில்லையென்பதுந்தெளிவாமென்க.

இதனை, “மநஸை வேதமாப்தவ்யம்” இந்தப்பிரமம் அருளினாலடையத் தக்கது என்று கடவல்லியுபநிடதமும், “மநஸைவாநுத்ரஷ்டவ்யம்” பிரமம் அருளினாலே காணற்பாலது என்று பிருகதாரண்யோபநிடதமும், “ஸநோபுத்யா சுபயாசம்யுநக்து” அவர்நம்மை அருளினாலே (தம்முடன்) சேர்ப்பாராக என்று சுவேதாசுவதரோபநிடதமும், “அவனருளே கண்ணாகக் காணினல்லால்” அவனருளாலே யவன்றாள்வணங்கி” என்றுஇவைமுதலிய சுருதிகளும் விளக்குதலானுந் தெளியலாம்.

திருவருளாற்பாவிப்பதற்கு அவ்வருளையும் பாவிக்குமுறைமையையும் தெரியவேண்டுமாதலால் அவை(கூ ம்சூத்திரத்திற்) கூறப்படும்

இனிச்சிவசமவாதசைவர், அவனருளாற்பாவிக்கவேண்டாம்; ஆன்மா பசுத்துவம் நீங்கியபோது சிவனைப்போல எண்குணங்களையடையுமென்று சிவாகமங் கூறுதலால் அப்போது ஆன்மஞானம் சிவஞானத்தையொத்தகன்றிப்பசுஞான மன்று. ஆதலால் முதல்வன் அவ்வறிவால் அறியப்படுவனென்பதநோக்கிஅருளாலன்றி யறியப்படாமையை வலியுறுத்தும் உதாரணம்.

அறிய விரண்டல்ல ஞங்கறிவே தன்னை
யறியப்படானறிவி னுள்ளா—னறிவுர்க்குக்
காட்டாகி நின்றானைக் கண்ணறியா மெய்யென்னக்
காட்டா தறிவறிந்து கண்டு.

இ—ள். வேதசிவாகமங்களில் ஆன்மாவும் சிவமும் வேறுபடாமல் அத்துவிதமாயிருக்குமென்று கூறுதலால், ஆன்மா, தன்னறிவால் முதல்வனை அறிதற்கு முதல்வன் ஆன்மாவின்வேறல்லனாதலாலும், தன்னின்வேறின்றித் தன்னுள்ளேநின்றுஅறிவிக்கின்றஆன்மாவினாற் பொருள்களை அறிகின்ற கண்ணானது ஆன்மாவுடன் சமமாதலின்றி,உள்ளேநின்றறிவித்தலால்அவ்வான்மாவைச்சூக்குமமெனவும் அக்கண் புறப்பொருளைநோக்குதலாற் றன்னைத்தூலமெனவுங் கூறும்படி நின்று, தானாக ஒன்றையும் அறியமாட்டாத வாறுபோல, ஆன்மாவும் தன்னின்வேறின்றித் தன்னுள்ளேநின்றறிவிக்கின்ற முதல்வனை லறிகின்றபடியால் அம்முதலவனுடன்சமமாதலின்றி, உள்ளேநின்றறிவித்தலாற்சூக்குமசித்தாகியமுதல்வனைநோக்கத்தான் தூல சித்தாய் நிற்றலால் தானாக ஒன்றையும் அறியமாட்டாதாகலானும், தன்னறிவுக்கு 'விளக்கஞ்செய்துபகரிக்குமுதல்வனை, ஆன்மஅறிவானது தானேகண்டு அவ்வான்மாவுக்குக் காட்டமாட்டாது. ஆதலால் அவ்வான்மஞானத்தால் முதல்வன் அறியப்படானென்பதாம்.

இனிச் சிவாத்துவித சைவரும், சுத்த சைவரும்முதல்வனையுணர்ந்தஆன்மா அவனுடன் ஒன்றாய்ப்போகும். ஆதலால் அம்

முத்திநிலையிலும் அறிவதும் அறியப்படுவது முண்டென்பதெப் படியென்பது நோக்கி அங்கு மவை யுண்டெனவிளக்கி வலியுறுத்தும் உதாரணம்.

அதுவென்னு மொன்றன் றதுவன்றி வேறே
யதுவென் றறியறிவு முண்டே—யதுவென்
றறிய விரண்டல்ல ஞங்கறிவு ணிற்ற
லறியுமறி வேசிவமு மாம்.

இ—ள். சத்தாகியசிவம், அங்கும் அறியப்படும்பொருளாய்ப்பசு பாசாங்களாகிய விசேஷணத்தையுடைய விசிஷ்டமாய் (பசுபதியாய்) உள்ளதென்பது உங்களுக்கும் ஒத்ததேயாதலால் அச்சிவம் இன்னதென்றுகூறமுடியாமல் அநிர்வசனமாய் நிற்பதாய்த் தன்னைக்கவிர வேறொன்றுமில்லாத நிர்விசேடப்பொருளென்றுமாயாவாதிகூறுதல்போல, அதுவென்று அநிர்வசனமாய்க் கூறப்படுஞ் சூனியமன்று ஆதலால் அச்சிவம் ஒன்றுமாத்திரமன்றி அதற்கு வேறாக அதனைவாக்குமனாதீதமாய் நிற்பதென்றறிகின்ற ஆன்மாவும் அம்முத்திநிலையிலுள்ளதேயாம். உள்ளதானால் அங்கே சிவத்துடன் ஆன்மா ஒன்றுவதில்லையே எனில், உலகப்பொருள்கள் இது இதுவென்று சுட்டியறியப்பட்டு அவ்வான்மாவுக்குவேறாய் நிற்றல்போலாகாமல், முதல்வன், அப்பணைந்த உப்புப்போல வேற்றுமைதோன்றாமல் ஆன்ம அறிவிற்கலந்துநிற்றலால் சுட்டியறிதலின்றி அருளாலறிகின்ற அவ்வான்மா சிவமாந் தன்மையைப்பெறுமாதலால் அம்முத்தியிலும் ஆன்மாவிருந்தே அருளாலறிவதும் அறியப்படுவதுமுண்டென்பதாம்.

அங்கு ஆன்மாஇல்லையெனில் அம்முத்தியின்பத்தை அநுபவிப்பவனுமில்லையாய் அநுபவமுமில்லையாய் அதனைக்கொடுத்தருளு முதல்வனுமில்லையாய் எல்லாஞ்சூனியமாய் முடியுமென்க.

முன் பசுவிலக்கணங்கூறும் நான்காஞ்சூத்திரத்தில் "சகசமலத்துணராது" என்றதனால் அப் பசுவின் கேவலாவஸ்தையும், பாசவிலக்கணங்கூறும் ஐந்தாஞ்சூத்திரத்தில் "தமியருள்" என்றதனால் அவ்வருளாகியதிரோதானசத்தி செலுத்த அப் பாசமாகிய

கருவிகளுடன்கூடி விஷயங்களை அறிந்து வினைப்போகங்களையநுபவிக்கின்ற சகலாவஸ்தையுங் கூறியபடி, பதிஇலக்கணங்கூறும் இவ்வாறாஞ் சூத்திரத்தில் "இரண்டுவகையின்" என்றதனால் பாசஞான பசுஞானங்களைக்கடந்து பதிஞானத்தால் அப்பதியாகிய சிவனையறிந்து மேற்செல்லுஞ் சுத்தாவத்தையுங் கூறியவாறு காண்க.

இச்சுத்தாவத்தை, மாயாவாதி, தார்க்கிகன், போகமதஸ்தர், சிவசமவாதி, சுத்தசைவ ராகியஇவரையும் மறுத்து ஒதுக்கிவிட்டு மேற்செல்லுமுறைநோக்கியுமுணரப்படும்.

இவ்வாறு, ச.ரு.கூம்சூத்திரங்களில் முறையேகூறிய, கேவல சகலசுத்தாவஸ்தைகள்மூன்றில், கேவலாவஸ்தை,மருட்கேவலம், சகலகேவலம், பிரளயகேவலம், விஞ்ஞானகேவலம், அருட்கேவலம் என்றைவகைப்படும்.

சகலாவஸ்தை, சகலத்திற்கேவலம், சகலத்திற்சகலம், சகலத்திற்சுத்தமென மூன்றாய் ஒவ்வொன்றும் ஐவகைப்படும்.

சுத்தாவஸ்தை, சீவன்முத்தி, அதிகாரமுத்தி, போகமுத்தி, லயமுத்தி, பரமுத்தி எனஐவகையாய் நின்மலசாக்கிரம், நின்மல சொப்பனம். நின்மலசுழுத்தி, நின்மலதுரியம்,நின்மலதுரியாதீதமெனப்படும்.

இச்சூத்திரம், முதல்வன், அறியப்படுவனேயடானென்று ஐயுறுவண்ணம் அவ்விருதிறனுமின்றிப் பாச பசுஞானங்களாலறியப்படாமையும்பதிஞானத்தாலறியப்படுதலுமாகிய இவ்விருதிறத்தாற்சிற்சத்தாய்நிற்றலே அவனதுசொரூபலக்கணமென்றும், தார்க்கிகன் நேரேகாணப்படுதலால்உலகம் அசத்தன்று; அதுபோல முதல்வனும் பிரமாணங்களாலறியப்படுவனென்றதைமறுத்து, தோன்றி ஒடுங்கும்வேறுபாடுடைமையால்உலகம்அசத்தே.இறைவன்சுட்டியறிப்படானென்றும், சாங்கியன்,உலகை.அசத்தென்ப துசற்காரியவிரோதமன்றோ என்றதைஒத்துக்கொண்டுமாயையிற் றோன்றியபோதுகாணப்பட்டுஒடுங்கும்போதுமறைந்துநிற்றலால் அசத்தெனப்பட்டதென்றும், மாயாவாதி, முதல்வனியல், அறிர்

வசனீயமென்றதை மறுத்து வாக்குமனாதீத கோசரமென்றும் கோசரமாகாதென்றுமேழுங்கூறப் பதிஞானத்திற்கோசரமாமென்றும், தார்க்கிகன், அத்தமென்பது பொருந்தாதென்பதை மறுத்து, அதீதமாய்நின்றே கோசரமாமென்றும், யோகமதஸ்தன், பாவனைக்குக் கோசரமாமென்றதைமறுத்து, அருட்பாவனைக்கே கோசரமாமென்றும், சிவசமவாதி, பசுஞானத்திற்குக் கோசரமாமென்றதைமறுத்து, பசுவும் பதியும்வேறின்றி நிற்றலால் அருளாலன்றிக் கோசரமாகாதென்றும், சிவாத்துவித சைவர், சுத்தசைவர், பசு பதியுடன் ஒன்றுபவிந்தலால் அருளாலறியுமென்பதும் பொருந்தாதென்பதைமறுத்து, முத்தியிலும்உயிர் சிவமாயிருத்தலால் அருளாலறியுமென்றும் விளக்கியவாறு காண்க.

## ஏழாஞ்சூத்திரம்.

### அதிகாரியினியல்பு.

யாவையுஞ் சூனியஞ் சத்தெதி ராதலிற்
சத்தே யறியா தசத்தில தறியா
திருதிற னறிவுள திரண்டலா வான்மா.

கருத்துரை. மேலதற்கோர் புறனடையுணர்த்துதனுதலிற்று

இ—ள். தூலாருந்ததிநியாய முறையில்முன் ஆறுசூத்திரங்களால் பதி பசு பாசங்களின் தூலமாகிய பொதுவியல்பிரமாணம்இலக்கணமிரண்டானுணர்த்திய ஆசிரியர், அம்மூன்றினுக்கு மாகிய சிறப்பியல்பென்னு முண்மையைப் பின்ஆறுசூத்திரங்களில் வைத்துச் சாதனம் பயனென்னுமிரண்டானுணர்த்தப்புகுந்து, அப்பயன்பெறுதற்கேதுவாகிய சாதனம் மூன்றுசூத்திரங்களால் முன்கூறத்தொடங்கினார். அவற்றுள் இவ்வேழாஞ்சூத்திரம் முன்சூத்திரத்தில் சத்து அசத்து என்றஇரண்டையும் அறிவது அவற்றுளொன்றுமென்பாரை நோக்கி அதற்குப் புறனாக அதனொழிபாகிய சதசத்தினியல்புணர்த்து முகத்தால் சாதனஞ் செய்து பயன்பெறுதற்குரிய அதிகாரியாகிய ஆன்மவியல்புணர்த்துவதென்பதாம்.

அந்நியமி லாமையாற்கொன் றுணர்வின்று
மந்நியமி லாஅசத்தைக் காண்குவனே—லந்நியமாக்
காணு னவன்முன் கதிர்முன் னிருள்போல
மாணு வசத்தின்மை மற்று.

இ—ள். தன்னுள் அடங்கிய பசு பாசங்களின்வேறின்றி நிற்கும் முதல்வன் சுட்டியறிதற்கு அவனின்வேறாய் ஒன்றுமில்லையாதலால், அவன் பிரபஞ்சத்தை அறிவனாயிற், கலந்துடனாய் நின்று ஒருசேரஅறிவனன்றி நம்மனோர்போல வேறாய்நின்று சுட்டி அறியமாட்டான். அது, சூரியன் முன் இருள்வெளிப்படமாட்டாது மறைந்து நிற்றல்போல, முதல்வன்முன் பிரபஞ்சம் விளங்கி நில்லாமையா லென்பதாம்.

எனவே பிரபஞ்சத்தைச்சுட்டியறியும் ஏகதேசஅறிவுமுற்றறிவைத்தடுக்குமாதலால் அஃதில்லாமைமுற்றறிவுக்குமேம்பாடாவதன்றி இழுக்காகாதென்று விளக்கினமைகாண்க.

## இரண்டாமதிகரணம்.

சிவசங்கிராந்தவாதி, சத்துஅசத்தை அறியாதாயினும், அசத்தென்னப்பட்டதநுகரண புவனபோகங்களுள் ஒன்றாகிய அந்தக்கரணமானது விளக்குத் தன்முன்கண்கள்பொருள்களை அறியத்தான் விகாரமின்றி நிற்றல்போல, விகாரமின்றி நிற்கும் ஆன்மசந்நிதியில், பெத்தகாலத்தில் அசத்தாகிய விடயங்களை யறிதல்போல, முத்தியிலும் அக்கரணங்களேசிவகரணமாய்நின்று சத்தாகிய சிவத்தை அறியுமென்றலும், ஒருவர்க்கு எதிர்ப்பட்ட கண்ணாடியில் நிழலுண்டாதல்போல ஆன்ம சந்நிதியில் அக்கரணங்களுக்கு அறிவுண்டாமென்றலும் பொருந்தமாமென்பதைநோக்கிச்சூத்திரத்தின் இரண்டாம்பாகத்தைப் பதம்பிரித்துரைக்கும் மேற்கோள்.

இனி, அசத்தினுக்கு உணர்வின்று என்றது.

இ—ள் அசத்தாகிய அக்கரணமுதலியதத்துவங்களெல்லாம் சடமாதலால் அவற்றிற்கு அறிவில்லை என்பதாம்.

இச்சூத்திரத்தில், "அசத்துஇலது" என்றதற்கு அசத்தானது

இல்லாப் பொருளோவென்று பிறர் மயங்காமல் அசத்துக்கு அறிவில்லையென்னுமுண்மை தெரிந்துகொள்ளவே அதன்பொருள் கூறும் இம்மேற்கோளில் "அசத்தினுக்கு உணர்வின்று" என்பதை விளக்கியருளியதாகாண்க.

பதிஞான பசுஞானங்களுடன் பாசஞானமென்று ஒக்கவைத்தெண்ணப்படுதலால், அப்பாசவகையாகிய கரணமுதலிய தத்துவங்களை அறிவில்லாதனவென்றல் பொருந்தாதென்பாரைநோக்கி மேற்கோளைச் சாதிக்கும். ஏது.

அதுதான் நிருபிக்கில் இன்றாகலான்.

இ—ள். உற்றுநோக்காது தூலமாநோக்குமிடத்துப் பாசத்துக்கு அறிவுள்ளதுபோலத்தோன்றினும், சந்தேகவிபரீதமின்றி குற்றமற்ற சவிகற்பக் காட்சியால் நோக்கின் அப்பாசம் அறிவில்லாததென்றே தெளிவென்பதாம்.

எனவே, பாசமாகிய தத்துவங்களின்வழியாக ஆன்மாவினிடத்து நிகழும் ஞானத்தையேபாசஞானமென்று உபசாரமாகக் கூறியதை, பாசத்திற்குள்ள ஞானமென்றெண்ணுவது நிரூபியாவிடத்துள்ள அறியாமையேயன்றி வேறில்லை என்றவாறாயிற்று.

இதனை, மேலும் உவமையால் வலியுறுத்தும் உதாரணம்.
பேய்த்தேர்நீ ரென்றுவரும் பேதைக்கு மற்றணைந்த
பேய்த்தேரசத்தாகும் பெற்றிமையின்—வாய்த்ததனைக்
கண்டுணர்வா ரில்வழியிற் காணு மாத்தின்மை
கண்டுணர்வா ரில்லெனக் காண்.

இ—ள். பாலைநிலத்திற் காணப்படுங் கானலைச் சவிகற்பக் காட்சியாலுண்மையறியாமல் விபரீதக் காட்சியால் நீரென விருப்பி உண்ணவருபவனுக்கு அதனை அடுத்தவிடத்து அக்கானலானது நீராகாது பொய்யாயது போல ஆராய்ந்தறியமாட்டார்க்கு அப்பாசம் அறிவுள்ளதென்றே காணப்படினும், குருவினுபதேசமுறைபெற்றாராய்ந்தறியவல்லார்க்கு அது அறிவில்லதேயென் றறிவாயாக என்பதாம்.

சவிகற்பக்காட்சி—பகுத்துணர்ந்துண்மைகாண்டல்.
விபரீதக் காட்சி—ஒன்றை மற்றொன்றாகக் காண்டல்

## மூன்றுமதிகரணம்.

முதலதிகரணத்திற் சிவசத்தின் தன்மையே உயிர்க்காவதன்றி உயிர்குத் தனித்தொருதன்மையில்லையாதலால் சத்தே அசத்தைஅறியுமென்று கூறுஞ்சிவாத்துவிதசைவரை மறுத்தூர்ந்து அசத்தை அறியாதென்பதும்இரண்டாமதிகரணத்தில் ஆன்மசந்நிதியில் கரணங்களறியுமென்றதனாலும் உயிர்க்குத் தனித்தொரு தன்மையில்லையென்றாதலால் அசத்தாகிய கரணங்களே சத்தாகிய சிவத்தைஅறியுமென்று கூறுஞ் சிவசங்கிராந்தவாதசைவரை மறுத்து அசத்து சத்தை அறியாதென்பதும் உவமானுதிகளாற் செவ்வே விளக்கியபின சத்தும் அசத்தும் இவ்வாறு ஒன்றை ஒன்று அறியாதெனறால் அவ்விரண்டையும்அறிவதுயாதோவென்பாரைநோக்கிப் பாரிசேஷஅளவையால் அவ்விரண்டின்வேறாய் உயிர்க்குத் தனித்தன்மை யுண்டெண்பதுவிளக்கி அவ்விரண்டுமல்லாத சதசத்தாகிய ஆன்மவியல்புணர்த்துறும்மேற்கோள்.

இனி, இருதிறனறிவுளதிரண்டலாவான்மாவென்றது.

இ—ள். சத்து அசத்தாகிய இரண்டும் தம்முள் ஒனறொன்றறியப்படாமையால் அவ்விரண்டினியல்பையும்அறிவது அவ்விரண்டுமல்லாத சதசத்தாகிய ஆன்மாவேஎன்பதாம்.

இதனைச், சூரியன் உலகப்பொருள்களைக் கண்ணுக்குக் காட்டுவதன்றித்தான்நேரே ஒன்றொன்றாகச்சுட்டியறியான். அப்பொருள்களும் சடமாதலால் அவனை அறியமாட்டா. இவ்விருதிறப் பொருள்களும் ஒன்றொன் றறியப் படாமையால், அவ்விரண்டையும்அறிவது அவ்விரண்டுமாகாது அவற்றின்வேறாகிய கண்ணேயாதல்போலாமென்னும் அநுமானத்தாற்காண்க.

சத்தும் அசத்துமாகிய அவ்விரண்டும் ஆன்மாவினாலும் அறியப்படாவெனில்? அறிந்தநுபவிக்கும் பிரயோசனமு மில்லைவென்றாகி, அவ்விண்டும்ஒன்றொன்றறியப்படாமையுடன் உயி

ராலும் அறியப்படாமையுஞ்சேர்ந்து ஒன்றாலும் அறியப்படாத சூனியமெனப்படுவதாய்முடியுமாதலால், மேற்கூறியபடி அவ்விரண்டையும்ஆன்மா அறியுமென்பதே நிச்சயமாய் ஆன்மாவுக்கு அறியுந்தன்மை உண்டென்பது தெள்ளாமென்க.

இச்சூத்திரத்தில் "இருதிறனறிவு" என்றதொகைமொழியில், ஐ.ஆல், கண் என்னுமுருபுகள் விரித்துப் பொருள்கொள்ளுமாறு கூறுமுகத்தால் ஆன்மாவுக்குத் தன்னியல்பிலே வேறு வேறு கூறுபவரையுந் துஉண்மை விளக்கியவாறு.

இவ்விரண்டினையும் அறிவதாய் உபதேசியாய் நின்ற அவ்வறிவு இரண்டனையாறு முளதாயுள்ள வதுவே அவ் வான்மாவாமென்றது.

இ—ள்- சத்தும் அசத்து மாகிய இருதிறனையும் அறியும் அறிவும், அறிவிக்கும்அவ் விருதிறனாலும் உபதேசியாய் நின் றறியும் அறியும், அவ்விருதிறப் பொருள்களிடத்தும் அது அதுவாயழுந்திநின் றறியும் அநுபவஅறிவு முள்ளதெதுவோ அதுவே சத்தும் அசத்துமல்லாதசதசத் தாகிய ஆன்மா வென்பதாம்;

ஆன்மா இரண்டையும் அறியுமென்றதனால், சிவம் ஆன்மாவுக்காக அசத்தையறியுமென்றும், அசத்து ஆன்ம முன்னிலையிற் சத்தை அறியுமென்றுங் கூறுஞ்சிவாத்துவிதசைவர் சிவசங்கிராந்தவாதசைவரிருவரையும், அறிவித்தால் அறியுமென்றதனால், அறிவிக்கவேண்டாதுதானே அறியுமியல்பினதென்னுஞ்சிவசமவாதசைவர், ஈசுரஅவிகாரவாதசைவர், ஐக்கியவாத சைவர்முதலியோரையும், சத்துஅசத்து இரண்டினிடத்தும் அதுஅதுவாயழுந்திநின்றறியுமென்றதனால், ஆன்மஅறிவு, முத்தியினும் மலநீங்காதாதலால் மலத்திலடங்கிக் கல்லைப்போலக் கிடப்பதன்றிச் சிவத்துடன்சார்வதில்லை; என்னும், பாஷாணவாதசைவரையும், மலம்நீங்குதலே முத்தி; சிவனடியிற் கலத்தலன் றென்னும் பேதவாதசைவரையும், ஆன்மா முத்தியில் சிவனுடன் ஒன்றாய் விடுவதன்றி உடனிருந்து ஆனந்த மனுபவிப்பதில்லை என்னுஞ் சுத்தசைவரையும், அவரோடொப்பார் பிறரையும் மறுத்தவாறு காண்க.

இவ்வாறு மறுக்குமுறையில் முன் "இரண்டனையும் அறிவதாய்" என்றதனால், ஒன்றையும் அறியமாட்டாத இருளுமாகாமல், தானே அறியும் ஒளியுமாகாமல் அவற்றின் வேறாய் நின்று ஏகதேசமாயறியுங் கண்போல, ஆன்ம அறிவு ஒன்றையும் அறியமாட்டாத அசத்துமாகாமல் எல்லாவற்றையும் ஒருங்கேயறியுஞ் சிவசத்து மாகாமல் அவ்விரண்டையும் ஏகதேசமாயறியும் வேறு தன்மையுடையதென்பதும் "உபதேசியாய்" என்றதனால் அவ்வாறு அறிவதும் ஆகாயம் தன்னிடத்துள்ள ஒலியைத் தானே வெளியிடமாட்டாமல் ஒருதுணையைப் பற்றி நின்றே வெளியிடுதல் போல, பெத்தகாலத்தில் மனமுதலிய கரணங்களும் முத்தி காலத்தில் திருவருளுந்துணையாகக் கொண்டு அத்துணைகளாலறியுமென்பதும், "இரண்டிடத்தும் அழுந்திநின்றறிவதாய்" என்றதனால், துணைகளாலறியுமிடத்துஞ் சார்ந்தபொருளின் வண்ணமாய் நிற்கும் பளிங்குபோல, அசத்தைச் சார்ந்தால் அசத்தாயும் சத்தைச்சார்ந்தால் சத்தாயும், அவ்விரண்டினிடத்தும் அது அது வாயழுந்திநின்றறியுமென்பதுமாகிய மூன்றும் அவ்வான்மாவின் சிறப்பிலக்கணங்களா மென்பது விளக்கியவாறுகாண்க.

இம்மூன்றில், "இரண்டனையும்அறிவதாய்" என்றதனை வலியுறுத்தி ஆன்மா சத்துமன்று அசத்து மன்றென்பதை விளக்கும் உதாரணம்.

அருவுருவந் தானறித வாயிழையா யான்மா
வருவுருவ மன்றுகு முண்மை—யருவுருவாய்த்
தோன்றியுட னில்லாது தோன்றாது நில்லாது
தோன்றன் மலர்மணம்போற்றொக்கு.

இ—ள். நுண்பொருணூல்களை ஆராயும் உயிரேசத்து அசத்துக்களை யறிதலால் அவ்வுயிர் அவ்விரண்டின் வேறாம். அப்படியானால் ஆன்மாவுக்குத்தனித்து நின்று தன்னுண்மை அறியப் படுமோ? படாதோ? அறியப்படுமேல் முன்இரண்டையு மறியுமென்றுமாத்திரங் கூறாமல் தன்னுடன் மூன்றையுமறியுமென்று கூற வேண்டும்; அறியப்படாதேல் அறியப்படாதபொருள் சூனியமென்றுகொள்ளப்படுமெனில்? அவ்வான்மாவினுண்மைத் தன்

மை, சத்தும் அசத்துமாகிய இரண்டும்போல விளங்கித்தோன்றி அவற்றுடனொப்பதிற்பது மன்றாய், விளங்காது சூனியமாய்நிற் பதுமன்றாய், மலரினுள்ளவாசம்அதைவிட்டுத் தனித்துநிற்பது மின்றிஅம்மலர்போல விளங்கித்தோன்றுவதுமின்றி விளங்காமற், சூனியமாவதுமின்றி அம்மலரிலடங்கிநின்றுபரிமளித்தல்போலச் சத்தைச்சார்ந்து சத்தாயும் அசத்தைச்சார்ந்து அசத்தாயும் சார்ந்ததன்வண்ணமாயடங்கித் தோன்றுவதோரியல்பாம் ஆத லால் அவ்வுயிரினுண்மைத்தன்மை சத்தும் அசத்துமாகிய அவ்வி ரண்டும்போலத் தனித் தறியப்படுவதன்றி அவ்விரண்டையும் அறியுமவழியால் அறியப்படுவதென்பதாம்.

"நண்பொருணூலகலை யாராயுமுயிர்" என்றதனுல் ஆன்மா வுக்கு அறியுந்தன்மை உண்மையாற்றான் இறைவனால் வேதசிவா கமாதிநூல்கள்வெளியிடப்பெற்றன வென்பதும் விளக்கமாகி யது. இக்கருத்துப்பற்றியே உமாபதிசிவம் "பலகலை யுலகினில வுதலாலும்" என்றருளிற்று.

அவ்வாறு தன்னையும் அறிகின்றஉயிர், முதல்வனுக்குச்சம மான அறிவுடைய தென்பாரை நோக்கி, "உபதேசியாய்"என் றதனை வலியுறுத்தி இறைவன்போலத்தானாக அறியாதென்பதை விளக்கும் உதாரணம்.

மயக்கம துற்று மருந்திற் றெளிந்தும்
பெயர்த்துணர்நீ சத்தாகாய் பேசி—லசத்துமலை
நீயறிந்து செவ்வினைகணீயன்றி வேறசத்துத்
தானறிந்து துய்யாமை தான்.

இ—ள். சிவசமமான அறிவுடையதுயிரென்பவனேநீ உன்னறி வை விளக்குந் துணையில்லாதபோது விடயத்தைஇன்னதென்றறி யமாட்டாது மயங்கியும் பசிநோய் நீக்கு மருந்தாகிய அன்னம் போலஅம்மயக்கநோய்நீக்குமருந்தாகிய அத்துணையுள்ளபோது மயக்கநீங்கிஅதனை இன்னதெனத் தெளிந்தறிந்தும் மாறிமாறி அறிந்துவருகின்றநீ, என்றும் ஒரேபடித்தாய்த் துணைவேண்டா தியல்பா யறிகின்ற முதல்வன்போலறியுஞ் சத்தியுடையவனல்

ஊ. அப்படியானால் நான்அசத்தனோவெனில்? நீதுணையுள்ள போதும் முன் அறிந்துசெய்த வினைகளை இப்போது நீயேயறிந் தனுபவிக்க வல்லவனன்றி, உன்னின்வேறாய் அசத்தாகிய பாசம் அறிந்தனுபவிக்கமாட்டாமையால், அதுபோல அசத்தனுமல்லை. சப்தகுணமுள்ள ஆகாசம்போலத் துணையுள்ளபோதறிதலும் அஃதில்லாத போதறியாமையு மாகியஇரண்டுமுள்ளநீ, துணை யின்றி இயல்பா யறியுஞ் சித்தும், துணைபெறினும் அறியமாட்டா தஅசித்து மாகிய இரண்டிற்கும்வேறாகிய சிதசித்தே யாவாயென் பதாம்.

அம்மயக்கம்அவ்வுயிருடனியைந்துள்ள முதல்வனுக்குமுண் டுபோலு மென்றும், அது உயிர்க்கு எப்போது வந்த தென்றும் வினவுவார்க்கு விடைகூறுமுறையில் "இரண்டன்பாலுமுளதாய்" என்றதனை வலியுறுத்தும் உதாரணம்.

மெஞ்ஞானந் தன்னில் விளையாதசத்தாத
லஞ்ஞான முள்ள மணைதல்காண்—மெஞ்ஞானந்
தானே யுளதன்றே தண்கடனீ ருப்புப்போற்
றானே யுளமுளவாத் தான்.

இ—ள், மேற்கூறிய (அஞ்ஞானம்) மயக்கமானது, என்றும் ஒருபடித்தாயுள்ள (மெய்ஞ்ஞானந்தன்னில்) சிவத்தினெதிர் கதிர் முன்இருள்போல நில்லாததலால் (விளையாது) அங்குளதாத லின்றி, அச்சிவம் என்றுள்ளதோ அன்றே தான் சார்தற்குரிய உயிர்களுள்ளனவாக அவ்வுயிர்களைப்பற்றிநிற்கும். அது, கடலும் நீரும், உப்பு மாகிய மூன்றில் உப்பானது கடலிடத்திற் பற்றாமல் நீரை மாத்திரம் பற்றி நிற்றல் போலென்றறிவாயாக என்பதாம்

ஈண்டுக் கூறிய, கடல், நீர், உப்பு மூன்றனுள் கடலுவமை பதி, சர்வவியாபகப்பொருளென்பதையும், நீருவமை, பசு, அப், பதியுளடங்கிநிற்கும் வியாப்பியப் பொருளென்பதையும், உப்பு வமை, பாசம், அப் பசுவைப்பற்றிநிற்பதேயன்றி அப்பாலுள்ள சுத[illegible]சைதன்னிய பதியைப் பற்றமாட்டாத சடப்பொருளென்ப

# மூன்றாஞ்சூத்திரம் முதலதிகரணம்.

ஆன்மா இலது என்றதுபற்றி அஃதுண்டென்பது, முயற் கோடு இல்லையென்பதுபற்றி அஃதுண்டென்பதை ஒக்குமென் றுகூறுவதுநோக்கி அதன் தாற்பரியமுணர்த்துவது.

எவற்றினையும் அன்றுஅன்றெனவிட்டு ஆன்மாஇலதென்று நிற்பதொன்றுளதாகலின் அதுவே அவ்வான்மாவாம் என்றது

இ—ள். ஆன்மா இலதுஎன்னுஞ் சூனியான்மவாதிகளும், முயலுக்குக் கோடுஇல்லைஎன்பதை நேரேதெரிந்து சொல்வது போல ஆன்மா இல்லை என்று நேரே தெரிந்து சொல்லமுடி யாமையால், தேகம் இந்திரியமுதலியவைகளை இது ஆன்மாஅன் றுஅன்றெனக்கழித்து இனி வேறொன்றுங் காணாமையால் ஆன் மா சூனியமே என்பர். ஒன்றொன்றாகக்கழித்து நீங்கி இனி வே றொன்றுமில்லையென்றறிந்து நிற்கும் அறிவுண்மையால் அதுவே ஆன்மா என்பதாம்.

அங்ஙனம் அறிந்த அறிவுஞ் சூனியமேஎனில்? அது "என்னை யீன்றாள் மலடி" என்பதைஒக்குமென்றொழிகஎன்பது கருத்து.

சூனியமாவது—உள்ளதுமன்று. இல்லதுமன்று. இரண்டு மாவதுமன்று. வேறுமன்றெனப்படும் பாழ்.

அவ்வறிவை, உடல் பொறிமுதலியவற்றில் வேறாய்ப் பிரித் துக் காணுமுறையும், அவ்வறிவே உயிராகும்முறையும் விளக்கி வலியுறுத்தும் உதாரணம்,

அன்றன் றெனநின் றனைத்தும்விட் டஞ்செழுத்தாய்
நின்றொன் றுளததுவே நீயனைத்து—நின்றின்று
தற்பணம்போற் காட்டலாற் சார்மாயை நீயல்லை
தற்பரமு மல்லை தனி.

இ—ள்; முன், உடல் பொறிமுதலிய கருவிகளையே நான் நான் எனநின்று பின் அவைகளை இது நான்அன்று இது நான் அன்று எனக் கண்டு நீங்கியபோது, அவ்வாறு நான்அன்றுஎனச் சூக்குமபஞ்சாக்ஷரரூபமாய்அறிந்துவந்ததோரறிவு அக்கருவிகள் போற்கழிக்கப்படாமல் நிலைபெற்றுள்ளதல்லவா? அதுவும் நான் அன்றெனில், அதையுங் கண்டுகழித்த அறிவுவேறொன்றுண்டெ ன்று[illegible]மேலும் வரம்பின்றி ஓடுமாதலால், சூக்குமபஞ்சாக்ஷரரூப

மாயநீங்குவந்த அவ்வறிவே நீயென்பதறிவாயாக, அப்படியானால் மாயையும் சிவமும் உளவென்று முற்சூத்திரங்களால் நிச்சயிக்கப்பட்டமையால் அவையே அவ்வறிவையும் அறிந்துநிற்குமாதலால் வரம்பின்றியோடுமாறில்லையெனில்? உன்னாற் சாரப்பட்ட மாயை அம்மாயாகாரியப்பொருள்களை உனக்குக் கண்ணாடிபோல விளக்குவதன்றி அறிவதன்றாகலான் அறிகின்ற நீ அம்மாயையல்லை. மாயையான்விளங்கி அறியும்நீ அதற்கதீதமாகிய சிவமுமல்லை. அவற்றின்வேறாகிய உயிரே என்பதாம்.

## இரண்டாமதிகரணம்.

தூலதேகான்மவாதி, அவ்வறிவு, தேகமின்றி நிகழாமையானும், நான் பருத்தேன் சிறுத்தேனென உடம்பினையே நானென்று வழங்குதலானும், அத்தேகமே ஆன்மா என்றுகூறுவதுநோக்கிச் சூத்திரத்தின் இரண்டாம்பாகத்தைப்பதப்பிரித்துரைக்கும் மேற்கோள்.

இனி, எனதுடலென்றலின் ஆன்மாவுளதென்றது.

இ—ள். நான் பருத்தேன் சிறுத்தேன் என உடம்பின்குணங்களையே உபசாரத்தால் உயிருக்கேற்றி வழங்கினும், நான் உடம்பு நான் கைகாலென வழங்குவாரின்றி எனதுடம்பு கைகாலென வேற்றுமைப்படவே வழங்கலால் இவ்வுடம்பின்வேறாய் ஆன்மா உண்டென்பதாம்.

தலைமாத்திரமுள்ள ராகுவை ராகுவின்றலைஎன்று கூறுமிடத்து வேற்றுமையின்றி ஒற்றுமையாய்க்கொள்ளுதல்போல, எனதுடல்என்பதும் வேற்றுமையின்றி ஒற்றுமையேயாம். ஆதலால் அவ்வுடலின்வேறாய் உயிருண்டென்பது பொருந்தாதென்றுகூறுவதுநோக்கி மேற்கோளின் தாற்பரியம் விளக்குவது.

என்பதி என்மனை என்றாற்போல என்கை என்காலென நிற்பதாதலின் அதுவே ஆன்மாவாமென்றது.

இ—ள். இராகுவினது தலை என்றாற்போல்வன ஏகதேசவழக்கம். என்பதி என்மனைவியென்றல்போலவே என்கை என்கால் என்கண் செவி பொறி பிராணன் அறிவெனப் பலவகையினும் பெரும்பாலும் வழங்கலால், இம்மிகுவழக்கம் வேற்றுமைப்

ருள்படவே நிற்றலால், அவ்வாறு எனதெனக் கூறிக்கொண்டு வரும் பொருள் ஒன்றுண்டல்லவா? அதுவே அவ்வுடலின்வேறா கிய ஆன்மாவென்பதாம்.

மனைவி இறந்தால் நான்இறந்தேன், மனைஇடிந்தால் நான்இடிந் தேன் என்பது எங்குமின்றி அம்மனைவிமுதலியபுறப்பொருள்கள் வேறாய்நிற்றலால், அப்பொருள்களைப் பிறிதின்கிழமையாக (வேறாக) எனதுஎன்பதுபோலன்றி, நான் நடந்தேன் அடித்தேன் என்று தேகத்தின்றொழிலை ஒற்றுமைப்படக்கூறுதல்போலக் கை கால் முதலியவைகளைத் தற்கிழமையாக எனது என்றலால் இவ் விருமொழிப் பொருளால் ஒவ்வாதென்றுகூறுவதுநோக்கி ஒக் குமென்றும், உடலின்வேறாய் உயிருண்டென்றும் அதனை வலியு றுத்தும் உதாரணம்.

எனதென்ற மாட்டி னெனதலா தென்னு
னெனதலா நெஞ்சுகைகால் யாக்கை—யெனதென்று
மென்னறிவ தென்று முரைத்தநீ நிற்றிகா
ணுன்னிலவை வேறா முணர்.

இ—ள், நீ உலகாயதநூலுணருமுன் மனைவிமுதலிய புறப் பொருள்களை உனக்கு வேறெனக்காணாமல் உன் உயிரெனமயங் கித் தற்கிழமைப்பொருளாக எனதெனக் கூறிநின்றாற்போல, உனதல்லாத கை கால் முதலியவைகளை எனதென்றும், அங்ங னம் அறிந்த பாசஅறிவை என்னறிவென்றும் தற்கிழமையாக் கூறிக்கொண்டு நீ ஒருபொருள் வேறாகநிற்கின்றாய், அந்நூலுணர் ந்தபின்பு மனைவிமுதலிய பொருள்களை வேறெனக்கண்டாற் போலக், கை கால்முதலியவைகளையும் ஏதுக்களால் ஆராய்ந்து நோக்கில் அவைகள் உனக்குவேறென்பதுதெளிவாய். ஆகவே தேகம் ஆன்மாவன்றென்பது காண்பாயாகஎன்பதாம்.

## மூன்றாமதிகரணம்.

இந்திரியான்மவாதி, செவி மெய் கண் வாய் மூக்குஎன்னும் ஞானேந்திரியம் ஐந்தும், அறிவில்லாததேகம்போலாகாமல் அறி ன்[illegible]ன்மையுடையனவாதலால், அவ்விந்திரியங்களை ஆன்மா [illegible] கூறுவதுநோக்கி இந்திரியங்களின் வேறாய் உயிருண்டெ

னச் சூத்திரத்தின் மூன்றும்பாகத்தைப் பதம்பிரித்துரைக்கும் மேற்கோள்.

இனி, ஐம்புலனறிதலின் ஆன்மா வுளதென்றது.
இ—ள். ஐந்து விடயங்களையும் தானே அறிதலால் இந்திரியங்களின் வேருய் அவ்வறியுமுயிருண்டென்பதாம்.

ஐந்தையும்அறிதலால் ஐம்பொறியின்வேருய்உயிருண்டென்பதெப்படி? என்று கூறுவதுநோக்கி அதன்ருற்பரியமுணர்த்துவது.

ஐம்புலனுகிய சத்தப் பரிச ரூப ரச கந்தங்களை இந்திரியங்கள் ஒன்றறிந்ததொன்றறியாமையின் இவ்வைந்தினும் ஐம்பயனுமறிவதுளதாகலின் அதுவே ஆன்மாவாமென்றது.

இ—ள். சத்த முதலிய ஐம்புலன்களைச் செவி முதலியஇந்திரியங்களுள் ஒருவிடயத்தை அறிந்தஇந்திரியம் மற்ருென்றைஅறியாமையால் இவ்வைம்பொறிகளாலும் ஐந்துவிடயங்களையும் அறியும்பொருளொன்றுண்டாகலான் அதுவே மேற்கூறிய ஆன்மா என்பதாம்.

இந்திரியங்கள், ஒன்றறிந்ததை வேறென்றறியாதென்றது சரி. அவ்வைந்தும் ஐந்துயிரெனக்கொள்வதில் எமக்கிழுக்கில்லை. இனி இவ்வைந்தினும் ஐம்புலனையும் ஒருபொருளே அறியுமென்பதற்குப் பிரமாணங்கண்டிலம். குடத்தைக்கண்ட நானே அதனைத் தீண்டினேனென்னுமிடத்து, கண்டதும் தீண்டினதும் நானே என்று அவ்வறிவுதொடர்ந்து வருதல்போல, ஒருடம்பிலிருக்கும் ஒற்றுமையுடைய அவ்வைம்பொறிகளே ஒவ்வொன்றையுந் தொடர்ந்தறியுமாதலால், அவற்றின்வேருய் உயிரொன்றுண்டென்பது பொருந்ாதென்று கூறுவதுநோக்கி அவ்விந்திரியங்களின்வேருய ஆன்மா உண்டென்பதைவலியுறுத்தும் உதாரணம்.

ஒன்றறிந்த தொன்றறியா தாகி யுடன்மன்னி
யன்றும் புலனுயவ் வஞ்செழுத்தை—யொன்றறிது
முள்ளதே யாகி லதுநீ தனித்தனிகண்
டெள்ளலமை யொன்றல்லை போர்.

இ—ள். உடம்பிலிருக்கும் அவ்வைந்திந்திரியங்களும் ஒன்றறிந்ததை வேறொன்றறியாததுமன்றி தம்முள் மாறுபடும் ஐந்தனுள் ஒன்றைமாத்திரம் அறிவதும் தாமாக அறிவதில்லை. சூக்குமபஞ்சாக்ஷரங்கள் செலுத்தச் சென்றறியும். அங்ஙனம் அறிகின்ற இந்திரியங்களின் தொழில்களைக், கண்உருவத்தை அறிவது செவி ஓசையை அறியுமென்றிவ்வாறு அறிகின்ற பொருள் ஒன்றில்லை எனில்? அவ்வறிவுநிகழாதாதலால் உள்ளதேயாம் அதுவே நீயாகிய ஆன்மா என்க. அவ்வாறு அறிவதும் அவ்விந்திரியங்களே யெனில்? அவைகள் ஒவ்வொன்றும் அக்ஷரங்கள் செலுத்தச் சென்று ஒவ்வொரு விஷயங்களை வேறுவேறயறிதன்மாத்திரையேயன்றி, நாம் அறிந்தேமென்றும் அறியமாட்டா. அப்பயன்களையுங் கொள்ளமாட்டா. அவ்விந்திரியங்களின்வழியாக விஷயங்களை ஒருங்கே அறிவதும் நான் அறிந்தேனென்பதும் அப்பயன்களைக்கொள்வதும் அவற்றின் வேறாகிய ஆன்மாவே என்பதை ஆராய்ந்தறிவாயாக என்பதாம்.

இம்மூன்றதிகரணங்களாலும் சாக்கிரத்தினிகழுமியல்புபற்றி ஆன்மாவினுண்மைசாதிக்கப்பட்டது.

## நான்காமதிகரணம்.

சூக்குமதேகான்மவாதி, இச்சூக்குமதேகம் புறத்தேகாணப்படாதாயினும் (நேசவிந்திரியங்கட்குநிகழறிவிதனாற்காண்டும்)சத்தம் பரிசம் ரூபம்ரசம் கந்தம் மனம்புத்தி அகங்காரம் எட்டுமாகிய இச்சூக்குமதேகத்தால் அவ்விந்திரியங்கட்கு அறிவு நிகழுமென நீயிருங் கொள்ளுதலால் அச்சூக்குமதேகமே உள்நின்று இந்திரியங்களைச் செலுத்தி அறியும். அதனின்வேறாய் ஆன்மா ஒன்றுள்ளது அதுவே அறியுமென்பது பொருந்தாதென்று கூறுவதுநோக்கிச் சூக்குமதேகத்தின்வேறாய்உயிருண்டெனச்சூத்திரத்தின் நான்காம் பாகத்தைப் பதம்பிரித்துரைக்கும் மேற்கோள்.

இனி, ஒடுக்கமறிதலின் ஆன்மாவுளதென்றது.

இ—ள். அவ்விந்திரியமைந்தும் ஒடுங்கின சொப்பனத்தில் நிகழ்ந்ததை அறிதலால் அங்ஙனமறியுமான்மா அதனின் வேறாயுண்டென்பதாம்.

சொப்பனத்தில் நிகழ்ந்ததைப் புறத்தேயறிவதுஞ் சூக்குமதேகமேயாதலால், இது முன்சிந்தித்ததையே மேலுஞ் சாதிக்குஞ் சித்தசாதனமாகிய குற்றமா மென்று கூறுவதுநோக்கி அதன் குற்பரிய முணர்த்துவது.

நனவின்கட் கனவுகண்டாமென்றுங் கண்டிலமென்றும் நிற்பதுளதாகலின் அதுவே அவ்வான்மாவா மென்றது.

இ—ள். சொப்பனங் கண்டனங் கண்டிலமென்று சாக்கிரத்தில் மயங்கி அறியும்பொருளொன்றுள்ளதாதலால் அதுவே முற்கூறிய ஆன்மா வென்பதாம்.

ஒடுக்கமறிதலென்றது. சொப்பனத்தின் நிகழ்ந்ததை சாக்கிரத்தின் மயங்கியறித லென்பதேயாதலால் சித்தசாதனதோஷமாகா தென்க. கனவுகண்ட சூக்குமதேகமேசாக்கிரத்தில் அதனையும் அறியுமாயிற் கண்டபடியனறிமயங்கி யறியாது, மயங்கியறிதல் காணப்படுதலால், சூக்குமதேகம் போல ஒருபடித்தன்றிக் கனவிற் செல்லுதல் நனவில்வருதல் முதலிய வேறுபாடுடைய உயிரே கனவுகண்டேன் கண்டிலே னெனமயங்கியறியுமாதலால் அதுவே அச்சூக்குமதேகத்தின் வேறாயுண்டென்பதுகாண்க.

கனவிற் செல்லுதலும் அங்கு நிகழ்தலும் மீளவருதலுமுணர்த்தி யதனை வலியுறுத்தும் உதாரணம்.

அவ்வுடலி னின்றுயிர்ப்ப வைம்பொறிக டாங்கிடப்பச்
செவ்விதி னவ்வுடலிற் சென்றடங்கி—யவ்வுடலின்
வேறொன்று கொண்டு விளையாடி மீண்டதனை
மாறலுட னீயல்லை மற்று.

இ—ள். தூலஉடம்பினின்று தொழிற்படும் ஐம்பொறிகள் அத்தொழிலின்றிக்கிடக்கும்போது புறத்தொழிலெல்லாமடங்கி அத்தூலஉடம்பினுட்சென்று அவ்வுடம்பிற்போல அதனின் வேறாய சூக்கும உடம்பெடுத்துக்கொண்டு வேறோர் வழியால் விரைந்து சத்தாதிவிடயங்களைப்பற்றிவிளையாடி மீண்டு அத்தூலஉடம்பில் வருமின்றாயாதலால், அத்தூலஉடம்பினின்று புறத்து நிகழ்வனவற்றை அறிதல்போலச், சூக்குமஉடம்பினின்று அக

த்துநிகழ்வனவற்றை அறிகின்ற நீ அச்சூக்குமதேகமல்லை; அதனின் வேறாய ஆன்மாவேயென்பதாம்.

இவ்வதிகரணத்தாற் சொப்பனத்தில் நிகழுமியல்புபற்றிஉயிருண்மை சாதிக்கப்பட்டது.

## ஐந்தாமதிகரணம்.

பிராணான்மவாதி, கனவிலன்றி மேற்செல்லமாட்டாத சூக்குமதேகம்போலாகாமல் சுழுத்திதுரியங்களிலுஞ் சென்று தொழிற்படும் பிராணவாயுவே கனவில் இந்திரியங்களை அடக்கியும், சாக்கிரத்தில் வெளிப்படுத்தியும் அறிவதாகிய ஆன்மாவாகுமென்றுகூறுவதுநோக்கி அப்பிராணனில் வேறாய், ஆன்மா உண்டெனச் சூத்திரத்தின்ஐந்தாம்பாகத்தைப் பதப்பிரித்துரைக்கும் மேற்கோள்,

இ-ரிக், கண்படில் உண்டிவினையின்மையின் ஆன்மா உளதென்றது.

இ-ள். நித்திராகாலம் பிராணவாயு சுழுத்தியில்இருக்கும் போதும் இன்பதுன்பஅநுபவமும் உடம்பு தொழிற்படுதலுமின்மையால் அநுபவித்தலுந்தொழிற்படுத்தலு முடைய ஆன்மா ஒன்று அப்பிராணவாயுவின் வேறாய் உண்டென்பதாம்.

சுழுத்தியில் அநுபவமுந்தொழிலும் உடம்புக்கில்லையென்றது சரி. சுழுத்தியிற் பிராணவாயு நடத்தலாற் றொழிலும், பின்பு சுகமா உறங்கினேன் என்றலால் அநுபவமும் காணப்படுதலால் அப்பிராணவாயுவுக்கு அவ்விரண்டும்அங்குஇல்லையென்றதுபொருந்தாதென்று கூறுவதுநோக்கி அதன்றாற்பரியமுணர்த்துவது. ஒடுங்கினவிடத்து இன்பத்துன்பம் சீவனம் பிரகிருதிக்கின்மையின் ஒடுங்காதவிடத்து இன்பத்துன்பஞ் சீவியாநிற்பதனதாகலின் அதுவே அவ்வான்மாவாம் என்றது.

இ-ள். அநுபவமென்றது, உறங்கிய சுகத்தையன்று; விஷயங்களால் வரும் இன்பதுன்பங்களையே. தொழில் என்றது; வாயுநடத்தலையன்று; உடம்பின்றொழிலையே. ஆதலால், இவ்விரண்டும் பிராணவாயு நடக்கும்போதும் சுழுத்தியில் இன்மையானும்

சாக்கிரத்தில் உண்மையானும் அவ்வின்மை உண்மைகட்கு ஏது வாய் சுழுத்தியிற் கருவிகளை ஒடுக்கியும் சாக்கிரத்தில் ஒடுக்காம லும் நிற்பதொன்றுளதல்லவா? அதுவே பிராணவாயுவின் வேரு கிய ஆன்மாவென்பதாம்.

சுழுத்தியில், கருவிகள் ஒடுங்கிநிற்றலால் அநுபவமும் தொ ழிலும் உடம்புக்கில்லையென்பது பற்றிப் பிராணவாயுவை ஆன் மா வென்பதற்கு இழுக்கு என்னை? யென்று கூறுவதுநோக்கி அ தனை வலியுறுத்தும் உதாரணம்.

கண்டறியு மிவ்வுடலே காட்டொடுங்கக் காணுதே
யுண்டிவினை யின்றி யுயிர்த்தலாற்—கண்டறியு
முள்ளம்வே றுண்டா மொடுங்கா துடனணணி
லுள்ளதா முண்டிவினை யூன்

இ—ள். உடம்பின் கண்ணேகருவிகள் தொழிற்படா தொடு ங்கியபோது அநுபவமுந் தொழிலும் உடம்புக்கில்லையாகவும் பிராணவாயு நிலைபெற்றியங்குதலால் அதுவேஉயிரானல் அநுபவ மும் தொழிலுமில்லாமற் போகவேண்டாம், ஆதலால் விடயங்க ளைக் கண்டறியும் உரிமையுடைய உயிர் பிராணவாயுவின் வேரு யுண்டு. அவ்வுயிர் ஒடுங்காமல் அவ்வுடம்பிற்பொருந்துமானல் அவ்வுடம்பு அநுபவமுந் தொழிலும் உடையதாம். அதனை ஆரா ய்ந் தறிவாயாக வென்பதாம்.

இவ்வதிகரணத்தால் சுழுத்திதுரியங்களில்நிகழுமியல்புபற்றி உயிருண்மை சாதிக்கப்பட்டது. இதுகாறும் சார்மாயைநீயல்லை என்றதனை வலியுறுத்தியவாறு.

## ஆருமதிகரணம்.

விஞ்ஞானன்மவாதி, மேற்கூறிய பிராணவாயுமுதலியவை சடங்களாதலால் அவைபோலாகாமல் என்றுஞ்சித்தாயுள்ளபிரம மே ஆன்மா என்று கூறுவதுநோக்கி பிரமத்தின்வேருய் உயிரு ண்டெனச் சூத்திரத்தின் ஆரும்பாகத்தைப்பதம்பிரித்துரைக்கும் மேற்கோள்.

இனி, உணர்த்த வுணர்தலின் ஆன்மா உளதென்றது.

த்ததும் அழுததும் "வேதநெறியும் மிகுசைவத்துறையும் பூத பரம்பரையு"மாகிய மூன்றும் பொலியப்பெற்றுச் சைவஉலகம் உய்யச்செய்த திருவருட்செயலேயென்பதுந் தெளிவாமெனக. இதனை, வேதநெறித் திருவிருத்தம் முதலிலே விளக்குகின்றது.

இனித், தேவியாருடன் தீர்த்தக்கரைமேல் வந்தருளிய தோணியப்பர் தேவியாரை நோக்கி "துணைமுலைகள்—பொழி கின்ற பாலடிசில் பொன்வள்ளத் தூட்டென்ன" என்றதில், பொழிகின்ற என்று நிகழ்காலத்தாற் கூறியதனால், அவ்வுமாதே வியார் "இல்லா முலைப்பாலுங் கண்ணீரு மேந்திழைபால்—நல் லாயுளவாமால்" தாயிடத்து முன்வெளிப்படாமல் மறைந்துள்ள முலைப்பாலுங்கண்ணீரும் தன்பிள்ளையைக்கண்டவுடன் வெளிப் படப்பொழிந்து விளங்குமென்றுகூறுஞ் சுருதிமுறையை விள க்குவாராய்த், தமதுஇளையபிள்ளையாகியஞானசம்பந்தரைக் கண் டவுடன் திருமுலைகளிற் பால்பொழிந்துகொண்டுநின்றாராதலால் நாயகர் பொழிகின்ற பாலை வள்ளத்தில்வாங்கி ஊட்டுவா யென்ற ருளினர். இதனாலும்இப்பிள்ளையார் உமையம்மையின் பாலுண் டற்குரிய சுப்பிரமணியரேயென்பது தெளிவாமெனக.

"ஈறில் பெருந்தவ முன்செய்து தாதை யெனப்பெற்றார்" என்றதில் தீர்த்தக்கரையில் சோதிமயசிசுவாயிருப்பக்கண்ட சிவ பாதவிருதயர் தமது தவத்துக்கிரங்கித் தோணியப்பர் தந்தருளிய சிசுவெனக்கொண்ட அவ்வளவேயாதலால், அப்பெருந்தவத்தால் அச்சிசுவுக்கு இவர் தாதையென்றுலகர்கூறும் பாக்கியம் பெற்றா ரென்று விளக்குதலாலும் அப்பிள்ளையார் பகவதியார் வயிற்றிற் பிறந்தவரல்லரென்பது தெளிவாம்.

"தவமுதல்வர் சம்பந்தர்" என்றதில் தமது பக்தர்கள்செய் யுந்தவங்களுக்குவந்து அருளுகின்ற சுப்பிரமணியமுதல்வராகிய சம்பந்தரென்றுண்மைவிளக்குதலுங் காண்க.

இப்படியே பெரியபுராணத்தில் அநேகவாக்கியங்கள் விள க்குகின்றன. மேலுஞ் சிவகுமாரனென்றே எங்கெங்குங் கூறுகி ன்றன. அவையெல்லாம் எடுத்துக்காட்டப் புகில்விரியும். இம்ம ட்டிலேயே சுப்பிரமணியரே ஞானசம்பந்தரென்பதும், அவர்,

பகவதியார் வயிற்றிற் பிறந்தவரல்லரென்பதுஞ் செவ்வே தெளியலாம்.

இப்பெரியபுராணத்தின் திருத்தொண்டத்தொகை முதனூலாகிய தமிழ்வேதமும் "எம்பிரான் சம்பந்தன்" என்பதுமுதலாகப் பல அரியவாக்குக்களால் விளக்குகின்றது. வகைநூலாகிய திருவந்தாதியும் "வையமகிழ யாம்வாழ வமணர் வலிதொலைய" சமணர்முதலிய புறமதவலிதொலையவும் உலகம் சைவநெறியினுறைந்துநின்றுய்யவும் அதுகண்டு நாமெல்லாம் வாழவுமே வந்தவதரித்தருளினரென்று விளக்குகின்றது.

இனித், திருநாரையூர்ப் பொல்லாப்பிள்ளையாரின் திருவருட்பூர்த்திபெற்று அத்திருவந்தாதிபாடியருளியசிவாநுபூதிப்பெருஞ்செல்வராகிய நம்பியாண்டார் நம்பிகள் "மயிலேந்திய வள்ளறன்னையளிப்ப மதிபுணர்ந்த—வெயிலேந்திய சண்பைநாதன்" என்று தெளிய விளக்கியருளினர். (மயிலேந்தியவள்ளல் சுப்பிரமணியரோ என்பதும் (சண்பைநாதன்) என்றது சம்பந்தரையே யென்பதும் நிராக்ஷேபமே.

சுத்தாத்துவிதசித்தாந்தசைவராகியசிற்றம்பலநாடிகள் திருச்செந்தூரகவலில் சுப்பிரமணியர் மகிமை கூறுமிடத்து "சைவம் வளர்க்குஞ்சம்பந்தன்" என்பது முதலாகப் பலவாக்கியங்கள் கூறி அவை விசேஷமகிமை என்பது விளக்கியருளினர்,

சூரியனார்கோவில் ஆதீனம் ஸ்ரீசிவாக்கரயோகீந்திரஞானசிவாசாரியசுவாமிகள் அருளிச்செய்த—சிவநெறிப்பிரகாசத்தில்.

துருவாச ரகத்தியர்நற் கவுதமர்சொற் றதீசி
தூநெறியாஞ் சைவசம யக்குரவர் பதங்கள்
திரமாக வுளத்தினிலும் சிரத்தினிலுந் தரித்தே
சிவனருள்சேர் மதலையாய்த் திருவவதாரஞ்செய்த
கரவாத திருஞான சம்பந்தர் பதமுங்
கன்மிதப்பாய் வந்தோர்தங் கழலிணையுங் கருதி
அரனுரைத் தூதேவு மலர்பதமு மற்று
மரனூர்தம் மடியார்தம் மடிமலரும் நினைவாம்.

என்றதிருப்பாசுரம் சிவகுமாரராய்த்திருவவதரித்தருளிக்கா வாமல்விளங்கியருளுந்திருஞானசம்பந்தர் என்றுவிளக்குகின்றது.

இதுவரை கூறியவெல்லாம் உண்மையேயென்பதை ஸ்ரீஞானசம்பந்தப்பெருமானே.

"கோலமாய நீண்மதிற்கூடலால வாயிலாய்
பாலனாய தொண்டுசெய்து பண்டுமின்று முன்னையே
நீலமாய கண்டனே நின்னையன்றி நித்தலுஞ்
சீலமாய சிந்தையிற் றேர்வதில்லை தேவரே," என்று

செவ்வேவிளக்கியருளினார். இதில் ஞானசம்பந்தர் தமது பிதாவைநோக்கி நீலகண்டனே நான்சுப்பிரமணியநாமங் கொண்டு முற்காலத்திலும் ஞானசம்பந்தநாமங்கொண்டு இக்காலத்திலும் எனக்குப் பிதாவாகிய உன்னையேநோக்கித் தினந்தோறும் பாலனுக்குரியதாய தொண்டுசெய்து அவ்வொழுக்கமேசிறந்ததாகிய என்சிந்தையினால் நின்னையன்றி வேறு தேவர்களை நோக்குவதுமில்லையென்பது தெளிவாயது.

இனிசுப்பிரமணியர்மகிமைகளையே விளக்கி அவரதுபரத்துவநிரூபணமேசெய்து அதற்கு எவ்வித ஊனமுமின்றென்பதை விளக்கியருளுகின்ற அநுபூதிச்செல்வராகிய அருணகிரிநாதரும் திருவருளால் வெளியிட்டருளிய "திருப்புகழ்" முதலியதிருப்பாடல்களில் ஏகதேசத்திலமையாமல் அனேகஇடங்களில் சுப்பிரமணியரே ஞானசம்பந்தராக வந்தருளினாரென்றுகூறி, அது அவரதுமகிமைகளில் அதிவிசேஷமகிமையென்பதுகாட்டியருளினார். சுப்பிரமணியரே ஞானசம்பந்தரென்பது அவரதுபரத்துவத்துக்குப்பழுதாமென்று சிலர்கொள்வதுபோல "அருணகிரியார்"கருத்து இருக்குமானால், பரத்துவமே விளக்குகின்ற அவர் அவ்வாறு கூறாரென்க.

இத்தனை ஆதாரங்களெல்லாமிருக்கவு மிவைகட்குச் சமாதானமுங்கூறாமல், தாம்பிடித்ததே சாதிக்குங்கருத்தின் வசத்தராய் ஞானசம்பந்தர்சுப்பிரமணியரல்லர், முன் சரியைகிரியாயோகமாத்திரஞ்செய்து ஞானங்கிடைக்கப்பெறாமல், அதுகிடைத்தற்காக வந்துபிறந்தவர் என்றுசிலர்கூறுவது என்னையோ? அங்ஙனம்

கூறுகின்றவர்கள் முன் இன்னார் இன்னதவஞ்செய்து அவரோ சம்பந்தராய்வந்தாரென்றுஏதேனும்ஒருபிரமாணமுங்கூறுமல்மனம்போனபடிகூறுவ்துபயன்படுமா? சுப்பிரமணியரேசம்பந்தரென்பதுபற்பலபிரமாணங்களுடன் விளக்கமாயிருத்தலேஉடன்படாது ஒருஆன்மாவென்றுகூறுதலால்வரும்பலன் பின்அநுபவத்துக்குவரும்போதேனு முண்மைதெளிவாராக.

சரியைகிரியாயோகஞானமென்னும் நான்கும் உபாயச் சரியைகிரியா யோகஞானம், உண்மைச் சரியைகிரியாயோக ஞானமெனஎட்டுவிதமாய், அவ்வெட்டும் சரியையிற்சரியை முதலியவாகப்பிரிந்து ஒவ்வொன்று நந்நான்காய்முப்பத்திரண்டுவிதமாகுமென்றும், அவைகள் தத்தமக்குரிய பல்வேறுபலன்களைக்கொடுக்குமென்றும் முடிவில் ஞானத்தில் ஞானமாகியஉண்மைஞானந்தான் திருவடியிற்கலந்துவாழும் உண்மைச்சாயுச்சியத்தைக் கொடுக்குமென்றும் அவற்றின்உண்மை உணரப்படுமென்க.

மேற் சரியைகிரியா யோகங்களைச்செய்தோர் அவற்றால் ஞானம்பெறுவதெப்படி? யென்பாரைநோக்கி அதனைவிளக்கி ஏதுவை வலியுறுத்தும் உதாரணம்.

தவஞ்செய்தா ரென்றுந் தவலோகஞ் சார்ந்து
பவஞ்செய்து பற்றறுப்பா ராகத்—தவஞ்செய்த
நற்சாரில் வந்துதித்து ஞானத்தை நண்ணுதலைக்
கற்றோர்சூழ் சொல்லுமாங் கண்டு.

இ—ள். சரியைகிரியாயோகங்களைச்செய்தவர்கள், ஒவ்வோர்காலங்களில் அழிந்துபோகும் சுவர்க்காதிபதங்கள்போலாகாத சிவசாலோக சிவசாமீப சிவசாரூபங்களையடைந்து அவ்வின்பங்களை அநுபவித்தபின் அவர்கள்முன்னுடம்பு இறக்கும்போது கர்மசேஷமிருந்தால் அதனால்வரும்விடயப்பற்றினைமீண்டும் பிறந்து அநுபவித்துநீக்கிக்கொள்ளும்பொருட்டுப்பூமியில் சரியாதிவிசேஷதவஞ்செய்தற்குரிய உயர்குலத்தில்வந்துதித்து அப்பற்றுத்தவக்குறையால்மேலும்முறுகிவிளையாமல்வேரறக்களைந்து உண்மைஞானத்தையடைவர். இறக்கும்போது அப்பற்றுமுற்றுமற்றுந் திருவருளையே பற்றிச்செல்வோர் அச்சிவசாலோகாதி பதங்களி

விருந்தபடியே சிவஞானம்கைவரப்பெற்றுத் திருவடியிற் கலந்து வாழ்வர். இதனை வீட்டுநூலுணர்ந்த நுண்ணறிவுடையார் உண்மைகண்டுகூறுவரென்பதாம்.

இதனை, "சனியோகக்கிரியா சரியையினின்றோ ருனமிலா முத்திபதம் பெற்றுலகமெல்லா—மொடுங்கும்போதரன்மு னிலா தொழிலினுற்பவித்து—ஞானநெறிபடைந்தடைவர் சிவனையங்கு நாதனை முன்னிற்கினனுருவர் நற்றுளே, என்னுஞ் சித்தியாராலுங்காண்க.

பிறர், யாகாதிகள்செய்தல் பஞ்சாக்கினிமத்தியினிற்றல் முதலியவற்றாற் சரீராதிகளை வருத்திவருகிறதவங்களெல்லாம் பிறருக்குப் பெருந்தவம்போலக் காணப்படினும் அவ்வப்பயன்களை அனுபவித்துமுடிந்த அளவில் ஒழிந்துபோவனவன்றித் தொடர்ந்துநிற்பனவல்ல என்பதனை, "ஸ்வர்க்க காமோயஜேத்" என்றவேதவசனமுதலியன விளக்கும். (இ—ள். சுவர்க்கத்தை விரும்பினவன் (சோதிஷ்டாதி) யாகங்களைச்செய்க என்பதாம்.) இச்சுவர்க்காதிபதவிகள் அசுராதியராற் பற்பலமுறை பெருந்துன்புற்று வருந்துநிலையனவே என்பது புராணாதிகளால் விளக்கமாம்.

"தான மியாகந் தீர்த்தமாச் சிரமந்தவங்கள் சாந்தி விரதங் கன்ம போகங்கள் சரித்தோ—ரீனமிலாச்சுவர்க்கம்பெற்றிமைப் பளவின் மீள்வர்" என்றசித்தியாரும் விளக்கும்.

"நற்சார்பில்வந்துதித்து ஞானத்தைநண்ணுதல்" என்ற அருத்தாபத்தியால் இழிகுலத்தோர் உண்மைஞானத்துக்குரியரல்லரென்பது பெறப்பட்டது.

மேற்கூறிய யாகாதிகள் அற்பப் பயனாகியசுவர்க்காதி இன்பந்தந்து ஒழிந்துபோய்விடுமென்னுமுண்மைநோக்கி அவற்றில் வெறுப்படையாமல், மேலுமேலும் அவற்றைச்செய்கின்றவர்கள் அந்த யாகாதிகளும் மற்றைத் தீவினைகள்போலச் சிவஞானம் நிகழவிடாமற்றடைப்படுத்தலால் அந்நல்வினை தீவினை இரண்டும் தடைசெய்வதில் பொன்விலங்கும் இருப்புவிலங்கும் போலத் தம்முளொத்தனவே யென்பதை யுணர்வாராக.

பாட்டாசாரியன், சரியாதி தவங்களே தத்துவஞானத்தைத் தருமெனவற்புறுத்துவதென்னை? வேதத்துட்கூறும் யாகாதிகளுந்தருமென்பதை நோக்கி அதனைவலியுறுத்தும் உதாரணம்.

பசித்துண்டு பின்னும் பசிப்பானை யொக்கு
மிசைத்து வருவினையி லின்பம்—இசைத்த
விருவினை யொப்பி லிறப்பி றவத்தான்
மருவுவனு ஞானத்தை வந்து.

இ—ள். ஒருநல்வினையைச் செய்யத்தொடங்கினாலே ஆராயும் போதே அதன்பயனும் அது அனுபவிக்கப்பட்டொழிபும் எல்லையுமுடன்கூறிக்கொண்டேவருகின்றயாகாதிசாமானிய புண்ணியவினையால் வருமின்பம், பசித்துண்டவன் அப்பொழுது இன்புறினும் பின்னும்பசித்துன்ப முறுவானன்றிவேறில்லை ஆதலால் அவன் அப்பொழுதுற்ற இன்பத்தையேஒக்கும். அவ்வாறுதம் பலனைக்கொடுத்து ஒழிந்துபோகின்ற யாகாதிபுண்ணியவினைகள் அம்மட்டிலுமன்றித்தீவினைபோல ஞானம்நிகழவிடாமல் தடுத்தலையுஞ்செய்யும், அது ஒருவனை இருப்புவிலங்கேயன்றிப்பொன்விலங்கும் தடைப்படுத்தல்போலாம். ஆதலால் இப்பொன்விலங்கொத்த யாகாதிநல்வினைகளும் இருப்புவிலங்கொத்த மற்றைத் தீவினைகளும்போல அனுபவ மாத்திரையினொழிந்துபோதலின்றி, மேலுமேலுமுறுகி வளர்வனவாகிய சரியாதிதவ விசேடத்தால் அவ்விருவினைகளின் ஒப்பு நேர்ந்தபோது அத்தவமுதிர்ச்சியால் சற்குருவைத்தேடியடைந்துஉண்மைஞானத்தைப்பெறுவனென்பதாம்.

பலன்முடிவுசொல்லிக்கொண்டுவரும்யாகாதிகளில் வருமின்பம், "பசித்துண்டு பின்னும் பசிப்பானை ஒக்கும்"என்றதனால் யாகாதிகள்போல அனுபவித்த அளவிலொழியாது வளரும் சரியாதிதவங்களாலடையப்பெறும் ஞானம் பசித்துண்டு பின்னும் பசித்தலில்லாதஅமுத உண்டியால்வரும்பயனை ஒக்குமென்பதும் விளக்கமாம். ஆகவே அவ்வமுதஉண்டி நரைதிரைமூப்பின்றிநிலை பெறுதலாகிய பெரும்பயனைத் தருவதுடன் பசி நீக்கமாகிய (இடையில்வரும்) அவாந்தரப்பலனையும் தருதல்போல அழிவில்லாத சரியாதிதவம் உண்மைஞானத்தைத்தருவதுடன் சாலோ

காதி பதமுத்தியாகிய (இடையில்வரும்) அவாந்தரப்பலனையும் தருமென்பது தெளிவாமென்க.

## இரண்டாமதிகரணம்

சாங்கியர் தார்க்கிகர்முதலியோர் நம்மவரிலொருவராங் கலைஞானங்களையுணர்த்திய ஆசிரியரே சிவஞானத்தையும் உணர்த்துவரென்பதை நோக்கிச் சூத்திரத்தின்இரண்டாம்பாகத்தைப் பதம்பிரித்துரைக்கும் மேற்கோள்.

இனி, இவ்வான்மாக்களுக்குத் தமதுமுதறானேகுருவுமாய் உணர்ந்து மென்றது.

இ—ள். சரீரத்துள்ளிருக்கும் ஆன்மாவைப் பற்றியமல நோயை அவ்வான்மாவினுள்ளிருக்கும் அந்தரியாமியாகிய சிவபிரான் அறிந்து சிவஞானமருந்தால் மாற்றினலன்றி "அகத்து றுநோய்க் குள்ளினா ரன்றியதனைச்—சகத்தவருங் காண்பரோ தான்" என்றுதிருவருட்பயன்கூறியபடிபுறத்தேநிற்கும் சகத்தவரால்அந்நோய் இன்னதென்றுகண்டுஅம்மருந்துதவிமாற்றமுடியாதாதலால், சரியாதிமூன்றும்முற்றுப்பெற்றுஅதனால்மலபரிபாக சத்திநிபாதவிளக்கம்வாய்ந்து சிவஞானத்தைஅவாவுமுயிர்க்கு, இதுவரை உள்நின்றுஉணர்த்திவந்தசிவபிரானே, அப்பக்குவந் தெரிந்துகுருமூர்த்தமாயெழுந்தருளிவந்து அதனை அறிவித்தருளுவனென்பதாம்.

அழிவில்லாத அருள்வடிவனாகிய முதல்வன் அழிவுள்ள மாயா சரீரமாகிய குருவடிவங்கொள்ளான்; கொள்ளின் எம்மவரில் ஒருவனாய்முடியுமாதலால், அக்குருவடிவை இடமாக்கொண்டுநின்றுணர்த்துவனென்றுபொதுவகையான் அதிஷ்டானபக்கங் கூறுவாரைநோக்கிச் சிறப்புவகையான் ஆவேசபக்கமுணர்த்திமேற்கோளை வலியுறுத்தும் ஏது.

அவன், அந்நியமின்றிச் சைதன்யசொரூபியாய்நிற்றலான்:

இ—ள். சிவபிரான் சரியாதிகள்செய்துமுற்றுப்பெற்ற பக்குவான்மாவுக்குணர்த்தவரும் ஞானகுருவடிவம் அழிவுள்ளமாயா சரீரமன்று, நீர்கூறியபடி குருவடிவை இடமாக்கொண்டுணர்த்துவ

னென்று பொதுவாக்கொண்டால், அங்கு முதல்வன் பாலின் நெய்போல மறைந்து வேறுய்நிற்பனுதலால், அது எல்லாஇடங்களிலுந்தங்கிநிற்கும். பொதுவகையான அதிஷ்டானபக்கமாய் மற்றைச்சரியாதி குரவர்களிடத்துஞ்சென்று இங்குணர்த்தவந்ததுசரியைகிரியாயோகமுடிவிற்கூறும்; ஞானமேயன்றதற்குவிரோதமாம் ஆதலால், அப்படிஇன்றிச் சிவபிரான் மலமுற்றுநீங்கிச் சிவமாய்விளங்குங் குருவினது சுத்தான்ம சைதன்னியமே தனக்குத் திருமேனியாகக்கொண்டு தயிரினிடத்துள்ளநெய் மறைந்துவேறுபடாமல் அத் தயிரேயாய்விளங்குதல்போலச் சிறப்புவகையான ✻ஆவேசபக்ஷமாய் விளங்கிநிற்பனுதலால் அச்சிவபிரான் தானே குருவாய்வந்துணர்த்துவனென மேற்கொண்டதென்பதாம்.

முதல்வன் குருவினது சுத்தான்மாவில் ஆவேசபக்ஷமாய் விளங்கி நிற்றலால் சிவமேஆகிய அவ்வான்மாதங்கியிருக்கு முடம்பும் அருண்மயமேயாமென்க.

ஒவ்வோரிடங்களிற்குருவாய்வந்துணர்த்துதலின்றியும்ஞானம்விளங்குவதென்னே? யென்பாரைநோக்கி அதனை விளக்கி வலிபுறுத்தும்உதாரணம்.

மெய்ஞ்ஞானந் தானே விளையும்விஞ் ஞானகலர்க்
கஞ்ஞான வச்சகலர்க் கக்குருவாய்—மெய்ஞ்ஞானம்
பின்னுணர்த்து மன்றிப் பிரளயா கலருக்கு
முன்னுணர்த்துந் தான்குருவாய் முன்.

இ—ள். ஆன்மாக்கள் ஆணவமலமாத்திர முள்ளவிஞ்ஞானகலர் மலமுங்கன்மமு முள்ளபிரளயாகலர், மலங்கன்மம்மாயை மூன்று முள்ள சகலரென மூன்றுவகையினராதலால், முதல்வன் அவர

---

✻ஆவேசபக்ஷம்--பேய்பிடியுண்டவன் அப்பேயாய் விளங்குதல் போலச் சிவமாந்தன்மைபெற்ற சுத்தான்மாவிடத்துச் சிவன் விளங்கிநிற்றலாம். இது சிறப்புவகையான அதிஷ்டானபக்ஷமாம். அதிஷ்டானபக்ஷமென்பது-- இடமாக்கொண்டு நிற்றலாம். அம்மறைந்துநிற்பதாகிய பொதுவும், விளங்கிநிற்பதாகிய சிறப்பு மன்றிரண்டுவிதமாம்.

வர் பக்குவத்துக்குத்தக்கபடிவேறுவேறுவிதமாயுணர்த்துவன். அவைவிஞ்ஞானகலர்க்கு உள்ளேநின்றவாறேதத்துவஞானத்தை விளைவிப்பதாகிய தன்மையும், பிரளயாகலர்க்கு முக்கண்ணும் நாற்றோளுங்கறைமிடறுமுதலிய அங்கங்களையுடைய தன்இயற்கைவடிவே குருவடிவாய்க்காட்டிமுன்னின்றுபதேசித்துணர்த்துவதாகிய முன்னிலையும், சகலர்க்குஅவர்வடிவுபோலும் வடிவுடைய குருவாகிப் பின்னின்றுணர்த்துவதாகிய படர்க்கையுமாம். இவ்வாறுமுதல்வன் மூவிதமாயுணர்த்தும் வேறுபாட்டையறிவாயாக என்பதாம்.

உள்நின்றுணர்த்துதலை நோக்காமையாற் குருவாய்வந்துணர்த்துதலின்றியும், ஞானம்விளங்குவதெதன்னென்று நீகூறிய தன்றிவேறில்லை என்க.

இம்மூன்றில் தன்மைமுன்னிலையிரண்டும்நிராதாரம்; படர்க்கைசாதாரமென்றறிக.

இம்மூவகையினர்க்கும் ஒரேபடித்தாயுணர்த்தாமல் மூவிதமாயுணர்த்துவதெதற்கென்பாரைநோக்கிக்காரணங்காட்டி அதனைவலியுறுத்தும் உதாரணம்.

அறிவிக்க வன்றி யறியா வுளங்கள்
செறியுமா முன்பின் குறைக—ணெறியிற்
குறையுடைய சொற்கொள்ளார் கொள்பவத்தின் வீடெண்
குறைவில்சகன் சூழ்கொள் பவர்க்கு.

இ—ள், உயிரெல்லாம் தம் பக்குவங்கட்கேற்றபடி முறையாக முதல்வனறிவிக்க அறியுமன்றி ஒன்றுபோலறியுமியல்பின வல்ல; ஆதலால் அவ்வறிவாற் குறைவில்லாத இயற்கையறிவினராகிய சகக்கடவுளது உபதேசத்தாலறியுமியல்பினராகிய பிரளயாகலர்சகலருக்குஅறிவித்தாலறிதலாகிய குறைகள்(இன்றியமையாமை)முன்னிலை பின்னிலைகளின்நிகழும். குறைவினையுடையஉபதேசமொழிகொண்டுணரவேண்டாத விஞ்ஞானகலருக்கு உண்ணின்றுணர்த்தும் முதல்வனாற்கொள்ளப்படும் (பவத்தின்) தன்னுண்மைமாத்திரையே வீடுறுதற்குரிய ஞானமுண்டாமென்றறிவாயாக என்பதாம்.

தன்மைமுன்னிலையின் விஞ்ஞானகலர் பிரளயாகலர்க்குண ர்த்தலேயுண்மையாம். குருவின் ஆன்மாவில்நின்று சகலர்க்குண ர்த்தலை முதல்வனே குருவாய்வந்துணர்த்துவானென்றது உப சாரமேயென்பாரைநோக்கி அதுவுமுண்மையாதலை உவமையால் வலியுறுத்தும் உதாரணம்,

இல்லா முலைப்பாலுங் கண்ணீரு மேந்திழைபா
னல்லா யுளவாமா னீர்நிழல்போ—லில்லா
வருவாகி நின்றானை யாரறிவார் தானே
யுருவாகித் தோன்றானே லுற்று.

இ—ள். நீரினுள்ளே மீன்முதலியன சஞ்சரித்தற்கிடங்கொ டுத்துள்ள வெளியாகிய நிழல்அந்நீரினிடத்து வேறின்றிக்கலந்து வெளிப்படத்தோன்றாமல் நிற்றல்போல, ஆன்மாக்களிடத்து வேறின்றிக்கலந்து வெளிப்படத் தோன்றாமல் அருவாகிநிற்கும் முதல்வன் மாதாவுக்குத் தன்பிள்ளையிடத்துள்ள அருவாகியஅன் பைப் பிறரறியக்காட்டுகின்ற அவ்வன்புருவாகிய முலைப்பாலுங் கண்ணீரும், அத்தாயின் சரீரத்துள்ளே வேறின்றியெங்குங்கலந் திருந்தும் அப்பிள்ளையைக் கண்டபோது வெளிப்பட்டும் காணா தபோது மறைந்தும் நிற்றல்போல, அவ்வான்மாக்களிடத்துப் பக்குவங்கண்டபோது வெளிப்பட்டுநின்றருளுவன். காணாத போது மறைந்துநிற்பன். அவ்வாறு தானே வெளிப்பட்டுவந் தருளானாகில் வேறுயார் அவனைத்தாமாக அறியவல்லார்? ஒரு வருமில்லையாதலால் அவனே குருவாய்வந்துணர்த்துவானென்ற தே தெளிவென்பதாம்.

முலைப்பாலுங் கண்ணீரும் அன்புண்மை விளக்குதலை

திருக்களிற்றுப்படியார்.

சுரந்த திருமுலைக்கே துய்ய சிவஞானஞ்
சுரந்துண்டார் பிள்ளையெனச் சொல்லச்—சுரந்த
தனமுடையா டென்பாண்டி மாதேவி தாழ்ந்த
மனமுடையா ளன்பிருந்த வாறு. என்றதனாலும்,

திருக்குறள்.

அன்பிற்கு முண்டோ வடைக்குந்தா ழார்வலர்

புன்கணீர் பூச றரும். என்றதனாலுங் காண்க.

இனிச், சிவசங்கிராந்தவாதசைவர் விடயஞானத்தை விளக்கும் ஐம்பொறிகளே தத்துவஞானத்தையும் விளக்கும், முதல்வன் குருவாய்வருதல் வேண்டாமென்பது நோக்கிச் சூத்திரத்தின் மூன்றும்பாகத்தைப் பதம்பிரித்துரைக்கும் மேற்கோள்.

இனி, இவ்வான்மாக்கள் ஐம்புணர்வுகளான் மயங்கித்தம்மை புணரா வென்றது.

இ—ள். உணர்த்த உணரும்இயல்புடைய உயிர்கள் ஐம்பொறிகளால் மயங்கித்தமதுசொரூபத்தை அறியாவென்பதாம்.

அறிவைவிளக்கும் கருவியால் மயக்கமுறுதல்எப்படி? என்பாரைநோக்கி மேற்கோளைச்சாதிக்கும் ஏது.

அவைதாம் பளிங்கிலிட்டவன்னம்போற் காட்டிற்றைக்காட்டிநிற்றலான்.

இ—ள். பளிங்கில்வைத்த பலநிறங்கள், அப் பளிங்கொளியைக் கீழ்ப்படுத்தித் தம்மியல்பையே விளக்குதல்போல, ஆன்மாவினிடத்துக் கருவியாயுள்ள ஐம்பொறிகள் அவ்வான்மசொரூபத்தைக் கீழ்ப்படுத்தித் தம்விடயங்களையே காட்டிநிற்கும். அதுவும்ஒன்று மற்றொன்றைக் காட்டமாட்டாது. தத்தமக்குரிய ஒவ்வொன்றையேகாட்டிநிற்குமாதலால் அப்பொறிகள் தத்துவஞானத்தைவிளக்கா. அவற்றால் மயங்கிநிற்கும் ஆன்மாக்களும் தமது சொரூபத்தை அறியாவாம். ஆகவே முதல்வன்குருவாய்வந்துணர்த்தவேண்டுமென்றதே தெளிவென்பதாம்.

அவ்வாறுகாட்டியதையேகாட்டிநிற்குமேல் அவற்றால் மயங்கிநிற்கும் ஆன்மா அப்பொறிகளுடனிருக்கும்போது முதல்வன் குருவாய்வந்துணர்த்தினும் உணரமாட்டா கருவிகளை நீங்கிநிற்கினும் அது அறிவின்றிக்கிடக்குங்கேவலாவத்தையாக முடியும் போதுமென்பாரைநோக்கி உணர்தற்குபாயங்கூறி அதனைவலியுறுத்தும் உதாரணம்.

பன்னிறங் காட்டும் படிகம்போலிந்திரியந்
தன்னிறமே காட்டுந் தகைநினைந்து—புன்னிறத்து

பொய்ப்புலனை வேறுணர்ந்து பொய்பொய்யாமெய்கண்டா
மெய்ப்பொருட்குத் தைவமாம் வேறு. [ன்

இ—ள். தன்னில்வைக்கப்பட்ட பலநிறங்களினியல்பையே தன்னிடத்துக்காட்டிப் பொதுவினிற்கும்பளிங்குபோல, ஆன்மா தன்னொடுசாரப்பட்டஇந்திரியங்களினியல்பையே சார்ந்ததன்வண்ணமாய்த் தன்னிடத்து விளக்கிநிற்குந் தனது பொதுவியல்பை முன்னர் ஆராய்ந்தறிந்து அந்நிறங்கள்படிகத்துக்குவேறென்றறிதல்போல, அவ்வான்மாபின்பு அப்பொறிகளின்மயங்கிநிற்கும் பொதுவியல்பினீங்கி அப்பொறிகளைத்தன்னின்வே றெனத்தெளிந்து அப்பொதுவியல்பு பொய்யாயொழியத் தனது சிறப்பியல்பினுண்மையை அறிந்தானாகில், அவ்வறிவுதன்னிடத்தில் சிவசத்தியினியல்பை விளக்குமாதலால் அவ்வான்மா அச்சிவசத்துக்கு அடிமையாய்விடுவனென்பதாம்.

## நான்காமதிகரணம்

பேதவாதசைவர்முதலியோர்,பொறிகளுடன்மயங்கிநிற்கும் பொதுவியல்பினீங்கித் தனது சிறப்பியல்புகண்ட ஆன்மாவுக்கு அக் காண்டலேபோதியதாம். கருவிகளைவிட்டுத் தனித்துநிற்கும் போதொருமுயற்சியும் நிகழாதாதலால் அப்போது அவ்வான்மா திருவடியை அடைந்து சிவசத்துக்குஅடிமையாதல்செல்லாதென் பதுநோக்கிச்சூத்திரத்தின் நான்காம்பாகத்தைப் பதம்பிரித்துரைக்கும்மேற்கோள்.

இனி, இவ்வான்மா தன்னை இந்திரியத்தின் வேறுவான்காணவே தமது முதல்வன்சீபாதத்தையணையுமென்றது.

இ—ள்,பொறிகளான்மயங்கித்தன்னையறியாதென்ற ஆன்மா சித்தாய் வியாபகமாயுள்ள தன்னியல்பை, சடமாய் ஏகதேசமாயுள்ள பொறிகளின்வேறென்றறியும் வியாபகவறிவிற்கு, அவ்வாறுவேறென்றுகழிக்கப்பட்ட இந்திரியங்களால் ஆகக்கூடியது ஒன்றுமில்லையாதலால் சற்குருவால்வேறென்றுகண்ட அளவிலே வேறுகாரணம்வேண்டாமல் முதல்வனது திருவடியை அணையுமென்பதாம்.

# எட்டாஞ்சூத்திரம் நான்காமதிகரணம்

பொறிகளினீங்கியபோது கேவலத்திலுறுதலுமுண்டாதலால் அதனை நீக்குதற்கே வேறாக என்றுமாத்திரங்கூறாது "வேறாவான் காணவே" என்றருளியது. திருவடி அணைதற்கு அவ்வாறு காண்டலே போதியதென்பதைத் தேற்றேகாரத்தால் விளக்கியது காண்க.

அவ்வாறு காண்டலே போதுமென்பதெப்படி? யென்பாரை நோக்கி உவமையின் வைத்து மேற்கோளைச் சாதிக்குமேது.

ஊசல் கயிறற்றாற் றாய் தரையாந் துணையான்.

இ—ள். ஒருவனிருந்தாடும் ஊசல்கயிறற்றால் அவனுக்கு உற்றுழி உதவுந்தாய்போல ஆதாரமாய்த் தாங்கி நிற்பது தரையேயன்றி வேறில்லை என்னும் ஒப்புமையால், ஆன்மா இந்திரியங்களினீங்கித் தன்னை அச்சடங்களின் வேறாகிய வியாபகசித்தெனக் கண்டவளவிலேயே தமது முதல்வனது திருவடி அணையுமெனமேற்கொண்டதென்பதாம்.

ஆன்மாவியாபகப்பொருளாதலால் அது, கருவிகளினீங்கி நிற்குமெனில் வியாபகத்துக்குப் பழுதாம். ஆதலால் அவ்வான்மா தன்னை வியாபகசித்தென்றும் அக்கருவிகளைச் சடமென்றுங் காணும் ஞானவிசேடமே நீக்கமாம். ஆகவே அதற்கு ஊசல் கயிறறுதல் உவமையாயிற்று.

கருவிகளினீங்கினபின் வேறாய் நில்லாமற் சிவத்தை யணையுமானால் கருவிநீங்கிக் கேவலாவஸ்தையையடைந்த உயிர்கள் மீண்டு வருதல்போல, இவ்வான்மாவும் மீண்டுவரும்போலுமென்பாரை நோக்கி மீண்டுவருவதின்றெனக்கூறி உவமைமுகத்தால் விளக்கும் உதாரணம்.

சிறைசெய்ய நின்ற செழும்புனலி னுள்ளஞ்
சிறைசெய் புலனுணர்விற் றீர்ந்து—சிறைவிட்
டலைகடலிற் சென்றடங்கு மாறுபோன் மீளா
தலைவிலரன் பாதத்தை யுற்று.

இ—ள். அணைபோட்டுத் தடைசெய்யப்பட்டு அதனுள் அடங்கிக்கிடந்த ஆற்றுநீர்போல் கருவிகளானாய பாசஞானந்தனதுவியா

பகத்தைத்தடைசெய்ய அதனுள்ஏகதேசமாயடங்கித் தடையுண்டுநின்ற உயிர், அணையுடைந்தபோது மிகவிரைந்து கடலையடைந்தடங்கி அந்நீரேயாய் மீளாது நிற்கும்ஆறுபோல், அப்பாசத்தடை நீங்கியபோது அழிவில்லாதசிவனடியை அடைந்துஅத்திருவடிநிறைவி லடங்கி அந்நிறைவேயாய் மீளாதிருக்குமென்பதாம்.

மலசத்திக்கு அழிவுண்மையால் மலத்தைச்சார்ந்த ஆன்மா அதனைவிட்டு மீளுமென்பதும், சிவசத்திக்கு அழிவின்மையால் சிவத்தைச்சார்ந்தஆன்மாமீளாதென்பதுமவிளங்க "உலைவிலரன் பாத" மென்றார்.

சிவாத்துவிதசைவர், மீளாதென்றுகூறவேண்டாம்எல்லாஞ் சிவமாக்கண்டவர்கள் மீண்டாலென்மீளாவிட்டாலென்னெனபது நோக்கி அதுவிடையன்றெனக்கூறி மீளாமையை மீட்டும்வலியுறுத்தும்உதாரணம்.

எவ்வுருவுந் தானென்னி லெய்துவா ரில்லைதா
னிவ்வுருவின் வேறே லிறையல்ல—னெவ்வுருவுங்
கண்போ லவயவங்கள் காணுவக கண்ணில்லார்
கண்பேறே காணக் கழல்.

இ—ள். திருவடியடைந்தமையால் சிவத்தையே அறியும் ஆன்மஅறிவு சிவமாதலேஅன்றி விடயங்களை அறியுமபாச அறிவுஞ் சிவமேயாமாயின்,அப்பாசஞானத்தைக்காட்டிலும்பதிஞானத்துக்குவிசேடமின்மையால்புலன்வழிசசெல்லும்சகலநிலையைவிட்டுத் திருவடியடைய முயலவேண்டாம். ஆதலால் அதனைஅடைவார ஒருவருமில்லையாய்ப் "பாசத்தைப்பசுக்கள் விட்டுப்பதியினையடையமுத்தி" பசுக்கள்பாசத்தைநீங்கிபதியைஅடைவது முத்தியென்று கூறும்வேதசிவாகமங்கள் பொய்யாய்முடியும். அதுநோக்கி முதல்வன் பாசஅறிவுடனியைபின்றிவேறாய்நிற்பனெனில்? பாசஅறிவுக்குஅவனுதவிவேண்டியதில்லைஎன்பதுடன் அப்பாசத்துக்கு அவன்இறைவனல்லனெனமுடிகி அவனதுசர்வவியாபக முதன்மைக்கிழுக்காய் முடியும். ஆனுல் அதனியல்பென்னையோ வெனில்? ஆன்மஅறிவுசிவமாய் விளங்குதல்போல, அக்கருவிகளினறிவும் முதல்வன்கலப்பினுற் சிவமாயினும் இரண்டும்தம்

ருள் ஒப்பனவல்ல. ஆன்மா, ஐம்பொறிகளினுங்கலந்து நிற்பினும் அவற்றுள்ளே கண்ஒளியுள்ளதாதலால், தூரித்தபொருளையும் ஆன்மஅறிவுடன்சென்று வியாபித்தறிதலும் மெய்வாய்மூக்குச் செவி நான்கும் தம்மிடத்துவந்ததைமாத்திரம் ஏகதேசமாயறித லுமாகிய, வேற்றுமை காணப்படுதல்போல, முதல்வன் ஆன்மா வினும் பாசத்தினும் வியாபித்திருப்பினும், ஆன்மாவியாபித்தறி தலும் பாசம்ஏகதேசமாயறிதலுமுடையனவேயாம். கண்ணுக் குச்சென்றறியுமேன்மையுண்டென்பதை, மாசுபடர்ந்தகண் தூரித் தபொருளைக்காணமாட்டாது மாசுநீங்கியபின்பு காண்டலால் அறியலாம். அதுபோல உயிருக்கு வியாபித்தறியுமேன்மையுண் டென்பதை, வியாபக அறிவிழந்த பசுத்துவமுடையாரிடத்தறிய முடியாதாயினும் அவரது பசுத்துவநீங்கிய சிவத்துவப்பேற்றின் கண் அறியலாம். ஆகவே திருவடியடைந்து வியாபகஅறிவாய்விள குகின்றஆன்மாவின் கருவிகளுடன்கூடி ஏகதேசமாயறிந்துதானு ம்ஏகதேசமாகும்படி மீண்டுவாராதென்பதாம்.

ஆறு அணையுடைந்தவுடன் கடலிற்சென்றடங்குதல் மாத்தி ரமன்றி, "ஆற்றுலகைகடற்கேபாய்ந்தநீர் அவ்வாற்றான்" மறித்த லும் (திரும்புதலும்) உண்டாம். அதுபோல் திருவடிஅடைந்த ஆன்மா அத்திருவடியிலடங்குதலன்றி ஒருசமயந் திரும்பினும் பொறியாதிகளைச் சார்தலுமுண்டாதலால், ஒருகாலத்தும் மீளா தென்றல்பொருந்தாதென்பாரைநோக்கி மீளுதற்குக்காரணமும் அதனைநீங்குமுபாயமுங்கூறிவலியுறுத்தும் உதாரணம்.

ஐம்பொறியி னல்லையெனுமந்த தாசிவனை
ஐம்பொறியை விட்டங் கணைசகல—னைம்பொறியி
னீங்கானீர்ப் பாசிபோ னீங்குமலகன்மம்வரி
னீங்கானை நீங்கு நினைந்து.

இ—ள். ஐம்பொறிகள்போல ஏகதேச அறிவுடையையல்லையெ ன்றுபதேசிக்கப்பெறுஞ் சித்தாந்தமகாவாக்கியத்தை யுடைய மாணவனே? அணைஉடைந்து கடலிற்சென்றடங்கும் ஆறு போலெனமேற்கூறியபடி, துக்கமயமாகியஉலகப்பொருளை யறி யும்ஏகதேசஅறிவினீங்கி வியாபக அறிவினுைய் ஆனந்தமயமா

கிய திருவடிஅடைந்தின்புறுகின்ற ஆன்மா, அப்பொறிகளால் அத்திருவடியைவிட்டுநீங்குவதில்லை கல்லெறிந்தபோது நீங்கிய நீர்ப்பாசிபின்புமூடிக்கொள்ளுதல்போலத், திருவடியணைந்தபோது விட்டுநீங்கியமலகன்மமாயைகள்முந்தியவாசனைவசத்தால்வருகின்ற மறதிகாரணமாக அவ்வான்மாவைஒருவாறுவந்துகூடுமாயின், அப்போது அவ்வான்மா அப்பொறிவழியின் மீளாமல் அவ்வாசனைதாக்கும்போதுந் தன்னைவிட்டுநீங்காதுபகரித்துநிற்கும்முதல்வனை இனிக்கூறப்படும்பஞ்சாக்ஷரசெபமுதலிய உபாயங்களினின்று சிந்தித்துஅவைகளைநீக்கிக்கொள்ளு மாதலால், மூன்மீளாதென்றதேதுணிபென்பதாம்.

"மலகன்மம்வரின்" என்றதனால் பூர்வவாசனைவந்தாற்றான் வருமென்பதும் அஃதில்லையேல் வாராதென்பதும் விளக்கமாம்.

இம்மூன்றுதாரணங்களும், வியாபக அறிவாகியசிவஞானம் பெற்ற ஆன்மா, ஏகதேச அறிவாகிய பாசஞானத்தில் மீளுவதில்லை யென்பதும், மீளுதல்குற்றமென்பதும், ஒருவாறு வாசனைவசத்தால் மீளவருமானால் பஞ்சாக்ஷரசெபமுறையில் மீளாதபடி செய்துகொள்ளற்பாலதென்பதுங்கூறி, ஏதுவில் "தாய்தரையே" என்றதேற்றேகாரத்தைவலியுறுத்தி மேற்கோளில் "பாதத்தை" அணையுமென்றஒரேபொருளில் வந்தனவாகாண்க.

இச்சூத்திரம், முன்சூத்திரத்தில் சத்தும் அசத்துமாகிய இருதிறனறிவுளதென்ற ஆன்மா, ஐம்புலவேடரைச்சார்ந்துதன்னையுந்தலைவனையும் அறியாதுமயங்கிநிற்றல்நோக்கி முதல்வனே குருவாய்வந்துஉபதேசிக்குஞ் சிவஞானத்தால் ஐம்புலவேடரினீங்கிமுதல்வன்திருவடியைஅடையுமென்பதும், அச்சிவஞான விளக்கத்துக்குச் சரியை கிரியாயோகங்களாகிய தவங்களேகாரணமென்பதும், யாகமுதலியதவங்கள் சுவர்க்கமுதலியஅற்பஇன்பங்களைத்தந்து அம்மட்டில் ஒழிந்துவிடுமென்பதும், மேற்கூறிய உ தசகுரு நம்மவரிலொருவரோ யென்பாரைமறுத்து.

"அகத்துறுநோய்க்குள்ளினா னன்றியதனைச்
சகத்தவருங் காண்பாரோ" தான் என்றபடி;

புறத்தவராகிய நம்மவரிலொருவரால் உயிரினகத்துள்ள மல நோயின்பக்குவமறிந்து நீக்கமுடியாதாகலால், அவ்வுயிர்களுட் கலந்துவியாபித்திருக்கும்முதல்வனே குருவாய்வந்துணர்த்தியந் நோய்நீக்கியருள்வனென்பதும், உயிர்கள் மூவகையராதலால் தன்மைமுன்னிலை படர்க்கை யெனமூவகையாய்நின் றுணர்த்தியருள்வனென்பதும் அவ்வுயிர்கள் ஒருமலர் இருமலர் மும்மலராய்நிற்றலே அதற்குக்காரணமென்பதும், விடயங்களையறிவிக்கும்பொறிகளே முதல்வனையுமுணர்த்தும் குருவேண்டாமென்பாரைமறுத்து, ஐம்பொறிகள் மயக்கஞ்செய்யுமன்றி முதல்வனையுணர்த்தாவென்பதும், பொறிகளினீக்கம் அறிவற்றகேவலமாதலால் அப்பொறியுணர்வைப்பொய்யாகக்காணவேண்டுமென்பதும், அவ்வாறுகாண்டலேபோதும் அவ்வுயிர்முதல்வனையடையுமென்பதில்லையென்பாரைமறுத்து, பொறியுணர்வாகிய பாசஞானம் பொய்யெனக்கண்டவுடனே சிவஞானச்செயலாற் றிருவடியடையுமென்பதும், அடைந்தபின்பொறிவழியில் வாராதென்பதும், வருதல் பழுதென்பதும், ஒருவாறுபழையவாசனையால் மீளவரின் முதல்வனைநினைந்து அதனைநீக்கிவிடுகவென்பதும் விளக்குதல் காண்க.

## ஒன்பதாஞ்சூத்திரம்

சாதனவியல்.

ஊனக்கண் பாசமுணராப் பதியை
ஞானக்கண்ணினிற் சிந்தை நாடி
யுராத்துனைத் தேர்த்தெனப் பாச மொருவத்
தண்ணிழ லாம்பதி விதியெண் ணுமஞ்செழுத்தே.

கருத்துரை. ஆன்மசுத்திபண்ணுமாறுணர்த்துதனுதலிற்று.

இ—ள். ஆன்மாமுதல்வன் குருவுமாயுணர்த்தக்கேட்டு அதனைச்சிந்தித்துணருமுறைகூறி அச்சிந்தனையால் முன்ஐம்புலவேடரின்வளர்ந்த அசுத்தத்தைநீக்கித்தன்னைச்சுத்தப்படுத்துமுறைகூறுவதென்பதாம்.

கூ—ள். குறையுணர்வாகிய பசுஞானத்தாலும் பாசஞானத்தாலும் அறியமுடியாதபதியாகிய சிவபிரானை, அவனதுதிரு

வடிஞானத்தால் ஆன்மாதனது அறிவின்கண் ஆராய்ந்தறிக. அவ்வாறு அறியுந்திருவடிஞானத்தால் (௯௰௬) தத்துவங்களாகியபாசக்கூட்டங்கானல்நீர்போலக் கழிவதென்றறிந்து நீங்கினவுடனே அப்பதிஞானம்பிறவித்துன்பவெப்பொழித்தற்குரியகுளிர்நிழலாய்வெளிப்பட்டுவிளங்கும். அவ்வாறு பாசம்நீங்கிப்பதிஞானம்பெற்றுச்சிவனைக்கண்டகாட்சிநழுவாதிருக்கும்பொருட்டுப்பாசநீங்கிப்பதியைஅடைதலாகிய பொருளைத்தருகின்ற திருவைந்தெழுத்து அவ்வான்மாவினால் அவ்விதிப்படிஅறிந்து தியான முறையிற் சுத்தமானசமாகச் செபிக்கப்படுமென்பதாம்.

இச்சூத்திரம், "ஊனக்கண்பாசமுணராப்பதியைஞானக்கண்ணினிற் சிந்தைநாடி" எனவும், "உராத்துனைத்தேர்த்தெனப் பாசமொருவத்தண்ணிழலாம்பதி" எனவும், "விதிஎண்ணுமஞ்செழுத்தே" எனவும்மூன்றதிகரணமுள்ளது.

## முதலதிகரணம்

சிவசமவாதசைவர், முதல்வன்பாசஞானத்தாலறியப்படானாயினும் பசுஞானத்தாலறியப்படுவனென்றால் பழுதென்னை? என்பதைநோக்கிச் சூத்திரத்தின் முதற்பாகத்தைப் பதம்பிரித்துரைக்கும்மேற்கோள்.

ஈண்டு, அம்முதலைஞானக்கண்ணாலேகாண்கவென்றது.

இ—ள். பாசபசுஞானங்களாலறியப்படாத முதல்வனைச்சிவஞானத்தாலே காண்க என்பதாம்.

அதற்குப்பிரமாணமென்னென்பாரைநோக்கிமேற்கோளைச்சாதிக்குமேது.

அவன், வாக்குமனாதீத கோசரமாய்நிற்றலான்.

இ—ள். அம்முதல்வன், பாசஞானபசுஞானங்கடந்து அதீதனாய்நின்று ஒற்றுமைப்பட்டுணரும்பதிஞானத்திற்கேவிளங்கிக்கோசரிப்பனாதலால்ஞானக்கண்ணாலேகாண்கவெனமேற்கொண்டதென்பதாம்.

பிருதிவிமுதல்(௯௰௬)தத்துவங்களாகியபாசத்தால் ஆன்மாவினிடத்துநிகழ்வதுபாசஞானம். நான்இதனை அறிவேன் செய்வேனெ

ன்றகங்கரித்தெழும்பும் பசுபோதமுனைப்பால்ஆன்மாவினிடத்து நிகழ்வது பசுஞானம், பதியருளால்ஆன்மாவினிடத்து நிகழ்வது பதிஞானமாம். இதனால் அறியப்படுமுதல்வன், உடனின்று அறிவிக்குமுபகாரத்தைமறந்து நானே அறிவேன்என்னும் பசுஞானத்தால் அறியப்படானென்றது தெளிவேயென்க.

பசுஞானம் பசுத்துவநீங்கியபோது பதிஞானத்தைஒக்குமாதலால் அதனால் முதல்வனையறியக்கூடுமென்பாரை நோக்கி ஏதுப்பொருளைவலியுறுத்தும்உதாரணம்.

நாடியோ வென்போ நரம்புசீக் கோழையோ
தேடி யெனையறியேன் றேர்ந்தவகை—நாடியரன்
றன்னாலே தன்னையுங் கண்டு தமைக்காணா
ரென்னா மெனவறிவா ரின்று.

இ—ள். நரம்பு எலும்புமுதலியவைகளுள்ளேநான்யார்? என்னைத்தேடியும் அறிகிலேனென்றுஆராய்கின்றதேர்ச்சியறிவில் இன்னதென்றுதெளிவிப்பதோர் அறிவுவேறுண்டென்று ஆராய்ந்து நோக்கி, அவ்வாறுநாடுமிடத்து விளங்கித்தோன்றும் பதிஞானத்தால், முதல்வனையும் அவனை விட்டுநீங்காமல் அவன்வியாபகத்துளடங்கி நிற்குந் தம்மையும்அறிவர். இவ்வாறு முதல்வனதருளால் அறிதலைசெய்யாதார் கருவிகள்முற்றும்நீங்கிய முத்திக்காலத்தில் வேறுஎத்தன்மையினரென்று தம்மை அறியவல்லவராவரென்பதாம்.

முற்பக்கத்துள்ள பொருளைக்கண்டகண்ணே? பிற்பக்கத்துப்பொருளையுந்திரும்பிக்காண்பதுபோல, முன்பு நான் யாரென்றுஆராய்ந்தஆன்மஅறிவே பின்பு தனனையுந்தலைவனையும் தெளிவாயறியுமென்பாரைநோக்கி, அங்ஙனம் அறியமாட்டாமையினைக்கிஅருளாலேயே அறியவேண்டுமென்றுஅதனை வலியுறுத்தும் உதாரணம்.

காட்டிய கண்ணே தனைக்காணா கண்ணுக்குக்
காட்டாய வுள்ளத்தைக் கண்காணா—காட்டிய
வுள்ளந் தனைக்காணா துள்ளத்தின் கண்ணாய
கள்வன்றா னுள்ளத்திற் காண்.

இ-ள். ஒருபொருளைக் கண்டகண் தன்னையும் தனக்குக்காட்டிநிற்கும் ஆன்மாவையும் அறியாதவாறுபோல, ஆன்மா தன்னையும் தன்னுள் மறைந்துநின்றுணர்த்தும் முதல்வனையும் அறியமாட்டாது. ஆயினும் கண்போல ஆன்மா சடமன்றாதலால் முதல்வன் அறிவிக்க அறியும். அவ்வாறு தான் அறியும்போதும் அத்தேர்ச்சி அறிவின்கண் உடனின்றுபகரிக்குங்கள்வன் அம்முதல்வனேயாதலால், அவனை அவ்வறிவில்வைத்தது ஆராய்ந்து தெளிவாயாக என்பதாம்.

உயிர் கண்ணுக்கு மறைந்துநின்றுகாட்டுதலால் அக்கண் தன்னையும் உயிரையும் அறியமாட்டாதவாறுபோல, முதல்வன் இதுவரை உயிர்க்கு மறைந்துநின்றுணர்த்தலால் அவ்வுயிர் தன்னையுமுதல்வனையும் அறியமாட்டாதாயிற்றென்னுங் குறிப்புக் கள்வனென்றதனுலுணரப்படும். படவே உளத்திற்காணவல்லார்க்கு முதல்வன் கள்ளமின்றி வெளிப்பட்டுணர்த்தலால், அவர்கள் தம்மையும் முதல்வனையுங்காண்டல்கூடுமென்பதாம் இக்கருத்துநோக்கியே

"கள்ளரோடில்ல முடையார் கலந்திடில்
வெள்ள வெளியாமென்றுந்தீபற—," என்றுசித்தாந்த முதற்சுருதி கூறியதென்க.

## இரண்டாமதிகரணம்

ஆனல் அம்முதல்வனையறிதற்குரிய பதிஞானம்வருவதெப்படி? எனனும அவாய்நிலைநீக்குமபடி. முதலதிகரணத்துக்குப் புறனடையாயெழுந்த இச்சூத்திரத்தின் இரண்டாம் பாகத்தைப் பதம்பிரித்துரைக்கும மேறகோள்.

இனி, அசத்தாயுள்ளவன்னபேதங்களை அசத்தென்றுகாணவுளதாய்நிற்பது ஞானசொரூபமென்றுணரற்பாற்று.

இ—ள். அசத்தாயுள்ள காரியப்பிரபஞ்சங்களை ஒன்றொன்று நோக்கி இவை நிலையுள்ளனவல்லவென்றுகழித்துச்சென்று விவேகித்து அறிந்தால் அப்போது அவைகள்போலக் கழிக்கப்படாமல் என்றுமுள்ளதாய் அக் கழிக்கப்படுபொருள்களொன்றையும் பற்றாமல் விளங்கிநிற்பது அச் சிவஞானசொரூபமென்றுணரற்பாலதென்பதாம்.

இச்சூத்திரத்தில், "பாசமொருவத் தண்ணிழலாம்பதி" என்றதொடரில் "பாசம்" என்றது, சத்தாயுள்ள ஆணவ கன்மமாயைகளையன்று, தோன்றியழியுந்தனுகரண புவனபோகங்களாகிய காரியப்பிரபஞ்சங்களையே என்பதுதோன்ற "அசத்தாயுள்ள" என்றும், "ஒருவ" என்றது நீங்கவென்பதன்று: நீங்குதல் ஆன்மவியாபகத்துக்குப்பழுதாதலால் அப் பிரபஞ்சத்தை அசத்தெனக்காணும் அறிவின்விசேடமே என்பதுதோன்ற அசத்தென்றொழியவெனுது "அசத்தென்றுகாண" என்றும், அவ்வறிவின் விசேடமாகிய சிவஞானம், ஆன்மா பிரபஞ்சத்தைப்பற்றிநிற்கும் போது விளங்காமலும், பற்றுஅற்றுநிற்கும்போது விளக்கமாயும் ஆன்மாவைப்பிரியாதுநிற்பதாதலால் அசசிவஞானம் அவ்வான்மாவுக்குக்குளிர்நிழலைச்செய்வதுபதிதன்றென்பதுதோன்ற "உளதாய்நிறபது" என்றும், "பதி" என்றது ஆகுபெயராய்ப்பதிஞானத்தை விளக்குமென்பதுதோன்ற "ஞானசொரூப" மென்றும், இது அநுபவத்தாலன்றிச்சொல்லளவி லறியமுடியாதென்பதுதோன்ற "உணரற்பாற்று" என்றும் இம்மேற்கோளிற்கூறியதுகாண்க. இம்மேற்கோளுக்கு ஏது வேறுக்கூறிச்சொற்பல்காமல் சுருங்கச்சொல்லலெனுமழகுபற்றி அவ்வேதுப்பொருளை உடம்பொடுபுணர்த்தலென்னுமுத்தியால் விளக்குவாராய் அசத்தாயுள்ள பிரபஞ்சத்தையென்னுது, அதனைரூபகமுறையில் விளக்கும் "வன்னபேதங்களை" என்றுகூறினர். வன்னபேதங்களென்றமை படிகமுதலியனகூறிஏதுப்பொருள் விளக்குதற்குஇடந்தந்தது காண்க.

இம்மேற்கோள், முதலதிகரணத்து மேற்கோளில் "ஞானக்கண்ணிலேகாண்க" வென்றுகூறியது, அவ்வாறுகாண்பதுஎப்படிஎன்பதைஅவாவிநிற்றலால்அவ்வவாய்நிலையை நீக்கும்பொருட்டு, அவ்வாறுகாணுமுறையைவிளக்கி அதனைஅசையவிடாதுநிறுத்துதலின் அதற்கோர்புறநடையாயதென்க.

முதலதிகரணத்து ஏது பாசபசுஞானங்களாலறியமுடியாதுசிவஞானத்தாற்றான் அறியலாமென்றதற்குப்பிரமாணங்கூறியதன்றி அறியுமுறையைவிளக்கியதன்றாகலான் அதனைவிளக்குகின்ற இம்மேற்கோள் புறநடையென்றதே தெளிவாம்.

இம்மேற்கோள் ஏதுப்பொருளுந்தன்னுட்பெற நிற்றலால், அதனைமற்றதிகரணங்களிற்போல வெவ்வேறெனக்காணுமுறையில் மேற்கோள்,

இனி, அசத்தாயுள்ள பிரபஞ்சத்தை அசத்தென்றுகாணவுளதாய்நிற்பது ஞானசொரூபமென்றது. என்றும், ஏது,

வேற்றியல்பாகியவன்னபேதங்களை வேற்றியல்பென்று கண்டுழிப்பின்உளதாய்நிற்பது படிகசொரூபமாந்துணையான். என்பம் வேறாகவைத்துப்பொருள்கொள்க.

இ—ள். படிகநிறத்தைக் காட்டாதுமறைத்துநின்ற வேற்றுநிறங்களைஇவைநிலையில்லாதனவென்றுள்ளபடிகண்டுபின்மயங்காமல் நிலைத்துநின்றால், அவ்விடத்துநிலையுள்ள அப்படிகசொரூபமேவிளங்கிநிற்றல்போல, நிலையுள்ளசிவஞானமாகிய தன்சொரூபத்தைக்காட்டாது மறைத்துநிற்கும் பிரபஞ்சத்தை;இவைநிலையில்லாதனவென்றுள்ளபடிகண்டு நிலைத்துநிற்பின் அவ்விடத்து வேறொன்றையும்பற்றாமல் விளங்கிநிற்பது அச்சிவஞானசொரூபமேயென்பதாம்.

அசத்தாகிய பிரபஞ்சத்தை நிலையில்லாதனவென்றுகாண்பதாவது, ஆசாரியன்அறிவித்தஉபதேசத்தில் உறைத்துநின்று, பிரமாதிதேவபதமுதலிய எப்பொருள்களும் காரணசொரூபத்தில் நிலையின்றிஒழிதலால் அவையெல்லாம்வெறும்பொய்யென நினைந்திருத்தலாம்.

அப்பிரபஞ்சங்களை அசத்தென்றுகண்டுநீங்கியபோதருணியந்தோன்றுமன்றி ஞானசொரூபந்தோன்றுமெனபாரை நோக்கி ஞானசொரூபத்தியல்புகூறி மேற்கோளைவலியுறுத்தும் உதாரணம்.

நிர்க்குணனாய் நின்மலனாய் நித்தியா னந்தனாய்த்
தற்பரமாய் நின்ற தனிமுதல்வ—னற்புதம்போ
லானாவறிவா யளவிறந்து தோன்றானே
வானே முதல்களையின் வந்து.

இ—ள். முதல்வன், மாயாகாரிய அசுத்தப்பிரபஞ்சம்போலமுக்

குணரூபமாயளவிட்டறியப்படானாய்முக்குணங்களைக் கடந்தசுத் தாசுத்தப்பிரபஞ்சம்போல மலகன்மகாரியரூபமாய்அறியவும்ப டானாய், மலகன்மங்களையுங்கடந்தசிவதத்துவரூப சுத்தப்பிரபஞ்ச ம்போலஅநித்தியானந்தரூபனையறியப்படானுமாய், இம்மூவகைப் பிரபஞ்சங்களோடுங்கூடிப்பொதுவியல்புபற்றியறியப்படும்சகலர் பிரளயாகலர்விஞ்ஞானகலரென்னும்ஆன்மாக்களைப்போலன்றித் (தற்பரமாய்) அவ்வான்மாக்களுக்கு மேலாய்நிற்பன் இவ்வாறு பிரபஞ்சங்களையும் ஆன்மாக்களையும் கடந்துநிற்றலால், அவை களினியல்புபற்றி அறியப்படாதுதனித்துநிற்கும்அம்முதல்வன், ஆகாசமுதலியஅசத்தாகியஅப்பிரபஞ்சங்களைப்பொய்யெனக்கண் டுநீங்கியவிடத்தும் அவற்றோடுபழகி அறிந்துவரும் அவ்வான்மா வின் சுட்டறிவினைக்கடந்துநிற்றலால் இன்னதென்றறியவாராத சூனியம்போலத்தோன்றினும்பின்பு சுட்டிறந்தறியும் அவ்வான் மாவின் அறிவினீங்காது நிலைபெறுவதாய்ச், ✠ "சோதியாயெ ழுஞ்சோதியுட்சோதியாய்" விளங்கித்தோன்றுவ னென்பதாம்.

இங்கேமுதல்வனென்றது, ஞானசொரூபத்தையே. அது ஒற்றுமைபற்றிஉபசரித்துக் கூறியவாறென்க.

அப் பிரபஞ்சங்களை ஒவ்வொன்றாகக்கழித்து நீங்கியவிடத்து அவ்வாறுதோன்றுவதும் ஞானமன்று; வேறொன்று எனக்கொ ள்வோம். ஞானசொரூபமே என்றற்குப்பிரமாணமென் னென் பாரை நோக்கி அதனைவலியுறுத்தும் உதாரணம்.

சுட்டி யுணர்வதனைச் சுட்டி யசத்தென்னச்
சட்ட வினியுளது சத்தேகாண்—சுட்டி
யுணர்ந்தநீ சத்தல்லை யுண்மையைத் தைவம்
புணர்ந்ததனாற் பொய்விட்டுப் போம்.

இ—ள். ஏகதேசஅறிவாற் சுட்டியறியப்படும் பிரபஞ்சத் தை முன்கூறியபடி ஒன்றொன்றாக்கண்டு அசத்தெனக் கழித்துச் சென்றவிடத்து முடிவிற் செவ்வேதோன்றுவது அவ்வசத்தின் வேறாகிய சத்தேயாம். அதனையறிவாயாக. ஆனால் அவ்வாறு

✠ இத்திருப்பாசுரம், பெரியபுராணம், தடுத்தாட்கொண்டபு ராணம் (௧௧௫)

தோன்றுஞ்சத்து உயிரோயாமெனில்? இதுவரை அசத்துடன் கூடிச் சுட்டியறிந்துவந்த நீ அவ்வசத்துடன் கூடாமல் எப்போதும் அதனின்வேறாய்ச் சுட்டிறந்துநின்று அவ்வாறுதோன்றுஞ் சத்தாவாயல்லை. அப்படியானால் இச்சுட்டுணர்வு எனக்கு நீங்காதோவெனில்? அசத்தின்வசப்பட்டுச் சுட்டியறிந்துவந்த நீ அதனை ஒழிந்து அவ்வொழிவின்கட் செவ்வேதோன்றுஞ் சத்தின்வசப்பட்டு அதனைச்சேர்ந்தால் அச்சேர்க்கையினாற் சுட்டறிவாகிய பொதுவியல்பு உன்னைவிட்டு நீங்குமென்பதாம்.

அசத்தை அசத்தெனக்கண்டு நீங்குமுறையும், நீங்கியவிடத்து சத்தாகிய சிவத்தை அதனடிமையாகிய ஆன்மா இரண்டறக்கலக்குமுறையும், கலந்தகனால் அவ்வசத்து முற்றும்விட்டொழியுமுறையும் எப்படி? என்பாரை நோக்கி அவற்றை விளக்கி அதனை வலியுறுத்தும் உதாரணம்.

கண்டதை யன்றன் றெனவிட்டுக் கண்டசத்தா
யண்டனை யான்மாவி லாய்ந்துணரப்—பண்டணைந்த
வூனத்தைத் தான்விடுமா றுத்தமனி றெண்கருட
சானத்திற் றீர்விடம்போற் றான்.

இ—ள். சுட்டியறியப்படும்பிரபஞ்சத்தை இதுசத்தன்றென ஒவ்வொன்றாகக் கண்டு அவையாவும் அசத்தென்றொழித்துச் சென்ற ஆன்மா தன்னறிவில் சுட்டறிவின்றிநின்றகடவுளை ஆராய்ந்து அவனேநானென்று பாவித்தால், அப்பாவனையால் அவ்வறிவில் அத்துவிதமாய் விளங்கித்தோன்று முதல்வனால், அநாதியே தன்னைக்கூடிநின்று பொதுத்தன்மைப்படுத்திய ஆணவமலப்பற்று முற்றும் விட்டு நீங்கும் இதுகருடபாவனையால் விளங்கும்மந்திரதைவிக கருடனால் விடம்நீங்குதல் போலுமென்பதாம்,

இக்கருடன்மூன்று விதமாம். உலகிற்காணப்படுவது ஆதிபௌதிக கருடன். அதற்கு அதிதெய்வமாகிய மந்திரம் ஆதிதைவிக கருடன், மந்திரத்தை இடமாக்கொண்டு(அதிட்டித்து)நின்று அம்மாந்திரீகனுக்குப் பலனைக்கொடுப்பதாகிய சிவசத்தி ஆத்தியான்மிக கருடனென்க.

## மூன்றுமதிகரணம்.

ஆன்மா ஐம்புலவேடரைச்சார்ந்த அசுத்தநீங்கிச்சுத்தமாதற்குப்பாசம் நீங்கின வுடனே தண்ணிழலாய்ப் பிரகாசிக்கின்ற ஞானசொரூபமொன்றே போதும். மேலும் பஞ்சாக்ஷர செபமெதற்கென்பாரை நோக்கிச் சூத்திரத்தின் மூன்றும் பாகத்தைப்பதம்பிரித்துரைக்கும் மேற்கோள்.

இனி, இவ்விடத்து ஸ்ரீபஞ்சாக்கரத்தை விதிப்படி உச்சரிக்கவென்றது.

இ—ள். பாசநீங்கியவுடனே தண்ணிழலாய்ப் பிரகாசிக்கின்ற ஞானக்கண்ணுல் ஆன்மா பதியை நாடியபின்னரும் திருவைந்தெழுத்தையும் விதிப்படி செபிக்குக என்பதாம்.

ஞானக்கண்ணால் பஞ்சாக்ஷரஞ்செபிப்பது அந்தரங்கவழிபாடாதலால், இது, அசிந்திதனைப்பின்றபதியைச் சிந்திதனைக்கண்டுவழிபடும்அந்தரங்கவழிபாடுணர்த்தும் (கஉம்) சூத்திரத்திற்கூறுவதாயிருக்க ஈண்டுக்கூறுதல், பின்சிந்திப்பதையே இங்குங்கூறியசித்தசாதனதோஷமாதலால் இங்குக்கூறியதுஎதற்கென்பாரைநோக்கி, மேற்கோளைச் சாதிக்கும் ஏது.

இவ்வான்மாக்களுக்குஞானம் பிரகாசித்தும் அஞ்ஞானத்தைவேம்புதின்ற புழுப்போல நோக்கிற்றை நோக்கி நிற்குமாகலின் அது நீக்குதற்கெனக்கொள்க.

இ—ள். நெடுநாள் வேம்புதின்ற புழு, அதனைவிட்டுக் கரும்புதின்று அச்சுவை தெரிந்தனுபவிக்கும்போதும், முற்பழக்கமிகுதியால் அவ்வேம்பைநோக்கிநிற்றல்போல, பிரபஞ்சம் அசத்தெனக்கண்டுவிட்டுநீங்கியஆன்மாவுக்குஅதனால்ஞானம்விளங்கிச்சிவத்தைக்காணப்பெற்றபோதும், அவ்வான்மா பழக்கமிகுதியால் முன்பு சார்ந்துநின்ற பிரபஞ்சங்களைநோக்கிநிற்குமாதலால் அவ்வாதனைநீக்கும்பொருட்டு வேண்டப்படுதலால் பஞ்சாக்ஷரத்தை இவ்விடத்து விதிப்படிசெபிக்கவென மேற்கொண்டதெனக்கொள்க என்பதாம்.

இவ்விடத்து என்றதனால் அணைந்தோர் தன்மையைச் சார வைத்துமேற்கோடற்குரிய "பஞ்சாக்ஷரத்தை" என வருவித்துக் கொள்க. என்கஎன்னாது "எனக்கொள்க" என்று உடம்படுப் பித்ததும் அதுபற்றியே. இதுநோக்கியே உமாபதிசிவம் "அஞ் செழுத்தருணிலையை ஆன்மலாபத்தின்பின் அணைந்தோர்தன்மை யைச் சாரவைத்தருளியதென்க. அதுநீக்குதற்கெனக் கொள்க என்றதனால் சித்தசாதனதோஷமாகாதென்பது பெறப்பட்டது.

இப் பஞ்சாக்ஷரஜெபம் அப் பழக்கவாசனையை நீக்குதற்கு ச்சாதனமாவதெப்படி என்பாரைநோக்கி அதனுண்மைவிளக்கி ஏதுவைவலியுறுத்தும் உதாரணம்.

அஞ்செழுத்தா லுள்ள மரனுடைமை கண்டரனை
அஞ்செழுத்தா லர்ச்சித் திதயத்தி—லஞ்செழுத்தாற்
குண்டலியிற் செய்தோமங் கோதண்டஞ் சானிக்கி
லண்டனாஞ் சேடனா மங்கு.

இ—ள். ஆன்மா தான் சிவனுக்குடைமைப்பொருளென்ப தை அம்முத்திபஞ்சாக்கரப்பொருள் சிவனும் அருளும் அடிமை யாகிய ஆன்மாவுமென்பது தெரிந்துச்சரிக்குமுறையிற் கண்டு புறத்தே ஞானபூசைசெய்யுங்கால் காலையில் புன்னை, வெள்ளெரு க்கு, சண்பகம், நந்தியாவர்த்தம், நீலோற்பலம், பாதிரி, அலரி, செந்தாமரை; மலர்களெட்டும் மற்றைக்காலங்களில் வெவ்வேறு, எட்டுமலர்களுமாகவிதிக்கப்பட்ட அஷ்டபுஷ்பங்களாற்பூசித்த ல்போல, அகத்தே இருதயம் பூசைத்தானம் உந்தி ஓமத்தானம் புருவநடு தியானத்தான மாக்கொண்டு இருதயத்தில்அம்மந்திர த்திருமேனியனாய்முதல்வனைப்பாவித்துக்,கொல்லாமை,ஐம்பொறி யடக்கல், பொறுமை,இரக்கம்அறிவு,சத்தியம், தவம், அன்பாகிய அஷ்டபுஷ்பங்கொண்டு அம்மந்திரத்தாற்பூசித்துக்,குண்டலிசத்தி த்தானமாகிய உந்தியிலேஞானாக்கினியைப்பிராணவாயுவினாலெழு ப்பி, அவ்வக்கினியாற் புருவநடுவினின்றொழுகும்அமுதமாகியநெய் யைச்சுழுமுனைநாடிஇடைநாடிகளாகியசுருக்குசுருவங்களால்ஓமஞ் செய்து, விந்துத்தானமாகியபுருவநடுவில், சிகர, யகர, வகரங்கள் முறையே(தத்துவமசி)மகாவாக்கியத்துள்ளதத்பதப்பொருளும்து

வம்பதப்பொருளும் அசிபதப்பொருளுமாகும்முறைதெரிந்து அம்மகாவாக்கிய பஞ்சாக்ஷரப்பொருள் விளக்கத்தால் சிவன் நானென்று பாவிக்குஞ் சிவோகம் பாவனையைச்செய்வனேல் அப்பாவனையில் முதல்வன் விளங்கித்தோன்றுவன். அப்பாவனைசெய்தோன் அவனுக்கு அடிமையாவனென்பதாம்.

ஓமம் தியானம் இரண்டையுந் தனக்கு அங்கமாக்கொண்டு தான் அங்கியாய் முதன்மைபெற்றுவிளங்குவது பூசனையேயாம். இவ்வுண்மை நோக்காதசிலர் நாம் தியானஞ்செய்கின்றோம்நமக்குப் பூசனைவேண்டுவதில்லை யென்றிறுமாந்து கூறிக்கண்களைமூடிக் கொண்டு பொழுதுகழிப்பது சிவசாஸ்திரவிரோதமாய் அவ்வுளவறியாதபிறரைஏமாற்றிப்பொருள்கவரச்செய்யும்வஞ்சனைமார்க்கமாய்முடிவில் நரகத்துக்குஏதுவாய்முடியுமன்றிவேறில்லையென்க.

ஆன்மா பிரபஞ்சத்தை அசத்தெனக் கண்டு நீங்கிஞானசொரூபத்தாற் பரிபூரணநிலையைப்பெறினும், முற்பழக்க மிகுதியாலறிவுஏகதேசப்பட்டுப் புறத்தேசெல்லநோக்குங்கால்செல்லவிடாது மடக்கி அகத்தேமுற்கூறிய பூசனையாதியால் ஒருகுறியினிடத்து நிறுத்திமுத்திபஞ்சாக்ஷரத்தை ஓதுமுறையில்வைத்துக்கனிட்டைகைகூடும்படி சிந்திக்கச் சிந்திக்க, அச்சிந்தனை அப்புறநோக்கத்தை முழுதுங்கெடுத்து ஞானசொரூபத்தை நன்குதெரிய விளக்கிப் பூரணநிலையிற்கொண்டுபோய் விடுமாதலால் இம் முத்திபஞ்சாக்ஷரம் மேற்கூறிய பழக்கவாசனை நீக்குதற்குச் சிறந்த சாதனமாமென்பதுதெளிக.

அவ்வாறு ஒருகுறியில்வைத்து நோக்கினாலன்றிமுதல்வனைக் காணமுடியாதென்பதும், அம்முறையினின்றுகண்டவுடன் முதல்வன்விளங்கித்தோன்றுவனென்பதும் தோன்றியவுடன் அவனுக்கு அடிமையாமென்பதும் உவமையில்வைத்து விளக்கி அதனை வலியுறுத்தும் உதாரணம்.

இந்துவிற் பானுவின் ராகுவைக் கண்டாங்குச்
சிந்தையிற் காணிற் சிவன்கண்ணு — முந்தவே
காட்டாக்கிற் றோன்றிக் கனல்சே ரிரும்பென்ன
வாட்டாளு மோதஞ் செழுத்து.

இ—ள். நான் இவனை அறிந்தேன் அறிந்திலேன் என்றுகூறும் ஆன்மாவின் அறிவுக்கு இதனை என்றபாசமும் நான்என்றபசுவும் ணப்படுதல்போல, வேறுகாணப்படாத முதல்வனை, ஆகாசத் ங்கள் நேரேதெரிதல்போலக் காணப்படாத ராகு ளைக் கிரகணகாலத்தில் சூரியசந்திரர் காட்டுமாக்கா போல, ஆன்மா இருதயகமலத்தில் பஞ்சாக்ஷரஜெபதியான ல் அத்திருமேனியாகிய ஒருகுறியில்வைத்துக்காணுமாயி ம், விறகிற் கோலை நட்டுக்கடைந்தபோது அக்கினிவிளங்குதல் ல், அறிவுக் கறிவாய் விளங்கிநிற்பன். அப்போது ஆன்மா, னிசேர்ந்திரும்புகறையுங்கடினமுமின்றி அதனுள்ளாய்நிற் பால மலமும் பாசபோதமுமின்றி முதல்வன்வியாபகத்துள் ங்கி அடிமையாய் நிற்குமாதலால் அத் திருவைந்தெழுத்தை ப்படிசெபிக்க என்பதாம்.

(கூக) தத்துவங்களுக்குமேற்பட்டசிவனை இருதயத்திற் கண் சிப்பது எப்படி? என்பானைநோக்கி அவ்விருதயகமலத்தினி புணர்த்தி அதனைவலியுறுத்தும் உதாரணம்.

“ மண்முத னாளமலர் வித்தைகலாருப
மெண்ணிய விசர் சதாசிவம்— நண்ணிற்
கலையுருவா நாதமாஞ் சத்தியதன் கண்ணு
நிலையதிலா மச்சிவன்றா ணோர்,

இ—ள். அவ்விருதயகமலம் புறத்தே நீர்நிலையிலுள்ளகமலம் போல்வதன்று. பிருதிவிமுதலிய ஆத்துமதத்துவங்கள் (உசு) ாயினின்றுதோன்றிய எட்டங்குலநீளமுள்ள (காம்பு) நாளமா வும், வித்தியாதத்துவம் ஏழும் சுத்தவித்தை ஒன்றுமாகிய எட் டும்எட்டிதழ்களாகவும், மகேசுர சதாசிவதத்துவமிரண்டும் (ருச) கேசரங்களாகவும், சத்திதத்துவம் பொகுட்டாகவும், சிவதத்துவ அப்பொகுட்டின்மேலுள்ள (நிகபீஜம்) விதைகளாகவுங்கொண் து அத்தன்மையுள்ள அவ்விருதயகமலத்தில் (கூா) தத்துவங் னமாகவுடையசிவனதுசத்திநிலைபெறும். அத்திருவடியை த்திருவைந்தெழுத்தாற்பூசிப்பாயாக என்பதாம்,

இச்சூத்திரம், முன் முதல்வன் குருவாய்வந்தருளிய உபதேசசிந்தனைக்குஇன்றியமையாத ஆன்மசுத்திகூறுமுறையில் பாச பசு ஞானங்களால் அறியமுடியாத சிவனை அருளஞானத்தாலறியவேண்டுமென்பதும், அத்திருவடிஞானம் மற்றை நிலையில் பொருள்களினியல்புகண்டு ஒன்றொன்றுக்கழித்தபோது விளங்குமென்பதும், அதனால் அப்பற்றுநீங்கி முதல்வனையறிந்தடுத்தவிடத்தும் முற்பழக்கவாசனை பற்றாதபடி முத்திபஞ்சாக்ஷரம் செபிக்கவேண்டுமென்பதும், சிவசமவாதிகள், பாசம்போற் சடமாகாத சித்தாகிய பசுஞானத்தால் முதல்வன் அறியப்படுவனென்பதைமறுத்து அவன் பாச பசு ஞானங்கட்குத்தோற்றலாலும், பசுத்துவநீங்கியவிடத்தும் சமமாதலின்றி அவன் வியாபகத்துளடங்கிநிற்ப அவன் உடனின்றறிவித்தலாலும் பதிஞானத்தாற்றானறியப்படுவனென்பதும், நிலையில் பொருளியல்புகண்டு கழித்தபோது தோன்றுவதும் சூனியமேயென்பாரை மறுத்து, அசத்துமுற்றும் கழிக்கப்பட்டபோது தோன்றுவது சத்தாகிய ஞானசொரூபமே என்பதும், அங்குத்தோன்றுவதும் அசத்தல்லாத உயிரே யென்பதைமறுத்து, அவ்வுயிர் அசத்தைச்சார்ந்து சுட்டியறிவதாதலால் சுட்டியறியப்படாத ஞானசொரூபமாகாதென்பதும், அசத்தை நீங்கிச் சத்தின்வசமாய்நின்று சிவோகம்பாவனைசெய்யின் அச்சுட்டறிவொழியுமென்பதும், ஆன்மசுத்திக்கு அங்கமாகிய பாசநீக்கத்திற்றோன்றும் ஞானமே போதியதென்பாரைமறுத்து, பழக்கவாசனை தாக்காதபடி ஸ்ரீபஞ்சாக்ஷரமும் அறிவாற் செபிக்கவேண்டுமென்பதும், அப்பஞ்சாக்ஷரரூபமுதல்வனை அதனால் இருதயகமலத்தில் ஒருகுறியில்வைத்துப் பூசித்தால் அவ்வாசனை பற்றறநீங்குமென்பதும், ஓமதியானங்கள் அப்பூசனைக்கு அங்கமென்பதும், காணப்படாத ராகுகேதுக்கள் சூரியசந்திரர்களிடத்துக் காணப்படல்போல மறைந்தெங்கும் வியாபித்துள்ள முதல்வன் அக்கமலத்தின்மேல்விளங்கித் தோன்றுவனென்பதும், அக்கமலம் (௩௬) தத்துவரூபமாதலால் அம்முதல்வன் தத்துவாதீதனென்பதற்கிழுக்கில்லையென்பதும் விளக்குதல் காண்க.

## பத்தாஞ்சூத்திரம். பயனியல்,

அவ்வே தானே யாகிய வந்நெறி
யேக னாகி யிறைபணி நிற்க
மலமாயை தன்னொடு வல்வினை யின்றே.

கருத்துரை. பாசக்ஷயம் பண்ணுமாறுணர்த்துத லுதலிற்று.

இ—ள். முன் ஏழாஞ்சூத்திரத்தில் சாதனஞ்செய்யும் அதிகாரியாகிய ஆன்மாவினியல்பு கூறி, எட்டாஞ்சூத்திரத்தில் அச்சாதனத்தால் வரும்பயன் பிரபஞ்சநீக்கத்திற்சிறந்தும் பதிஞானவிளக்கமாதலால் பாசம்நீங்கி முதல்வன் திருவடியடைதலாமென்று தொகுத்துக்கூறி, ஒன்பதாஞ்சூத்திரத்தில் அச்சாதனஞ்செய்புமுறையை வகுத்துவிளக்கினமைபால், முன்தொகுத்துக் கூறிய அப்பயனை இனி மூன்றுசூத்திரங்களால் வகுத்துக்கூறத் தொடங்கிப், பாசநீக்கமும் திருவடியடைதலுமாகிய அப்பயனிரண்டனுட் பாசநீக்கமாவது, சுட்டியறியப்படும் பிரபஞ்சப்பற்றை மேற்கூறியபடி பஞ்சாக்ஷரசெபத்தால் முற்றும்நீக்கியவிடத்துண்டாகும் ஆன்மசுத்தியின் பயனாதலால், அப்பாசநீக்கத்தைச் செய்துகொள்ளுமுறையை, முற்சூத்திரத்தில் சிந்தனைசெய்தபொருளை இங்கே தெளிவிக்குமுகத்தானுணர்த்துவதென்பதாம்.

சூ—ள் பெத்தநிலையில் ஆன்மா பிரபஞ்சப்பொருள்களை அறிதற்காக முதல்வன்தானும் அப்பொருள்களை அறிந்துகொண்டு அவ்வுயிருடன்பிரிவின்றி உடனாகவேயிருந்தும், அவ்வான்மா தனக்கு அறிவித்தும்அறிந்தும் ஒருமுதல்வன் எப்போதுந்தன்னோடு உடனாயிருக்கின்றானென்றுசிறிதும்வேறாய்க்காணப்படாமல், அவ்வான்மா தானேயறிந்ததாக எண்ணும்படி அவ்வான்மாவுடன் அம்முதல்வன் அத்துவிதமாக ஒற்றுமைபால் அவ்வுயிரின்வழியாய் நின்றதுபோல, இம்முத்திநிலையில் ஆன்மா அம்முதல்வனுடனாகநின்று அறிந்து இன்பத்தை யநுபவிக்குமிடத்தும், அநுபவிக்கின்ற தன்னைவேறாகக்காணாமல் அம்முதல்வனுடன் ஒற்றுமைப்பட்டு அம்முதல்வனேயாய் அவனருள்வழியொழுகும் இறைபணியில் வழுவாமல் நின்றால் ஆணவமலம் மாயாமலமிரண்டுடன்வலிய கன்மமலமும் இல்லையா யொழியுமென்பதாம்.

முத்திநிலையில் முதல்வனுடன் ஆன்மா ஒற்றுமைப்பட்டு நிற்பது, குடமுடைந்தபோது அக்குடாகாசமும் மகாகாசமும் ஒரேபொருளாய் ஒற்றுமைப்படுதலென்பதுமுதற் பலவிதமாகப் பலமதஸ்தர்கள் கூறுவனவற்றைப்போல்வதன்றென்பது விளக்குதற்கே பெத்தநிலையில் அவனே தானேயாய்நின்ற (சிவன் ஆன்மாவேயாய்நின்ற) ஒற்றுமைபோலென்று உவமையெடுத்துக்காட்டினர், காட்டியதனால் முத்திநிலையில் ஆன்மாசிவமேயாய்நிற்கும் ஒற்றுமையே ஈண்டுக்கூறியதென்பது தெளிவாயது. இவ்வொற்றுமையின் சம்பந்தம் அத்துவிதசம்பந்தமென்பதாம். இது வருகின்ற சூத்திரத்தில் விளக்கப்படும்.

இச்சூத்திரம், "அவனே தானேயாகிய அந்நெறி ஏகனாகி" எனவும், 'இறைபணிநிற்க மலமாயைதன்னொடு வல்வினையின்றே' எனவும் இரண்டதிகரணமுள்ளது.

## முதலதிகரணம்

சிவசமவாதசைவர்முதலியர், பதிஞானம்விளங்கி முதல்வனைக் காண்டல்மாத்திரமே வீடுபெறுதற்குப் போதியதாதலால் ஏகனாகியிறைபணியில் நிற்கவேண்டாம் என்பதைநோக்கிச் சூத்திரத்தின்முதற்பாகத்தைப் பதப்பிரித்துரைக்கும் மேற்கோள்.

ஈண்டுப் பரமேசுரன் இவ்வான்மாவாய்நின்றமுறைமையான் அவனிடத்தேகனாகிநிற்கவென்றது.

இ—ள். பெத்தநிலையில் முதல்வன் உயிரினுடனாய்நின்றறிய வும், வேறாய்க் காணப்படாமல் நானே அறிந்தேனென்னும்படி அவ்வுயிரேயாய் ஒற்றுமைப்பட்டு நின்றதுபோல, இம்முத்திநிலையில் உயிர் முதல்வனோடு உடனாய்நின்றறியினும் அவ்வுயிர் முதல்வனின் வேறாகக் காணப்படாமல் அவனுடன் ஒற்றுமைப்பட்டு நிற்க என்பதாம்.

முதல்வனைக் காண்டலேபோதும் ஒற்றுமை எதற்கென்பாரைநோக்கி மேற்கோளைச்சாதிக்கும் ஏது.

அவ்வாறு நிற்கவே யானெனதென்னுஞ் செருக்கற்று அவனது சீபாதத்தையணையுமாகலான்.

இ—ள். அப்படி ஒற்றுமைப்பட்டு நின்றாற்றான் யான் என்றும் எனதென்றும் பகுத்தறியும் மயக்கவறிவை விளைக்கின்றமலம்நீங்கித் திருவடியாகிய சிவானந்தம்பெறலாமாதலால், அச்செருக்குநீங்குதற்குக் காரணமாதல்பற்றிப் பரமேசுரன் பெத்தநிலையில் ஆன்மாவாய்நின்ற முறைபோல இம்முத்திநிலையில் ஆன்மா அவனிடத்து ஏகனாகிநிற்கவென மேற்கொண்டதென்பதாம்.

ஒற்றுமைப்படாவிடில் மலமறாது. அறாவிடில் பாதத்தையணையமுடியாதென்பது தோன்ற "நிற்கவே" என்று தேற்றேகாரத்தாற் கூறினார். யான் என்பது (ஞாதிரு) பொருள்களை அறிகின்ற ஆன்மாவாம். எனதென்பது (ஞானமும் ஞேயமும்) அவ்வுயிரின் அறிவும் அறியப்படும் பொருளுமாம்.

அவ்வாறு ஞானஞேயங்களைப் பகுத்துணருமுணர்வை மயக்கவுணர்வென்றதென்னென்பாரைநோக்கி ஏதுவைவலியுறுத்தும் உதாரணம்.

நானவனென் றெண்ணினர்க்கு நாடுமுள முண்டாத
ருமெனவொன் றின்றியே தானவனாய்—நானெனவொன்
றில்லென்று தானே யெனுமவனைத் தன்னடைவைத்
தில்லென்று தானு மிறை.

இ—ள். முதல்வனில்லை நானேயுள்ளேனெனநிற்பார்க்குப்போலத், தனித்துநில்லாத ஆன்மாவாகிய தன்னை நானென்றும் தன்னில்வேறுபட்டுநில்லாத முதல்வனை அவனென்றும் பகுத்துணர்வார்க்கும் அவ்வாறுணருமயக்கவுணர்வாகிய ஆன்மபோதமுனைத்துநிற்குமாதலால் அப்போதும் முதல்வன் தானொருபொருளாக அறியப்படுதலின்றி அவ்வுயிரின் உணர்வேயாய்நிற்பன். இனி முதல்வனின்வேறாய் யானென்றொருபொருள் தனித்துக்காணப்படுமாறில்லையென்றுணர்ந்து முழுதுஞ் சிவனேயென்று காணுந் தெளிவுடையானையே முதல்வன் தனது திருவடிவியாபகத்துளடங்கிநிற்கச்செய்து அவ்வாறே எல்லாமாய் நிற்பனென்பதாம்.

## இரண்டாமதிகரணம்

சுத்தசைவரிருபினார், உடம்புள்ளவரை பிராரத்தவினையும் அதனை அநுபவிக்கும்போது நிகழும் ஆகாமியவினையும் எவ்வித

த்தாலும் நீங்காவாதலால், ஏகனாகிநிற்றற்குத் தடையாமன்றோ வென்பதைநோக்கிச் சூத்திரத்தின் இரண்டாம்பாகத்தைப் பதம் பிரித்துரைக்கும் மேற்கோள்.

இனி இறைபணி வழுவாது நிற்கவென்றது.

இ—ள். அம்முதல்வன் அருள்வழிச் சலியாமல் நிற்க என்பதாம்.

ஏகனாகிநிற்றலே போதுமாதலால் இறைபணிநிற்றலெதற்கென்பாரைநோக்கி மேற்கோளைச்சாதிக்கும் ஏது.

அவன் அருளாலல்லது ஒன்றையுஞ் செய்யானாகவே அஞ்ஞானகன்மம் பிரவேசியாவாகலான்.

இ—ள். முதல்வன் தானுஞ்செய்துடனின்று செய்வித்தாலன்றித் தானாக ஒன்றையுஞ் செய்யமாட்டாத ஆன்மாக்கள் செய்வனவெல்லாம் தற்போதமுனைப்பற்றுச் சிவனருள்வழிநின்றே செய்யுமானால், மாயாகாரியமயக்கத்தால் வரும்முயற்சியாகிய ஆகாமியமும் (மாயேயமும்) கன்மமலகாரியமாகிய இன்பதுன்பப்பயன்களும் (பிராரத்தமும்) ஏகனாய்நிற்றற்குத் தடையாய்வந்து தாக்கமாட்டாவாதலால் அதன்பொருட்டுச் செய்யவேண்டிய உபாயமாதல்பற்றி இறைபணிவழுவாது நிற்கவென மேற்கொண்டதென்பதாம்.

மலமின்மைமேற்கூறியதனால், இங்கே அஞ்ஞானமென்றது மாயாகாரிய மயக்கத்தையேஎன்க. மாயேயமும் அக்கன்மமும் உடலுள்ளவரையுள்ளனவாதலால் அவைகள் அற்றுப்போமென்னாது பிரவேசியாவென்றருளிற்றென்க.

உடம்பொடுகூடிய ஆன்மாவுக்குப் பிராரத்தமும் அதுபற்றி ஏறும் ஆகாமியமும் நிச்சயமாயிருக்க, இறைபணிநிற்றலால் அவைதாக்காவென்பதெப்படி? என்பாரைநோக்கி ஏதுவை வலியுறுத்தும் உதாரணம்.

நாமல்ல விந்திரிய நம்வழியி னல்லவழி
நாமல்ல நாமும் மரனுடைமை—யாமென்னி
லெத்தனுவி னின்று மிறைபணியார்க் கில்லைவினை
முற்செய்வினை யுந்தருவான் முன்.

இ—ள். அவ்வினைகளை நுகர்தற்கும் ஈட்டுதற்குங் கருவியாகிய இந்திரியங்கள் மாயாகாரியமேயன்றி நாமல்ல; அவைத் தொழிற்படுதலும் முதல்வன்வசத்தாலன்றி நம்வசப்பட்டல்ல. அத்தொழில்நிகழ்தற்குவாயிலாகிய விடயாதிகளும் மாயாகாரியமே; நாமல்ல. அவைதொழிற்படுதலும்முதல்வன்வசத்தானன்றிநம்வசத்தானல்ல. அவற்றோடுகூடி வினைகளையீட்டி நுகரும்வினைமுதலாகிய நாமும் முதல்வனால்ஞானவிளக்கம்பெறலால் அம்முதல்வன்வசத்தாலன்றிச் சுதந்தரரல்லேம். என்றிவ்வாறுபசுபாசங்களினியல்பையறிந்துஅவனருள் வழிநின்றேயாவுஞ் செய்தலைக்கண்டுகொண்டிருப்பாராகில்இவ்வடிமைத்திறத்தினர் எவ்வுடம்பினின் றெவ்வினை செய்யினும் அவ்வாகாமியவினை யவர்களைப்பந்தப்படுத்துதலில்லை. அவ்வாகாமியத்தை இன்றியமையாதுடன்கொண்டுவரும் பிராரத்தவினைப்பயனாகிய சுகதுக்கங்கள், அவற்றைக் கூட்டுவிக்கும் முதல்வனருளால் உயிரைப்பற்றாமல் உடம்பின் அநுபவமாயொழியுமென்பதாம்.

சஞ்சிதவினை தீக்கை யனலிலேயிட்டிறுபட்ட விதைபோலொழிதலால் ஈண்டு "முற்செய்வினை" என்றது ஏற்புழிக்கோடன் முறையாற் பிராரத்தவினையே யெனக.

இறைபணிநிற்பவரைப் பிராரத்தவினைதாக்கவிடாது முன்னின்றருளும்முதல்வன்மற்றையவரைத்தாக்கச்செய்தலால்பக்ஷபாதமுள்ளவனன்றோவென்பாரைநோக்கி அத்துண்மைகூறி அதனை வலியுறுத்தும் உதாரணம்.

சார்ந்தாரைக் காத்த றலைவர் கடனாதல்
சார்ந்தாரைக் காத்துஞ் சலமிலனாம்—சார்ந்தடியார்
தாந்தானாச் செய்துபிறர் தங்கள்வினை தான்கொடுத்த
லாய்ந்தார்முன் செய்வினையு மாங்கு.

இ—ள். தம்மையே புகலிடமாக்கொண்டு அடைக்கலம்புகுந்தார்க்கு ஆதாரமாய்நின்றுகாத்தல் தலைவர்கடமையாதலால் முதல்வன் பிறரைநீக்கித்தன்னையடைந்தாரையே காக்கின்றவனாகியும் அதுபற்றிப்பக்ஷபாதமில்லாதவனாய்த், தன்னைச்சார்ந்துபணிசெய்வார் தம்போல ஆகாமியத்தொடர்பிலராகச்செய்து பிறர்க்கு

ஞமாயினும் அத் தத்துவஞானி சிவமேயாய்நிற்றலால் ஒருவாறு அவ்வாசனை பற்றிப்பிறழ்வரினும் பிறழ ஒட்டாதச்சிவனையேநோக்கிநிற்பனாதலால் அவ்வுடல்பற்றிவரும் ஆகாமியவினை மேலும் பிறவியைக்கொடுத்தற்குக்காரணமாய் முறுகிவளராமல் அவ்வுடம்போடு கெட்டொழியுமென்பதாம்.

இறைபணிநிற்பார்பிராரத்த சுகதுக்கங்களும் தனுகரணாதி மாயையும் மூண்டுவரினும் சலியாமற் சிவனையே நோக்கிநிற்பதெப்படி? என்பாரைநோக்கி உவமானமுகத்தால் மேற்கூறியதைவலியுறுத்தும் உதாரணம்.

நன்னனல் வேவாத நற்றவர் தம்மினும்
பண்ணமர மாச்செலுத்தும் பாகரினு—மெண்ணி
யரனடியோர்பவ ரைம்புலனிற் சென்று
மவர்திற னீங்கா ரதற்கு.

இ—ள். அக்கினிஸ்தம்பனஞ்செய்யவல்லநற்றவர், அதில்முழுகிக்கிடந்தாலும், தமதுவல்லபத்திற்சலியாமல்நிற்றல்போலவும், குதிரைநடாத்தும்பாகநூல் வல்லவர், அதனகத்திலெப்படியும்தமது வல்லபங்குறையாதிருத்தல்போலவும், புலன்வழிச்செல்லாமைக்குபாயமிதுவேயென்றெண்ணி முதல்வன்றிருவடியேநோக்கிநிற்பார். ஒருசமயம் பிராரத்தமாயையாட்சியால் அவ்வழிச்செல்லினும் தமதுநிலையினீங்கிப்பந்தப்படமாட்டாரென்பதாம்.

சார்ந்ததன்வண்ணமாய்ச் சதசத்தெனப்படுஞ்சீவர் அரனடியைச்சேர்ந்துநிற்பினும் ஐம்புலனிற்செல்லும்போது அவற்றிற்பந்தப்படாவலியினராதலெப்படி? என்பாரைநோக்கி அரனடிச்சார்பின் விசேடங்கூறி அதனைவலியுறுத்தும் உதாரணம்.

சதசத்தா மெய்கண்டான் சத்தருளிற் காணி
லிதமித்தல் பாசத்தி லின்றிக்—கதமிக்
கெரிகதிரின் முன்னிருள்போ லேலா வசத்தி
னருகணையார் சத்தணைவா ராங்கு.

இ—ள். சத்து அசத்து இரண்டினுஞ்சார்ந்து அதுவதுவாய் நிற்றல்பற்றி நாஞ்சதசத்தெனப்பெற்றனமென்று தன்உண்மை

புணர்ந்தவன், சத்தாகிய சிவனருளாலன்றி ஒன்றையுங்காணாமல் அருள்வழிநின்றே காண்பனாயின், அப்போது அசத்தாகிய பாசத்தில் (இதஞ்செய்தல்) பற்றுதலின்மையால், சத்தாகிய முதல்வனைச்சார்ந்துநிற்போர், ஒளிமுன் இருள்போலச் சத்தெதிர் தோன்றாத அசத்தாகியபுலன்களிற் பந்தப்படாரென்பதாம்.

இதமித்தல்—பெயரடியாகவந்ததொழிற்பெயர். இதம்—ஈண்டுப்பற்று. ஏகனாகிநிற்றலால் மலமின்மையும், இறைபணிநிற்றலால் மாயை கன்மங்களின்மையும் பெறப்பட்டன.

இச்சூத்திரம், பெத்தநிலையில் உயிருடன் முதல்வனொற்றுமையாய் நின்றதுபோல, இம்முத்திநிலையில் ஆன்மாமுதல்வனுடன் ஏகனாகிநிற்றலால் மலமும், இறைபணியினிற்றலால் மாயைகன்மமும் நீங்குமென்றும், ஞானம்பெற்று முதல்வனைக் காண்டலே வீடுபெறுதற்கு அமையுமெனச் சிவசமவாதி முதலியோர் கூறுதல் நோக்கிமுதல்வனைக் கண்டபோதும் நான்கண்டேனென்பதுமுதலிய மயக்கவுணர்வு நீங்குதற்கு ஏகனாகிநிற்றல் வேண்டுமென்றும், உடலுள்ளவரை பிராரத்தம் ஆகாமியம் நீங்காமையால் ஏகனாகிநிற்றல் எவ்வாறு கூடுமெனச் சுத்தசைவர் முதலியர்கூறுதல்நோக்கித் திருவருளையின்றி ஒருசெயலுமின்றென்பதறிந்துஎல்லாமும்அருட்செயலாகக்காணும்இறைபணியினிற்பார்க்குப் பிராரத்தம் தாக்காமல்உடலூழாய்க்கழியும், ஆகாமியம் வறுத்தவித்தாயொழியுமென்றும், அவ்வினைகளை அவர்க்கு அவ்வாறுநீக்கிப் பிறர்க்குக்கூட்டுதல் பக்ஷபாதமென்பாரைநோக்கிச் சார்ந்தாரைக்காக்குந் தலைமைபற்றிநீக்குதலும், சாராதாரைச் சார்விக்கும் உரிமைபற்றிக் கூட்டுதலுஞ்செய்தலால் அது பக்ஷபாதமன்றென்றும், இறைபணிநிற்பார் உண்மைஞானத்தாற் சிவமாய் நிற்றலின் பிராரத்தவினை ஏகதேசந் தாக்கும் பழக்கவாசனைபற்றி ஆகாமியம் ஏறுதென்றும், அந்தஞானநிலை பிறழாதென்றும் அதற்கு ஏது சத்தாகிய சிவத்தின்முன் அசத்து முனைத்துத்தோன்றாமையே என்றும் விளக்கியவாறு காண்க.

# சிவஞானபோதார்த்த வசனம்.

## பதினோராஞ்சூத்திரம்.

### பயனியல்.

காணுங் கண்ணுக்குங் காட்டு முளம்போற்
காண வுள்ளத்தைக் கண்டு காட்டலி
னயரா வன்பி னரன்கழல் செலுமே.

கருத்துரை. பரமேசுரனது சீபாதங்களை யணையுமாறுணர்த்துதனுதலிற்று.

இ—ள், அகத்தே சிவனோடு ஒற்றித்து ஏகனாய்நிற்றலும், புறத்தே பிராரத்தவினை தாக்காதபடி இறைபணியினிற்றலுமுடையார்க்குத், தாமாக ஒன்றை அறிதலும் விரும்புதலும் செய்தலுமாகிய அறிவு இச்சை செயல்கள் அங்கின்மையால் அவர்களால் விடயிக்கப்படும் பொருளும் அங்கு ஒன்றுமில்லை போலுமென்பாரைநோக்கி, அச்சொல்லால் அங்குச் சிவப்பொருளுமில்லையென்றாகி, அவ்வின்மைபுத்தர்கூறும் ஆலய விஞ்ஞானம்போலச் சூனியமென்றாகி, அறிவிச்சை செயல்களாகிய குணஞ்சூனியமாகவே அதனையுடைய குணியாகிய ஆன்மாவுஞ் சூனியமாய் முத்திநிலையில் ஆன்மா இல்லையென்றுமுடியுமாதலால், அம்முத்தியில் முதல்வனுடன் கலந்துநிற்கும் அவ்வான்மாவின் அறிவிச்சை செயல்கள் முதல்வனாற்றொழிற்படுமென்பதுணர்த்து முறையில், பாசநீக்கஞ் சிவப்பேறு என்னுமிரண்டனுள், முன், பாசநீக்கத்தினியல்புகூறப்பட்டெஞ்சி நின்ற சிவப்பேறு கூறுதலாகியநிஷ்டையினியல் புணர்த்துவதென்பதாம்,

சூ—ள். தானாகக் காணமாட்டாது காட்டினாற்காணுமியல்புடைய கண்ணுக்கு அதனுடன் கலந்துநின்று உருவங்களைக் காட்டித்தானும் கண்டுகொண்டுநிற்கின்ற ஆன்மாவைப்போலத், தானாக அறியமாட்டாமல் அறிவித்தாலறியும் இயல்புடைய அவ்வான்மாவுக்கு, அதனுடன் கலந்துநின்று முதல்வன் விடயங்களை அறிவிப்பதுமன்றித் தானும் அறிந்துகொண்டுநிற்கும் பேருபகாரமாகிய அத்துவிதநிலையைமறவாது கடைப்பிடித்துப் பற்றிநிற்கும் அன்பினாலே அவ்வான்மா அம்முதல்வன்றிருவடியாகிய சிவானந்தாநுபூதியைப் பெற்று வாழுமென்பதாம்.

மறவாமை அறிவின் நிகழ்ச்சியும், அன்பு இச்சையின்நிகழ்ச்சியும், திருவடியடைந்துவாழுதல், செய்கையின் நிகழ்ச்சியுமாய் முறையே காரணகாரியங்களாய், ஏகனாகி இறைபணிநிற்கும் முத்தான்மாக்களிடத்து ஒருங்குநிகழுமென்பதுபற்றி "அயரா அன்பின் அரன்கழல்செலுமே" என்றார். ஆகவே ஆன்மாக்களிடத்து எப்போதும் இச்சாஞானக்கிரியா சத்திகளுண்டென்பது விளக்கமாயது.

இதனால், முதல்வன் ஆன்மாக்களிடத்துப்பிரிவின்றி அத்துவிதமாய்க்கலந்துநின்றே காட்டுதலும், தானும் கண்டுகொண்டு நிற்றலும், மலவழுக்கு நீங்கிச் சுத்தமாய்நிற்கு முத்திநிலையில் மாத்திரமன்றிப் பெத்தநிலையிலும் அவ்வான்மா அவ்வழுக்குடன்சார்ந்து அதுவேயாய்த்தத்தம்வினைக்கீடாகப் பற்பல யோனிகளிற்புகுந்து நரகாதிகளிற்கிடந்து உழலும்போதும் விட்டுநீங்காமல் அவ்வான்மாவுட்கலந்து நின்றே காட்டியுங்கண்டும் உபகரிக்கின்றானாதலால், இவ்வுபகாரம், நமக்கினியரென்று நினைக்கப்பட்ட தாய் தந்தை மனைவிமக்கள் முதலியபந்து மித்திரராலாவது மற்றைமனிதர் முனிவர் மேலைத்தேவராலாவது நினைக்கவுமுடியாத ஓர் அரியபெரிய உபகாரமன்றோவென்றுள்ளபடி அறிந்து அதனை உள்ளிட்டு நோக்குந்தோறும் நோக்குந்தோறும் அம்முதல்வனைப்பற்றிமேலெழுகின்ற இச்சையாகிய பேரன்பு அணைகடந்தவெள்ளம்போல அம்முதல்வன் றிருவடியிற்செல்லுமாதலால், அப்போது அவ்வன்பே தானாய்விளங்கித்தோன்றும் பேரானந்தத்தையனுபவிக்கப்படுமென அவ்வறிவிச்சைசெயல்கள்மூன்றுங்கண்டுசிவனையேபற்றிநிற்றலுணர்த்தி அதீதநிலையினியல்புகூறியவாறுகாண்க.

அத்துவிதமென்பது, சையோகமுதலிய மற்றையசம்பந்தப் பொருள்படாமற் சிற்றறிவுமுற்றறிவு முதலியவேற்றுமையுள்ள சீவன் சிவன் என்னும் இரண்டுபொருள்கள் தம்முட்பிரிவின்றி அபேதமாய் விளங்குதற்குரிய சம்பந்த விசேடமாம், இதனை உமாபதிசிவம், "அறிவொளிபோற்பிறிவரும் அத்துவிதம்" என்று விளக்கியது "அங்கியுமொன்றிற்றங்கி நின்றல்லது—தன்றொழினடத்தா" மைபோலமுதல்வன் உயிரையதிட்டித்து நின்றே எத்தொழிலுஞ் செய்வனென்றுணர்க.

ஆன்மா, தன்னுடனுடலைத்தி கிற்குப்முதல்வன் அறிவித்தமட்டில் அறியமாட்டாது. அறிவித்ததை அவனும் அறிந்துகொண்டு டனின்றுற்றுன் அறியுமென்பதை, "தொண்டனே னினையுமா றினையே" "விரும்புமா விருப்பே" தொடருமாதொடரே" நுகருமா நுகரே" என்பனவாதியாசமுத்திரிலேவிளக்கியருளியதிருவாசர்க்கனாலுங்காணலாம். இவ்வுண்மைநோக்கியே, "அறிவானுந்தானே யறிவிப்பான்றனே" என்றருளிய அம்மையார், "அறிவாயறிகின்றன்றனே" என்று மேலும் அருளிச்செய்தாரென்க.

அறிவானுமென்றது அறிவித்தற்காக அறிதல். அறிவாயறிகின்றனென்றது விஷயங்களில் அழுந்துவித்தற்காக அறிதலென்க.

இச்சூத்திரம், காணுங்கண்ணுக்குக்காட்டிமுளம் போற்காணவுள்ளத்தைக்காட்டிக்கண்டல்" எனவும், அதனை "அபராஅன்பின் அரன்கழல்செலுமே" எனவுமிரண்டதிகரணமுள்ளது.

## முதலதிகரணம்

முதல்வனிடத்து உயிர்க்கு அறிவிக்கும் உபகாரம் ஒன்றுதானுள்ளதென்பாரைநோக்கி அறிந்து உடனிற்கும் உபகாரமுமாகிய அத்துவிதநிலை யுணர்த்தற்கெடுத்துக்கொண்ட இச்சூத்திரத்தின்முதற்பாகத்தைப் பதம்பிரித்துரைக்குமேற்கோள்.

ஈண்டு அவனும் அவற்றது விடயத்தையுணருமென்றது.

இ—ள். முதல்வன் அறிவிக்க அறியும்உயிர்களாலறியப்படும் விடயத்தை அவ்வுயிர்களறிதலேயன்றி அவனும் உடனின்றறிவனென்பதாம்.

முன், "அவையேதானேயாய்" என்றும், "தாந்தமுணர்வின்றமியருள்" என்றும்பொதுவகையாக் கூறியஅத்துவிதநிலையை ஈண்டுக் காணும்உபகாரத்தில்வைத்துஇனிதுவிளக்கியதுகாண்க.

கண்சடம் அதனுற்காணப்படும்பிரயோசனம் உயிர்க்கேஆதலால் கண்காணும்போது உயிர் அக்கண்ணுடனின்று காணவேண்டியதேயாம், உயிர் அறிவுடையது. அறியும்பயன் முதல்வனுக்

கன்றுஉயிர்க்கேயாம். ஆதலால் முதல்வன் அறிவித்தல் மட்டிலமை யாது அவனும் உடனின்று அறிவனென்பதுபொருந்தா தென் பாரைநோக்கி மேற்கோளைச் சாதிக்குமாறு.

இவ்வான்மாக்கள் அவனையின்றியமைந்து ஒன்றையும் விட யியாவாகலான்.

இ—ள். கண்ணுக்குப் பொருளைக்காட்டும்விளக்கொளியானது அக்கண்ணொளியினும் அதனாற்காணப்படும்பொருளினுங்கலந்து நின்றாற்றான், கண்பொருளைக்காணும். அப்படியின்றிவிளக்கொளி கண்ணொடுமாத்திரங்கலந்து, காணவேண்டியபொருளிருக்குமிட த்துச்சென்றுகலவாமல் அப்பொருள் இருட்டிலிருந்தால், அப் போது, அக்கண் தன்னிடத்துவிளக்கொளிகலத்தலாகிய காட்டு முபகாரத்தைப்பெற்றிருந்தும் அப்பொருளைக் காணமாட்டாத ன்றோ? அதுபோல, அறிவிக்க அறியுமுயிர்களும், முதல்வனறிவு தம்மொடுகலந்து தாமறியவேண்டிய பொருளினுந்தம் மொடுகூடவேசென்றுகலந்துநின்றாற்றான் அறிவுவிளங்கப்பெற் றுஅப்பொருளை யறியுமன்றித்தனித்துநின்று அறியவுமாட்டா அனுபவிக்கவுமாட்டாவாதலால், முதல்வன் உயிர்க்குஅறிவுவிள ங்கும்படி அறிவித்தலாகியகாட்டுதல் மாத்திர மன்றி அவ்வுயிர் கள் விஷயங்களிற்பற்றிநின்றனுபவிக்கும்படி உடனின்று அறித லாகிய காணுதலும் அவசியம் வேண்டப்படுதலால் ஈண்டுஅவனு மஅவற்றதுவிடயத்தை யுணருமெனமேற்கொண்டதென்பதாம்.

முதல்வனும்உயிருடனின்றுஅறிவனேல் அவன்அறிதற்கும் உயிர்அறிதற்கும் வேற்றுமையில்லையாய், அறியுமுயிர் பந்தமுறல் போலமுதல்வனும் பந்தமுறுவனென்பதாமாதலால் உடனின்று அறிவனென்பது பொருந்தாதென்பாரைநோக்கி வேற்றுமையுங் காட்டி அவனும் அவற்றது விடயத்தையுணருமென்றதை வலியுறு த்தும் உதாரணம்.

ஐந்தையு மொக்க வுணரா தவற்றுணர்வ
தைந்தும்போ னின்றுணரு மாகலா—னைந்தினையு
மொன்றொன்றாப் பார்த்துணர்வ துள்ளமே யெவ்வுலகு
மொன்றொன்றாப் பார்க்கு முணர்ந்து.

இ—ள். ஐம்பொறிகள் ஐம்புலன்களில் ஒவ்வொன்றைமாத்திரம் அறிதல் போல, ஆன்மாவும் விஷயங்களில் அது அதுவாய் ஒற்றித்துநின்று அறியவேண்டியதொன்றையே அறியுந்தன்மைத் தாதலால், அவ்வைம்புலன்களையும் ஒருசேரஅறியமாட்டாது, ஒவ்வொன்றையறிந்தனுபவிப்பதாம். அதுபோல சார்ந்ததன்வண்ணமாய்ப்பலதிறப்படுதலின்றி எப்போதும் ஒரேபடித்தாயுள்ள சிவம், எல்லாவுயிர்களு மறியும்எல்லாவிஷயங்களையும் அவ்வுயிர்களிற்கலந்துநிற்றலால், பொதுவகையாலொருசேரவறிந்துடனுய்நிற்றலாற் சிறப்பாகவும் அறிவனென்பதாம்.

இதனால், உயிரின்அறிவுக்கும் முதல்வன்அறிவுக்கும்வேற்றுமையுண்டென்பதும் அதனால் பந்தப்படானென்பதுந்தெளியப்படுமென்க.

முதல்வன், அறிவிப்பது மன்றித் தானுமறிவனென்றால், பெத்தநிலையில் தனக்கு வேறாகிய உலகப்பொருளை யறிவதாதலால்அதுபொருந்தும்; முத்திநிலையிலுந் தன்னை அறிவிப்பதுடன் தானும் அறிவனென்றால் அப்போதுதன்னைத்தானறிதலாகியகுற்றம் (ஆன்மாச்சிரயதோஷம்) வருமாதலால், தானும்அறிவனென்பது முத்தியிற்செல்லாதென்பாரைநோக்கி அங்கும் அவ்வாறு அறிவனென்பதுணர்த்தி அதனைவலியுறுத்தும் உதாரணம்.

ஏகமாய் நின்றே யிணையடிகளொன் றுணரப்
போகமாய்த் தான்விளைந்த பொற்பினால்—னேகமா
யுள்ளத்தின் கண்ணானா னுள்குவா ருள்கிற்றை
யுள்ளத்தாற் காணானோ வுற்று.

இ—ள். பெத்தநிலையில் மலத்தைச்சார்ந்து மலமேயாய்ப்பொறிவழியிற்பலவேறாயறிவது போலன்றி ஆன்மா; முத்திநிலையிற் சிவத்தைச்சார்ந்து சிவமேயாய் ஒரேபடித்தாயறியுஞ் சிவனருளின்வழியாகத் திருவடிகளையேஒரேமுகமாயுணரவே, அவ்வான்மாவுக்குஅம்முதல்வன்பரபோகமாய் மேலும்மேலும்புதிது புதிதாய் விளையும் பொலிவுடையனுதலாலும், அவ்வாறுணருமிடத்து அம்முதல்வன் அவ்வான்மாவின் அறிவை விட்டுநீங்காதவனுதலாலும்

கருதுவார் கருதிய பொருளாகிய தன்னை அவ்வான்மவறிவுடன் கூடிநின்றறிவனென்பதாம்.

இவ்வெண்பாவில், "உள்ளத்தான்" என்றதிலுள்ள "ஆன்" உருபுஉடனிகழ்ச்சிப்பொருட்டாதலால் "அவரறிவுடன்" என்று உரையருளிற்றென்க. இந் நூலாசிரியர் "உள்குவாருள்கிற்றை" என்று ஸ்ரீ வாகீசசுருதியைத்தமது வெண்பாவிலமைத்தருளியது, முன்னோர் மொழியையும் பொன்னேபோற் போணிக்கொள்ளவேண்டியது பின்னோர்க்குரியகடப்பாடென்பதை எம்மனோர்க்குத் தெரிவித்தருளுந்திருவுளக் கருத்தாமென்க. அச்சுருதி [போக்கித்

கள்ளனேன் கள்ளத் தொண்டாய்க் காலத்தைக் கழித்துப்
தெள்ளியே னாகிநின்று தேடினே னாடிக் கண்டே
னுள்குவா ருள்கிற் றெல்லாமுடனிருந்தறிதி யென்று
வெள்கினேன் வெள்கி நானும் விலாவிறச் சிரித்திட்டேனே.

என்பதாம். இதன்முதல்வரியிற் பெத்தநிலையும் அடுத்தவரியில் முத்திநிலையும் விளக்கி, நினைப்பவர் நினைப்பனயாவையும் அவரறிவைவிட்டுநீங்காமலுடனிருந்துமுதல்வனாகியநீயே அறிகின்றாயென்பதுநோக்கி, நான்கண்டேனென்றுமுன்கூறியதனால்வெட்கத்தையடைந்தேனென்றுநம்மனோர்க்காகநமதுவாகீசசிவம்தன்மேல்வைத்தருளிய அருமைப்பாட்டைஉற்றுநோக்கி உண்மைதெளிக. இம்மட்டோ அச்சுருதி, "வேண்டுவார்வேண்டுவதேயீவான், என்பதில் வேண்டுவதை அவரறிவினுடனிருந்தறிந்து ஈவானென்னும் பொருடந்துமேலும் விளக்குகின்றது.

எவ்விடத்துஞ் செல்லுதற்கே, "வேண்டுவார் வேண்டுவதேயீவான்" என்றதுபோல, பெத்தமென்றாவது முத்தமென்றாவது பிரித்துக்கூறாமல், "உள்குவாருள்கிற்றை" என்று பொதுப்படக்கூறியருளினார். அதனால், முதல்வன் பெத்தநிலையில் உலகப்பொருளையும் முத்திநிலையிற் சிவமாகிய தன்னையும் அவ்வான்ம அறிவிற்கலந்துடனின் றறிவனென்றவாறாயிற்று. ஆகவே ஆன்மா முதல்வனையறியும்போது, அவனுள்குவாருள்கிய பொருளாதலால் அவ்வாறு அறியப்படுகின்ற அவனும் அவ்வறிவுடனின்று தன்னையறிவனென்க.

மேலைவெண்பாவிலுள்ள ஐம்பொறிபோலென்று அநுமானங் காட்டுவாராய் "உள்குவாருள்கிற்றை உள்ளத்தான் உற்றுக்காணானே" என்றும், உள்குவாருள்கிய பொருளாதல் இரண்டிடத்தும் ஒக்குமென்பாராய், "ஏகமாய்நின்றே யிணையடிகளொன்றுணரப் போகமாய்த் தான்விளைந்தபொற்பினான், என விடயித்தலினாகு மியல்பும், ஏகமாயுள்ளத்தின் கண்ணானன்" என அறிவுவிளங்குதலினாகுமியல்பும் எடுத்தோதினார்.

பரபோகமாய் என்னாமல் "போகமாய்" என்று பொதுப் படக்கூறியதும், பெத்தநிலையில் விடயபோகமும் முத்திநிலையிற் சிவபோகமுமாகிய இரண்டிக்கும்பொருந்தும்பொருட்டாமென்க.

நிலத்தியல்பு வன்மையாயினும் இளகிய சேற்றுநிலத்திற் சென்றவன் பின்பு வலியநிலத்திற் செல்லுமிடத்து அவனுக்கு அவ்வன்மை செயற்கையாய்த்தோன்றல்போல, விடயபோகத் திற்சென்றவன் அதைக்கடந்து சிவபோகத்திற்செல்லுமிடத்து அது செயற்கைபோலத்தோன்றுமாதலாற், போகம் என்றமட்டில மையாது "ஆய்" என்று ஆக்கச்சொற்புணர்த்தியும் அப்போக நுகர்ச்சிக்குக் காரணம் உணர்ச்சியே ஆதலால் "உணர" என்று அக்காரணத்தை முன்வைத்தும் விளக்கியருளினார். இணையடிகளை உணருந்தோறும் போகம் மேலும் மேலும் புதிதாய்விளைதலை, "புணர்ந்தாற் புணருந்தொறும்பெரும்போகம் பின்னும்புதிதாய்' என்ற திருவாக்கானுங்காண்க. துணிவுபற்றி "விளைந்த" என்றருளியதென்க.

மேற்கூறிய ஐம்பொறிகள், விஷயங்களை ஆன்மாவின்பொருட்டே அதனோடுகலந்துடனின்றறிதல்போல, முதல்வன் தன்னை அவ்வான்மாவின்பொருட்டே அதனோடுகலந்துடனின்றறிவன். அப்படியறிவது, கண், கண்ணாடியினின்றுந்தன்னைக் காண்பது போல், முதல்வன் ஆன்மாவி னறிவுடனின்று தன்னைக்காண்பதாமாதலால் இதுபோன்ற வற்றிற்குத் தன்னைத்தான் காண்பதென்னுங்குற்றம் (ஆன்மாச்சிரயதோஷம்) சேராதென்க.

கண், கண்ணாடியில் பிரதி விம்பத்தைக்கண்டதாதலால் தன்னைக் கண்டதாகாதெனில்? அப்படியன்று. அக்கண் தன்னிடத்

துள்ள குணதோஷந் தெரிதற்காகக்கண்ணாடியைப்பார்ப்பதன்றிப் பிரதிவிம்பத்தைபார்த்தற்கன்று; பிரதிவிம்பம்போலத் தோன்றுவது விம்பமேயன்றி வேறன்றென்பது சிவாகம நூற்றுணிபாதலால், கண் தன்னையே கண்டதென்க.

ஆன்மா அறிவதைமுதல்வனும் உடனின்றறிவனென்று அறிவு மாத்திரம் பற்றிக்கூறினும், "எத்திறஞானமுள்ள தத்திறமிச்சைசெய்தி" என்பதுநோக்கி, ஆன்மாவின்இச்சைப்படிதானும்இச்சித்து அதன்செய்கைப்படி தானுஞ்செய்து அவ்வான்மாக்களின் அறிவிச்சைசெயல்கள்தொழிற்படுதற்குத் தன் அறிவிச்சைசெயல்களைத் தொழிற்படுத்துவனென்பதும், பெத்தத்தில் (அவன் இவனாய்) முதல்வன் ஆன்மாவாய் முற்பட்டுநின்று விஷயங்களைப்பற்றுதலால் அதனால்வரும் சுகதுக்கங்கள் முதல்வனைச் சாராமல் ஆன்மாவையே சாருமென்பதும், முத்தியில் (இவன் அவனாய்) ஆன்மாமுதல்வனாய்நின்று விஷயங்களைப்பற்றுதலால் முதல்வனையொழிந்தவிஷயங்கள் ஆன்மாவைச் சாராமல் முதல்வனை அவமறையேன்று கொள்வானென்பதும் இனிதுவிளங்கும்.

அவன் இவனாய், இவன் அவனாய் நிற்றல்;
அவனிவனா தவனருளாலல்ல
திவனவனாகானென் றுந்தீபற
வென்று மிவனேயென் றுந்தீபற என்னுந்திருவுந்தி

யாரும், அதனைவிளக்கி

அவனிவனாய் நின்ற தவனருளா லல்ல
தெவனவனாய்நின்ற தேழா—யெவனிதனிற்
றொன்றுமாப் புல்லூரி தொல்லுலகி லம்மரமா
யின்றிடுமோ சொல்லா யிது. என்றுகூறுந்திருக்களிற்றுப்

படியாருங் கூறியவற்றாலுங்காண்க.

இவ்வுண்மைநோக்கியே உலகத்தில் ஒன்றை ஈவாரும் ஏற்பாரும் சிவார்ப்பணமென்று கருதியே செய்யவேண்டும். அப்படிக் கருதாமல் தாமேகொடுத்ததாகவும்தாமேவாங்கியதாகவும் நினைப்பது குற்றமாமென்றுசிவாகமங்கள்கூறியதும், சித்தியார், "யாதொ

ருதெய்வங்கொண்டரத்தெய்வமாகியாங்கே— மாதொரு பாகனார் தாம்வருவர்" என்றதும், அவ்வுண்மை அறிந்தவிடத்து எல்லாஞ் சிவமாகவேகண்டு அனுபவிப்பார்க்கு வினைப்பயன்தாக்காது யாவுஞ் சிவானந்த மாகவே விளங்குமென்னுங்கருத்தால் இந்நூலில் "எத்தனுவினின்றுமிறைபணிபார்க்கில்லைவினை"--"முற்செய்வினையுந்தருவான்முன்" என்றும், திருவுந்தியார். "பெற்றசிற்றின்பமே பேரின்பமாய்" என்றும், திருக்களிற்றுப்படியார். "உடம்புடைய யோகிகடா முற்றசிற் றின்ப—மடங்கத்தம் பேரின்பத் தாக்கி," என்றும், திருவாசகம் "காணுங் கரணங்களெல்லாம் பேரின்பமெனப்—பேணுமடியார்"—என்றும், எல்லாஞ் சிவமாயிருந்ததே" என்றும் இவ்வாறு அருளியதுமாமென்க.

## இரண்டாமதிகரணம்

முதல்வனுடன் ஏகமாய்நின்றார்க்கு அறிவிச்சைசெயல்கள் அம்முதல்வனுபகாரத்தையறிதலும், அன்பு கூர்தலும் திருவடி சேர்தலும் எப்படிநிகழு? மென்பாரைநோக்கி, நிட்டையின்[illegible] புணர்த்துதற்கு எடுத்துக்கொண்ட இச்சூத்திரத்தின்இரண்டாம் பாகத்தைப்பதம்பிரித்துரைக்கும்மேற்கோள்.

இனிப்பத்தியினான் மறவாதேத்த அவனது சீபாதத்தையணையுமென்றது.

இ—ள். கலந்துடனின் றறிவித்தும் அறிந்தும் வருமுபகாரமாகிய அத்துவித நிலையை மறவாதுகடைப்பிடித்துநிற்கும்பேரன்பினாற் றமக்கு முதல்வனையின்றித் தனித்தொருசெயலுமில்லை எல்லாம் முதல்வன் செயலே யென்னுமுண்மைபற்றி அவனருள் வழிநிற்றலாகிய நிஷ்டையினாலே திருவடியாகிய சிவானந்தானுபூதியைப் பெறுவரென்பதாம்.

எனவே, எல்லாமுதல்வன்செயலேயென்னு முண்மைபற்றி அவனருள்வழிநிற்றலே நிஷ்டையென்பது தெளியப்படும்.

பத்தியினால் மறவாதேத்தினும் சீபாதத்தையணைதல்பாமுத்தியினன்றிமுடியாதென்பாரைநோக்கி மேற்கோளைச்சாதிக்கும்

அவன் அந்நியமின்றிச் செய்வோர்செய்திப்பயன்விளைந்து நிற்றலான்.

இ—ள். முதல்வன் உயிர்களின்வேறாகநில்லாமல் அவ்வுயிர்களின்செயலையறிந்து தன்னருள்வழிநிற்கும் நிஷ்டையாகிய அச்செயல் இடையீடின்றித்தொடர்ந்துநிகழுமாயின் அச்சிவானந்தானுபூதிப்பயனை அப்பொழுதே விளைத்தும், இடைவிட்டுநிகழுமாயின் அது மேலுமேலுமுதிர்ந்து இடைவிடாமல் நிகழுநிலை வந்தவுடன் விளைவித்தும் உடனின்றருளுவனாதலால் அவ்வாறு மேற்கொண்டதென்பதாம்.

முதல்வன்றிருவடியடைதல், உடம்பு நீங்கியபின்னன்றிஉடம்புள்ளபொழுதாகாது. அதுமேல் சூரியனொளிபோலப்பக்கத்துள்ளார்க்குந் தெரியவேண்டுமென்பாரை நோக்கி, அதுகூடாமையுங் கூடுமாறும் உவமையாலுணர்த்தி ஏதுவை வலியுறுத்தும் உதாரணம்.

அருக்கனேர் நிற்பினு மல்லிருளே காணார்க்
கிருட்கண்ணே பாசத்தார்க் கீச—னருட்கண்ணாற்
பாசத்தைநீக்கும் பகலலர்த்துந் தாமரைபோ
னேசத்திற் றன்னுணர்ந்தார் நேர்.

இ—ள். சூரியனொளி எல்லாருக்குஞ்சமமாக நிற்பினும், ஒளியுள்ள கண்களுக்கன்றி குருட்டுக்கண்ணுக்குவிளங்காமலிருளாகவே நிற்றல்போல, முதல்வன் எவ்விடத்தும் சமமாகநிற்பினும் மலநீங்கிய முத்தர்க்கன்றி மலபெத்தருக்கு அம்மலமாகவே நிற்பன். ஆதலால் சிவன் முத்தர்கள் அம்முதல்வனது திருவடிச்சிவானந்தமனுபவிப்பது மற்றவர்க்குத் தெரியமுடியாதென்க. ஆனால் அச்சீவன்முத்தரும் உடம்புடனிருத்தலாற் பாசமுடையரேயாவரெனில்? ஒருகுளத்திற் பலதாமரை அரும்புகளிருப்பினும், அவைகளில் பக்குவப்படாத சிற்றரும்புகளை நீக்கிவிட்டு மலரும்பக்குவமுள்ள பேரரும்புகளைமாத்திர மலரச்செய்யும் சூரியன்போல, முதல்வன், யாவரு முடம்புடையராயிருப்பினும், அவருள்ளே பக்குவமில்லாத பெத்தரை நீக்கிவிட்டுத் தன்னை மறவாதன்பினுணர்ந்து அருள்வழிநிற்கும்பக்குவமுள்ள சீவன் முத்தருக்குத்

திருவருட்பார்வையாற் பாசநீக்கி அவரறிவைமலரச்செய்வன். ஆதலால் அவர்கள் உடம்புடனிருப்பினும் பாசமுள்ளவரல்ல ரென்பதாம்.

சீவன்முத்தர்க்கும் பரமுத்தியிலன்றிப் பாசநீக்கிஅறிவை மலர்த்துவதில்லையென்று மேலும்மாறுபட்டுக்கூறுவாரை நோக்கி, நீக்கல் மலர்த்த லிரண்டின்முறை இவ்வாறென்றுணர்த்தி அதனை வலியுறுத்தும் உதாரணம்.

மன்னு மிருளை மதிதுரந்த வாறன்றின்
மன்னு மரனை மலந்துரந்து—தன்னின்
வலித்திரும்பைக் காந்தம் வசஞ்செய்வான் செய்தல்
சலிப்பில் விகாரியலன் றான்.

இ—ள். உயிரைத் தானாக்கிக்கொள்ளுமிச்சை மிகுதியால் அவ்வுயிருடன் அநாதியே அத்துவிதமாய்க்கலந்துள்ள முதல்வன் பிறைமதிகண்களினிலைபெறும் இருளைநாளடைவிலே லேசுலே சாக நீக்கிவந்து பௌர்ணிமையில் முழுது நீக்கிவிடுதல்போல, அவ்வுயிரிடத்துள்ள மலவலியை லேசு லேசாய்ப்பக்குவநோக்கிப் படிமுறையாக நீக்கிவந்துமுடிவில் முழுதும் ஒழியச்செய்[redacted]கா தம்இரும்பைத் தன்வசமாக்கல்போல. மலவலியை லேசு லேசாய்நீக்கும்தோறும் அவ்வப் பக்குவத்துக்குரிய அருட்சத்திபதியச் செய்து அவ்வுயிரைத் தன்வசமாக்கிவருஞ் செய்கையினால் அவனுக்கு ஒருகாலத்துஞ் சலிப்பில்லை அதனால்காந்தம்போலச் சந்நிதி மாத்திரையிற் செய்யும் அம்முதல்வன் விகாரப்படுவானு மல்லன் என்பதாம்.

மலவலியைப்படிமுறையால்நீக்கி அம்முறையே அருட்சத்தி பதிவித்தலாற்றான் அம்முறையே சத்திநிபாதஞ் சரியாதி சிவபுண்ணியமுதலாயின நால்வகையாய் அவைகளும் ஒவ்வொன்று நன்னான்காய் மேலும்பலவகையாய் விரிந்தனவென்க.

பாஷாண வாதசைவர், உயிருக்குக் குணம்போல அநாதியாயுள்ள மலம் அவ்வுயிரின்வேறாய்ப்பிரிக்கப்படாதாதலால் அதனை முதல்வன் நீக்குவான் (மலந்துரந்து) என்று முற்கூறியது

பெர்ருந்தாதென்பது நோக்கி, அருத்தாபத்தியால் அதனைவலி யுறுத்தும் உதாரணம்.

நசித்தொன்றி னுள்ள நசித்தலா லொன்று
நசித்திலதே லொன்றாவ தில்லை—நசித்துமல
மப்பணைந்த வுப்பி னுளமணைந்து சேடமாங்
கப்பின்று மீசன் கழல்

இ—ள். திருவடியடையும்போது, உயிர்தான் கெட்டுப்போ யடையுமெனில்? கெட்டது அடைவதில்லை. கெடாமலடையுமெ னில்? அப்போதும் முதல்வனில்வேறாய் நிற்பதன்றி அடைவ தில்லை. ஆதலால்இவ்விரண்டுக்கும்வேறுயொன்றுண்டென்றுகொ ள்ளும் அருத்தாபத்தியால் நோக்குமிடத்து உப்பானதுநீரை அ டையும்போது தன் கடினத்தன்மை நீங்கியடைதல்போல, உயிர் களும் மலவலி நீங்கப்பெற்றே முதல்வனையடைந்து அடிமையாய் விளங்கும். அவ்வுயிர்கள் பின்வேறுபட்டு மீள்வதில்லை யென்பது தாம்.

முன், "அவையுடைமை யாளாநா மங்கு;" என்றுஇரண்டா ஞ்சூத்திரத்திற்கூறியது எல்லாப்பசுக்கள் பாசங்களுக்கும் பொ துவாகியஉடைமைஅடிமைத்தன்மைகளாம். இங்குக்கூறியதுசிற ப்பாகிய அடிமைத்தன்மை யாதலால் இதனை அப்பொதுவின்வே றாக எடுத்தோதினார். இங்குமுத்திநிலைகூறிமுடிந்தமையால் முடி வில் "கப்புஇன்றும்" என்று, மீளாமைவிளக்கி யருளினார். கப்பு —பிளவு.

முன்(௪)ம் சூத்திரம்" ஆன்மா,மலத்துடன்கூடிக்கேவலாவஸ் தையும்,(௫)ம் சூத்திரம் கருவிகளுடன் கூடிச் சகலாவஸ்தையும் (௬)ம் சூத்திர முதல்இவ்வளை அருளுடன்கூடி அம்மலவலியுங் கருவிகளும் நீங்கப்பெற்றுச் சுத்தாவஸ்தையும்பொருந்துமென்ற அம்மூன்றுநிலையினும்* அவ்வான்மா தன்னியல்பு கெடாமல் நிற் குமென்பது உவமையால் விளக்கிமேற்கூறியதனைவலியுறுத்தும் உதாரணம்.

பொன்வாண்முன் கொண்மூவிற் புக்கொடுங்கிப் போயகலத்
தன்வாளே யெங்குமாந் தன்மைபோன்—முன்வாண்

மலத்தின் மறைந்துள்ள மற்றுலகை யுண்ணு
மலத்திரித்துச் செல்லும் வரத்து.

இ—ள். சூரியன் காலைப்பொழுதில் மேகத்துள் மறைந்து, அம் மேகஞ்சிறுகாற்றாற் சிறிது நீங்கியபோது ஏகதேசமாய்த் தன் னொளி ஒடுங்கித்தோன்றி, அம்மேகம் பெருங்காற்றான்முழுதுநீங்கி யபோது, எங்குந் தன்னொளியேயாய்த்தோன்றுந்தன்மைபோல, ஆன்மா அநாதியே தன்னறிவு மூலமலத்துள் மறைப்புண்டு கேவ லாவஸ்தைப்பட்டுப், பின்பு கலையாதிகருவிகளுடன்கூடி ஏகதேச மாயறிவுவிளங்கிச் சகலாவஸ்தையினின்று உலகப்பொருளை யறி ந்தநுபவிக்கும். அதன்பின்பு முதல்வனருளால் மும்மலம்முழுது நீங்கப்பெற்று வியாபகஅறிவுவிளங்கப்பெற்று அவனதுசீபாதத் தையுணர்ந்து சுத்தாவஸ்தையிற் பேரின்புற்றுவாழுமென்பதாம்.

சூரியன்ஒளி மேகத்தால் மறைந்திருந்ததன்றிக் கெட்டொழி ந்ததில்லை. கெட்டதானால் பின்பு தோன்றாது. அதுபோலஆன்ம அறிவின்றன்மை மலத்தால் மறைவுற்றதன்றிக் கெட்டொழிந்த தில்லை யாதலால் ஆன்மாவுக்கு மூன்றவஸ்தையிலும் அறிவு[redacted]தன் மை யுள்ளதே என்க.

இச் சூத்திரம், முற்கூறிய சாதனத்தாலெய்தும் பயனாகிய பாசநீக்கம் சிவப்பேறுஎன்னு மிரண்டிற் பத்தாஞ்சூத்திரங்கூறிய படி பாசநீக்கம்பெற்றஆன்மா, தன்னுடன் முதல்வன் எப்பொ ழுதும் பிரிவின்றி அத்துவிதமாய் நின்று காட்டிக் காணும்பேருப காரத்தை மறவாது நினைக்குந்தோறுமேன்மேல்முறுகி வளர்ந் தெழும் பேரன்பால் அவனது திருவடியடைந்துசிவானந்தம் பெ ற்றுவாழுதலே சிவப்பேறென்பதும், முதல்வன் காட்டுதல் மாத் திரமன்றிக் காணுதலின்றென்பாரை மறுத்து, அம்முதல்வன் ஆன்மாவுடன் எக்காலத்தும் பிரிவின்றி நிற்கும் அத்துவித நிலை யை நன்கு விளக்கிக் காணுதலுஞ் செய்வனென்பதும், முத்தியி லும் காணும் உபகாரஞ் செய்வனேல்அதுதன்னைக்காண்டலாகிய குற்றமா மென்பாரை மறுத்து, அக்காண்டல் ஆன்மாவின் பொருட்டாதலாலும் கண் கண்ணாடியிற் றன்னைக் காண்டல்போ லு மாதலாலும் அதுகுற்றமாகாதென்பதும், பாசநீங்கி ஏகமாய் நின்றார்க்கு, மறவாமை, அன்புசெய்தல், திருவடியடைதல் எப்ப

டி? என்பாரைநோக்கி, மறவாமல் அன்புடன் அவனருள்வழி நிற்றலாற்றிருவடியடைதலேஏகமாய்நிற்கும்சிவானந்தானுபூதியா மென்பதும், திருவடியடைதல் பரமுத்தியிலன்றிக் கூடாதென் பாரைநோக்கி, முதல்வன்வேறின்றி அவரவர்செய்கைக்குரியபய னைவிளைவித்து நிற்றலால் அது கூடுமென்பதும், அதுஉடம்புள்ள போது கூடாதென்பாரைநோக்கி, உடம்புள்ளபோதும் சிவன் முத்தரைப் பாசம்பற்றாமையால் அது கூடுமென்பதும், அச் சிவ ன்முத்தர்க்குப் பாசநீக்கிஅறிவைவிளக்குதல் பரமுத்தியிலன்றி இல்லை யென்பாரைநோக்கி, இருளைப்பிறைமதியோட்டுதல்போல அவர்களுக்கு முதல்வன்பாசநீக்கி அறிவைவிளக்கி, இரும்பைக் காந்த மிழுத்தல்போலத் தன்வசமாக்கிக் கொள்வனென்பதும்; அப்பாசம் ஆன்மாவின்குணம்போல அநாதியாதலால் நீங்காதெ ன்பாரைநோக்கி, நீரிற்சேர்ந்த உப்புத் தன்கடினம் நீங்கிவிடு தல்போல திருவடியடைந்த ஆன்மாவின்பாசவலிநீங்கிவிடுமென் பதும், சூரியனொளி மேகத்தின்மறைதல் சிறிதுவிளங்கல் முழு தும் விளங்கல்போல ஆன்மாவுக்குக் கேவல சகலசுத்தாவஸ்தைத [illegible]ற் றன்னறிவி னியல்பு கெடாதென்பதும் விளக்கியவாறு காண்க.

## பன்னிரண்டாஞ்சூத்திரம்

—பயனியல்.—

செம்மலர் நோன்றாள் சேர லொட்டா
வம்மலங் கழீஇ அன்பரொடு மரீஇ
மாலற நேய மலிந்தவர் வேடமு
மாலயந் தானு மரனெனத் தொழுமே.

கருத்துரை. அசிந்திதனாய்நின்ற பதியைச் சிந்திதனாய்க்கண்டு வழிபடுமாறுணர்த்துதனுதலிற்று.

இ—ள். அபராஅன்பின் அரன்கழல்சென்றமுத்தர்க்குச் சிவன்முத்திநிலையில், அவ்வயராத அறிவும் (அன்பு) இச்சையும் அரன்கழலிற்செல்லுஞ் செயலு மாகியமூன்றும் பிறழாதநிலைத் துள்ளனவேயாம். ஒருவாறுபுறஞ்செல்லுமேல் அவைசெல்லு மிடம் இவை என்றுணர்த்துமுறையில், வாக்குமனங்களுக்குஅதீ

நமாய் அன்பினால் மறவாதே தக்தமுன்னின்றருளு முதல்வனை, வாக்குமனங்களுக்கு (க்கோசரமாகும்படி) அதீதமாகாதபடி தெளியக்கண்டு வழிபடுமுறையுணர்த்துவதென்பதாம்.

கு—ள். அயரா அன்பின் அரன்கழலணைந்த சீவன்முக்தன், முதல்வனது, செந்தாமரைமலர்போலவிரிந்து விளங்கி எவற்றையுந்தாங்கும் ஆதாரமாகிய திருவடிகளை அணையவொட்டாமல்மறத்தலைச்செய்யு மியல்புடைய மும்மல அழுக்கை ஞானநீரால் கழுவி, அம்மட்டிலொழியாமல், அயரா அன்பினால் அவ்வாறுகழுவி வழுவாதுநின்ற மெய்ஞ்ஞானிசளுடன் கலந்துகூடி, மலமயக்கம் பற்றற நீங்குதலால் அன்பிற்சிறந்த அவரது திருவேடத்தையும் சிவாலயத்தையும் சிவனெனவே கண்டு வழிபாடுசெய்து வாழ்வனென்பதாம்.

தோன்றல் = தங்குதல். "மலங்கழீஇ" என்றதனால் அறிவு செல்லுமிடமும், "அன்பரொடுமரீஇ" யென்றதனால் இச்சை செல்லுமிடமும், "தொழும்" என்றதனால் செயல்செல்லுமிடமும் விளக்கியவாறறிற்று. ஆகவேசீவன்முத்தரின் அறிவு இச்சைசெயல்கள் புறஞ்செல்லினும்வேறிடங்களிற்செல்லாமல்இவ்விடங்களிலேயே செல்லுமென்பதுதெளிவாமென்க. இம்மூன்றும் பிரிவின்றிமுதல்வனைப்பற்றிஒரேஇடத்தில் ஒருங்குநிகழ்தலால், அச்சீவன்முத்தர்க்கு வேறிடங்களைப்பற்றும் விடயவேற்றுமையின்றென்க. தொழுக. என்னாது, தொழும். என்றதனால் இது சீவன்முத்தரியற்கை என்பது விளக்கமாயது.

இச்சூத்திரம், "செம்மலர்நோன்றாள் சேரலொட்டா அம்மலங்கழீஇ" எனவும், "அன்பரொடுமரீஇ" எனவும், "மாலறநேயமலிந்தவர்வேடமும் ஆலயந்தானும் அரனெனத்தொழுமே" எனவும் மூன்றதிகரணமுள்ளது.

## முதலதிகரணம்.

சீவன்முத்தர்க்குஒரேதுணிவாக முதலிற்செய்யவேண்டிய கடமை இதுவென்றுணர்த்துவாராய் இச்சூத்திரத்தின் முதற்பாகத்தைப்பதம்பிரித்துரைக்கும் மேற்கோள்.

ஈண்டு ஆணவம் மாயை கான்மியமென்னுமலங்களைக்களைக வென்றது.

இ—ள். இங்கு ஆணவம் மாயை கான்மியமென்னும் மும்மலங்களைநீக்குக என்பதாம்.

கன்மமலம் தன்மூலத்தைநோக்கிக்கான்மியமெனவும்படும், கன்மசம்பந்தம் கான்மியம் என்றுருநும். ஆகவேகன்மம் இருவிதமென்பதாம். அவற்றுட்கான்மியமலம்கேவலாவத்தையினீங்கிஉடம்புகொண்டுவெளிவரும் ஆன்மாவைப்பற்றிநிகழ்வதாம். அதுநன்மை தீமையென்றிரண்டாய்ச் சஞ்சிதம் பிராரப்தம் ஆகாமியமென முத்திறத்துப் பலவகையாய் விரிந்துள்ளது. கன்மம், அக்கான்மியமலத்துக்குமூலமாயுள்ளது. இதனை, "கன்மமுமூலங்காட்டி" என்னுஞ் சித்தியார் முதலிய நூல்கள் விளக்குகின்றன.

கேவலாவத்தையில் ஆன்மாவுக்குக் கான்மியமலமில்லையாதலால் அங்குநின்றுவெளிவருதற்குரியஉடம்பைக்கொடுப்பது அம்மூலகன்மமேயாம், அது ஆன்மாவின் இச்சாசத்தியின் காரியமாகிய விருப்பு வெறுப்புக்களேயாம். இம்மேற்கோளிற் கான்மியம் என்றதை காமியமெனப்பாடமோதி ஆகாமியம் முதற்குறையாயதென்பாருமுளர்.

முன், பத்தாஞ்சூத்திரத்திற் கூறியபடி, பாசம் நீங்கிப் பதினொன்றிற்கூறியபடிமெய்யுணர்ந்து நிஷ்டைகூடியபின், இம்மேற்கோளில் "மலங்களைக" என்றதனால் களைதற்கு அம்மலங்கள் இங்கும் உள்ளனவாதல் எப்படி? என்பாரைநோக்கி, "தாள்சேரலொட்டாவம்மலம்என்று" உடம்பொடுபுணர்த்தோதியபொருளை விளக்கி மேற்கோளைச்சாதிக்கும் ஏது.

அவைதாம் ஞானத்தைஉணர்த்தாது அஞ்ஞானத்தையுணர்த்து மாகலான்.

இ—ள். அம்மலமூன்றும் நிஷ்டைகூடினரிடத்தும்ஏதேனும் ஒருவழியால் நுழைந்து மெய்யறிவைக்கீழ்ப்படுத்திப் பிறவிக்கு வித்தாகிய பழையவிபரீதவறிவைமேற்படுத்தும். அவர்க்கு அச்செயல் ஆகாமையால் ஈண்டுமலங்களைக் களைகஎன்றுமேற்கொண்டதென்பதாம்.

அம்மலங்கள்வந்து நுழையுமாறும் அது மெய்ஞ்ஞானிக்கு ஆகாமையுந்தெரிவித்து ஏதுவை வலியுறுத்தும் உதாரணம்.

புண்ணிய பாவம் பொருந்துமிக் கான்மமு
மண்முதன் மாயைகாண் மாயையுங் — கண்ணிய
வஞ்ஞானங் காட்டுமிவ் வாணவமு மிம்மூன்று
மெய்ஞ்ஞானிக் காகா விடு.

இ — ள். புண்ணியபாவப்பயனாகிய இன்பதுன்பமாயும் அப்புண்ணியபாவ காரணமாகிய நல்வினை தீவினையாயும் பொருந்துகின்ற கன்மமலமும், பிருதுவிமுதல்மாயை ஈறாகிய தத்துவங்களைத் தருகின்ற மாயாமலமும் சுட்டியறிவதாகிய விபரீத அறிவைத் தருகின்ற ஆணவமலமுமாகிய இம்மூன்றும் மெய்ஞ்ஞானியாகிய சிவஞானிக்கு ஆகாமையால், அவற்றைவிட்டொழிவாயாக என்பதாம்.

மலமுற்றும் நீக்கி மெய்யுணர்ந்து நிஷ்டைகூடினார்க்கும் உடம்புள்ளவரைபிராரத்தம் உடலைப்பற்றிநிற்றலால், ஒருசமயம் அதுமுற்பழக்கத்தால்வந்துதாக்கும். அதனை அநுபவிக்கும்போது "பிற்செயாதநுபவிப்பதின்று" என்றுசித்தியார்கூறியபடி வினைசெயல்நிகழாது அநுபவிப்பதிலையாதலால் அவ்வினையின சார்பாக விருப்பு வெறுப்புளவாகிக்கன்மமலம் வந்துநுழையும் அதனால் எங்குஞ் சிவமேஎன்ற வியாபகநோக்க முள்ளார்க்கும் பிரபஞ்சப்பொருள்களாகிய ஏகதேசப்பொருள்கள்காணப் பட்டு மாயாமலம்வந்து நுழையும் அதனால் அப்பொருள்களைச் சுட்டி அறியும் விபரீத அறிவுமேற்பட மெய்யறிவைக்கீழ்ப்படுத் திப்பிறவிக்கு வித்தாய் ஆணவமலம்வந்து நுழையும். இம்மூன் றும் இம்முறையாக(அறிவற்றம்)அறிவுசோர்ந்தசமயம்பார்த்துவந்துகூடுமென்றுகாட்டுதற்கே, இவ்வெண்பாவில் ஆணவமாயைகன்மமென்னுமுறையைவிட்டுக் கன்மமாயை ஆணவமென வைத்து அதனதன்காரியங்களைச் சுட்டிடன்கூறினார். இங்கு மாயை என் றது (௩௧.வது) தத்துவமெனக. இதுவிடாத ஆதுபெயராய்த் தன் கீழுள்ள தத்துவங்களையுந் தழுவிநின்றது இம்மூன்றுமலமும், சிவபோகப் பெருவாழ்வை யிழப்பித்தலால் அப்பெருவாழ்வுடை யார்க்கு ஆகாவாயின. சமயம்பார்த்து நுணுகிவந்துநுழைந்த மட்டினில்லாமல் மேன்மேன்முறுகிவளர்வனவாதலால் அவை கள் நுழையும்போதே நீக்காவிட்டால்,

"இளைதாக முண்மரங் கொல்க களைகுநர்
கைகொல்லுங் காழ்த்த விடத்து"

என்றபடி முறுகிவளர்ந்தபின் நீக்கமுடியாதென்னும் அவசரம் பற்றி முன் மேற்கோளிற் "களைக" என்றமட்டில் ஒழியாமல் இங்கும் "விடு" என்று வற்புறுத்தியருளிற்று.

விடுதலாவது, அம்மலங்கள் அம்முறையாக வந்தபோதே இவ்விபரீதஞானம் ஏகதேச அறிவால் வந்தது. அது, விருப்பு வெறுப்பால் வந்தது. அது பிராரத்தநுகர்ச்சியிற்சென்றதற்போ தத்தால்வந்ததென்றறிந்து, அத்தற்போதம்முளையாமல் நீக்கிச் சிவஞானத்தி லடங்கிச் சிவாநுபவஞ் சுவாநுபூதியாகும்படி அச் சிவஞானநிலையில் உறைத்துநிற்றலாம்.

ஏதுவில், மும்மலங்களும் அஞ்ஞானத்தையுணர்த்துமெனக் கூறினும் அம்மூன்றில் மாயையுங் கன்மமும் அஞ்ஞானங்காட்டுதல் ஆணவத்தின் சார்பாலாகிய செயற்கையேயன்றி இயற்கையன்றென்பதுணர்த்துதற்கே இவ்வெண்பாவில், "அஞ்ஞானங் காட்டுமாணவமென்று" மாயைகன்மங்களைப்பிரித்து அஞ்ஞானங்காட்டுதல் ஆணவத்திற்கு மாத்திரஞ்சிறந்தெடுத்தோதினர்.

## இரண்டாமதிகரணம்

மேற்கூறியபடி மலங்கழிவிய சீவன்முத்தர்க்கு அதன்பின்னுஞ்செய்யத்தக்கது இன்னதென்று விளக்குவாராய்ச் சூத்திரத்தில் "அன்பரொடு மரீஇ" என்ற இரண்டாம்பாகத்தைப் பதம் பிரித்துரைக்கும் மேற்கோள்.

இனிச் சிவபத்தர்களோ டிணங்குகவென்றது.

இ—ள். (௧௨) சூத்திரங்கூறியபடி முதல்வன் அத்துவிதமாய்நின்றுபகரித்தலை மறவாதுகடைப்பிடித்துச்செய்யும் அன்பினால் அவனருள்வழிநின்ற சீவன்முத்தர்களுடன் நட்புச்செய்க என்பதாம்.

பத்தரோடிணங்குக என்றதனால் மற்றையருடன் இணங்கா தொழிக என்றவாறு மாயிற்று.

இவர்உறவர்இவர்பகைவரென்னும்நோக்கமேயில்லாதமெய்ஞ் ஞானிகள், சிலரிடத்து நட்புஞ் சிலரிடத்து அஃதின்மையுமுடை

யராதல் பொருத்தமன்றென்பாரைநோக்கி மேற்கோளைச்சாதிக் கும்வநது.

அல்லாதார் அஞ்ஞானத்தையுணர்த்துவராகலான்.

இ—ள். அன்பினால் மறவாதேத்திமுதல்வன்பாதத்தையணை யாதபாசத்தார், சுட்டியறியும் விபரீதவறிவைவிளைப்பராதலால் சிவபத்தருடன் இணங்குக எனமேற்கொண்டதென்பதாம்.

சிவபத்தரல்லாதார் விபரீதவறிவைவிளைப்பதெப்படி? யெனில்,

"தெய்வமென்பதோர் சித்தமுண்டாகி
முனிவிலாததோர் பொருளதுகருதலு
மாறுகோடி மாயாசத்திகள்
வேறுவேறுதம் மாயைகள் தொடங்கின
வாத்தமானவ ரயலவர்கூடி
நாத்திகம்பேசி நாத்தழும்பேறினர்
சுற்றமென்னுந் தொல்பசுக்குழாங்கள்
பற்றியழைத்துப் பதறினர் பெருகவும்
விரதமே பரமாகவேதியருஞ்
சரதமாகவே சாத்திரங்காட்டினர்
சமயவாதிக டத்தமதங்களே
யமைவதாக வரற்றி மலைந்தனர்"

என்பனவாதியதிருவாசகத்தாலறிக.

மும்மலங்கள் விபரீதவறிவை விளைப்பது அறிவுசேர்ந்த சமயம் வாய்த்தபோதேயாம். அதுவும் அதற்கேதுவாய் நிற்றல் மாத்திரமேயாம். சிவபத்தரல்லாதார் அப்படியன்றி அதுவாய்க் காதபோதும் வாய்க்கப்பண்ணிக்கொண்டு பலவகையுபாயங் களாலும் தம்மைப்போல விபரீதவறிவைச் செலுத்திவிடுவ ராதலால் அம்மலங்களினுங்கொடியராகிய அவர்களை அவற்றினு நீகப்பயந்து விட்டொழிதலே மெய்ஞ்ஞானிகளுக்குப்பொருத்த மென்பதாம்.

விபரீதவறிவை விளைப்பவரோடிணங்காமையேபோதும், பத்தருடன் இணங்குவதாவதற்கென் பாரைநோக்கி, நிஷ்டைகூடிய ஞானிகள் பிராரத்தாநுபவத்தில் எதிர்ப்படுபொருளைப் பற்றும் படிநேரும். முன்னரேசிவபத்தர்சேர்க்கையிருந்தாற்றானெதிர்ப்படு பொருள் சிவபத்தரேயாய் அவருடன் இணங்குதல்கூடும். அச்சேர்க்கையில்லையேல்மற்றையருடன் இணங்குதல்நேரும். அதனாற் சுட்டியறியும் விபரீதஅறிவுவந்து நுழையும். அவ்வறிவாகியகள்வரால்முன்னைவந்தமெய்ஞ்ஞானப் பொருள் அபகரிக்கப்படும். அவ்வாறாகாமற் சிவபத்தருடன் இணங்கவேண்டியது அவசியமென்றுகூறிமேற்கோளைவலியுறுத்தும் உதாரணம்.

மறப்பித்துத் தம்மை மலங்களின்—வீழ்க்குஞ்
சிறப்பில்லார் தந்திறத்துச் சேர்வை—யறப்பித்துப்
பத்தரினத்தாய்ப் பரனுணர்வி னாலுணரு
மெய்த்தவரை மேவா வினை.

இ—ள். முதல்வன்காட்டியுங்கண்டும்உபகரித்துடனிற்கும்அத்துவிதநிலையைமறவாதுகடைப்பிடித்துநிற்றற்குஏதுவாகியமெய்ஞ்ஞானத்தை மறப்பித்து வசப்படுத்தித் தீநெறியிற்செலுத்தும் மலங்களால் வரும்பிறவிக்குழியில்வீழ்த்தித்துன்புறுத்துபவராகிய அன்பில்லார் பகுதியிலேயே பன்னெடுங்காலம்பழகிவந்த சேர்க்கைநீங்கும்படி, அம்மறத்தலைநீக்கிஞானக்கண்ணையுதவிப் பிறவிக்குழியினின்றும்எடுத்து நன்னெறியிற்செலுத்தி வாழ்விக்கும்பேரன்பாளராகிய சிவபத்தர்திருக்கூட்டத்திலேயேபேரன்புடையராய் அதனால் விளங்குஞ் சிவஞானக்கண்ணால் அவ்வத்துவிதநிலையையேஇறுகப்பற்றிநின்றுணரப்பெற்ற மெய்த்தவரை, எல்லாஅநர்த்தங்கட்கும்மூலமாய்வந்து அன்பில்லார்கூட்டத்திற் சேர்ப்பிக்கும் பிராரத்தவினை வாதிக்கமாட்டாதென்பதாம்,

முன்னதுவில் அல்லாதார் அஞ்ஞானத்தை உணர்த்துவரென்றுகூறியதையே இவ்வெண்பாவில், "மறப்பித்துத்தம்மைமலங்களில் வீழ்க்குஞ்—சிறப்பில்லார்" என்று மேலும் அநுவாதமாக விரித்துக்கூறியது, அவ்விரிவின்எதிர்மறைமுகத்தாற் சிவபத்தர் மகிமை விளக்குதற்கென்க. ஏனை யாகாதி தவங்களெல்லாம் பலன்முடிவில் அழியும்பொய்யாய் மலநடைபாய்ப்போதலாலும், சிவ

ஞானத்தவம்ஒன்றே மெய்யாய் மலமின்றி நிற்றலாலும் "பரனுணர்வினாலுணருமெய்த்தவரை" யென்று விளக்கியருளினார்.

சிவபத்தரிடத்து முக்கரணங்களையுஞ்செலுத்தி யுறைத்து நிற்கும் மெய்யன்பர்க்கு, உலகியலுணர்வுமாறிச்சிவானுபவஞானமேம்பட்டுநிகழும். அது நிகழவேஉடம்புபற்றிவரும்பிராரத்தவினை அனுபவமாக வந்துவாதிக்கமாட்டாது. ஆகவே அவ்வினை பற்றி நிகழும் சிறப்பில்லார்சேர்க்கை பற்றறக்கெடும். என்னுமுறைவிளக்குவராய், "சேர்வை யறப்பித்துப்-பத்தரினத்தராய்ப் பரனுணர்வினாலுணரு—மெய்த் தவரைமேவாவினை" என்றருளினார். எனவே வீட்டுணர்வைத்தளரவிடாது நிலைபெறச்செய்யுஞ் சிவபத்தருடன் இணங்கினாலன்றி வினைபற்றித்தொன்றுதொட்டு வந்த சிறப்பில்லாரிணக்கம் நீங்காதாகலால் அவ்விணக்கம் உறுதியாகவேண்டுமெனவலியுறுத்தியவாறாயிற்று.

## மூன்றாமதிகரணம்

சிவபத்தருடன்இணங்கிநிற்பார்க்கு அவ்விணக்கம் நழுவாமல் நிலைபெறச் செய்தற்கு அதன்பின்பு செய்யக்கடவது இது வென விளக்குவாராய்ச், சூத்திரத்தின் மூன்றாம்பாகத்தைப்பதம் பிரித்துரைக்கும் மேற்கோள்.

இனிப்பத்தரது திருவேடத்தையும் சிவாலயத்தையும் பரமேசுரனெனக்கண்டுவழிபடுகஎன்றது.

இ—ள். அயரா அன்பின் அரன்கழலேத்தும் மெய்யன்பரது திருவேடமும் சிவாலயமும் சிவனெனவே ஐயமின்றித்தெளிந்து வழிபடுக என்பதாம்.

காமுகரால் விரும்பப்படும்பெண்கள்வடிவில் ஆடையாபரணாதிகள் பார்வைமாத்திரத்தில் அவரைவசித்தின்புறுத்தல்போல மெய்ஞ்ஞானிகளைப் பார்வைமாத்திரத்தில் வசித்தின்புறுத்தலால்திருவேடத்தையும் சிவாலயத்தையும் என்றுஉபசரித்துக்கூறினார். இதனை,

"சேலுங்கயலுந்திளைக்குங் கண்ணாரிளங்கொங்கையிற் செங் குங்குமம்—போலும் பொடியணிமார்பிலங்குமென்றுபுண்ணியர்

போற்றிசைப்ப" என்றதிருவாக்கானுங்காண்க. வேடத்தையும் ஆலயத்தையுங் கூறவே அவ்வேடமுடையாரையும் ஆலயத்துள்ள திருவுருவங்களையுஞ் சிவனெனக்கண்டு வழிபடுதல் கூறுமேயமை யுமெனக அத்திருவேடத்தினியல்பும் அதனைச் சிவனெனக்கண்டு வழிபடுதலும்.

தூயவெண் ணீறு துதைந்தபொன் மேனியுந் தாழ்வடமும்
நாயகன் சேவடி தைவரு சிந்தையு நைந்துருகிப்
பாய்வது போலன்பு நீர்பொழி கண்ணும் பதிகச்செஞ்சொன்
மேயசெவ் வாயு முடையார்புகுந்தனர் வீதியுள்ளே.

வாக்கின் பெருவிறன் மன்னர் வந்தணைந் தாரெனக் கேட்டுப்
பூக்கமழ் வாசந் தடந்துறைப் புகலிப் பெருந்தவ யாரு
மாக்கிய நல்வினை யாற்றங்கை வார்குழாத்தொடு மெய்த்தி
ரேற்கும் விருப்புடன் பொங்கி யெதிர்கொள வெய்தும் பொழுதில்

"சிந்தை யிடையறா வன்புந் திருமேனி தன்னி லசைவுங்
கந்தை மிசைபாங் கருத்துங் கையுழ வாரப் படையும்
வந்திழி கண்ணீர் மழையும் வடிவிற் பொலிதிரு நீறு
மந்தமி லாத்திரு வேடத் தரசு மெதிர்வந் தணைய"

"கண்ட கவுணியக் கன்றுங் கருத்திற் பரவுமெய்க் காதற்
றொண்டர் திருவேட நேரே தோன்றிய தென்று தொழுதே
யண்டரும் போற்ற வணைந்துங் கரசு மெதிர்வந் திறைஞ்ச
மண்டிய வார்வம் பெருக மதுர மொழிபகர்ந் செய்தார்

என்பனவாதிய திருவாக்குக்களானுங் காண்க.

மெய்ஞ்ஞானிகளுக்குத் திருவேடம் சிவாலயமென்ற பகுப்பின்றி எங்குஞ் சிவமெனக் காண்டலே பொருந்த மாதலானும், நின்ற திருத்தாண்டகமுதலியன அவ்வாறே கூறுதலானும், ஸ்ரீருத்திரம்பகுப்பின்றி உயிருள்ளன உயிரில்லன எல்லாப்பொருளுந் தனித்தனி நமோந்தமாக எடுத்தோதி வழிபடுதலானும் இம்மேற்கோளில் திருவேடம் சிவாலயமிரண்டைமாத்திரம் சிவனெனக் கண்டு வழிபடுக என்றது என்னென்பாரை நோக்கி மேற்கோளாச்சாதிக்கும் அது.

அவன் மற்றிவ்விடங்களிற் பிரகாசமாய் நின்றே அல்லாத விடத்து அப்பிரகாசமாய் நிற்றலான்.

இ—ள். முதல்வன் எங்கும்வியாபகமாய் நிற்பினும் இவ்விரண்டிடத்து மாத்திரம் தயிரின்நெய்போல விளங்கிநின்று மற்றெவ்விடங்களினும் பாலின் நெய்போல மறைந்து நிற்றலால் அவ்வாறு மேற்கொண்டதென்பதாம்.

எப்பொருளினுமிறைவன்கலந்திருத்தல் தெரிதற்கேஸ்ரீருத்திரம் ஆவ்வாறோதியதென்க.

திருவேடத்தில் முதல்வன் பிரகாசமாய்நிற்றலெப்படி? என்பாரைநோக்கி ஏதுவைவலியுறுத்தும் உதாரணம்.

தன்னுணர வேண்டித் தனதுருவைத் தானைகொடுத்துத்
தன்னுணரத் தன்னு ளிருத்தலாற்—றன்னுணரு
நேசத்தார் தம்பா னிகழுந் தனிநெய்போற்
பாசத்தார்க்கின்றாம் பதி.

இ—ள். சிந்தனைக் கெட்டாதபரம்பொருள் உலகர்தன்னை அறிதற்காகத் திருநீறு கண்டிகைமுதலிய திருவேடமாகிய தனது திருவுருவை அன்பர்க்குக்கொடுத்தலானும், அவர்கள் தன்னைச் சிவோகம்பாவனையாலறியச்செய்தலானும், அவ்வாறு தன்னை ஒருகுறியினின்று அறியும் அவர்களைத்தனது வியாபகத்துளிருத்துதலானும், பின்பு அக்குறியும் நழுவித்தன்னை யுள்ளபடியறியும் அவரிடத்துத் தயிரின்நெய்போலவிளங்கித்தோன்றும். அவ்வியல்பில்லாத பாசத்தாரிடத்துப் பாலின் நெய்போல மறைந்து நிற்குமென்பதாம்.

கொடுத்துச் செய்து இருத்தலால் நிகழும் (விளங்கித்தோன்றும்) என்றியையும்.

சிவபத்தர்க்குத்திருவேடங்கொடுத்துச் சிவோகம்பாவனையாலறியச்செய்து வியாபகத்துள்ளிருத்துதலால், உள்ளபடி அறியும் அவரிடத்து விளங்கித்தோன்றுமென்றது சரி, அவ்வியல்பில்லாத சிவலிங்காதி தாவரவடிவில் மந்திரசாந்நித்தியமுள்ளபோதன்றி விளங்கித்தோன்றுதலில்லை. இதற்கே இப்படியாகவும் இவ்

வடிவங்களிருந்த இடமாகிய சிவாலயத்தையும் சிவனெனக்கண்டு வழிபடுக என்றது எவ்வாறு பொருந்துமென்பாரை நோக்கி, அச் சிவாலயத்திலும் முதல்வன் பிரகாசமாய் நிற்றலைவலியுறுத்தும் உதாரணம்.

கண்டவொரு மந்திரத்தாற் காட்டத்தி லங்கிவே
✗ றுண்டல்போ னின்றங் குளதாமாற்—கண்டவுருத்
தானதுவாயன்றானுந் றானதுவாய்த் தோன்றுமே
தானதுவாய்க் காணுந் தவர்க்கு.

இ—ள். விறகில் அக்கினிகடைந்தபோது வேறாய் விளங்கிக் கடையாதபோது விளங்காமனிற்றல்போல, உயிர்க்குப் புத்தி முத்திகொடுத்தற்பொருட்டுக் காணப்பட்ட தாவரவடிவில் கலப்பினால் அதுவேயாய் பொருட்டன்மையால் வேறுமாய்நிற்கு முதல்வன், அதுவேதானாகக் காணமாட்டாதார்க்கு அவராலறியப்பட்டதொருமந்திரசாந்நித்தியமில்லாதபோது அவ்வடிவில் விளங்காமனின்று அஃதுள்ளபோது விளங்கித்தோன்றுவன். அப்படியன்றி அவ்வடிவே அவனாகக் காணப்பெறும் மெய்த்தவமுடையார்க்கு அவ்வடிவமேதானாக விளங்கித்தோன்றுமே என்பதாம்.

முதல்வன் தாவரவடிவில் கலப்பினால் அதுவேயாயும் பொருட்டன்மையால் வேறாயுநிற்றல், சங்கமவடிவுக்கும் ஒக்குமேனும், இவ்விடத்துத் தாவரவடிவைப்பற்றி வந்த வினாவாதலால் அவ்வினாவை விடுத்தற்கு இங்குக் கூறினார்

இரண்டுக்கும் ஒக்குமென்பது பின்விளக்கப்படும்.

## நான்காவது ஒழிபு அதிகரணம்

முன்மூன்றதிகரணங்களிற் கூறியமலங்களைதல் சிவபத்தருடனிணங்குதல் திருவேடங்கள் சிவாலயங்களை வழிபடுதல் மூன்றும்சீவன்முத்தர்க்குக். தாமேயுளவாமென்ற இலக்கணமாதலால், களைவர் இணங்குவர் வழிபடுவரென அநுவாதமாக் கூறவேண்டியஇம்மூன்றையும் முறையே களைக இணங்குக வழிபடுக என்று விதியாகக்கூறியது எதற்கென்பாரை நோக்கி, அதனை முற்கூறிய அம்மூன்றன் ஒழிபாகக்கொண்டு சாதிக்கும் மேற்கோள்.

✗ உண்டல் = உண்டாதல்.

இனி, அவ்விடங்களின் வழிபாடு கூறுகின்றது.

இ—ள். மேற்கூறிய திருவேடங்கள் சிவாலயங்களின் வழிபாடு செய்க என்பதாம்.

எடுத்தலோசையால் அநுவதித்துணர்த்தலே போதுமென்பாரை நோக்கி, முன்மூன்றாமதிகரணத்தில வழிபடுகஎன்று படுத்தலோசையால விதித்ததனையே இங்கும் எடுத்தலோசையால் வலியுறுத்தலால், இது கூறியது கூறலன்றென்க.

இதனைவலியுறுத்தவே இனம்பற்றி முதலாமிரண்டாமதிகரணங்களில் கழுக இறைஞ்சுக என்றவிதியையும் வலியுறுத்தியவாறறிக.

வழிபாடுமுதலியவற்றை முன்விதித்திருக்கவும் மேலும்விதித்தல் பயனற்றதாமென்பாரைநோக்கி, மேற்கோளைச் சாதிக்கும் ஏது.

நரம்பு நாடிமுதலானவற்றைத் தானதுவாய் வரும்புருடன் அவையாகாவாறு அப்புருடனுமாகலான்.

இ—ள். உடம்பிலுள்ள நரம்பு முதலியதாதுக்களில் வேற்றுமையின்றி அதுவதுவேதானாய்நின்று வருகின்ற உயிர், நாம் நாடியோஎன்போ நரம்போ சோறையோ என்றிவ்வாறு ஐயம் மறியாகப் பார்ப்பார்க்கு, அந்நாடி நரம்பு முதலியனவாகாமல அவற்றின்வேறுமானாற்போல, உயிர்க்குயிராகிய(அப்புருடனும்) முதல்வனும், உயர்ப்பொருள் உயிரில்பொருள் எவற்றினும் கலப்பினால் அதுவதுவாகியும் பொருட்டன்மையால் வேறாகியும் நிற்பனாதலால், அம்முதல்வன் அதுவதுவாய் நிற்றல் நோக்கி எல்லாஞ்சிவமெனக்காணும் அகமுகவழிபாடு, அவன்வேறாய் நிற்றல் நோக்குமிடத்துத் திருவேடஞ் சிவாலயங்களிற்றனித்துப் புறமுகத்துச் செல்லாதாதலால் அவ்விடத்தும்வழிபாடுநிகழ்விக்க வேண்டியே "இனிஇவ்விடங்களினைவழிபடுக" வெனவிதித்தலை மேற்கொண்டதென்பதாம்.

௳ முதல்வன், அதுவதுவாயும் வேறாயுநிற்குமியல்பு எங்குமுள்ளதாகவும் திருவேடஞ் சிவாயங்களின்மட்டும்வழிபாடு விதித்ததென் னென்பாரைநோக்கி, அதனைவலியுறுத்தும் உதாரணம்.

அதுவிது வென்ற தனுவல்லான் கண்டார்க்
கதுவிது வென்றதையு மல்லான்—பொதுவதனி
லத்துவித மாக லகண்டமுந் தைவமே
அத்துவிதி யன்பிற் றொழு.

இ—ள். அத்துவிதசித்தாந்தம் பெற்றுடையானே, முதல்வன் எப்பொருளினும் நிற்குநிலை அறியப்பெற்றவர்க்கு, கண்ணும் அருக்கனும்போல அதுவும் இதுவுமென்று பக்கிசைக்கப்பட்ட பேதநிலை, உடலுயிர்போல அதுவேயென்று தொக்கிசைக்கப்பட்ட அபேதநிலை, குணகுணிபோல அதுவாய்இதுவென்று பக்கிசையாத பேதாபேதநிலையாகிய இம்மூன்றில் தனியாக ஒன்று மாத்திரமுடையனல்லனாய், உயிரின் அறிவும் கண்ணின் ஒளியும் கலப்பினால் அபேதமாயும் பொருட்டன்மையாற் பேதமாயும் உடனின்றுதவுதலாற் பேதாபேதமாயும் மூன்றையும் ஒருங்கே கொண்டுநிற்றல்போல, அம்மூன்றற்கும் பொதுவாகிய அத்துவிதநிலையனாய் நிற்றலால் எல்லாப்பொருளும் (தைவமே) அவன் வடிவே யாயினும், அவற்றுள்ளும் அன்புவிளையுமிடம் திருவேடமுஞ் சிவாலயமுமேயாதலால் இவ்விடங்களில் வழிபடுவாயாக என்பதாம்.

பசுவின்பால் உடலெங்குமுளதாயினும் முலையிலேயே விம்மிவெளிவருதல்போல, முதல்வன் எங்குமுளனாயினும் திருக்கோயிலில் திருமேனியில் வெளிநின்றருளுவன். அவ்விடத்திற்றான் அடிப்பட்டுவரும் அன்பு விளையும். ஆதலால் அங்குச் செய்யும் வழிபாடுதான அத்துவித ஞானத்தைநிலைபெறுத்தும்பயனுடையதென்னுங்கருத்தால், "அத்துவிதமாதலால் அகண்டமுந் தைவமே" என்று அநுவதித்து அத்துவிதியன்பிற்றொழுவென்றார் அத்துவிதிஎன்றது அண்மையின் விளித்த உரிமை அத்துவிதசித்தாந்தமாகிய பயனுடையானேயென்னுங்குறிப்புப்பெயராய் முன் வழிபடுகவென்ற விதிக்கு அநுபவநிலைபெறுதலாகிய பயன் கூறியவாறுமாயிற்று.

பிரபஞ்சம் அசத்தெனக் கண்டு நீங்கினவுடனே ஞானமுளதாய் அத்துவிதவநுபவமுணர்த்துமாதலால், அதனைநிலைபெறுத்த

ற்குவழிபாடு வேறுவிதித்தல் எதற்கென்பாரை நோக்கி, அதனை வலியுறுத்தும் உதாரணம்.

வினையா லசத்து விளைதலான் ஞானம்
வினைதீரி னன்றி விளையா—வினைதீர
ஞானத்தை நாடித் தொழுவே யதுநிகழு
மானத்தா லன்பிற் றொழு.

இ—ள். உடலைப்பற்றிய பிராரத்தவினையால் வரும்வாசனைபுயிரைத்தாக்குவதாயுள்ள வரையும் அதனால்வரும் விருப்புவெறுப்பும் அவைபற்றிநேர்படும் பிருதுவியாதி தத்துவங்களும் அவைபற்றிநிகழும் விபரீத அறிவுமாகிய அசத்துக்கள் ஞானத்தால் நீங்கினும் முற்கூறியவழிபாடில்லையேற் பின்னும்வந்துகூடிமேம்படுமாதலால், அவைக்கெல்லாமூலமாகிய பிராரத்தவாசனை பற்றறக்கழிந்தாலன்றி அவற்றைக் கீழ்ப்படுத்து மெய்ப்புணர்வுமேம்படாது. அவ்வாசனைபற்றறநீங்குதற்கு மெய்ஞ்ஞானிகளை நாடிவழிபடின் அவ்வினைநீங்கி மெய்புணர்வுமேம்படும். ஆதலால் அவரைஅன்பினால் வழிபாடு செய்வாயாக என்பதாம்.

அசத்துநீங்கியபின் உளதாகிய மெய்ஞ்ஞானம் அவ்வசத்து விளைதற்குமூலமாகிய பிராரத்த வினைநீங்கினாற்றான் நிலைபெறுமாதலால், அவ்வேரை முற்றுங்களைந்து அம்மெய்யறிவை நிலைபெறுத்தற்குநிலைபெறுத்தினவரை வழிபடுதல் அவசியமே என்பதாம். ஆனால்அதற்குவிதிப்படிபஞ்சாக்ஷரஞ்செபிக்கவென்றதே போதுமெனில்? அது சரி அதற்கும் பிராரத்தவினைதாக்காதிருத்தல்வேண்டுமாதலால் அதன்பொருட்டு அச்செபமும் இவ்வழிபாட்டையின்றி அமையாதென்க. இது பற்றியேமுன் (௯ம்சூத்திரத்தில்) பஞ்சாக்ஷரசெபங்கூறியமட்டிலமையாமல், "அஞ்செழுத்தாலுள்ள மரனுடைமை" "என்றும், "மண்முதல் நாளம்" என்றும் அகத்துவழிபாடும் உடன்கூறியதென்க.

இவ்வழிபாடு அனுபவஞானம் நிலைபெறும் பயன்குறித்துச் செய்வதாதலால் சுவர்க்காதிபயன் குறித்தயாகாதிகள், அப்பயனில் விருப்பின்மையினாலாவது பின்புசெய்வோமென்னும் ப

முகத்தினாலாவது ஒருசமயம் செய்யாதொழிதலே வழிபாடும் ஒருசமயம் செய்யாதொழிதலுங்கூடுமோ வெனைநோக்கிச, செய்யாவிடில் குற்றமாமெனபதும் தவமாகச்செய்யவேண்டுமென்பதும் உணர்த்திமேல்விதியுறுத்தும் உதாரணம்.

தன்னை யறிவித்துத் தான்றனைச் செய்தானைப்
பின்னை மறத்தல பிழையலது—முன்னவனே
தானேதா னாசெய்துந தைவமென்றுந் தைவமே
மானே தொழுகை வலி.

இ—ள். முதல்வன் தன்னுண்மை யறியமாட்டாது குருடாய்க் கிடந்த உயிர்க்கு இரங்கிக்குருவாகிவந்து சாதன வகைகளாற் பலவழியானும் அவவுண்மைதெளியவிளக்கி, எவ்வளவினுமெளிய அவ்வுயிரை எவ்வளவினும் அரியதானாகும்படிசெய்து காத்தருளிய பெரியதோருதவியை, அதன்பின் மறந்தால்அக்குற்றம்முன் அறியாக்காலத்துமறந்தகுற்றம்போலத்தீர்வுடையதன்றாகலானும், முதல்வன் அவ்வுயிரைஇப்போது தானாகும்படிசெய்யினும், இதுவரை சுதந்தரமின்றி முதல்வனுதவியை யின்றியமையாது அடிமையாகிய அவ்வுயிர் அப்படியே எப்போதும் அடிமையேயாதலானும், அவ்வாறுதான்றனைச்செய்து காத்தருளிய அப்பெரியோனை என்றும் வழிபடுதலே அவ்வுயிர்க்கு வலியென்பதாம்.

முதல்வனே குருவாதலால் "தானைச்செய்தானை" என்றும், முன்மறந்த குற்றம் அறியாமையாற் செய்ததால் நீக்கப்படும் அறிவிக்க அறிந்தபின்செய்யுமிது நீக்கப்படா தாதலால், "பின்னைமறத்தல் பிழை" என்றுங்கூறினார். இதனை,

"எந்நன்றி கொன்றார்க்கு முய்வுண்டாமுய்வில்லை
செய்ந்நன்றி கொன்ற மகற்கு." என்றதனானுந்தெளிக.

தான்றனைச்செய்தலாவது, எதனைஎதனைப்பற்றினும்அதுஅதுவாயழுந்துமுயிர், சிவமாகியதன்னையறிந்தபின்தனதுஎண்குணா[illegible]ப்பெற்று வியாபித்துத் தன் வண்ணமாய் நிற்கச்செய்[illegible] அவ்வாறு செய்த பின்னும், "உயிர்தானுஞ் சிவாநுபவ மொன்றினுக்கே யுரித்து" என்னுங் கருத்தால், "தைவமென்றுந் தைவ

மே" என்றார். "தான்தானாச்செய்தானை" என்றதனுண்மைமேற்
கூறியபடி, தான—உயிரை, சிவமாகிய தானாகச் செய்தானை என்
பதே இந்நூலாசிரியர்கருத்தென்பதும், இந்நூல்—வேதசாரமாய்
ப்பதி பசு பாசமித்தியமுதலியனவிளக்குஞ்சிவாகமங்களின்நிர்ண
யார்த்தம் இதுவேயென்று ஆதிதொடுத்து முன்பின்மலைவின்றி
வாதிகளை நியாயமுகமாகமறுத்து, உயிர்படிமுறைபாகப்பரிபாக
முற்றுஅருளாற்சிவமாகி வாழ்தலை விதந்துகூறுங்கொள்கையின
தே என்பதும் உற்றுநோக்கி யுண்மைதெளியு முரணில்லாதமாயா
வாதிகள், தான்தானா" என்றஇதுபோன்றவாக்கியங்கண்டவுடனே
யோசனையின்றித் தங்கள் பக்கத்ததெனக்கொண்டுதானை தானாக
(பிரமமேபிரமமாக)எனப்பொருள்கூறி முருக்கங்கொம்பைப்பற்
றினார்கதியையடைந்திடர்ப்படுவர்யாதொரு குறையுமின்றி இயற்
கையாகவே எல்லாநிறைந்தென்றுமுள்ளபிரமம் இனிச் செயற்
கையாற் பிரமமாகவேண்டியதில்லை. பிரமத்தைப் பிரமமாகச்செ
ய்தான் எனில்பிரமம் உள்ளபடி பிரமந்தானே அதனைபிரமமாகச்
செய்தானென்பதுபயித்தியமன்றி வேறாகுமா இது அன்றியும்
சிறுவர்க்கும்நகைவிளைப்பதேயாம். அன்றியும் அவ்வாறு செய்ய
அப்பிரமத்தின்மேம்பட்டொருவருடன் வேண்டும் அவனைத் தேடி.
பிடித்தலெப்படி பிடிக்கினும் பிரமம் அவனிற்றாழ்ந்ததென்றும்
விரிக்கின் அத்தனையும் பழுதேயாம் இவையொன்றும்நோக்காமல்
மேலுமவர்கள்,பிரமம்அஞ்ஞானத்தால் (அவிச்சையால்)சீவனாகிச்
சரீராதிகளிற்புகுந்து பந்தப்பட்டுஅவிச்சைநீங்கியபோதுள்ளபடி
பிரம மாகியதெனறு முன் சொன்ன ஒருபொய்யைப் பின்னும்
பற்பலபொய்கள் சொல்லி ஒட்டுவைப்பார்கள். வைப்பினும்
பொய்பொய்யேயன்றி மெய்யாவதில்லை, பிரமமெப்போதும்
மெய்ஞ்ஞானசொரூபமியல்பினதே அஞ்ஞானத்தாற் சீவனாதல் எக்
காலத்துமில்லை. இதனை, மனம்நடுங்காதுவாய்நடுங்காதுகூறத்துணி
ந்தஅவர்கள் இனிஎந்தப்பாதகத்துக்குநடுங்கிவிலகுவார்கள். அஞ்
ஞானத்தால் வினைகளைச்செய்து அவ்வினைப்போகங்களை அனுப
விக்கின்ற சீவனில்லை யென்க்கேயாம். அச்சீவனையே பிரம
மென்றுகொண்டு அம்மட்டுனிற்கின்ற அவர்கள் சிவப்பிரமவாதி
கள் அதனை, "காதலினால்நான்பிரமமென்னுஞானங்கருது பசு
ஞானம்" என்றதிந்நூற் றிருமுறைப்பதியவாற் றுணர்க.

இவ்வுதாரணங்கள் மூன்றாலும் சிவலிங்கம் சிவபத்தர் சிவவேதிகர்களை வழிபாடுசெய்யவேண்டியது அவசியமென்றுகூறி அவ்வழிபாடுஞ் சிவாலயம் திருவேடமுதலிய இடங்களிற்றான்செய்யவேண்டுமென்று வலியுறுத்தியவாறாயிற்று. விபூதிருத்திராக்ஷாதி சிவவேடம் சிவதீக்ஷை சிவபூஜைமுதலிய சிவசமஸ்காரங்களின்றி உலகரை யோகிக்கச்செய்கின்ற அற்பவசிய முதலியனமேற்கொண்டு யோகிஞானியென்றிறுமாந்துதிரிகின்ற வஞ்சகர்களை மேற்கூறியசிவசமஸ்காரம் பெற்றவர்களினும் மிகவிசேடமுடையரெனநம்பித் தம்பொருளைப்பாழாக்கிறைக்கின்ற சிலர் மேற்கூறிய திருவேடமுதலிய இடவிசேடங்கண்டே உள்ளபடிநம்பிவழிபாடு செய்துய்வாராக.

மேற்கூறிப்போந்தவாறு சிவாகமத்துள்ள சரியைகிரியாயோகம் ஞானம் நான்கனுள்ஞானபாதப்பொருள் எல்லாவற்றையுந்தொகுத்துப் பொது உண்மை எனவகுத்துப்பிரமாணம் இலக்கணம் சாதனம் பயனென விரித்துணர்த்துமிச் சிவஞானபோதத்தைப்போதித்தற்குரிய சற்குரு முகமாகச் சிவதீக்ஷாதிபக்குவம்வாய்ந்து கேட்டுத்தெளிதற்குரிய அதிகாரிகள் இத்தன்மையினரென்பதை விளக்குந்திருவெண்பா:

சிவமென்னு மந்தசர சிந்தைநேர் நோக்கப்
பவமின்றாங் கன்மா சகத்திற்—சிவமுண்டா
மொன்றுமிரண் டிமலத்தார்க்கிங் கொண்குருவா
லின்றிந்நூல் மும்மை மலர்க்கு

இ—ள். தான்றானச்செய்யப்பெற்றதனாற் சிவனென்னுந் தன்மையற்றுச் சிவமாந்தன்மைப்பெருவாழ்வுபெற்று வேதாந்தத் தெளிவாகிய சித்தாந்தமுற்றுள்ள மாணவகனே! ஒருமலத்தாராகிய விஞ்ஞானகலர்க்கு அவர் அறிவினின்று அருட்பார்வையால் நோக்குதலானும். இருமலத்தாராகிய பிரளயாகலர்க்குத்தேவகுரு வாய்முன்னின்றுசெய்யுந் (திருநோக்கம்) சட்சுதீக்ஷை பரிசதீக்ஷை வாசகதீக்ஷைகளாலும் சீவத்துவம் நீங்கிச் சிவத்துவம் விளங்குமாதலால், இந்நூல் அவ்விருதிறத்தார்க்கு வந்ததன்று

அவரின்வேறாய் மும்மலத்தராகிய சகலர்க்கே இவ்வுலகிலுள்ளனுபவமுடைய அசற்குருவரால் உபதேசிக்கத்தக்கதென்பதாம்.

அந்தம்—வேதாந்தம். அந்ததரம்—சித்தாந்தமாம். ஆதலால்அதனைப்பெற்றாரதுபெருமைவிளக்குவாராய்ச் "சிவமென்னுமந்ததர" என்றார். இந்நூல்சிவாநுபவம்சுவாநுபூதியாகப்பெற்ற சிவாசாரியனாலன்றி விளங்காதென்னுங் கருத்தால் "ஒண்குருவால்" என்றார்.

இச்சூத்திரம், முன்கூறியபடி அயரா அன்பினால் அரன்கழலடைந்த சீவன்முத்தருடைய அறிவுஇச்சைசெயல்கள்ஒருவாறு புறஞ்செல்லினும், அயர்த்தலை (மறத்தலை)ச்செய்து அரன்கழல் செல்லவொட்டாத மலங்களைப் பற்றற நீக்கி, அவ்வாறுநீக்கிய அன்பருடன்இணங்கி அவரதுதிருவேடத்தையும் சிவாலயத்தையுஞ் சிவனெனவே வழிபடுதலைச்செய்யின், அம்மலநீக்கத்தில் அறிவும் இணங்குதலில் இச்சையும், வழிபடுதலிற்செயலும் செல்லுமாதலால் அம்மூன்றும் புறஞ்செல்லாமல் அவ்வழியில்நிற்குமென்பதும், (௧) அம்மூன்றில்முன்னர்ச்செய்யவேண்டியது மலங்களைதலே என்பதும், (௨) அது நிலைபெறுதற்கு அதன்பின்னர்ச் சிவபத்தருடன்இணங்க வேண்டுமென்பதும், (௩) அவ்விணக்கம் நிலைபெறுதற்கு அதன்பி ர்த்திருவேடத்தையுஞ் சிவாலயத்தையும் வழிபடவேண்டுமெனபதும் (ஒழிபு)இம்மூன்றுஞ் சீவன்முத்தர்க்கியல்பாதலால் அதனைஇங்கு விதியாகக்கூறியது எதற்கென்பாரை நோக்கி, முதல்வன் "ஒன்றும்நீயல்லைஅன்றிஒன்றில்லை" என்றபடிகலப்பினால் எல்லாமாயும் பொருட்டன்மையால் வேறாயும் நிற்பவனாதலால்,சீவன்முத்தர்எல்லாஞ்சிவமாய்க்கண்டு அம்மட்டில் அகத்தேசெய்யும்வழிபாடுதிருவேடத்துஞ்சிவாலயத்துஞ்செல்லாதாதலால் புறத்தும் இவ்விடங்களிற் செய்யவேண்டியதுஅவசியமென்பதும், முதல்வன் எங்கும் வியாபித்துநிற்பினும் அன்புவிளையுமிடங்களாகிய இவ்விரண்டிடத்தும் வழிபடவேண்டியது அவசியமே என்பதும், அசத்தைவிட்டுநீங்கின உடனேஞானம்கைவந்து அத்துவிதநிலையைவிளக்குமாதலால்மேலும் வழிபாடு விதிப்பானேன் என்பாரைநோக்கி, விளக்குமாயினும் அது நிலைபெறுதற்குவழிபாடு செய்யவேண்டுமென்பதும், செய்

யாவிடிற் செய்ந்நன்றி மறந்த பெருங்குற்றமாதலால் அது நித்த நியமமாய்ச் செய்யவேண்டிய கடமையே யென்பதும், இந்நூல் கேட்டற்கு அதிகாரிகள் சகலவர்க்கத்துச் சீவர்களே யென்பதும், இந்நூற்பொருளை உபதேசிக்குந்தகுதியுடைய தேசிகர் சிவாநுபவமுள்ளவர்களே என்பதும் விளக்கியவாறு காண்க.

இந்நூலாசிரியர் பெயர்ச்சிறப்புணர்த்தும் பாயிரம்

எந்தை சனற்குமர னேத்தித் தொழவியல்பாய்
நந்தி யுரைத்தருளு ஞானநூல்—சிந்தைசெய்து
தானுரைத்தான் மெய்கண்டான் றாரணியோர் தாமுணர
வேதுதிருட்டாந்தத்தா லின்று.

இ—ள். எந்தையாகிய சனற்குமரமுனிவர் முதலியர் துதித்து வணங்க ஸ்ரீகண்டதேவர்பாற் கேட்டருளிய நந்திபெருமான், தான் கேட்டமுறையே அவர்க்குபதேசித்தருளிய சிவஞானபோதமாகிய வடநூலை, ஸ்ரீமெய்கண்டதேவர் தாம் தமதாசிரியராகிய பரஞ்சோதிமுனிவர் பாற்கேட்டமுறையே சிந்தித்துத் தமிழுலகர் அறிந்துய்தற்பொருட்டு மேற்கோள் ஏது உதாரணங்களுடன் இக்காலத்து மொழிபெயர்த்து அதற்கு வார்த்திகப்பொழிப்புரையுஞ்செய்தருளினா ரென்பதாம்.

வேதவே தாந்தம் வாழி விமலசித் தாந்தம் வாழி
மேதரு வாய்மை தேற்று மெய்கண்ட நூல்கள் வாழி
பூதிகண் மணிமுற் சைவ புனிதசா தனங்கள் வாழி
போதசற் குருசந் தானம் புரிதிருத் தொண்டர் வாழி

சிவஞானபோதார்த்தலெகுவசனம்

முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.



# இந்நூலாசிரியர்செய்துவெளியிட்ட நூல்கள்.

| | நூற்பெயர் | செய்யுள் |
|---|---|---|
| ௧ | வன்றொண்டர்குருஸ்துதி | ௨௦ |
| ௨ | நாவலர்குருவணக்கம் | ௧௦ |
| ௩ | மெய்யப்பசுவாமிகள் பதிற்றுப்பத்தந்தாதி | ௧௦௦ |
| ௪ | கற்பகவிநாயகர்பதிகம் | ௨௦ |
| ௫ | மருதீசர்பதிகம் | ௧௦ |
| ௬ | வாடாமலர்மங்கைபதிகம் | ௧௦ |
| ௭ | ஆதிசிதம்பரேசர் பதிகம் | ௧௰ |
| ௮ | சிவகாமியம்மை பதிகம் | ௧௰ |
| ௯ | திருத்தொண்டர்பதிகம் | ௧௧ |
| ௧௰ | யௌவனாம்பாபதிகம் | ௧௰ |
| ௧௧ | திருவிங்கோய்நாதர் பதிகம் | ௧௧ |
| ௧௨ | தில்லைவளாகநடேசர்பதிகம் | ௧௰ |
| ௧௩ | வணைகுளம் திருநாகேசுரர் பதிகம் | ௧௰ |
| ௧௪ | சுந்தரவிநாயகர் பதிகம் | ௧௧ |
| ௧௫ | காரைமீனாம்பிகைபதிகம் | ௧௧ |
| ௧௬ | திருவுசாத்தானருதவனபுராணம் | ௧௫௨௰ |
| ௧௭ | திருப்புத்தூர்ப்புராணம் | ௧[illegible]௨௰ |
| ௧௮ | பெருந்தோட்டத்து அத்தீச்சுரபுராணம் | ௭௯௧ |
| ௧௯ | சித்தவடமான்மியம் | ௩௮௮ |
| ௨௰ | திருக்கழுக்குன்றமகிமாசங்கிரகம் | ௨௦ |
| ௨௧ | குன்றைச்சிலேடைவெண்பா | ௧௦௦ |
| ௨௨ | காழிச்சிலேடைவெண்பா | ௧௦௦ |
| ௨௩ | தில்லைச்சிலேடைவெண்பா | ௧௦௦ |
| ௨௪ | சம்பந்தமூர்த்திசுவாமிகள்போற்றிக்கலிவெண்பா | ௬௨௪ |
| ௨௫ | பசுவந்தனை வெண்பாவந்தாதி | ௧௦௦ |
| ௨௬ | கற்பகவிநாயகர்பதிற்றுப்பத்தந்தாதி | ௧௦௦ |
| ௨௭ | திருவாரூர்த்திரிபுஅந்தாதி | ௧௦௦ |
| ௨௮ | திருவாலவாயமகவந்தாதி | ௧௦௦ |
| ௨௯ | சம்பந்தமூர்த்திசுவாமிகள் பிள்ளைத்தமிழ் | ௧௯௨ |
| ௩௰ | தில்லைசிவகாமியம்மைபிள்ளைத்தமிழ் | ௧௧௰ |
| ௩௧ | மயின்மலைச்சந்தவிருத்தம் | ௩௰ |
| ௩௨ | சம்பந்தமூர்த்திசுவாமிகள் திருவூசல் | ௧[illegible] |
| ௩௩ | காரைமீனாட்சிசுந்தரேசர் திருவூசல் | ௧௰ |
| ௩௪ | பசுவந்தனைத்திருவூசல் | ௧௧ |
| ௩௫ | சோமசுந்தரமாலை | ௧௰௧ |
| ௩௬ | சவுந்தரேசதயாநிதிமாலை | ௧௦௦ |
| ௩௭ | வடிவழகியநம்மைமணிமாலை | ௯ |

| | | |
|---|---|---|
| ௩௮ | வீரசேகரமாமணிமாலை | ௩௰௧ |
| ௩௯ | குமாரநாயகமாலை | ௩௰ |
| ௪௰ | மதுரைசித்திவிநாயகர் திருவிரட்டைமணிமாலை | ௨௰ |
| ௪௧ | சாக்கை திருவிரட்டைமணிமாலை | ௨௰ |
| ௪௨ | முத்துகலநாயகமும்மணிக்கோவை | ௩௰ |
| ௪௩ | சபாபதிதுவாதசமஞ்சரி | ௧௨ |
| ௪௪ | வீரவனதுவாதசமஞ்சரி | ௧௨ |
| ௪௫ | வேதவனேசஸ்தவம் | ௧௧௧ |
| ௪௬ | பௌவனேசநமகம் | ௧௰௮ |
| ௪௭ | தில்லைநடேசாஷ்டகம் | ௮ |
| ௪௮ | பெரியபுராணபிரசங்கவைபவம் | ௪௰ |
| ௪௯ | சிவபக்த நாமாவளிக்கண்ணி | ௩௮௭ |
| | ஆக செய்யுள் — ௭௱௯௰௨ | |
| | **வசன நூல்கள்** | **பக்கம்** |
| ௫௰ | உண்மைநாயன்மார்மகிமை | |
| ௫௧ | சிவசுந்தரசாயாரூபசிவமகிமாசங்கிரகம் | ௫௬ |
| ௫௨ | ஆதிசைவகுலமான்மியம் | |
| ௫௩ | மகுடதனவைசிய மரபுவிளக்கம் | |
| ௫௪ | மாயாவாதக்கோண்மறுப்பு | |
| ௫௫ | வேதாந்தம் | |
| ௫௬ | உபதேசத்திரயம் | |
| ௫௭ | தூர்வையாசகப்படலம் | |
| ௫௮ | உபதேசப்படலம் | |
| ௫௯ | தில்லைவளாகஆதிசிதம்பரமான்மியம் | |
| ௬௰ | திருநாவுக்கரசசுவாமிக்கிரகத்தெளிவு | |
| ௬௧ | மெய்கண்டசிவசரித்திரம் | |
| ௬௨ | வேதாந்தத்தெளிவு | |
| ௬௩ | சிவஞானபோதார்த்தவெகுவசனம். | |

உ

சிவமயம்,

கணபதிதுணை,

# வேதாந்தத்தெளிவு,
# சிவஞானபோதார்த்தலகுவசனம்

---

இவை

ஸ்ரீவன்றொண்டரவர்கள் மாணாக்கர்

காரைக்குடி.

**ராம. சொ. சொக்கலிங்கச்செட்டியார்.**

அவர்களால்

செய்யப்பெற்று

கோத்தமங்கலம்

**சி. சு. சிவநேசச்செல்வர்களால்**

சிதம்பரம்.

ஸ்ரீஞானசம்பந்த விலாச அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப் பெற்றது.

குரோதன ௵ பங்குனி ௴

சிவமயம்.

# முகவுரை.

உலகம், சஞ்சரிப்பனவும் நிலையாய் நிற்பனவுமாகிய சராசர ரூபங்களாய் நால்வகைத்தோற்றத்து எழுவிதப்பிறப்பின் (அசு) இலக்கம் யோநிபேதமாய் விரிந்து விளங்குகின்றது. இதனை, ஏகாத்மவாதிகள் பொய்யென்பர். இவ்வுலகம், முயற்கொம்புமுதலியன போல் இல்பொருளாய்ப்பொய்யாய் ஒழிவதன்று. முயலுக்குக் கொம்பு எக்காலத்துமில்லாததே, அதனைப்பொய்யென்பது பொருந்தும். பற்பல வகை வகையாய் விரிந்து உள்பொருளாய் நேரிற்காணப்படுகின்ற உலகத்தைப்பொய் என்பது பொருந்தாதென்க. ஆனால் உலகம் அநித்தியம் (பொய்) என்று நூல்கள் கூறுவதென்னை எனில்? அவ்வுலகம் நேரிற்காணப்படுகின்றபடியே என்றுமிராமல் சிலகாலமிருந்து பின் நேரிற்காணப்படாமல் ஒடுங்கி வருதலும், சீவர்கள் அவ்வுலகப்பற்றொழிந்துய்தற்கு ஏதுவாதலும் நோக்கியே பொய்யென்று கூறுவதென்க. இக்கருத்து நோக்காமலோ? நோக்கியும் உபவாசாதிவிரத நியமங்களுட்பட்டு உண்டி முதலிய சுருக்கி உடலைவருத்தி கஷ்டப்படாது இஷ்டப்படி வாழக்கருதியோ? ஆகியிற் சிலர், நூல்கள் உபசாரமாகக்கூறுதலை உண்மையென நம்பும்படி பிறர்க்கும் எடுத்துக் கூறிப் பாவம் புண்ணியம் பந்தம் மோக்ஷம் சுவர்க்கம் நரகமென்பன வாதி யெல்லாமும் பொய்யேயாதலால் பாவமென்றஞ்சி நமது சுக காரியங்களை விடவேண்டாம். புண்ணியமென்று விரும்பி உடலை வருத்தவேண்டாம். நம்மிஷ்டப்படி எதனையும் செய்யலாம். செய்வனவெல்லாம் பொய்யேயாதலால் அச்செயல்கள் அவ்வப்பயன்களைத்தருவதில்லை யென்று போதித்து வருவதூங் தவிர அவ்வாறே நூல்களும் எழுதிவைத்தனர். உடலைவளர்க்குந்

# முகவுரை

சுகம் ஒன்றையே நோக்கும் பிள்ளையோரும் அவ்வழியே பற்.
நியமங்கடந்து சுகித்து வாழ்கின்றனர். இதனைத் தன்பிதாவாகிய
காசிபரிடம்உண்மை உபதேசம் பெற்ற சூரபத்மன் பாவபுண்ணி
யபந்தமோக்ஷ முதலிய எல்லாம் மெய்யேயெனநம்பிப் பாவத்து
க்குப் பயந்து புண்ணியமே செய்ய விரும்பிநல்வழியினிற்றலால்,
சுக்கிராசாரியார் இவன் புத்தியை மாற்றித் தேவர்க்கிடர்செய்
யும்படியான தீயவழியிற் செலுத்துதற்கு எல்லாம் பொய்யே
நாம் பிரமமே என்று போதிப்பது தான் பொருத்தமென்று
அவ்வாறு போதிப்ப, அவனும் அத்தீயவழியினின்று அத்தேவர்
க்கிடர் செய்து அடியோடு கெட்டொழிந்த சரித்திரத்தாலுங் கா
ணலாம். இது கந்த புராணத்துள்ளதே, இனி எல்லாம் பொய்யெ
ன்று இவ்வொரு மதத்தாரன்றி வேறெம்மதத்தாரும் கூறுவதில்லை.
மற்றெல்லா மதத்தர்களும் உலகம் மெய்யேயென்றுள்ளபடி
கருதிப்பாவத்துக்குப் பயந்தொதுங்கிப் புண்ணியங்களையே விரு
ம்பி அடிமைகளாய் நின்று அவரவர் மேற்கொண்ட ஆண்டவனா
கிய கடவுள் வழிபாடுசெய்து வருதலாலும் மேற்கூறிய உண்மை
யாலும் உலகம் காரிய ரூபமாய் வெளிப்படும்போது தூலமாயும்
காரணத்துள் ஒடுங்கியிருக்கும் போதுசூக்குமமாயும் என்று
முள்ள மெய்ப்பொருளே என்பது தெளிவாம். இவ்வுலகம்
அவன் அவள் அது என்னும் அவயவப்பகுப்பினதாய்க் காணப்
படுதலால் ஒருகடவுளால் (படைத்தலும்) உண்டாக்குதலும்
காத்தலும் முடிவில (சங்கரித்தலும்) ஒடுக்குதலுமுடையதாய்
நிகழ்கின்றது. கடவுள்வேண்டாம் தானே உண்டாகுமென்பது
முதலியன கூறுவர் சிலர். உலகம் அறிவில்லாத சடமாதலால்
தானே உண்டாகாது அறிவில்லாதகுடம்தானேஉண்டாகாமல்அறி
வுள்ள குபவனால் உண்டாதல் போல், அறிவுள்ள கடவுளாற்றான்
உண்டாகவேண்டுமென்க. அதுசரி உண்டாக்கிற கடவுள் ஒருவர்
காக்கிறவர் ஒருவர்ஒடுக்குகிறவர்ஒருவராக மூவரிருத்தலால் கட
வுள் ஒருவனேஎன்பது பொருந்தாதென்பார்சிலர்.உண்டாக்குதல்
உலக முழுவதையுமே. காத்தலும் அப்படியே. அதுபோல்ஒடுக்குத
லும் முழுதுமேயாதலால் அவ்வாறு ஒடுக்கும் கடவுள் எவனோ

# முகவுரை

சுகம் ஒன்றையே நோக்கும் பிள்ளையோரும் அவ்வழியே பற்
றியமங்கடந்து சுகித்து வாழ்கின்றனர். இதனைத் தன்பிதாவாகிய
காசிபரிடம்உண்மை உபதேசம் பெற்ற சூரபத்மன் பாவபுண்ணி
யபந்தமோக்ஷ முதலிய எல்லாம் மெய்யேயெனநம்பிப் பாவத்து
க்குப் பயந்து புண்ணியமே செய்ய விரும்பிநல்வழியினிற்றலால்,
சுக்கிராசாரியார் இவன் புத்தியை மாற்றித் தேவர்க்கிடர்செய்
யும்படியான தீயவழியிற் செலுத்துதற்கு எல்லாம் பொய்யே
நாம் பிரமமே என்று போதிப்பது தான் பொருத்தமென்று
அவ்வாறு போதிப்ப, அவனும் அத்தீயவழியினின்று அத்தேவர்
க்கிடர் செய்து அடியோடு கெட்டொழிந்த சரித்திரத்தாலுங் க
ணலாம். இது கந்த புராணத்துள்ளதே, இனி எல்லாம் பொய்யெ
ன்று இவ்வொரு மதத்தரன்றி வேறெம்மதத்தரும் கூறுவதில்லை.
மற்றெல்லா மதத்தர்களும் உலகம் மெய்யேயென்றுள்ளபடி
கருதிப்பாவத்துக்குப் பயந்தொதுங்கிப் புண்ணியங்களையே விரு
ம்பி அடிமைகளாய் நின்று அவரவர் மேற்கொண்ட ஆண்டவனு
கிய கடவுள் வழிபாடுசெய்து வருதலாலும் மேற்கூறிய உண்மை
யாலும் உலகம் காரிய ரூபமாய் வெளிப்படும்போது தூலமாயும்
காரணத்துள் ஒடுங்கியிருக்கும் போதுசூக்குமமாயும் என்று
முள்ள மெய்ப்பொருளே என்பது தெளிவாம். இவ்வுலகம்
அவன் அவள் அது என்னும் அவயவப்பகுப்பினதாய்க் காணப்
படுதலால் ஒருகடவுளால் (படைத்தலும்) உண்டாக்குதலும்
காத்தலும் முடிவில (சங்கரித்தலும்) ஒடுக்குதலுமுடையதாய்
நிகழ்கின்றது. கடவுள்வேண்டாம் தானே உண்டாகுமென்பது
முதலியன கூறுவர் சிலர். உலகம் அறிவில்லாத சடமாதலால்
தானே உண்டாகாது அறிவில்லாதகுடம்தானேஉண்டாகாமல்அறி
வுள்ள குயவனால் உண்டாதல் போல், அறிவுள்ள கடவுளாற்றான்
உண்டாகவேண்டுமென்க. அதுசரி உண்டாக்கிற கடவுள் ஒருவர்
காக்கிறவர் ஒருவர்ஒடுக்குகிறவர்ஒருவராக மூவரிருத்தலால் கட
வுள் ஒருவனென்பது பொருந்தாதென்பார்சிலர்.உண்டாக்குதல்
உலக முழுவதையுமே. காத்தலும் அப்படியே. அதுபோல்ஒடுக்குத
லும் முழுதுமேயாதலால் அவ்வாறு ஒடுக்கும் கடவுள் எவனோ